ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீஸூக்திமாலா மலர்-24 முதல் பாகம்

# ஸ்ரீவசநபூஷண வ்யாக்யாநங்கள்

[மாமுனிகளின் அறுநூறுவது ஆண்டுவிழா நினைவுமலர்]

[மாமுனிகள் அருளிய ஸ்ரீவசநபூ$_4$ஷண (1-22 வாக்ய) வ்யாக்$_2$யாநமும் அதற்குத் திருமழிசை அண்ணுவப்பங்கார் ஸ்வாமி, எம்பார் ஜீயர் ஸ்வாமி, மற்றும் இருவர் இயற்றிய அரும்பதவுரைகளும், ஜநந்யாசார்யர் அருளிய ஸ்ரீவசநபூ$_4$ஷண வ்யாக்$_2$யாநமும் அடங்கியது.]


பதிப்பாசிரியர்கள்:—

**ஸ்ரீ உ. வே. வேளுக்குடி வரத$_3$ாசார்ய ஸ்வாமி,**
*சென்னை.*

**ஸ்ரீ உ. வே.**
**S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி,**
('ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்' ஆசிரியர்)



*கிடைக்குமிடம்:—*

**ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,** M.A. B.L.,
அட்வகேட்,
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

விலை ரூ. 6-00. தபாற்கூலி ரூ. 1-00

ஸ்ரீநிவாஸம் அச்சகம், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமத் வரவரமுநயே நம:

# ★ முகவுரை ★

[ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், 'ஸுதர்சனம்' ஆசிரியர், 3. புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.]

தேஹாத்மாபிமாநிகளுக்கும் ஆத்மஸ்வருபம் கைவந்திருக்கும் ரிஷிகளுக்கும் பர்வதபரமாணுவோட்டை வாசிபோரும். (ஸ்வயத்ந லப்த ஜ்ஞாநரான) ரிஷிகளுக்கும், (பகவத் ப்ரஸாதலப்தஜ்ஞாநரான) ஆழ்வார்களுக்கும் அத்தனை வாசிபோரும்; (பகவதநுபவபரர்களான) மற்றையாழ்வார்களுக்கும், (மங்களாசாஸநபரரான) பெரியாழ்வாருக்கும் அத்தனை வாசிபோரும்; (பகவந் நிஷ்டரான) பெரியாழ்வாருக்கும், (ஆசார்யநிஷ்டரான) ஆண்டாளுக்கும், மதுரகவிகளுக்கும் அத்தனை வாசிபோரும். (விவரணமில்லாவிடில் பல ஐயங்களை விளைக்கும் பிரபந்தங்களையருளிய) ஆழ்வார்களுக்கும், ஐயமறும்படி அவற்றுக்கு விவரணமருளிய ஆசார்யர்களுக்கும் அத்தனை வாசிபோரும். அவர்களிலும் அநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்யர்களான நாதமுநிகள் தொடக்கமானார்க்கும், க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யர்களான எம்பெருமானார் தொடக்கமானார்க்கும் அத்தனை வாசிபோரும். அவர்களிலும், (பின்புள்ளார்க்கும் உதவும்படி) கிரந்தமிடாத ஆசார்யர்களுக்கும், கிரந்தமருளிய ஆசார்யர்களுக்கும் அத்தனை வாசிபோரும். அவர்களிலும் வேதாந்த விவரண க்ரந்தகர்த்தாக்களான எம்பெருமானார், ஸ்ருதப்ரகாசிகாபட்டர் முதலானார்க்கும், வேதாந்த ஸாரமான திவ்யப்ரபந்த ரஹஸ்யத்ரயாதி விவரண கர்த்தாக்களான பிள்ளான் நஞ்ஜீயர் பெரியவாச்சான்பிள்ளை முதலானார்க்கும் அத்தனை வாசிபோரும். அவர்களிலும்—விஸ்லேஷதசையில் ஈஸ்வரனையும், பரோபதேசத்தில் ஸம்ஸாரிகளையும் வெறுத்து வார்த்தை சொல்லுதல், இயற்கை வர்ணனை, 'சிவனாய் அயனாய்' என்பது போன்ற ஸாமாநாதிகரண்யப் பேச்சுக்கள், "தாழ்சடையும்"

"அரன் நாரணன்" "மூவுருவும் கண்டபோது ஒன்றும்சோதி" "அரி அயன் அரனென்னுமிவரை ஒன்ற நும்மனத்து வைத்து" முதலான மந்த₃மதிகளுக்கு மயக்கத்தை விளைக்கும் பேச்சுக்கள்முதலான ஸ்லோகங்கள் நிரம்பிய தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களுக்கு வியாக்கியானம் செய்வதையே முக்₂யக்ருத்யமாகக் கொண்ட பிள்ளான் நஞ்சீயர் முதலானோர்க்கும், தத்வபரமான ரஹஸ்ய க்₃ரந்த₂ங்களையே இயற்றிய பிள்ளையுலகாசிரியர்க்கும் அத்தனை வாசிபோரும். பொருளுணரவரிய ஸூத்ரம் போன்ற நடையிலமைந்த ரஹஸ்யக்₃ரந்த₂ங்களையே அருளிய பிள்ளையுலகாசிரியர்க்கும், அவருடைய ஸூத்ரங்களுக்கு விஸத₃கமமான நடையிலே வியாக்கியானமெழுதுவதையே முக்₂யக்ருத்யமாகக்கொண்ட மாமுனிகளுக்கும் அத்தனை வாசிபோரும். இதனாலேயே இவர் ஆசார்யர்களில் சரமாசார்யராய் அமைந்து, ப்ரத₂மாசார்யரான பெரிய பெருமாளாலேயே ஆசார்யராக வரிக்கப்பட்டார்.

ஆசார்ய பரம்பரையாகிற ஹாரத்தின் கீழே தொங்கும் ரத்தினப்பதக்கம் போன்றவராய், எம்பெருமானுடைய அபராவதாரமாகக் கீர்த்திபெற்றவராய், பரமஸாத்விகராய், ஜ்ஞாந ப₄க்தி வைராக்₃யாதி₃ குணங்களுக்கு ஓர் கடலாயிருப்பவராய், விஸத₃வாக்₃ஸிக₂ாமணியென்று விருதுபெற்றவராய், ஸ்ரீஸைலேஸராம் திருவாய்மொழிப்பிள்ளையிடம் சரமபர்வநிஷ்டை₂யை உடையவராய், யதீந்த்₃ரப்ரவணராய், சரமாசார்யராய், ப்ரத₂மாசார்யனுக்கும் ஆசார்யரான நம் கோயில் மணவாள மாமுனிகளின் அறுநூறுவது ஆண்டு விழா நிகழும் ஸாத₄ாரண-௵ ஐப்பசித் திருமூலத்தில பா₄ரததே₃ஸமெங்கும் சிறப்புறக் கொண்டாடப்படுகிறது.

"மணவாள மாமுனியே! இன்னுமொரு நூற்றாண்டிரும்" என்று ஸ்ரீவைஷ்ணவவுலகம் திருமலை தொடக்கமாகத் திருக்குறுங்குடியளவாகவுள்ள தி₃வ்யதே₃ஸங்கள்தோறும், ஸ்ரீவைஷ்ணவ க்ருஹங்கள்தோறும் செய்யும் மங்க₃ளாஸாஸநப₂லத்தாலே ஆறுநூறாண்டுகளாக மாமுனிகள் பல

தி₃வ்யதே₃ஶங்களிலும், குடீகுஞ்ஜங்களிலும் இன்றளவும் அர்ச்சாமூர்த்தியாகவும், ஸ்ரீஸூக்திகளில் புகழுடம்போடும் வாழ்ந்து வருகிறார். மாமுனிகள் அவதரித்த ஸாத₄ாரண வருஷம் அறுபது வருடத்துக்கு ஒருமுறை வரும். ஒரு மனிதனுடைய ஆயுளில் அதை ஓரிருமுறைதான் அநுப₄விக்கநேரும். அவருடைய நூற்றாண்டு விழாவை அநுப₄விக்கும்பேறு, காலவெள்ளத்தில் பிறக்கும் பலகோடி மக்களில் சிலர்க்கே கிடைக்கும். ஸாத₄ாரண வருஷத்திலேயே நூற்றாண்டுவிழா வருவது 300, 600, 900 என்று முந்நூறு வருடங்களுக்கு ஒருமுறையே நிகழும். இதை அநுப₄விக்கும் பேறு மிகவும் கிடைத்தற்கரிது. இப்பேறு நமக்கு இப்போது கிடைத்திருக்கிறது.

மாமுனிகளின் தலைசிறந்த க்₃ரந்த₂மான ஸ்ரீவசநபூ₄ஷண வ்யாக்₂யாநத்தைப் பல அரும்பத₃வுரைகளோடு, பல பரிஷ்காரங்களுடன் அச்சிடுவதாகத் திட்டமிட்டு அறுநூறாவது ஆண்டின் தொடக்கத்தில் தொடங்கப்பெற்ற இந்த கிரந்தத்தின் முதல் இருபத்திரண்டு வாக்யங்களடங்கிய ப்ரத₂ம ப்ரகரணத்தின் வ்யாக்₂யாநாதி₃கள் அடங்கிய முதல் பா₄க₃ம் அறுநூறாவது ஆண்டு நிறைவு விழாவான ஸாத₄ாரண ஐப்பசித் திருமூலத்தில் வெளியிடப்படுகிறது. இது சுமார் 400 பக்கங்கள் உள்ளது. கிரந்தம் முழுவதும் முடிய சுமார் மூவாயிரம் பக்கங்கள் வரும். மற்ற பாகங்களும் மாமுனிகளின் பரமகிருபையாலே சில வருடங்களில் நிறைவடையும்.

"புகழ்க் கோலால் தூக்க" என்கிறபடியே, மாமுனிகளின் மற்ற கிரந்தங்களையெல்லாம் ஒரு தட்டிலும், ஸ்ரீவசநபூ₄ஷணவ்யாக்₂யாநத்தை ஒரு தட்டிலும் வைத்து நிறுத்தால், ஸ்ரீவசநபூ₄ஷண வ்யாக்₂யாநமே எடைமிக்கு நிற்கிறது. ஸம்ஸ்க்ருத வேதா₃ந்தத்தில் எழும் ஐயங்களை அறுப்பதற்காக வியாஸருடைய ப்₃ரஹ்மஸூத்ரம் அவதரித்ததுபோலே, திராவிடவேதா₃ந்தத்திலுள்ள ஐயங்களை

அறுப்பதற்காகப் பிள்ளையுலகாசிரியரின் ஸ்ரீவசநபூ₄ஷண ஸூத்ரங்கள் அவதரித்தன. அதற்கு எம்பெருமானாருடைய ஸ்ரீ ப₄ாஷ்யம் அவதரித்ததுபோல் இதற்கு எம்பெருமானாருடைய அபராவதாரமான மாமுனிகளின் ப₄ாஷ்யம் அவதரித்தது. ஸ்ரீ ப₄ாஷ்யத்துக்கு ஸகல ஶாஸ்த்ரவித்தமரான ஸுத₃ர்ஶந ப₄ட்டரின் ஶ்ருதப்ரகாஶிகை டீகையாக அமைந்ததுபோல், மாமுனிகளின் ஸ்ரீவசநபூ₄ஷணப₄ாஷ்யத்திற்கும் சது:ஶாஸ்த்ர வித்தமரான திருமழிசை அண்ணாவப்பங்கார் ஸ்வாமியின் அரும்பதவுரை அமைந்துள்ளது. அதற்குப்பின் தோன்றிய எம்பார் ஜீயர் ஸ்வாமியின் அரும்பதவுரையும் பலவிடங்களில் ஸ்ரீவசநபூ₄ஷணத்தினுடையவும், மாமுனிகளின் ப₄ாஷ்யத்தினுடையவும் பொருளை உணர்த்துவதில் உபகாரகமாயுள்ளது. மணிப்ரவாளநடையிலுள்ள இவ்விரண்டு அரும்பதவுரைகளும், மற்றுமிரு அரும்பதவுரைகளும், மீமாம்ஸா ப₄ாஷ்யமும் நீண்டநாட்களுக்கு முன் தெலுங்கு லிபியில் அச்சிடப்பட்டன. தமிழ் லிபியில் இதுவரையில் அச்சிடப்பட்டதில்லை. இப்போது நாகரம் கலந்த தமிழ் லிபியில் அரும்பதவுரைகளை அச்சிட்டுள்ளோம். ஸ்ரீவசநபூ₄ஷணமீமாம்ஸா ப₄ாஷ்யம் ஸமீபகாலத்தில் ஸ்ரீ காஞ்சீ மஹாவித்₃வான் ப்ர.ப. அண்ணங்கராசார்ய ஸ்வாமியால் அச்சிடப்பட்டிருப்பதால் அதை இப்பதிப்பில் சேர்க்கவில்லை. ஸ்ரீவசநபூ₄ஷணத்திற்கு மாமுனிகளின் ப₄ாஷ்யத்திற்கு முன் அவதரித்த ஆய் எனப்படும் ஜநந்யாசார்யருடைய வியாக்கியானமும் நீண்டநாட்களுக்கு முன் தமிழில் அச்சிடப்பட்டிருந்தபோதிலும் இப்போது கிடைப்பதில்லை. ஆகையால், இதையும் சேர்த்து ஸ்ரீவசநபூ₄ஷணத்தை இரு வியாக்கியானங்களோடும், நாலு அரும்பதவுரைகளோடும், பல பரிஷ்காரங்களோடும் அச்சிடும் பணி, வாக₃ம்ருதவர்ஷீ ஸ்ரீ உ. வே. வேளுக்குடி வரத₃ாசார்ய ஸ்வாமியாலும், அடியேனாலும் சென்ற ஐப்பசியில் திருமூலத்தில் தொடங்கப்பெற்றது; இவ்வருடம் ஐப்பசியில் திருமூலத்தில் முதல்பாகம் நிறைவுபெறுகிறது.

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்திலுள்ள மற்ற கிரந்தங்கள் அனைத்தைக் காட்டிலும் ஸ்ரீவசநபூஷணத்திற்கும், அதன் வரவரமுநிபாஷ்யத்திற்கும் சிறப்பு உண்டு. "பல பிரபந்தங்கள் அருளிச்செய்த பிள்ளைலோகாசார்யர், ஆசார்ய பரம்பராப்ராப்தமான அர்த்தங்களில் அவர்கள் தாங்கள் கௌரவாதிசயத்தாலே ரஹஸ்யமாக உபதேசித்துப் போந்தவையாய், அருமை பெருமைகளைப்பற்ற இதுக்கு முன்பு தாமும் ப்ரகாசிப்பியாமல் அடக்கிக்கொண்டு போந்தவையுமான அர்த்தவிசேஷங்கள் எல்லாவற்றையும், பின்புள்ளாரும் இழக்கவொண்ணாதென்கிற தம்முடைய க்ருபாதிசயத்துக்குமேலே, பெருமாளும் ஸ்வப்நத்திலே திருவுள்ளமாயருளுகையாலே, ஸ்ரீவசநபூஷணமாகிற இப்ரபந்தமுகேந வெளியிட்டருளுகிறார்" [பக்கம் 29-32] என்று ஸ்ரீவசநபூஷணவ்யாக்யாநத்திலும், "அன்னபுகழ் முடும்பை" என்று தொடங்கி (53-59) ஏழு பாசுரங்களில் உபதேச ரத்தின மாலையிலும் ஸ்ரீவசநபூஷணத்தின் சிறப்பை மிகத் தெளிவாகவும், தம் வியாக்கியையின் சிறப்பை ஸூசனையாகவும் மாமுனிகள் தாமே உணர்த்தியருளினர்.

மற்ற ஆசார்யர்களின் கிரந்தங்களில் காணப்படாத பல பல ஆழ்பொருள்கள் இந்த கிரந்தத்தில் உண்டாயினும், அவற்றுக்கெல்லாம் அடிப்படையாய், ஸாரதமமாயிருப்பதொரு ஆழ்பொருள் உண்டு. அதை ஓர் திருஷ்டாந்தத்தின் மூலம் விளக்கினால் அனைவர்க்கும் எளிதில் விளங்கும். அதாவது:— உத்தமனான ஓர் தகப்பனுக்கு நாலு பிள்ளைகள். சிறு வயதிலேயே தறுதலையாகித் தகப்பனோடு சண்டையிட்டு தேசாந்தரம் சென்றவன் ஒரு பிள்ளை. வீட்டிலேயிருந்தும், தகப்பனை மதிக்காமல் அவன் சொல்லுக்கு மாறாக நடந்துகொண்டு, துராசாரமுடையவனாய், பிறர் புகழ் பாடிக்கொண்டிருப்பவன் ஒரு பிள்ளை. தகப்பனை மதித்து அவன் சொல்லுக்கு அடங்கி, நல்ல ஆசாரமுடையவனாயிருந்தும், 'நாம் இப்படி நல்ல பிள்ளையாயிருப்பதால்தான்

தகப்பன் நம்மை ரக்ஷிக்கிறான்' என்று நினைப்பவன் ஒரு பிள்ளை. இப்பிள்ளையிடம் எத்தனையோ நன்மைகள் இருந்த போதிலும், தன்னை இப்படி நல்ல பிள்ளையாம்படி திருத்தியவன் தகப்பனே என்பதையும், உறவை நோக்கியே தகப்பன் எல்லாப்பிள்ளைகளையும் வாசியற ரக்ஷிக்கிறான் என்பதையும், தகப்பனோடு தமக்குள்ள உறவை உணராமையாலும், அவன் செய்யும் ரக்ஷணத்தை விலக்குகையாலுமே மூற் கூறிய தன் ஸஹோதரர்கள் பூர்ண ரக்ஷணத்தையும் பெற வில்லை என்பதையும் உணராமல், 'தான் நல்லவனாயிருப்பதாலேயே தகப்பன் தன்னை ரக்ஷிக்கிறான்' என்னும் அஹங்கார கர்ப்பமான எண்ணமாகிற ஓர் பெருங்குறையும் இப் பிள்ளையிடம் உள்ளது. இனி, இவ்வுத்தமனை தகப்பனுக்கு இக்குறையுமில்லாத உத்தமனை பிள்ளையொருவனுண்டு. முந்தியவனிடமுள்ள நலங்களெல்லாம் இவனிடமும் உண்டு. அதற்கும் மேலே, தன்னை இப்படி நல்ல பிள்ளையாம்படி சிறு வயதிலிருந்து திருத்தியவன் தகப்பனே என்பதையும், அவனாலேயே தான் ஓர் வஸ்துவாயிருப்பதையும், அவன் எல்லாப்பிள்ளைகளையுமே ஸமமாகவே ரக்ஷிப்பவன் என்பதையும், தகப்பனுக்கும் தமக்குமுள்ள உறவை உணராமையாலும், அவன் பண்ணும் ரக்ஷணத்தை விலக்குகையாலுமே மற்ற ஸஹோதரர்கள் தகப்பன் செய்யும் ரக்ஷணத்தைப் பரிபூர்ணமாகப் பெறமுடியவில்லையென்பதையும், ஆகையால் தகப்பன் செய்யும் ரக்ஷணத்திற்குத் தன்னிடமுள்ளதெதுவும் காரணமல்லவென்பதையும், தகப்பனே நிரபேக்ஷோபாயபூதன் என்பதையும் உணர்ந்த உத்தமன் இவன். இவனே பிள்ளைகள் அனைவரிலும் உத்தமோத்தமன் என்பதை எவரும் மறுக்க இயலாது.

இந்த திருஷ்டாந்தத்தில் கண்ட உத்தமோத்தமனை தந்தையைப் போன்றவன் ஸர்வேஶ்வரன். பாஹ்யகுத்ருஷ்டி மதங்களிலிருப்பவர்கள் தேஶாந்தரமோடிய தறுதலைப்பிள்ளையைப் போன்றவர்கள், நாராயணனே

பரமாத்மாவென்றுணர்ந்தும் ப்ரயோஜநாந்தர தே₃வதாந்தர பரர்களாயிருக்குமவர்கள் இரண்டாவது பிள்ளையைப் போன்றவர்கள். பரமபுருஷனே பரமப்ராப்யமென்றுணர்ந்தும் நாம் செய்யும் ப₄க்தி, ப்ரபத்தி முதலானவை அவனைப் பெற உபாயங்கள் என்று நினைப்பவர்கள் மூன்றாவது பிள்ளையைப் போன்றவர்கள். அந்த ப₄க்தி, ப்ரபத்தி முதலானவையும் நாராயணனுடைய க்ருபாஜந்யங்களே யொழிய க்ருபாஜநகங்களல்ல; அன்றும், இன்றும், என்றும் எல்லாச்சேதனரிடத்தும் கிருபையைக்காட்டி வரும் நாராயணனே நிரபேக்ஷோபாயபூ₄தன். அவனுக்கும் தமக்குமுள்ள உறவை உணராமையாலும், அவன் செய்யும் ரக்ஷணத்தை விலக்குகையாலுமே மற்றவர்கள் அவன் செய்யும் ரக்ஷணத்தைப் பரிபூர்ணமாகப் பெறுமற் போகிறார்கள் என்று உணர்ந்த உத்தமோத்தமர்கள் நாலாவது பிள்ளையைப் போன்றவர்கள். இவர்கள் எம்பெருமானுக்கு மிக நெருங்கியவர்கள். 'யமேவைஷ வ்ருணுதே தேந லப்₄ய:'' ''ப்ரஜாபதிஸ்த்வம் வேத₃, ப்ரஜாபதிம் த்வோ வேத₃, யம் ப்ரஜாபதிர் வேத₃ ஸ புண்யோ ப₄வதி'' [பரமன் ஒருவனைத் தேடி அடைகிறான்; பரமனை ஒருவன் தேடி அடைகிறான்; எவனைப் பரமன் தேடி அடைகிறானே அவனே மஹாபா₄க்₃யசாலி] என்று வேத₃த்திலும் புகழப்பட்ட பரக₃தஸ்வீகாரநிஷ்டா₂ர்கள் இவர்களே. ஶ்ருதிஸ்ம்ருதிகளிலும், மற்ற பூர்வாசார்ய க்₃ரந்த₂ங்களிலும் தேடிக்கண்டுபிடிக்கவேண்டியிருக்கும் ஸாரதமமான, ப்ரதா₄நப்ரதிதந்த்ரமான இவ்வர்த்த₂ம் இந்த கிரந்தத்தில் மிகத்தெளிவாக முழங்கப்பட்டுள்ளது. இதுவே ஸ்ரீவைஷ்ணவர்கள் ப்ரமாணமாகக்கொள்ளும் மற்ற எல்லா கிரந்தங்களைக்காட்டிலும் ஸ்ரீவசநபூ₄ஷணத்திற்கும் மாமுனிகள் பா₄ஷ்யத்திற்கும் உள்ளதொரு தனிச்சிறப்பு.

இத்தகைய இந்த கிரந்தத்தை ஸ்ரீவைஷ்ணவர்களாகப் பிறந்தவர்கள் அனைவர்க்கும் காலக்ஷேபம் சொல்லுவதையே வித்₃வான்கள் அனைவரும் தமது முக்₂யக்ருத்யமாகக்கொள்ள வேண்டும்; ஸ்ரீவைஷ்ணவராகப் பிறந்து அதில் பெருமை கொள்ளும் ஒவ்வொருவரும் இந்த கிரந்தத்தைக் காலக்ஷேபம் செய்வதைத் தம் கடமையாகக் கொள்ளவேண்டும்.

இப்படிச் செய்தால்தான் "மணவாளமாமுனியே! இன்னுமொரு நூற்றாண்டிரும்" என்று நாம் தினந்தோறும் பிரார்த்திப்பது பூவலபர்யந்தமாகும்.

இத்தகைய மஹாக்ரந்தத்தை நாம் தனியே வெளியிடத் துணிவது ஸாஹஸமாகையால், இதைப் பதிப்பிப்பதில் பல மஹநீயர்களைத் துணைகொண்டோம். இந்த க்ரந்தத்தைப் பலமுறை காலக்ஷேபம் ஸாதித்திருக்கும் நியாய வேதாந்த வித்வான் ஸ்ரீ உ. வே. காரப்பங்காடு வேங்கடாசார்யஸ்வாமியின் ப்ரதாநஶிஷ்யரும், தாமும் இதைப் பலருக்குக் காலக்ஷேபம் ஸாதித்துவருபவருமான வாகம்ருத வர்ஷீ (சொல்லமுதப் பெருங்கொண்டல்) ஸ்ரீ உ. வே. வேளுக்குடி வரதாசார்யஸ்வாமி இதைப் பழையபதிப்புகளிலிருந்து பெயர்த்தெழுதுவது, விஷயஸூசிகை, அநுபந்தங்கள் முதலானவற்றை விஸ்தப்படுத்துவது முதலிய வகைகளில் பேருதவி புரிந்தருளினார். பாடபேதங்கள், புருப்கள் திருத்துவது முதலானவற்றில் ஸ்ரீஉ.வே. கோழியாலம் ரங்கநாதாசார்யஸ்வாமியும், ஸ்ரீ உ.வே. ஸதாபிஷேகம் கோவிந்தநரஸிம்ஹாசார்யஸ்வாமியும் மிகவும் உதவியருளினார்கள். பலதிறப்பட்ட தம் காரியங்களிடையே ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான் ஸ்ரீ உ. வே. ப்ர. ப. அண்ணங்கராசார்ய ஸ்வாமியும் வாரந்தோறும் புருப்களைத் திருத்தியும், தம் கருத்துக்களைத் தெரிவித்தும், தம் பத்திரிகையில் அடிக்கடி இதுபற்றிப் புகழ்ந்தெழுதியும் பேருதவி புரிந்தருளினார். கீர்த்தி மூர்த்தியான ஸ்ரீ உ. வே. கோவிந்தாசார்யஸ்வாமியின் திருக்கையால் திருத்தம் பெற்ற ஸ்ரீகோஶமும் சில விடங்களில் உதவிபுரிந்தது. இம் மஹநீயர்கள் திறத்தில் அடியேன் தலையல்லால் கைம்மாறிலேனே. இந்த மஹாக்ரந்தத்தின் மற்ற பாகங்களும் இவ்வண்ணமே வெளிவரும்படியாக இதில் பங்குகொண்ட அனைவர்க்கும் அரோகத்ருடகாத்ரத்தையும் எல்லாவித நன்மைகளையும் அளித்தருளவேண்டும் என்று இந்த க்ரந்தத்திற்கு ப்ரவர்த்தகரான பெரியபெருமாளையும் அவருக்கும் ஆசார்யரான மணவாளமாமுனிகளையும் பிரார்த்திக்கின்றேன்.

சாதாரண-ஸூ ஐப்பசியில் திருமூலம். ஸ்ரீ வைஷ்ணவ தாஸன், ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்.

# பிள்ளைலோகாசார்யர் வைப4வம்

*['ஸுதர்ஶநம்' ஆசிரியர்]*

**லோகாசார்யாய கு3ரவே க்3ருஷ்ணபாத3ஸ்ய ஸூநவே|**
**ஸம்ஸார போ4கி3ஸந்த3ஷ்ட ஜீவ ஜீவாதவே நம:||**

*[ஸ்ரீக்ருஷ்ணர் என்னும் திருநாமமுள்ள வடக்குத்திருவீதிப் பிள்ளையின் குமாரரும், ஆசார்யலக்ஷணபூர்த்தியுள்ளவரும், ஸம்ஸாரப் பாம்பால் கடியுண்ட உயிர்களுக்கு உயிர்தரும் மருந்தாயிருப்பவருமான பிள்ளையுலகாசிரியர்க்கு நமஸ்காரம்]*

*தமக்கு முந்தி வாழ்ந்த ஆழ்வார்கள் ஆசார்யர்கள் அனைவரும் ஒருதட்டென்றால், தாம் ஒரு தட்டாம்படி புகழ்படைத்தவர் பிள்ளையுலகாசிரியர். அவதாரம் தொடங்கிப் பரமபதமடைந்ததீறாக ஒவ்வோரம்ஶதிலும் சிறப்புப் பெற்றவர் இப்பேராசிரியர். மாமுனிகளின் உபதே3ஶரத்தின மாலை, பெரியதிருமுடியடைவு, யதீந்த்3ரப்ரவண ப்ரப4ாவம் முதலான நூல்களைத் துணைகொண்டு இவர்தம் பெருமையைச் சுருக்கமாக அநுப4விப்போம்.*

### அவதாரவைப4வம்

*கார்த்திகையில் கார்த்திகைநாள் காசினியில் வந்துதித்த கலிசன்றியாம் திருமங்கைமன்னனே,* **"கண்ண நின்தனக்கும் குறிப்பாகில் கற்கலாம் கவியின் பொருள்தானே"** *[பெரிய திருமொழி 7-10-10] என்ற தம் திருவாக்கின்படி, ஸ்ரீஜயந்தியிலேயே அவதரித்த கண்ணனும் பெரியவாச்சான்பிள்ளைக்குக் கவியின் பொருளைக் கற்பிக்கக் கார்த்திகையில் கார்த்திகை நாளிலேயே கலிகன்றியென்னும் திருநாமத்துடன் அவதரித்த பெருமையையுடைய லோகாசார்யராம் நம்பிள்ளை ஒரு நாள் நித்யப்படி காலக்ஷேபம் நிறைவடைந்தவுடன் நடுப்பகலில் ஏகாந்தமாய் எழுந்தருளியிருக்க, திருவடிகளில் ஆஶ்ரயித்த வடக்குத்திருவீதிப்பிள்ளையின் திருத்தாயாரான அம்மி என்பவள், "உம்முடைய சீடனை என்பிள்ளைக்கு ஓர் கல்யாணம் செய்வித்தீரே! அவன் பத்னியோடு வாழமறுக்கிறான்; வம்ஶத்திற்குப் பிள்ளையில்லாமற் போய்விடும்போல் இருக்கிறதே!" என்று பெரு வருத்தத்துடன் விண்ணப்பிக்க, அவளைத் தேற்றி அவனுடைய மணாட்டுப்பெண்ணை அழைத்துவரச்சொல்லி அவளுடைய திருவயிற்றைத் தம் திருக்கையாலே ஸ்பர்ஶித்து*

'நம்மைப்போல் இருக்கும் ஓரு பிள்ளையைப் பெறக்கடவாய்' என்று அநுக்3ரஹித்து, வடக்குத் திருவீதிப்பிள்ளையை அழைத்து, "உம்முடைய விஹிதவிஷய வைராக்3யத்தை உணர்ந்தோம்; ஆயினும், லோகமர்யாதைக்கு நாம் சொன்ன தற்காக இன்றிராக் கூடியிரும்" என்று நியமிக்க, அப் படியே கூடியிருந்தவளவில் உண்டான கர்ப்ப4ம் பன்னி ரண்டாம் மாதத்தில் பூ4லோகவைகுண்ட2மான ஸ்ரீரங்கத் தில் ஐப்பசியில் திருவோணத்தில் ஆண் குழந்தையாகப் பிறக்க, அவருக்கு "லோகாசார்யர் பிள்ளை" என்று நம் பிள்ளையுடைய திருநாமத்தையே சாத்தி, திருத்தமப்பனு ரான வடக்குத்திருவீதிப்பிள்ளையால் ஸகலார்த்த2ங்களையும் அளித்து வளர்க்கப்பட்டவர் பிள்ளையுலகாசிரியர். இவர் திருத்தாயார் திருநாமம் ஸ்ரீரங்கநாச்சியார். இவர் கச்சிநகர் எழுந்தருளும் பேரருளாளனும் வரத3னின் அம்ஶாவதாரமே என்பதை மாமுனிகள் தாமே ஓர் ஐதிஹ்யத்தின் மூலம் ஸ்ரீவசநபூ4ஷணவ்யாக்2யாநத்திலே (பக்கம் 33-36) நிலை நாட்டியருளினர்.

பிள்ளைலோகாசார்யருடைய அப்3த4பூர்த்திக்கு நம் பெருமாளை ஸேவிப்பதற்காகக் குழந்தையைப் பல்லக்கில் எழுந்தருளுவித்து நம்பிள்ளை முதலான பெரியவர்களனை வரும் கோயிலுக்குச் சென்று மங்க3ளாஶாஸனம் செய்ய, பெருமாளும் நம்பிள்ளையை அர்ச்சகமுக2மாக, "உம்மைப் போல் ஒரு பிள்ளையை அருளினீரே; இனி, நம்மைப்போல் ஒரு பிள்ளையை அருளும்" என்று நியமிக்க, நம்பிள்ளை யும் அதை அங்கீ3கரிக்க, அவ்வநுக்3ரஹத்தாலே பிள்ளை யுலகாசிரியர்க்குத் திருத்தம்பியார் அவதரித்தருளினர். அழகியமணவாளனின் பிள்ளை என்பது தோற்ற அழகிய மணவாளப்பெருமாள் நாயனர் என்று அவருக்குத் திரு நாமம் சாத்தி, ராமலக்ஷ்மணர்களைப்போலும், ப3லராம க்ருஷ்ணர்களைப்போலும் அவர்களை வளர்த்து வந்தனர். இது பிள்ளைலோகாசார்யரின் அவதாரப் பெருமை.

### நிஷ்டா2வைப4வம்

திருத்தகப்பனரைப்போலே பரமவிரக்தரான இப் பிள்ளைகளிருவரும், வைராக்3யப4ங்க3ம் ஏற்படலாகாது

என்னும் திருவுள்ளத்தாலே நைஷ்டிகப்ரஹ்மசாரிகளாகவே இறுதிவரையில் வாழ்ந்து வந்தனர். இப்பெருமையாலேயே. க்ருஹஸ்தர்களாயிருந்த மற்ற ஆசார்யர்கள் ப்ரபந்நனுக்கு விஹிதவிஷயநிவ்ருத்தி தன்னேற்றம் (சிறப்பு) என்று சொல்லத்துணியாதபோது. பிள்ளையுலகாசிரியர் ஸ்ரீவசந பூஷணத்திலே இவ்வரும்பொருளை ஸூத்ரமிட்டருளினர்.

### க்ரந்தவைபவம்

மற்ற ஆசார்யர்கள் வேதாந்த விவரணக்ரந்தங்களும். வேதாந்த சாரயையில் அமைந்த த்ராவிடவேதாந்த விவரணக்ரந்தங்களும் அருளுவதையே முக்யக்ருத்யமாகக் கொண்டிருந்தனராகையால், ஸாரதமமான அர்த்தங்கள் அவர்களுடைய கிரந்தங்களிலே தேடிக்கண்டுபிடிக்கவேண்டும்படியிருக்கும். அப்படியல்லாமல். ஸாரதமமான ரஹஸ்ய த்ரய விவரணம், தத்வத்ரயவிவரணம் முதலிய ரஹஸ்ய க்ரந்தங்களை இயற்றுவதையே போதுபோக்காகக்கொண்டிருந்தவராகையாலே. சாடூக்தி. ரஸோக்தி. அலங்காரோக்தி முதலான எதுவும் கலசாமல். ஒவ்வொரு பதமும் தத்வநிர்ணயபரமாகவேயிருக்கும் கிரந்தங்களையே அருளிய பெருமை பிள்ளையுலகாசிரியர் ஒருவர்க்கே உரியதாகும். இவருடைய க்ரந்தங்கள் அஷ்டாதசரஹஸ்யங்கள் என்று பெயர்பெற்று ஸ்ரீவைஷ்ணவவுலகை உய்வித்து வருகின்றன. மாமுனிகளின் வியாக்கியானங்களிலிருந்து தனிஶ்லோகம் முதலான மற்றும் சில கிரந்தங்கள் இவர் அருளியதாகத் தெரியவந்தாலும். அவை இப்போது கிடைப்பதில்லை. இவருடைய கிரந்தங்கள் அனைத்திலும் சிறப்புப்பெற்றதாய் மற்ற கிரந்தங்களிலில்லாத பல பரமரஹஸ்யார்த்தங்களை அறிவிப்பதாய். பெரியபெருமாளுடைய நியமனத்தால் அவதரித்ததாய். அவரால் அங்கீகரிக்கப்பட்டதான ஸ்ரீவசந பூஷணம் ஒன்றுக்கே இரு பூர்வாசார்ய வ்யாக்யானங்கள் அமைந்தன. அதிலும். மாமுனிகளின் வியாக்கியானம் அத்யாஶ்சர்யமான பல அரும்பதவுரைகளோடும் மீமாம்ஸா பாஷ்யத்தோடும் பொலிகின்றது. இந்த க்ரந்தத்தைப் பற்றிச் சிலர் ஆக்ஷேபிக்க, இதில் அருளப்பட்ட அர்த்தங்

களை நிலைநிறுத்துவதற்காகவே அழகிய மணவாளன் திருமுன்பே. இவர் திருத்தம்பியாரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனாராலே ஆசார்யஹ்ருத3யம் என்னும் அத்3பு4தக்3ரந்த2ம் அருளிச்செய்யப்பெற்று நம்பெருமாளின் அங்கீ3காரத்தையும் அநுக்3ரஹத்தையும் இந்த தி3வ்யக்3ரந்த2ம் அடைந்தது. மாமுனிகளருளிய உபதே3ஶரத்தின மாலையில் பற்பல அரிய பாசுரங்களைப் பெற்ற பெருமை இவ்வொரு தி3வ்யக்3ரந்த2த்திற்கே உண்டு. இது இவருடைய க்3ரந்த2 வைப4வம்.

## கு3ண வைப4வம்

கு3ணமென்னும் குன்றேறி நின்றவர் இவ்வாசிரியர் ஒருவரே. அஜாதஶத்ருவாய் விளங்கிய பரமஸாத்விகர் இப்பெரியார். தம் ஸம்ப3ந்த4ம் பெற்ற திர்யக்குகளுக்கும் மோக்ஷமளித்த பெருமை இப்பேராசிரியர்க்கு உண்டு. திருவரங்கம் துருஷ்கர்களால் ஆக்ரமிக்கப்பட்டபோது, பெரியபெருமாளுக்குத் திருமுன்பே கல்காப்புச்சாத்தி, நம்பெருமாளை எழுந்தருளுவித்துச் சென்று ரக்ஷித்த பெருமை இவர் சிறப்புக்களில் தலையானது. அப்படி ரக்ஷிக்கும் காலத்திலேயே (ஜ்யோதிஷ்குடி என்னும் கிராமத்திலே) திருநாட்டுக்கு எழுந்தருளி, தம்முடைய ஸர்வத்தையும் நம்பெருமாளுக்காகப் பரித்யாக3ம் செய்த பெருமை இப் பெரியார் ஒருவருக்கே உண்டு.

## சிஷ்யப்பெருமை

திருத்தம்பியாரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனார், கூரகுலோத்தமதா3ஸர், (மாமுனிகளின் ஆசார்யரான) திருவாய்மொழிப்பிள்ளை, விளாஞ்சோலைப்பிள்ளை, மணற்பாக்கத்து (திருச்சானூர்) நம்பியார், (மாமுனிகளின் பூர்வாஶ்ரம திருத்தகப்பனாரான) திகழக்கிடந்தாரண்ணன் முதலான பலபல பெருமக்களை சிஷ்யராகப் படைத்திருந்த பெருமையும் இப்பெரியார்க்கு உண்டு.

இப்படிப் பலபல பெருமைகளை உடைய இப்பேராசியருடைய தி3வ்யக்3ரந்த2ங்களைக்கற்று உலகம் உய்வதாக.

# ஜநந்யாசார்யர் வைப₄வம்

*['ஸுத₃ர்ஶனம்' ஆசிரியர்]*

**ஆசார்யஹ்ருத₃யஸ்யார்த்த₂ா: ஸகலா யேந த₃ர்ஶிதா: |**
**ஸ்ரீராமாநுஜதா₃ஸமமலம் தே₃வராஜம் தமாஸ்ரயே ||**

*[ஆசார்ய ஹ்ருத₃யத்தின் அர்த்தங்கள் அனைத்தையும் அருளியவராய், ஸ்ரீராமாநுஜதா₃ஸர், தே₃வராஜர் என்னும் திருநாமங்களை உடையவரான திருநாராயணபுரத்தாயை ஆஸ்ரயிக்கிறேன்.]*

நம்பிள்ளையின் சிஷ்யர்களில் ஒருவராய், அவரிடமிருந்து திருவாய்மொழியீட்டைப் பெற்றவர் ஈயுண்ணிமாத₄வர். இவருடைய சிஷ்ய பரம்பரையிலேயே ஈடு ஓராண் வழியாய், உபதேசிக்கப் பெற்று வந்தது. இவருடைய குமாரர் (சிஷ்யர்) ஈயுண்ணி பத்₃ம நாப₄ர். இவருடைய சிஷ்யர் நாலூர்ப்பிள்ளையென்னும் ஸுமந: கோலேஶர், இவருடைய குமாரர் (சிஷ்யர்) தே₃வராஜர் என்னும் நாலூராச்சான்பிள்ளை. இவருடைய சிஷ்யர்களில் முக்கியமானவர் திருநாராயணபுரத்தாய் என்னும் ஜநந்யாசார்யர். ப₄க₃வத்₃பா₄க₃வதர்களுக்குத் தாய்போலே பரிவுகாட்டி வந்தமையாலே 'ஆய்' என்றும், 'ஜநநீ' என்றும் சிறப்புப் பெயர் பெற்றவர் இப்பெரியார். தே₃வராஜர் என்பது இவருடைய இயற்பெயர். திருநாராயணபுரத்தில் அவதரித்தவராகையாலே 'திருநாராயணபுரத்து ஆய்' என்று அழைக்கப்படுவர். இவர் அருளிய ஸ்ரீவசநபூ₄ஷண வ்யாக்₂யானம் ஸ்ரீஸூக்திமாலா மலர் 24ல் சேர்த்து அச்சிடப்படுகிறது. இவர் அருளிய திருப்பாவை வ்யாக்₂யாநமான நாலாயிரப்படியும் அச்சிடப்பட்டுள்ளது. திருமாலைக்கும் ஆசார்யஹ்ருத₃யத்திற்கும் இவர் வியாக்கியானமிட்டருளியுள்ளதாகப் பெரிய திருமுடியடைவு கூறும், அவை இப்போது கிடைப்பதில்லை. மாமுனிகளுக்கும் இவருக்குமுள்ள ஸம்ப₃ந்த₄ம் யதீந்த்₃ரப்ரவண ப்ரபா₄வத்தில் பின் வருமாறு விவரிக்கப்பட்டுள்ளது:—

*(மாமுனிகள்) ஆசார்யஹ்ருத₃யத்திற்குப் பொருள் அருளிச்செய்யும்போது "ஜ்ஞாநசதுர்த்தி₂களின் மேலேயிறே ஆநந்த₃வஷட்டி₂க்குத₃யம்" என்கிற வாக்கியத்திற்கு அர்த்த₂ம் ஸ்வரஸமாக ஆகாமையாலே, இதற்கு அர்த்த₂மருளிச் செய்வாராரென்று விசாரமுண்டாய், திருநாராயணபுரத்தாயி பக்கலிலே இவ்வர்த்த₂ம் கேட்கவேணும் என்னும்*

பேராசையோடே ஆழ்வார்க்கு விண்ணப்பஞ் செய்து அவரநுமதிகொண்டு திருநாராயணபுரத்துக்குப் போவோ மென்று புறப்பட்டெழுந்தருளா நிற்க, ஆயியும் ஜீயருடைய ப்ரப$_4$ாவங்கேட்டு இவரை ஸேவிப்பதாகத் திருநகரிக்கு ஆஸந்நமாக மார்க்க$_3$மத்$_4$யே வந்து ஸங்க$_3$தராக அவரைக் கண்டு, "எண்ணின ப$_2$லம் எதிரிலே வரப்பெறுவதே!" என்று பெரிய ப்ரீதியோடே தீ$_3$ர்க்க$_4$ப்ரணாமம் பண்ணி நிற்க, ஆயியும் தாணுந் தடக்கையுங் கூப்பி ஸேவிக்க, இருவரும் அந்யோந்யம் வந்த$_3$நபரராய் குஶலப்ரஶ்நம் பண்ணிநிற்க, இத்தைக்கண்டு ஜீயர் ஸ்ரீபாத$_3$த்து முதலிக ளெல்லாரும் "பெரிய நம்பியும் எம்பெருமானாரும் எதிர்ப் பட்டாப்போலாயிற்று" என்று மிகவும் உகந்தருளினார்கள். அநந்தரம் குன்றமாடத்திருக்குருகூரேற எழுந்தருளி, ஆயி பக்கலிலே ஆசார்யஹ்ருத$_3$யரஹஸ்யார்த்த$_2$ங்களையெல்லாம் கேட்டருளி, (ஆசார்யஹ்ருத$_3$யஸ்யார்த்த$_2$ாஸ் ஸகலா யேந தா$_3$ர்ஶிதா:| ஸ்ரீஶாநுத$_2$ாஸமமலம் தே$_3$வராஜம் தமாஶ்ரயே||) என்று அந்த உபகாரஸ்ம்ருதிக்கு அவர் விஷயமாக ஒரு தனியனருளிச் செய்தருள; ஆயி தமக்கு அதில் அந்வய மற்றபடி தோற்ற

> பூதூரில் வந்துதித்த புண்ணியனோ? பூங்கமழும்
> தாதாரு மகிழ்மார்பன் றானிவனோ?—தூதூர
> வந்தநெடுமாலோ? மணவாளமாமுனிவன்
> எந்தை யிவர்மூவரிலும் யார்?

என்றருளிச்செய்து, ஜீயரை அவதார விஶேஷமென்றுதரித் துக்கொண்டு, ஆழ்வாரையும் அநுதி$_3$நம் ஸேவித்துக்கொண்டு அங்கே சிலகாலமெழுந்தருளியிருக்க;

அதுவே ஹேதுவாக 'ஆயி திருநாட்டுக்கெழுந்தருளினார்' என்று திருநாராயணபுரத்திலுள்ள அஸூயாளுக்கள் திரு மாளிகையிலுள்ள ஸர்வஸ்வத்தையும் செல்வப்பிள்ளை அங்கீ$_3$கரித்தருளும்படி ஸ்ரீப$_4$ண்டா$_3$ரத்தில் சேர்க்க, அக் காலத்திலே ஆயியும் மீண்டு திருநாராயணபுரத்துக்கெழுந்

தருளி இச்செய்தியைக்கேட்டு ஹ்ருஷ்டராய் "யஸ்யாநுக்3ரஹமிச்சா2மி தஸ்ய வித்தம் ஹராம்யஹம்" [எவனுக்கு நான் அருள் புரிய விரும்புகிறேனோ, அவனுடைய செல்வத்தை எடுத்துக்கொள்கிறேன்.] என்னும் திருமுகப்படியே ப்ரத்யக்ஷமாகச் செல்வப்பிள்ளை இத்தைக் கைக்கொண்டருளியபின்பு நாம் இனி இரக்கத்துக்கு விஷயமென்கிறது கிபுனர்ந்யாயஸித்3த4மிறே. 'யஸ்யைதே தஸ்ய தத்3த4நம்' [மனைவி, புத்திரன், அடிமை ஆகியவர்களுடைய செல்வம் அவர்களுடைய யஜமானனுக்கே உரியது.] அன்றோ? என்று ஈடுபட்டு, ஆநந்தா3ஶ்ருக்கள் பனிப்ப எழுந்தருளி, ஆசார்யக்ருபாலப்3த4ரான ஞானப்பிரானொருவரையுமே அர்த்தி2த்துப்பெற்று மற்றவைகளையெல்லாம் அங்குத்தைக்கு ஸமர்ப்பித்து, யாத3வகி3ரிநிலயனுக்கு மால்யஸமர்ப்பணைகநிஷ்ட2ராய், அங்கே ப்ரீதராயெழுந்தருளியிருந்தார்.

மாதவத்தோர்வாழ்த்தும் முடும்பை மணவாளன்
தோதவத்தித் தூய்மறையோரான பெற்றார்—தீதற்ற
ஆசாரியவிதயம்பெற்றார் நம்மாயியிவர்
தேசாரத் தன் கண் நெஞ்சே காண்

என்று ஆசார்யஹ்ருதய ஸம்ப்ரதா2யத்தைத் தாம் (மாமுனிகள்) அநுஸந்தி4த்தருள, அப்படியே முதலிகளும்,

மாதவத்தோன் மாறன் மறை கூறும் மணவாளன்
தோதவத்தித் தூய் மறையோரான பெற்றார்—
நீதியினால்
ஆங்கவர்தாள்சேரப் பெற்றார் ஆய் மணவாளன்
பூங்கமலத்தாள்கள் நெஞ்சே போற்று

என்றநுஸந்தி4த்தார்கள்.

இத்தகைய மஹாசார்யரின் ஸ்ரீவசநபூ4ஷண வ்யாக்2யாநத்தை நாம் அநுஸந்தி4த்து உய்வோமாக.

—※—

# மணவாளமாமுனிகள் வைபவம்

[ ஸ்ரீ உ. வே. வேளுக்குடி வரதாசார்ய ஸ்வாமி ]

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் பல ஆசாரியர்கள் விளங்கினாலும், மூவர் முக்கியமாகக்கொள்ளப்பட்டுள்ளார்கள், அவர்கள் நம்மாழ்வாரும், நம்பிராமாசனும், நம்மணவாள மாமுனிகளும் ஆவர். "ஆழ்வார் திருவடிகளே சரணம். எம்பெருமானார் திருவடிகளே சரணம். ஜீயர் திருவடிகளே சரணம்" என்று ஸ்ரீவைஷ்ணவவுலகம் இவர்களை நிச்சலும் அநுஸந்தாநம் செய்து வருகிறது. இவர்களுள், நம்மாழ்வாருடைய பெருமையிற் காட்டிலும் ஸ்ரீ ராமாநுஜருடைய பெருமை மிக்கது; இவ்விருவர் பெருமையினும் மணவாள மாமுனிகளின் மேன்மை மிக்கது; ஒப்புயர்வற்றது என்றபடி. ஆசாரிய பதவியை அலங்கரிப்பதற்கு ஏற்ற நற்குணங்கள் அனைத்தும் மாமுனிகள் திறத்தே குடிகொண்டிருந்தன என்றால் இஃது இறையும் அதிசயயோக்தியாகாது. இவர் திருவவதரித்தது ஆழ்வார்திருநகரியில். இவரது திருத்தந்தையாரின் திருநாமம் திகழக்கிடந்தான் திருநாவீறுடைய பிரான் தாஸர் அண்ணர். கலியுகாதி நாலாயிரத்து நானூற்று எழுபத்திரண்டாவதான ஸாதாரண வருடத்தில் ஐப்பசித் திங்களில், திருமூல நன்னாளில் ஆதிசேஷனுடைய அம்சமாகவும், ஸ்ரீராமாநுஜருடைய அபராவதாரமாகவும் தோன்றினார். இங்ஙனே உலகுக்கெல்லாம் ஓர் உயிராகத் தோன்றிய திவ்யமூர்த்திக்கு ஸ்ரீரங்கநாதனுடைய திருநாமத்தைச் சாத்த விரும்பிய பெரியோர் "அழகிய மணவாளன்" எனப் பெயரிட்டனர். "அழகிய மணவாள நாயனார்" எனச் சிறப்புத் திருநாமமாக வழங்கி வந்தது.

ஸ்ரீ வைஷ்ணவ ஆசாரிய பரம்பரையில் பிள்ளை லோகாசாரியர் என்பவர் ஓர் மஹாசாரியர். இவர் ரஹஸ்யார்த்தங்களைப் பதினெட்டு நூல்கள் மூலமாய் வெளியிட்டருளிய பெருவள்ளல். அவருடைய திருவடிகளிலும், அவருடைய சீடரான கூரகுலோத்தமதாஸர்

திருவடிகளிலும் சிரகாலம் பணிந்திருந்து அரிய பெரிய அர்த்த₂விசேஷங்களை நன்கு உணர்ந்தவரும், ஆழ்வார்களின் ஈரச்சொற்களிலே ஈடுபாடு காரணமாக "திருவாய்மொழிப் பிள்ளை" என்று சிறப்புத் திருநாமம் பெற்றவருமான "திருமலை ஆழ்வார்" (ஸ்ரீசைலேசர்) என்கிற ஆசாரியரை அடிபணிந்து ஸத்ஸம்ப்ரதா₃ய அர்த்த₂ங்களைப் பெற்றார் நம் மாமுனிகள். நம் பூர்வாசாரியர்கள் அனைவரும் திருவரங்கம் பெரியகோயிலிலே எழுந்தருளியிருந்து த₃ர்ஶந நிர்வாஹம் செய்துவந்தனராதலால் மாமுனிகளும் திருவரங்கம் திருப்பதியிலே வந்து சேர்ந்து, அங்கு ஸ்ரீரங்கநாத₂னாலும் ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களாலும் ப₃ஹுமாநிக்கப் பெற்று, ஶிஷ்யர்களுக்கு ஸம்ப்ரதா₃ய அர்த்த₂ங்களை அருளிச்செய்துகொண்டு வாழ்ந்து வந்தார். இல்லற வாழ்க்கையைத் துறந்து துறவறம் பூண்டு "மணவாள மாமுனிகள்" என்கிற திருநாமத்துடன் விளங்காநின்றார். வானமாமலையிலே மஹாஜ்ஞாந நிதி₄யாக எழுந்தருளியிருந்த "அழகிய வரதர்" என்பவர் பரமவிரக்தியாலே துறவறம் பூண்டு "ஸ்ரீராமாநுஜ ஜீயர்" என்று திருநாமம் பெற்றிருந்தார். அவர் நம் மாமுனிகள் திருவடியில் ஆஶ்ரயித்தார். அவரே மாமுனிகளின் தலைவரான சிஷ்யர். மாமுனிகளின் சிஷ்யர்களில் எண்மர் தலைமை பெற்று அஷ்டதி₃க்₃க₃ஜங்கள் என்கிற சிறப்புப் பெயரும் பெற்று உலகம் போற்ற நின்றார்கள். அவர்களது திருநாமங்கள் (1) வானமாமலை ஜீயர். (2) பட்டர்பிரான் ஜீயர். (3) திருவேங்கட ராமாநுஜ ஜீயர், (4) கோயில் அண்ணன், (5) ப்ரதிவாதி₃ ப₄யங்கரம் அண்ணன், (6) எறும்பியப்பா, (7) அப்பிள்ளை, (8) அப்பிள்ளார். இவர்கள் தவிர நவரத்னங்களான சிஷ்யர்களும் உண்டு. சேனை முதலியாண்டான் நாயனார், சடகோபதாஸரான நாலூர்சிற்றாத்தான், கந்தாடைபோரேற்றுநாயன், ஏட்டூர் சிங்கராசார்யர், கந்தாடை அண்ணப்பன், கந்தாடை திருக்கோபுரத்து நாயனார், கந்தாடை நாரணப்பை, கந்தாடை தோழப்பரப்பை, கந்தாடை அழைத்து வாழ்வித்த பெருமாள் ஆகிய இவர்கள் நவரத்னங்கள். மாமுனிகளின்

பூர்வாஶ்ரமத் திருக்குமாரர் ராமானுஜாசார்யர், திருப்பேரர் ஜீயர் நாயனார் என்று ப்ரஸித்3த4ரான அழகிய மணவாள நாயனார்.

கோயில் கந்தாடையண்ணன் (உடையவருக்கு முதலி யாண்டானைப்போலே) இவருக்குப் பாது3காஸ்த2ாநீயரா யிருப்பர். எறும்பியிலப்பா (வடுகநம்பியைப்போலே) தேவு மற்றறியாதே அத்யந்தாபி4மதராயிருப்பர். ப்ரதிவாதி3ப4யங் கரமண்ணா (ஆழ்வானைப்போலே) உசாத்துணையாயிருப்பர். அப்பிள்ளார் (உறங்காவில்லிதாஸரைப்போலே) மட2த்தில் ஸர்வப4ரங் களையும் நடத்திக்கொண்டு போருவர். வானமாமலை ஜீயர் (அருளாளப்பெருமாள் எம்பெருமானார்போலே) ஆஶ்ர யித்தவன்று தொடங்கிப் பிரியாதாட்செய்திருப்பர். ப4ட்டர் ஜீயர் பூர்வாஶ்ரமத்திலே கோவிந்ததாஸரப்பனென்று திரு நாமத்தையுடையராய் முப்பது வருஷம் பிரியாதே இருந்து மஹாவிரக்தராய் ஜீயரான பின்பும் பிரியில் தரியாமை முன்னிட்டு அடிமை செய்கையாலே எம்பாரைப்போலே பாத3ச்சா2யாபந்நராயிருப்பர். ஜீயர் நாயனார், திருக்குருகைப் பிரான் பிள்ளானைப்போலே அத்யாத3ரணீயராயிருப்பர்.

**ஸ்ரீமாந் ஸுந்த3ரஜாமாத்ருமுநி: பர்யாய பா4ஷ்யக்ருத் |**
**பா4ஷ்யம் வ்யாகுர்வதஸ் தஸ்ய ஶ்ரோத்ருகோடௌ மமாந்வய:||**

என்கிறபடியே எம்பெருமானாருடைய புநரவதாரமான பெரியஜீயர் பூ4ப்ரத3க்ஷிணம்பண்ணி அநேக ஸ்த2லங்கள் ஜீர்ணோத்3தா4ரணம் பண்ணியருளினார். திருநகரியில் திரு வாய்மொழிப்பிள்ளைக்குத் தம்முடைய நிஜ ஸ்வரூபமான ஶேஷாவதாரத்தைக் காட்டினார். பரமத நிரஸந ஸ்வமத ஸ்த2ாபனம் பண்ணினார். ஸர்ப்பாதி3ஸ்த2ாவரஜங்கமாதி3 களுக்கு மோக்ஷம் ஸாதி4த்தருளினார். வடமதுரையில் ஜீர்ணோத்3தா4ரணம் பண்ணினார்.

மாமுனிகளுக்கு அமைந்துள்ள பெருமைகளில் தலை யான பெருமை ஸ்ரீரங்க3நாத2னுக்கும் காலக்ஷேபம் ஸாதி4த்த பெருமை. அப்பெருமான் மாமுனிகளிடத்தே திருவாய்மொழிப் பொருள்கேட்க விரும்பி, ஒரு நாள் இவருக்கு அருளப்பாடு இட்டு, "ஜீயரே! நாளை முதலாக நம்முடைய பெரியதிருமண்ட பத்திலே இருந்து நம்மாழ்வாருடைய திருவாய்மொழியை ஈடு முப்பத்தாறாயிரப்படி முதலான வ்யாக்2யாநங்களுடனே

ப்ரவசனம் செய்வீர்"— என்று நியமிக்க, மாமுனிகளும் அணியரங்கன் திருமுற்றத்து அடியார் தங்கள் இன்பமிகு பெருங்குழுவோடுங்கூடப் பேரோலோக்கமாக எழுந்தருளி யிருந்து ஈடு தொடக்கமான ஐந்து வ்யாக்₂யாநங்களுடனே திருவாய்மொழியை அவ்வவ்விடங்களிலே, "இது ஶ்ருதி ப்ரக்ரியை, இது ஸ்ரீபா₄ஷ்ய ப்ரக்ரியை, இது ஶ்ருத ப்ரகாஶிகா ப்ரக்ரியை, இது கீ₃தாபா₄ஷ்ய ப்ரக்ரியை, இது ஸ்ரீபாஞ்சராத்ர ப்ரக்ரியை, இது ஸ்ரீராமாயண ப்ரக்ரியை, இது மஹாபா₄ரத ப்ரக்ரியை, இது ஸ்ரீவிஷ்ணு புராண ப்ரக்ரியை, இது மஹாபா₄க₃வத ப்ரக்ரியை, இது பதா₂ர்த்த₂ம், இது வாக்யார்த்த₂ம், இது மஹாவாக் யார்த்த₂ம், இது வ்யங்க்₃யார்த்த₂ம்" என்று அற்புதமாய், "விஶத₃வாக்ஶிகா₂மணி" என்கிற தமது விருது நிறம் பெற வும், 'ஸர்வஜ்ஞஸார்வபௌ₄மர்" என்கிற பட்டம்பொலிய வும் ப்ரவசனம்செய்து வந்தார். பெருமாளும் நாச்சிமாருடனே சீரிய சிங்காசனத்து எழுந்தருளியிருந்து ஒரு ஸம்வத்ஸரம் அளவும் திருச்செவி சாத்தியருளினர். காலக்ஷேபம் முடிவு பெறும் நாளில், அப்பெருமான் நாலைந்து பிராயம் வாய்ந்த அர்ச்சக குமாரனைக் கோலம் பூண்டு, கோ₃ஷ்டி₂யின் இடையே வந்து, கைகூப்பிநின்று, "ஸ்ரீஶைலேஶ த₃யா பாத்ரம்" என்று தொடங்கி, முப்பத்திரண்டு எழுத்துத் திருமந்திரமாகிய தனியனை விண்ணப்பம்செய்து மறைந் தான். இவ்வதிஶயத்தை நோக்கி அனைவரும் வியந்தனர். இத்தனியனைப் பட்டோலைகொண்டு மஞ்சள் காப்பு சாத்தி ஸ்ரீரங்க₃நாத₂ன் திருவடிவாரத்தில் ஸமர்ப்பித்து எடுத்து, தட்டிலே வைத்துச் சிறப்பாகக் கொண்டாடினர்கள். "வட மொழி வேத₃த்திற்கு ஓங்காரம்போலே தென்மொழி வேத₃த்திற்கு இத்தனியனே முதலும் முடிவுமாகக் கடவது" என்று பெருமாளுடைய நியமநமும் பாங்காக வாய்த்தது.

பிள்ளை உலகாரியர் அருளிச்செய்த பதினெட்டு ரஹஸ்யங்களுள் ஸ்ரீவசனபூ₄ஷணம் தத்வத்ரயம், முமுக்ஷுப்படி என்கிற மூன்று ரஹஸ்யங்களுக்கும் மாமுனி கள் அத்யாஶ்சர்யமான வ்யாக்₂யாநம் இட்டருளினர்.

பிள்ளைலோகாசாரியர் திருத்தம்பியரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அருளிச்செய்த "ஆசார்ய ஹ்ருதயம்" என்னும் ரஹஸ்ய ரத்தினத்திற்கும் மாமுனிகள்—தேனும் பாலும் கன்னலும் அமுதுமாகிய வியாக்கியானம் இட்டு அருளினார். பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை யிடம் தமக்குள்ள ப்ரதிபத்தி தோற்றும்படியாக, நாலாயிர திவ்யப்ரபந்தங்களில அவருடைய உரை கிடைக்கத் தக்கதாயிருந்த எந்தப் பிரபந்தத்திற்கும் தாம் உரை யிடாமல், பெரியாழ்வார் திருமொழியில் அவருடைய வியாக்கியானம் லோபமடைந்த பகுதிக்கு மாத்திரமும், அவ ரால் உரையிடப்படாத ராமாநுஜ நூற்றந்தாதிக்கும் உரை யிட்டு அருளினார். திருவாய்மொழி நூற்றந்தாதி, உபதேச ரத்தினமாலை, ஆர்த்திப்பிரபந்தம், யதிராஜவிம்ஶதி, தேவ ராஜமங்களம் என்கிற பத்ய நூல்களையும் அருளிச்செய்தார். நம்மாழ்வார் தம்முடைய பெருமையை "துவளில் மாமணி மாடம்" என்கிற திருவாய்மொழியில் தாமே வெளியிட்டுக் கொண்டவாறுபோலே, மாமுனிகளும் தாமே தம்முடைய பெருமைகளை ஆர்த்திப்பிரபந்தத்தில்,

"தென்னரங்கர் சீரருளுக்கிலக்காகப் பெற்றோம்
தேவனுறை திருப்பதியே யிருப்பாகப் பெற்றோம்
மன்னியசீர் மாறன்கலை யுணவாகப் பெற்றோம்
மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்
முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப் பெற்றோம்
முழுது நமக்கவை பொழுது போக்காகப் பெற்றோம்
பின்னையொன்று தனில் நெஞ்சு பேராமற் பெற்றோம்
பிறர்மினுக்கம் பொறாமையிலாப் பெருமையும் பெற்றோமே"

என்று வெளியிட்டருளுகிறார். இப்பாசுரமே நமக்கு நித்தி யானுஸந்தேயம்.

அடியார்கள் வாழ அரங்க நகர் வாழ
சடகோபன் தண்தமிழ் நூல் வாழ—கடல் சூழ்ந்த
மன்னுலகம் வாழ மணவாள மாமுனியே
இன்னுமொரு நூற்றாண்டிரும்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## ஸ்ரீ உ. வே. திருமழிசை கோயில் கந்தாடை

# அண்ணவப்பங்கார் ஸ்வாமி வைபவம்

ஸ்ரீமத்யதிவர லோகாசார்ய வரவரமுநிப்ரப்ருதி பூர்வாசார்ய தர்ஶநத்துக்கு அத்யந்தோபகாரகராய், தாஶரதி (முதலியாண்டான்) வம்ஶஜராய், அண்ணவப்பங்கார் என்று ப்ரஸித்தமான திருநாமத்தையுடையராய், வாதூலவம்ஶஸ்தரான வீரராகவாசார்ய ஸ்வாமி அவதரித்த திவ்யதேஶம் மஹீஸாரக்ஷேத்ரமான திருமழிசை. இவர் ஶாலிவாஹந ஶகாப்தம் 1688 வதான (கி. பி. 1766) வ்யயநாம ஸம்வத்ஸரம் ஆனி மாதம் க்ருஷ்ண சதுர்த்தி வியாழக்கிழமை அவிட்ட நக்ஷத்திரத்தில் அவதரித்தார். இவர் திருத்தகப்பனார் திருநாமம் நரஸிம்ஹாசார்யர். இவருடைய குடி யதிவரபாகிநேய ஸ்ரீதாஶரதிகுருத்தமாவதாராலங்க்ருதமான கோயில் கந்தாடை வம்ஶம். யஜுஶ்ஶாகை. ஆபஸ்தம்பஸூத்ரம். இவர் பதினைந்து வயதுக்குள் ஸ்வஶாகையான யஜுஶ்ஶாகையையும் ந்யாயமீமாம்ஸா வ்யாகரண ஸாங்க்ய பாதஞ்ஜலாதி ஶாஸ்த்ரங்களையும், காவ்யநாடகாலங்காரக்ரந்தங்களையும் ஜ்யோதிஶ்ஶாஸ்த்ர ஸங்கீத பரதஶாஸ்த்ரங்களையும் அப்யஸித்து அநுதினம் ஏதமாந மேதையையுடையவராய், இருபது வயதுக்குள் ஸகலஶாஸ்த்ர வித்தமராய் — தமக்குப் பிதாவான நரஸிம்ஹாசார்யரிடத்தில் நின்றும் திருமந்த்ரார்த்தம் முதலிய ஸம்ப்ரதாய க்ரந்த தாத்பர்யங்களை லபித்து க்ரந்த நிர்மாண சதுரராய் எழுந்தருளியிருந்தார். இவருக்கு வேதாந்த வித்யோபதேஷ்டாக்களான ஆசார்யர்கள் (வாதூல) பழையாம் வரதாசார்யர், ஸ்ரீ ரங்காசார்யர் என்றிவர்கள். இவர் ஸ்ரீரங்காதி திவ்யதேஶயாத்ரை எழுந்தருளி, ஆங்காங்கே குத்ருஷ்டிகளை ஜயித்து, எம்பெருமானார் ஸித்தாந்தத்தை வாழ்வித்துக்கொண்டு 51 திருநக்ஷத்ரம் இவ்விபூதியில் எழுந்தருளியிருந்து ஈஶ்வர வருஷம் ஐப்பசி மாஸம் ஶுக்லபக்ஷசதுர்தஶியில் திருநாட்டுக்கெழுந்தருளினார். இவர் அருளிச்செய்த க்ரந்தங்கள்:—

1) ப4க்திஸாரோத3யம்
2) வேத3வல்லீ ஶதகம்
3) ஹேமலதாஷ்டகம்
4) அபீ4ஷ்ட த3ண்ட3கம்
5) ஶுகஸந்தே3ஶம்
6) கமலா கல்யாண நாடகம்
7) மலயஜா பரிணயம்
8) ந்ருஸிம்ஹாஷ்டகம்
9) மஹாவீர சரிதவ்யாக்2யா
10) உத்தர ராம சரிதவ்யாக்2யா
11) ஶதஶ்லோகீ வ்யாக்2யா
12) ஸ்ரீவசநபூ4ஷண வ்யாக்2யாநத்துக்கு அரும்பத3 விளக்கம்
13) ராமாநுஜாஷ்டக வ்யாக்2யா
14) நக்ஷத்ரமாலிகா வ்யாக்2யா
15) தி3நசர்யா
16) து3ஷ்கர ஶ்லோக டிப்பணீ
17) ஷண்மத த3ர்ஶிநீ
18) ஸூக்தி ஸாது4த்வமாலா
19) வரவரமுநி ஶதக வ்யாக்2யா
20) லக்ஷ்மீ விபு4த்வநிராஸ:
21) லக்ஷ்ம்யா: உபாயத்வநிராஸ:
22) தத்வஸார வ்யாக்2யா
23) ஸச்சரித்ர பரித்ராணம்
24) த்ரிம்ஶத் ப்ரஶ்நோத்தரம்
25) பழநடை விளக்கம்
26) "ஶைலோக்3நிஶ்ச" ஶ்லோக வ்யாக்2யா
27) லக்ஷ்மீ மங்க3ளதீ3பிகா
28) ராமாநுஜாதிமாநுஷ வைப4வஸ்தோத்ரம்
29) அநுப்ரவேஶ ஶ்ருதி விவரணம்
30) ஸ்ரீதத்வஸுதா4 இத்யாதி3.

सकलमहीपरत्नकनकाञ्चितसन्मकुटी-
निकरविचित्रकान्तिपरिवीतनिजाङ्घ्रियुगः ।
पुरवरभूमिसारसुचिरार्जितपुण्यफलं
वरगुणवीरराघवगुरुर्जयतात् सुचिरम् ॥

ஸகலமஹீபரத்நகநகாஞ்சிதஸந்மகுடீ-
நிகரவிசித்ரகாந்திபரிவீதநிஜாங்க்4ரியுக3: ।
புரவரபூ4மிஸாரஸுசிரார்ஜிதபுண்யப2லம்
வரகு3ணவீரராக4வகு3ருர்ஜயதாத் ஸுசிரம் ॥

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி₃ ஸ்ரீபெரும்பூதூர்

# எம்பார் ஜீயர் ஸ்வாமி வைபவம்

[ ஸ்ரீ உ. வே. வேளுக்குடி வரதாசார்ய ஸ்வாமி ]

ஸ்ரீமந் மஹார்ய கருணாலப்₃த₄ விஜ்ஞாநஸம்பதே₃ ।
ஸ்ரீஶைல லக்ஷ்மணாசார்ய முநயே நித்யமங்க₃ளம் ॥

ஶ்ரிய:பதியான ஸர்வேஶ்வரன் திருவுள்ளம் உகந்து அர்ச்சாவதார விக்₃ரஹ விஶிஷ்டனாய் எழுந்தருளியிருக்கும் தி₃வ்யதே₃ஶங்களுள், நடுநாட்டுத்திருப்பதிகளுள் ஒன்றாயும் முதலாழ்வார்கள், "வையந்தகளி" "அன்பே தகளி" என்று சுடர்விளக்கேற்றிப் பாதிநாளிரவில் "திருக்கண்டேன்" என்று முகுந்தனைக்கண்டு தொழுத தி₃வ்யதே₃ஶமாயும் உள்ள திருக்கோவலூருக்குப் பூர்வபா₄க₃த்தில், நீர்வளம் நிலவளம் பொருந்திய "கப்பியாமூர்" என்ற க்₃ராமத்தில் ஸ்ரீவத்ஸ குலதிலகரான ராக₄வாசார்யஸ்வாமிக்கும் பதிவ்ரதா ஶிகா₂மணியான ஜாநகியாருக்கும் ஓர் திருக்குமாரர் கலியுகா₃தி₃ 4935க்குமேல் (கி.பி. 1834) ஜய வருஷம் ஆவணி மாதம்ரோஹிணீ நக்ஷத்திரத்தில் அவதரித்தார். இவரே நம் எம்பார் ஸ்வாமி. இவருக்கு "க்ருஷ்ணன்" என்று நாமகரணம் செய்தார்கள். ஸ்ரீ ஜயந்தியில் அவதரித்த இவர்க்கு இந்தத் திருநாமம் பொருத்தமுடையது. ஜாதகர்ம நாமகரணம் அந்நப்ராஶநம் சௌளம் உபநயநம் என்ற ஸம்ஸ்காரங்களால் ஸம்ஸ்க்ருதராய். க்ரமப்படி வித்₃யாப்₄யாஸமும் பெற்று வளர்ந்தருளினார். கருவிலே திருவுடையராகையால் நாட்டுப்பிள்ளைகளைப்போலன்றிக்கே, எம்பெருமான் தி₃வ்ய மங்க₃ள விக்₃ரஹங்களை வைத்து விளையாடிக்கொண்டிருந்தார். ஒருநாள் இவர் விஸ்மயப்படும்படி. திருவேங்கடமுடையான் திருமேனியொன்றுமே ஸேவை ஸாதி₄த்து, மற்றத் திருமேனிகளெல்லாம் மறைய, நிலைநின்ற திருவேங்கடத்தாயன் நாண்மலர்த்தாமரையடிகளைமனத்தாலும் வாயாலும் போற்றி மகிழ்ந்து வந்தார். பிறகு ஶ்ருதிஸ்ம்ருதீதிஹாஸ புராணாதி₃களையும் தர்க்க மீமாம்ஸா வ்யாகரணாதி₃ஸகல

ஶாஸ்த்ரங்களையும் குறைவறவோதி, திருவேங்கடத்தெந்தையின் திருவருள் அமைந்து பூ₃ாலார்க்க ப்ரகாஶராய் விளங்கி வந்தார். இவர் தந்தை இவர்க்குத் திருக்கல்யாணம் செய்வதாகக் கருதி ப₃ந்து₄க்களில் ஒருவருடைய கன்யகையை விசாரித்தார். அவ்வளவில் க்ருஷ்ணமாசார்யர் (எம்பார் ஸ்வாமி) அல்பாஸ்தி₂ர போ₄க்₃யமான விஷயாந்தரங்களில் பரிபூர்ண வைராக்₃யமுடையவராய், விஹிதபோ₄க₃ம் ஸ்வரூப விருத்₃த₄ம், ஶிஷ்டக₃ர்ஹிதம், ப்ராப்தி ப்ரதிப₃ந்த₄கம் என்று தெளிந்தவராய், தமக்காகப் பெண் தேடப்போகிற தந்தையைத் தடுத்தார். ஹேயபதா₃ர்த்த₂ ஸமுதா₃யமாயிருக்கிற ஶரீரத்தைக்காட்டி ப்₄ரமிக்கப்பண்ணுகிற சதிரிள மடவார் கலவியை மதியேன்; அத₂வா போ₄க்₃யதா பு₃த்₃தி₄ குலைந்து த₄ர்மபு₃த்₃த்₄யா ப்ரவர்த்தித்தாலும் ஸ்வரூப நாஶகமாகையாலே எனக்கு விவாஹம் வேண்டாம் எனக் கூறினர். ராக₄வாசார்யரும் தன் குமாரரின் வாக்சாதுர்யத்தையும் வைராக்₃யத்தையும் கேட்டானந்தி₃த்து இவர் அவதார புருஷர் என அறுதியிட்டார். க்ருஷ்ணமாசார்யரும் ப்ராக்ருத ப₃ந்து₄க்களைத் துறந்து நித்ய ப₃ந்து₄க்களுடன் கலந்து வாழும் ப்ராப்திக்கு, இராமாநுசன் புகழ் மெய்யுணர்ந்தோர் திருவடிகளை ஆஶ்ரயிக்கத் திருவுள்ளமாயிருக்க, சோளஸிம்ஹபுரம், சண்டமாருதம் தொட்டாசார்யர் திருவம்ஶத்தில் அவதரித்தவரும், ஸ்ரீமத்₃ வாது₄லகுல திலகரும் ஆன ஸ்ரீ உ. வே. கோயில் கந்தாடை ஸ்ரீமாந். ரங்க₃ாசார்ய ஸ்வாமி தி₃வ்ய தே₃ஶ யாத்ரையாகக் கப்பியாமூருக்குகெழுந்தருள, அவஸரப்ரதீக்ஷரான இவர் கண்டு திருவடிகளிலே தண்டம் ஸமர்ப்பித்து அடியேனை அங்கீகரிக்க வேணும் என ப்ரார்த்தி₂க்க, அபி₄மத விஷயத்தைக் கண்ட அவரும் "தாப: புண்ட்₃ர: தத₂ா நாம மந்த்ரோ யாக₃ஶ்ச பஞ்சம:" என்ற திருவிலச்சினை முதலான பஞ்ச ஸம்ஸ்காரங்களையும் ப்ரஸாதி₄த்து, திருவாராத₄நப்பெருமாளும் எழுந்தருளப்பண்ணிக்கொடுத்தருளினர். பூ₃ாலப்பருவத்தில் ஸேவை ஸாதி₄த்தருளின திருவேங்கடத்துறை திருமாலே

இங்கும் ஸேவை ஸாதி₄க்கக்கண்டு ஆநந்த₃ பரவஶரானார். தி₃வ்ய தே₃ஶ யாத்ரையெழுந்தருளினார். பிறகு ஆசார்ய நியமநம் பெற்று ஆடூர் என்கிற க்₃ராமத்துக்கெழுந்தருளி அங்கே. ஸப்₃ரஹ்மசாரியான ஸ்ரீ உ. வே. ரங்க₃ஸ்வாமி அய்யங்காருடன் சிலகாலம் எழுந்தருளியிருந்தார். அவருடன் திருநாங்கூர் எழுந்தருளினார். அங்கே. ஸ்ரீ உ. வே. ப்ரதிவாதி₃ ப₄யங்கரம் ஸ்ரீரங்கா₃சார்யஸ்வாமி திருமாளிகையில் எழுந்தருளியிருந்தார். அவரும் இவருடனே ஶாஸ்த்ர ப்ரஸங்க₃ம் செய்து, இவர் வாக்யார்த்த₂ சாதுர்யத்தையும் தேஜோவிஶேஷத்தையும் கண்டு ஆநந்தி₃த்து, திருநாங்கூரிலே சிலகாலம் இவரை எழுந்தருளியிருக்கச் செய்தார். இவரை அங்கேயிருத்தி ஸ்ரீ உ. வே. ஆடூர் ரங்க₃ஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி ஆமூருக்கெழுந்தருளினார். அன்றிரவு க்ருஷ்ணமாசார்யர் ஸ்வப்நத்தில், அங்கையில் பொற்பிரம்பேந்திய ஸேனையர்கோன் புயநான்குடனே ஸேவைஸாதி₄த்தருளி, பின்னும் ஆசார்யனாகவும் ஸேவை ஸாதி₄த்தருளி. 'நம்மூரேற வாரும்' என்றருளிச்செய்தார். கண்விழித்த க்ருஷ்ணமாசார்யர் ஆசார்யரை ஸேவிக்க த்வரித்து. சோளஸிம்ஹபுரத்துக்குப் பயணமாயினர். நடுவழியில் ஆடூருக்கு எழுந்தருளினார். அப்போது அர்த்த₄ராத்ரியானபடியால், எவரையும் எழுப்பாமல், தம் மாதுலக்₃ருஹத்தின் சுவரில் அடியேன் க்ருஷ்ணதாஸன் வடக்கே விடை கொள்கிறேன்'' என்று திருவெழுத்திட்டு. அந்தக்ஷணமே புறப்பட்டு. இராப்பகலின்றியே வழியில் தலைமுகளை உருவி தே₃ஹத₄ரணம் பண்ணிக்கொண்டு, ஸ்ரீபெரும்பூதூரேற எழுந்தருளினார். அங்கே திருவநந்த ஸரஸ்ஸு என்கிற ஸ்ரீராமாநுஜ புஷ்கரிணியிலே தீர்த்த₂மாடித் திருப்பரியட்டமும் சாற்றியருளி, த்₃வர்த₃ஶோர்த்₄வ புண்ட்₃ரஸமேதராய் ப்ரத₃க்ஷிணமாக ஸேவாக்ரமத்திலே உடையவரை மங்க₃ளாஶாஸநம் செய்து. உடையவருடைய திருமேனி ஸௌந்த₃ர்ய ஸௌகந்த்₄ய ஸௌகுமார்யாதி₃களிலீடுபட்டு, ''கையில் கனியென்னக் கண்ணனைக் காட்டித்தரிலும், உன்றன் மெய்யில்

பிறங்கிய சீர் அன்றி வேண்டிலன் யான்'' என்றநுஸந்தி₄த்து ஸ்வாமிஸந்நிதி₄க்கெதிரேயுள்ள ஸ்வர்ண மண்டபத்திற்குப் பின்புறத்தில் ஏகாந்தமாயிருந்துகொண்டு, உண்ணும் சோற்றின்படியே, உடையவரை ஐந்து நாட்கள் அஹோராத்ரவிப₄ாக₃மற, ஸந்நிதி₄ பரிவாரங்கள் கண்ணிற் படாமல் அநுப₄வித்து வந்தார். ஆறுவது நாள் ராக₄வ ப₄ட்டர் என்ற அர்ச்சகர் இவரைக்கண்டு, இவர் நித்யஸூரி களிலேயொருவர் என்றறுதியிட்டு, இவரையழைத்துப் போய், உடையவரை ஏகாந்தமாக ஸேவை செய்யும்படி செய்துவைத்து, தீர்த்த₂ப்ரஸாத₃ாதி₃களையும் முதலியாண் டானையும் ப்ரஸாதி₄த்தார். அன்று ஆளவந்தார் உத்ஸவச் சாற்றுமறை. ஆளவந்தாரையும் உடையவரையும் ஏகத்ர ஸேவித்து, ''விப₄வாவதாரத்தில் இப்படிக் கலந்து இருக்கப் பெறாத இழவு தீரவோ? அடியேனை அடியார்க்காட் படுத்தவோ?'' என்று உருகும் சிந்தையராய் ஸேவித்துக் கொண்டிருந்தார். உடையவர் திருவடியில் தேங்கிநின்ற தீர்த்த₂ம் பெற்று க்ருதார்த்த₂ரானார், அங்கு நின்றும் விடை பெற்று, சோளஸிம்ஹபுரத்துக்கெழுந்தருளி ஸ்வாசார்யனை ஸேவித்து.அவராஜ்ஞையினால் அங்குள்ளார்க்குத் தத்வஹித புருஷார்த்த₂ங்களை உபதே₃ஶித்துக்கொண்டெழுந்தருளி யிருந்தார். ஒருநாள் அவ்வூரில் உள்ள ஓர் ஸ்ரீவைஷ்ணவர் இவருடையதிருமேனியழகையும் ஶாஸ்த்ர பாண்டி₃த்யத்தை யும் வாக்₃வைப₄வத்தையும் கண்டு விஸ்மயித்துத் தன் பெண்ணை இவர்க்கு விவாஹம் செய்துவைக்க ஆசைப்பட் டார். இவரும் பல ஸமாத₄ாநங்களைச்சொல்லி விவாஹத்தை மறுத்தார். அன்றிரா உடையவர் இவர் ஸ்வப்நத்திலே எழுந்தருளி ஸேவை ஸாதி₄த்தார். பின்னொருநாள் ஸ்வப்நத் தில் திருவநந்தாழ்வாள் திருமுடியின் கீழ் வீற்றிருந்த திருக் கோலத்தோடு மணவாளமாமுநிகள் இவர்க்கு ஸேவை ஸாதி₄த்தார். இவருடைய வைராக்₃யம் பன்மடங்கு வ்ருத்₃தி₄ யடைந்தது. பிறகு ஸ்வாசார்ய நியமநம் பெற்று கு₃ரு

புஷ்யோத்ஸவம் ஸேவிக்க ஸ்ரீபெரும்பூதூர் எழுந்தருளினர். அங்கே உடையவரை ஸேவித்து "ஹே கேஶாதஶாக்ஶரஜ. ஹே க்ருபார்ஜலநிதே₄. ஹே ஸ்ரீநிதி₄ ஸ்ரீகு₃ரோ. ஹே யோகீ₃ஶ்வர. ஹே குரங்க₃நக₃ரீபூர்ணஶ்ரிதாங்க்₄ரித்₃வய| ஹே ராமாநுஜ, ஹே ஜகத்த்ரயகு₃ரோ. ஹே புண்ட₃ரீகாக்ஷ மாம். ஹே ராமப்ரியதாத. பாலய. பரம் ஜாநாமி நத்வாம் விநா ||" என்றநுஸந்தி₄த்து எழுந்தருளியிருந்தார். ஒருநாள் பிள்ளை மண்டபத்திலே இவர் ஏகாந்தமாக மந்த்ரரத்நாநுஸந்த₄ாநம் பண்ணிக்கொண்டெழுந்தருளியிருக்க, ஆங்கு பலநாட்களாக இருந்த ஓர் ப்₃ரஹ்மரக்ஷஸ்ஸு வெளியேவந்து இவரை ஆஶ்ரயித்து இவர் கடாக்ஷத்தால் இவர் ஆசார்யன் கடாக்ஷமும் பெற்று மோக்ஷம் பெற்றது. பிறகு இவர் சோளஸிம்ஹபுரம் சென்று ஆசார்யனை ஸேவித்து அவரநுமதி பெற்று, திருவேங்கடத்துக்கெழுந்தருளி. திருவேங்கடத்தரியைத் திருவடிதொழுது அவ்வெம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களிலே ஆழ்ந்திருந்தார். ஒருநாள் எம்பார் இவர் ஸ்வப்நத்திலே எழுந்தருளி, "வாரீர் க்ருஷ்ணமாசார்யரே! நமக்கு மிகவும் குளிராயிராநின்றது. தக்கதோர் சால்வை வாங்கிக்கொண்டு மது₄ரமங்கலத்தேற வாரும்" என்று நியமித்தார். இவரும் கண்விழித்து. பெரிய ஜீயருக்கு விண்ணப்பம் செய்தார். அவரும் தமக்கும் இதே ஸ்வப்நம் விளைந்த ஆஶ்சர்யத்தைச் சொல்லித் திருவேங்கடமுடையான் உடுத்துக்களைந்த பீதகவண்ணவாடை கொடுத்து மது₄ரமங்க₃லத்துக்கனுப்பினர். இவரும் எம்பார்க்கு இதனைச் சாற்றி க்ருதார்த்த₂ரானர். பின்பு ஓருநாள். ஓர் த்ரைவர்ணிகன் மகனைப் பிடித்திருந்த ப்₃ரஹ்மரக்ஷஸ்ஸை ஓட்டினர். அப்பிள்ளையின் பெற்றோர் மனமுவந்து இவர் நியமநாநுகு₃ணமாக எம்பார் ஸந்நிதி₄ மண்டப ப்ராகாரங்களையும் மதிளையும் கட்டிவைத்து க்ருதார்த்த₂ரானர்கள். இவர் எம்பார் ஸந்நிதி₄யில் எம்பார் திருமேனிக்குப் பாங்காகத் திருவாராத₄ந தீர்த்த₂த்தில் பரிமளத்₃ரவ்யங்களை விஶேஷமாகச் சேர்த்து நித்ய

ஆராதநாதிகளை நடப்பித்தார். இதுபற்றி இவரை "பரிமளம் க்ருஷ்ணமாசார்யர்" என்பர். அவரவர் தம்மேற்றத்தால் நம்பெருமாள் நம்மாழ்வார் நஞ்சீயர் நம்பிள்ளை என்றாப்போல் இவர்க்கும் இத்திருநாமமாயிற்று. இந்தக் கைங்கர்யம் அவிச்சிந்நமாக நடைபெறவேணும் என்றும் அதற்காக ஓர் ஜீயர் எழுந்தருளியிருக்கவேணும் என்றும் பார்த்து, ஒருவரும் இடையாமையாலே தாமே ஸந்ந்யஸிப்பதாக எம்பார்க்கு விண்ணப்பித்து, திருவேங்கடத்துக்கெழுந்தருளி, அங்கே வகுளாபரண ஜீயரென்கிற பெரிய ஜீயரிடத்திலே விஷயத்தை விண்ணப்பித்தார். திருவேங்கடமுடையானும் பெரிய ஜீயருடைய ஸ்வப்நத்தில் "க்ருஷ்ணமாசார்யருக்குத் துரீயாஶ்ரமம் தரக்கடவீர்" என்று நியமித்தருளினார். பெரிய ஜீயரும் இவர் த்வரையையும் பெருமாள் நியமநத்தையும் கண்டு ஆஶ்சர்ய ஆநந்தபரிதராய், த்ரிதண்ட காஷாயாதிகளைக்கொடுத்து,பால்யமே பிடித்துத் திருவேங்கடமுடையான் திருவருள் இவர்க்கு அமைந்திருக்கையால், இவர்க்குத்திருவேங்கட ராமாநுஜ ஜீயர் என்கிற திருநாமமும் சாத்தி, தீர்த்த ப்ரஸாதங்களும் ப்ரஸாதித்தருளினார். பிறகு இவர் மதுரமங்கலத்தேற வெழுந்தருளினார்.

இவருடைய பூர்வாஶ்ரமத் திருத்தம்பியார் ஸ்ரீ உ. வே. ஸ்ரீரங்காசார்யஸ்வாமி முகமாக இவருடைய ஸகல வ்ருத்தாந்தங்களையும் உத்தம ஆஶ்ரமஸ்வீகாரத்தையும் கேட்ட ராகவாசார்யஸ்வாமி, தம்முடைய திருக்குமாரனின் வைராக்யத்தையும் உத்தமாஶ்ரமஸ்வீகாரத்தையும் நினைந்து நைந்து உள்கரைந்து, இவரை ஸேவிக்கத் திருவுள்ளமாய், மதுரமங்கலம் வந்து, ஜீயரை ஸேவித்து க்ருதார்த்தரானார். பின்பு ஜீயர் திருவுள்ளப்படி, திருக்கோவலூரில் உடையவருக்கு மாஸத் திருநக்ஷத்ரங்களைக் குறைவற நடத்திவந்தார். அத்தால் இவர்க்குத் திருநக்ஷத்ரம் ராகவாசார்யர் என்றே திருநாமம் விளங்காநின்றதிறே.

பின்பொருநாள் ராக4வாசார்யஸ்வாமி திருநாட்டுக்கெழுந்தருள, திருக்குமாரர் ரங்கா3சார்யர் சரம கைங்கர்யங்களை முடித்து மது4ரமங்க3லத்திலே ஜீயர் திருவடிகளுக்கு அந்தரங்க3ராய் வந்து சேர்ந்தார். எம்பாருக்கு அந்தரங்க3கிங்கரராய் எழுந்தருளியிருந்தமையால் திருவேங்கட ராமாநுஜ ஜீயர் எம்பார் ஜீயர் என்றே ப்ரஸித்3த4ரானார். அநந்தரம் எம்பார் ஜீயர்ஸ்வாமி ஸ்ரீ பா4ஷ்ய ப4க3வத்3 விஷய ரஹஸ்யாதி3ஸத் ஸம்ப்ரதா3யார்த்த2ங்களை ஞாநமநுட்டானமிவை நன்றாகவே யுடையனான குரு3முக2மாகப் பெறவேணும் என்னும் ஆசையினால் திருநாராயணபுரம் எழுந்தருளி, திருநாரணனை மங்க3ளாஶாஸநம் செய்து, பிறகு அங்கே வாதூ4லகுலதிலகராய் எழுந்தருளியுள்ள ஸ்ரீ உ. வே. கோயில் கந்தாடை தொட்டாசார்ய ஸ்வாமியிடம் ஸ்ரீ பா4ஷ்யாதி3களைக் காலக்ஷேபம் செய்தார். சாத்துமுறையான பிறகு தொட்டாச்சார்யர் நியமனம் பெற்றுத் திருவரங்கந்திருப்பதியேற எழுந்தருளினார். பெரியபெருமாளையும் பெரியபிராட்டியாரையும் திருவடி தொழுது மங்களாஶாஸநம் செய்து அங்கே சில நாள் தங்கியிருந்து, பிறகு தி3வ்ய தே3ஶ யாத்ரையாக மது4ரமங்க3லம் எழுந்தருளினார். எம்பார் ஜீயர் ஸமீபத்தில் எப்போதும் ஸர்ப்ப ஸஞ்சாரம் கண்டு ஸமீபஸ்த2ர் பயப்பட்டார்கள். இவரும் அவர்கள் ப4யம் தீர ஏகாந்தமாக அவர்கள் அமைத்துக் கொடுத்த ஆஶ்ரமத்தில் காந்தூர் தோட்டத்தில் எழுந்தருளியிருந்தார். பின்பு எம்பார்ஸ்வாமி ஒரு ஸமயம் திருக்குருகூர் எழுந்தருளி ஆழ்வாரை ஸேவித்துக் கொண்டிருக்க, திருவரங்கத்தில் பெரியபெருமாளை ஸேவித்திருக்கத் திருவுள்ளமாய் அன்றிரவு இவர் ஸ்வப்நத்தில் திருநாராயணபுரம் தொட்டாசார்யர் ஸேவை ஸாதி4த்து, ஜீயரே ஆழ்வாரை நன்றாக ஸேவித்தீரா! இனி நம் வார்த்தையைக் கேட்பீராக.

மஸ்தகம் ஸ்ரீஶடா2ராதிம் நாதா2க்2யம் முக2மண்ட3லம் |
நேத்ரயுக்3மம் ஸரோஜாக்ஷம் கபோலௌ ராக4வம் ததா2 ||

வக்ஷஸ் ஸ்தலம் யாமுநாக்₂யம் கண்ட₂ம் ஸ்ரீபூர்ண
தே₃ஶிகம் ।
பா₃ஹுத்₃வயம் கோ₃ஷ்டி₂ பூர்ணம் ஶைலபூர்ணம்
ஸ்தநத்₂வயம் ॥
குக்ஷிம் து வர ரங்கா₃ர்யம் ப்ருஷ்ட₂ம் மாலாத₄ரம் ததா₂ ।
கடிம் காஞ்சீமுநிம் ஜ்₂ஞேயம் கோ₃விந்தா₃ர்யம்
நிதம்ப₃கம் ॥
ப₄ட்டவேதா₃ந்திநௌ ஜங்கே₄ ஊருயுக்₃மம் மதா₃த்மஜம் ।
க்ருஷ்ணம் ஜாநுயுக₃ம் சைவ லோகம் ஸ்ரீபாத₃பங்கஜம் ॥
ரேக₂ம் ஸ்ரீஶைல நாதா₂க்₂யாம் பாது₃காம்
வரயோகி₃நம் ।
புண்ட்₃ரம் ஸேநாபதிம் ப்ரோக்தம் ஸூத்ரம் கூரபதிம்
ததா₂ ॥
ப₄ாகி₃நேயம் த்ரித₃ண்ட₃ஞ்ச காஷாயஞ்சாந்த்₄ர
பூர்ணகம் ।
மாலாஞ்ச குருகேஶார்யம் ச₂ாயாம் ஸ்ரீசாப கிங்கரம் ॥
ஏவம் ராமாநுஜார்யஸ்யாவயவாநகி₂லாந் கு₃ரூந் ।
அவயவிநம் மஹாத்மாநம் ராமாநுஜமுநிம் ப₄ஜே ॥

இப்படி ஸர்வாசார்யர்களும் அவயவங்களாய் தான் அவயவியாய், மாறனடிபணிந்துய்ந்தவராய், பொன்னரங்க மென்னில் மயலேபெருகுமவராய், உப₄யவிபூ₄தி ஸாம்ராஜ்ய பட்டாபி₄ஷேக லக்ஷ்மீஸம்பந்நராய் எழுந்தருளியிருக்கு மவரான ஸ்ரீபெரும்பூதூர் நம்பிராமாநுசன் திருவடித் தாமரைகளையே தஞ்சமாகப்பற்றி ஸ்ரீபெரும்பூதூரில் நித்ய வாஸமாக இரும்" என்று அருளிச் செய்தார். எம்பார் ஸ்வாமியும் கண் விழித்து, பெரியபெருமாள் நியமநம் பெற்று ஸ்ரீபெரும்பூதூரேறவெழுந்தருளினார். உடைய வரைப் பரிபூர்ணமாக அநுப₄வித்து, "திருவரங்கர் கைத் தலத்தாழியும் சங்குமேந்தி நங்கண் முகப்பே மொய்த் தலைத்து உன்னைவிடேன் என்றிருக்கிலும், உன்றன் மெய்யில் பிறங்கிய சீரன்றி வேண்டிலன் யான்" என்று அநுஸந்தி₄த்து, சீரியதோர் நிதி₄போலே திருமுன்பே நோக்கிவைத்

திட்டிருக்கிற முதலியாண்டான் பெற்று. ஸ்ரீ பெரும்பூதூரிலே நித்யவாஸமாக எழுந்தருளியிருந்தார். பிறகு ஸ்ரீமந்நாதமுநிகள் திருவவதாரஸ்தலமான வீரநாராயண புரத்தினின்றும், நாதமுநி சேஷாத்ரி அய்யங்கார் என்று ப்ரஸித்தரான ஜ்ஞாநபக்தி வைராக்ய நிதியான, ஸ்ரீவசந பூஷண நிஷ்டாநபூர்ணரான ஸத்ஸம்ப்ரதாயார்த்த நிதியான ஓர் ஸ்ரீவைஷ்ணவர் ஸ்ரீபெரும்பூதூருக்கெழுந் தருளி, எம்பார் ஸ்வாமி ஸ்வரூப ரூபகுணங்களிலும் ஈடு பட்டு, ஸ்ரீமந்நாதமுநிகளையும் மறந்து ஜீயர் ஸ்வாமி யுடன் இருந்து, அவருக்கு உடையவர் ஸந்நிதிக்குத்தெற்கே ஓர் மடத்தையும் கட்டிக்கொடுத்தார். ஒருநாள் ஸ்ரீபாஷ்ய பகவத் விஷய காலக்ஷேபத்துக்கு ஸ்வாமிகள் காத்திருக்க, ஜீயர் ஸ்வாமி ஓர் மண்டபத்தின் மண்ணையிருந்து துழாவி 'வாமநன் மண்' இது என்று கூறி மண்ணையெடுத்துச் சிரமேற் கொண்டார். முதலிகள் என்னென்று வினவ, ஆதிகேஸவப் பெருமான் குதிரைநம்பிரான்மீது ஆரோஹித்து மண்ட பத்தைச் சுற்றி எழுந்தருளிக் கோயிலுக்குள் ப்ரவேஸித்தார். அந்த அடிச்சுவட்டைக் காண ஆசைப்பட்டுத் தேடி, கண்டு களித்தேன் என்றார். அருகிருந்தவர்கள், " ஈறிலின்பத் திருவெள்ளம் யான் மூழ்கினன் " என்ற ஆழ்வார் போலே இவரும் 'கண்டு களித்தேன்' என்கிறார். இதென்ன, திருமா மகள் கோன் தன் சேவடிகளோ? நம்பெருமாள் சொலத் தனியன் பெற்ற பெருமாளோ? " என்று கூறி வியந்தனர். இப்படி மஹாவைபவத்தோடு எழுந்தருளியிருக்கிற எம்பார் ஜீயர் ஸ்வாமிக்கு, திருநாரயணபுரம் கொட்டாசார்ய ஸ்வாமி "ஸ்ரீவாதூல ரமாப்ரவாள" என்ற தனியனை அருளிச் செய்து கொடுத்தருளினர். ஜீயரும், எம்பாரைப்போலே தம்முடைய வைபவம் ஆசார்ய ஸம்பந்தாதீநம். இது நமக்கெல்லார்க்கும் நித்யாநுஸந்தேயம் என்று ஆநந்த பரிதரானார். பின்பு எம்பார்ஸ்வாமி இந்த ஸ்ரீபெரும்பூதூர் திவ்ய தேஸத்தில் நம்பிள்ளை லோகாசார்யர்களை எழுந்

5

தருளுவித்து உத்ஸவம் கண்டருளப்பண்ண வேணும் எனப் பாரித்தார். அதன்படி செய்தருளினர். உத்ஸவ காலங்களில் உடையவரை "க₃ஜஸிம்ஹ க₃தீ வீரௌ" என்கிறபடியே நடையழகுடன் எழுந்தருளப்பண்ணுவது. திருமஞ்சநக் காலங்களில் கட்டியம் ஸேவிப்பது. உத்ஸவத்தில் சதுஸ் ஸ்தம்ப₄மண்டபத்தில் ஸ்ரீவைஷ்ணவர்கள் த்₃வயோபநிஷத்து ஸேவிக்க உடையவர் மண்ணிலரங்கமுதல் வைகுந்த நாடளவாக உப₄ய பார்ஶ்வத்திலும் மங்க₃ளாஶாஸநம் செய்வது, திருவீதியில் எழுந்தருளும் போதெல்லாம் திருவவதார ஸந்நிதி₄யில் உள்ள 74 ஸிம்ஹாஸநாதி₄பதிகளுக்கு முதலியாண்டான் ஸாதி₄ப்பது, ஆறும் உத்ஸவத்தில் உடையவர் வெள்ளைசாத்திக்கொள்வது. ஆழ்வான் த்ரிதண்ட காஷாயாதி₃களை த₄ரிப்பது, எட்டாம் உத்ஸவத்தில் திருவநந்தாழ்வான் மேலிருந்து திருமந்த்ரார்த்த₂த்தை பூ₄ரித₃நம் செய்வது,ஏகாந்த ஸேவையில் கட்டியங்கள், எச்சரிக்கைகள். கூட எழுந்தருளும் வைப₄வம் இவை முதலான வைப₄வங்கள் எமபார்ஸ்வாமி கைங்கர்யங்கள் ஆகும். உடையவர் திருவரங்கர் செல்வத்தைத் திருத்தினப்போலே. எம்பார் ஜீயர் ஸ்வாமி உடையவருடைய செல்வத்தைச் சீர்திருத்தி "ஸ்ரீராமாநுஜமுக்₂ய தே₃ஶிக ஸத் கைங்கர்ய ஸம்ஸ்த₂பக" ராய் எழுந்தருளியிருந்தார். எம்பார் ஜீயர் ஸ்வாமி ஸ்வபக்ஷ ஸ்த₂பந பரபக்ஷப்ரதிக்ஷேபங்களைச் செய்துகொண்டெழுந்தருளியிருந்தார் :

### முக்கிய நிகழ்ச்சிகள்

1) திருமண் காப்பு விஷயமாய் ஸித்₃த₄ந்தம்.
2) பெருமாள் நெற்றியில் திருமண் காப்பு விசாரம்.
3) "சேத்தத்தின் வயிற்றில் சிறு குட்டி" வாக்யார்த்த₂ விசாரம்.
4) "அன்றுசராசரங்களை வைகுந்தத் தேற்றியது" பற்றிய விசாரம்.
5) பெருமாள் இங்கவதரித்த காலத்தில் பரமபத₃த்தில் பெருமாள் இல்லையா என்ற விசாரம்.
6) உடையவர் திருமஞ்சனக் கட்டியம் அருளியது.

7) ஸ்ரீவசநபூ$_4$ஷண ஸ்ரீப$_4$ாஷ்யங்களுக்கு ஐககண்ட்$_2$யம்.
8) புராணமார்க்க$_3$ தீ$_3$பிகை அருளிச்செய்தது.
9) நாராயணபரத்வம் திருச்சித்திரகூடத்திலே
(சிதம்பரத்திலே) ப்ரத்யக்ஷனித்$_3$த$_4$ம் என்றது.
10) க$_3$ர்ப்ப$_4$ ஸமாஶ்ரயண விசாரம்.
11) பிள்ளைகள் விளையாட்டுப் பெருமாளை ஜீயர்
தண்டனிட்டது.
12) ஆசார்யாபி$_4$மாநமே தஞ்சம் என்பது பற்றிய விசாரம்.
13) சென்னையில் (பைராகிமடம்) ஸ்ரீநிவாஸன் ஸந்நிதி$_4$யில்
தங்கியது.
14) ஸ்ரீபெரும்பூதூர் வஸந்தோத்ஸவ மண்டப கைங்கர்யம்.
15) சென்னையில் ''ஸத்யஸமாஜம்'' என்ற ஸபையை
ஸ்தாபித்தது.
16) ஸ்ரீபெரும்பூதூரில் ''கே$_3$ாத$_3$ாவிலாஸம்' என்ற
நந்தவநம் அமைத்தல்.
17) ஸ்ரீபெரும்பூதூரில் வநபோ$_4$ஜந உத்ஸவம் நடத்தி
வைத்தது.
18) கலியுகா$_3$தி$_3$ 4984 ஆன (கி. பி. 1893) சித்ரபா$_4$நு ௵
தை மாதம் க்ருஷ்ண சதுர்த$_3$ஶி (த்ரயோதஶீ?) தி$_2$
யில் திருநாட்டுக்கு எழுந்தருளினார்.

கப்யாமூர்க்$_3$ராமவர்யேऽவதரண விப$_4$வ:
ப$_3$ாலப$_4$ாவோ விரக்தி:
ப்ரவ்ராஜஶ்ஶாஸ்த்ரசிந்தா
யது$_3$கி$_3$ரிக$_4$டிகாஶைலகு$_3$ர்விந்த்$_3$ர ஸேவா।
யோகா$_3$ப்$_4$யாஸோ விஶேஷாத்
வரவரயமிந: ஸாத$_3$ராபாங்க$_3$வீக்ஷா.
ப்ரஜ்ஞாவல்லீ விலாஸோ
க$_4$நயதிருபதௌ ஆஶ்ரமோத்தம்ஸலாப$_4$:॥
ராக$_3$: ஸ்ரீபூ$_4$தபுர்யாம்...
லோகாசார்ய ப்ரதிஷ்டா$_2$ ப்ரகடந விப$_4$வ:
ஸத் க்ருதிநாம் க்ருதிஶ்சேத்-
யேவம் ஸ்ரீஶைலராமாநுஜ கு$_3$ருயமிநாம்
வைப$_4$வோ ஜ்ஞாப்யதேऽத்ர॥

எம்பார் ஜீயர் ஸ்வாமி வைப$_4$வம் ஸமாப்தம்.

மளவும், இவ்வுபாயத்தைக்கொண்டு உபேயத்தைப் பெறுவானொரு சேதநனுக்கு உபாயோபேயாதி₄கார ப்ரதா₄நாபேக்ஷிதங்களையும், உபாயாந்தர த்யாக₃ ஹேதுக்களையும், மற்றும் த்யாஜ்யோபாதே₃யங்களா யுள்ளவற்றையும் விஸ்தரேண சொல்லுகையாலே, அதி₄காரி நிஷ்ட₂ா க்ரமம் சொல்லுகிறது [80-307]. 4. (தான் ஹிதோபதே₃ஶம் பண்ணும்போது) (308) என்றுதொடங்கி, (உகப்பும் உபகாரஸ்ம்ருதியும் நடக்க வேணும்)(365)என்னுமளவாக,ஹிதோபதே₃ஶஸமயத்தில் ஸ்வாசார்ய பாரதந்த்ர்யாதி₃களான ஸதா₃சார்ய லக்ஷணம்,ஸச்சி₂ஷ்யலக்ஷணம்,தது₃ப₄யர் பரிமாற்றம், தீமனங்கெடுத்த ஸ்வாசார்ய விஷயத்தில் சிஷ்யனுப காரஸ்ம்ருதி க்ரமம், இவற்றைச் சொல்லுகையாலே, ஸித்₃தோ₄பாயநிஷ்ட₂னான அதி₄காரியினுடைய ஸ்வா

---

என்றது. "ஸ்வயத்ந நிவ்ருத்தி பாரதந்த்ர்ய ப₂லம்" (ஸூ71) இத்யாதி₃ ஸந்த₃ர்ப்ப₄ம், "ப்ராப்தாவும்" (ஸூ70) இத்யாதி₃ पूर्ववाक्याधीन-स्मृतिविषयतया उपेक्षानर्हமாய் வந்ததென்றபடி. "उपस्थितस्योपेक्षानर्हत्वं प्रसङ्गः" என்னக்கடவதிறே. (உபாயோ பேயேத்யாதி₃)उपायश्चोपेयं च उपायोपेये. तयोरधिकारभूतानि यानि प्रधानापेक्षितानि तानि என்றபடி. *उपायाधिकारत्वं—उपायाधीनफलान्वयितावच्छेदकत्वं, तेन रूपेण प्रधानापेक्षितங்கள் — शक्तिलज्जास्वव्यापारत्यागங்கள்.* उपेयाधिकारत्वञ्च—(1) तदविलम्ब-प्रयोजकत्वं (2) नियत-तदव्यवहित-पूर्वभावित्वं वा;तेन रूपेण प्रधानापेक्षितங்கள்प्रेमादिகளென்று கண்டுகொள்வது. (उपायान्तरत्यागहेतुக்கள்)-अप्राप्तत्वादिகள். (மற்றும் त्याज्योपादेयங்கள்) देहयात्रा-आत्मयात्रादिகள். *(அதி₄காரி நிஷ்ட₂ாக்ரமம்) अधिकारिणः-उपायाधीन-फलान्वयिनः, या निष्ठा-उपायाधीनफलव्यतिरेक-प्रयोजकव्यतिरेक-प्रतियोगिनी स्थितिः. तस्याः क्रमः—परिपाटी என்றபடி.* (தீமனங்கெடுத்த) மனோதோ₃ஷத்தைப்போக்கின. सिद्धोपाये निष्ठा—स्थितिः यस्य स तथोक्तः-सिद्धोपाय

சார்யாநுவர்த்தநக்ரமம் சொல்லுகிறது [308-365]. 5.(ஸ்வதோ₃ஷாநுஸந்த₄நம் ப₄யஹேது)(366)என்று தொடங்கி (நிவர்த்தக ஜ்ஞாநம் அப₄யஹேது) (406) என்னுமளவாக, இவ்வதி₄காரிக்கு அத்₃வேஷம் தொடங்கி, ப்ராப்திப₂லமான கைங்கர்யபர்யந்தமாக வுண்டான பேறுகளுக்கெல்லாம் ஹேதுவாய், ஸ்வ கர்மப₄ய நிவர்த்தகமான ப₄க₃வந்நிர்ஹேதுக க்ருபா ப்ரப₄ரவம்சொல்லுகிறது[366-406]. 6.(ஸ்வதந்த்ரனை உபாயமாகத் தான் பற்றின போதிறே) (407) என்று தொடங்கி, மேலெல்லாம் மிக்கவேதியர் வேதத்தினுட் பொருளான சரமபர்வநிஷ்டை₂யை வெளியிதாகச் சொல்லுகிறது[407-463].(வேத₃ார்த்த₂மறுதியிடுவது) (xவா1) என்று தொடங்கி, இவ்வர்த்த₂த்திலே தலைக்

वरणरूपानुपायप्रपत्तिप्रयोगकर्ता என்றபடி.(अनुवर्तन-प्रसादजनकव्यापारः (மிக்கவேதியர் வேதத்தினுட் பொருளான)—परमवैदिकादृत-वेद-अन्तस्थ-सारार्थமான. (சரமபர்வநிஷ்டை₂யை)—सिद्धोपायத்தி னுடைய प्रकारभेदங்களில் வைத்துக்கொண்டுமுடிந்த நிலமான ஆசார்யாபி₄மாநமாகிற ப்ரகாரத்தையென்றபடி. तरतमभावा-पन्न-पुरुषार्थतत्साधनங்களையொக்க உபபாதி₃க்கையால் विप्रलम्भ-कत्वம் வாராதோ என்ன அருளிச்செய்கிறார்.-(வேத₃ார்த்த₂ மறுதியிடுவது—என்று தொடங்கி) * रत्नकरीषसमावेशन्यायेन *

பற்ற. (மிக்கவேதியர் வேத₃ம்) திருவஷ்டாக்ஷரம். "திரு வெட்டெழுத்தும் கற்று....உற்றதுமுன்னடியார்க்கடிமை" என்னக்கடவதிறே. உபக்ரமோபஸம்ஹார ந்யாயத்தாலே சரமப்ரகரணார்த்த₂ம் இப்ரப₃ந்த₄முக்₂யார்த்த₂மென்று திரு வுள்ளம்பற்றியருளிச்செய்கிறார்.— (வேத₃ார்த்த₂ம் என்று

x வா—வாக்யம்; ஸ்ரீவசநபூ₄ஷண ஸூத்ரங்களைக் குறிக்கிறது.

கட்டுகையாலே, இப்ரப3ந்த4த்தில் சரமப்ரகரண ப்ரதி பாத்3யமான அர்த்த2ம் வேத3தாத்பர்யமென்னுமிடம் ஸம்ப்ரதிபந்நம்.

ஸ்ரீகீ3தைக்குச் சரமஶ்லோகம்போலேயிறே, இப்ரப3ந்த4த்துக்குச் சரமப்ரகரணம். அங்கு ஸாத்4யோ

---

प्रथमपर्वप्रतिपादनं अन्यार्थं, तात्पर्यं சரமபர்வத்திலேயாகையாலே தோ3ஷமில்லையென்றபடி. (संप्रतिपन्नம்) निर्विवादतया प्रसिद्धம்.

वेदतात्पर्यம் சரமபர்வமென்னுமத்தை,हेतूक्तियாலே த்3ருடீ4கரிக்கிறார்—(ஸ்ரீகீ3தைக்கு என்று தொடங்கி) *चरमोक्तिव्यञ्जित-प्रबन्धतात्पर्यपर्यवसानभूमिकत्वं दृष्टान्तदार्ष्टान्तिकங்களுக்கு साधारण-धर्मம்.* வேத3ார்த்த2த்தையுள்ளபடி ப்ரதிபாதி3க்கிற இப்ரப3ந்த4 பரமதாத்பர்ய விஷய-அர்த்த2மேएतद्व्याख्येय-वेद-परम-तात्पर्यविषयமென்றபடி. "उपायतां परित्यज्य न्यस्येत् देवे तु तामभीः। एकान्तात्यन्तदास्यैकरतिस्तत्पदमाप्नुयात् ॥ तत्प्रधानमिदं शास्त्रं इति गीतार्थसङ्ग्रहः॥" என்கிறத்தை யிங்கே யநுஸந்தி4ப்பது. दृष्टान्त दार्ष्टान्तिकங்களின் படிகளை விவரிக்கிறார்,—(அங்கு ஸாத்4யோபா யங்களை என்று தொடங்கி) அங்கு—கீ3தையிலே. ஸாத்4

---

தொடங்கி). (ஸம்ப்ரதிபந்நம்) என்றது— सकलवेदार्थनिर्णयार्थं प्रवृत्तமான இப்ரப3ந்த4த்தில் उपक्रमोपसंहारन्यायத்தாலே चरम-प्राप्य-प्रापक-प्रधान-एकवाक्यार्थ-बोधமே உண்டாகையாலே. गत-मत्सर-सहृदय-जन-सम्प्रतिपन्नமென்றபடி.

இவ்வர்த்த2த்துக்கு த்3ருஷ்டாந்தம் காட்டுகிறார்.—(ஸ்ரீகீ3தைக்கு) என்று தொடங்கி. (ஸ்ரீகீ3தைக்குச் சரமஶ்லோகம் போலே) என்றது— "यच्छ्रेयस्स्यान्निश्चितं ब्रूहि तन्मे शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम्" என்று அர்ஜுநன் உபஸந்நனுய்க்கேட்க, "अस्थानस्नेहकारुण्यधर्माधर्मधियाकुलम्। पार्थं प्रपन्नं उद्दिश्य शास्त्रावतरणं कृतम्" என்று அவனுக்கு ஹிதோபதே3ஶார்த்த2மாக ப்ரவர்த்தித்த கீ3தாஶாஸ்த்ரம் சரமஶ்லோகத்தோடே தலைக்கட்டுகையாலே. "स्वधर्मज्ञानवैराग्य-साध्यभक्त्येकगोचरः। नारायणः परं ब्रह्म गीताशास्त्रे समीरितः॥" என்

பாயங்களை உபதே3ஶித்துக்கொண்டு போந்து, ஸ்வ ஸ்வாதந்த்ர்ய பீ4தனானவனுக்கு, அவற்றைத்தள்ளி, ஸித்3தே4ாபாயம் காட்டப்பட்டது. இங்கு, ஸித்3தே4ா பாயத்தைச் சொல்லிக்கொண்டு போந்து, ஈஶ்வர

---

யோபாயங்களை—கர்ம ஜ்ஞாந ப4க்தி ப்ரபத்திகளையும், அவதார ரஹஸ்ய ஜ்ஞாநாதி3களையும். (உபதே3ஶித்துக்கொண்டு போந்து)—स्वशरीरत्वकथनादिகளாலே அத்யந்த பாரதந்த்ர்யத்தோடேகூட உபதே3ஶித்துக்கொண்டு போந்து. (स्वस्वातन्त्र्य भीतனானவனுக்கு)—* உபாயாந்தரத்தை யநுஷ்டி2க்குமிடத்தில் வரக்கடவதான தன்னுடைய स्वयत्नाधीन-भगवदनभिमतस्वरूप-भाव्यनर्थशङ्कியானவனுக்கு என்றபடி.* (அவற்றைத் தள்ளி) உபாயாந்தரங்களை நிஷேதி4த்து. (ஸித்3தே4ா பாயம் காட்டப்பட்டது) "अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि" என்று अज्ञातज्ञापनं பண்ணப்பட்டது. (இங்கு) இப்ரப3ந்த4த்திலே. (ஸித்3தே4ாபாயத்தைச் சொல்லிக்கொண்டு போந்து) प्रथमप्रकरणம் முதலாக उपान्त्यप्रकरणம் அளவாக, चेतनयत्नसाध्यமன்றிக்கே नित्यसिद्धமான எம்பெருமானாகிற உபாயத்தைச் சொல்லிக்கொண்டு போந்து. (ஈஶ்வரஸ்வா

---

றும். "निजकर्मादि भक्त्यन्तं कुर्यात्प्रीत्यैव कारितः। उपायतां परित्यज्य न्यस्येत् देवे तु तामभीः॥ एकान्तात्यन्तदास्यैकरतिः तत्पदमाप्नुयात्। तत्प्रधानमिदं शास्त्रं इति गीतार्थसङ्ग्रहः॥" என்றும். "मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु। मामेवैष्यसि सत्यं ते प्रतिजाने प्रियोऽसि मे॥" "सर्वधर्मान् परित्यज्य मामेकं शरणं व्रज। अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि मा शुचः॥" என்ற चरम-श्लोकद्वयार्थ-मुख्यविशेष्यक-एकवाक्यार्थबोधतात्पर्यத்தாலே கீ3தார்த்த2 ஸங்க்3ரஹத்திலே शास्त्रसंग्रहம் பண்ணுகைக்குடலான சரமஶ்லோகம்போலே யென்றபடி. மேல் கீ3தாசரமஶ்லோகத்துக்கும் இப்ரப3ந்த4 சரமப்ரகரணத்துக்கும் உண்டான வைலக்ஷண்யத்தை யருளிச்செய்கிறார்.—(அங்கு என்று தொடங்கி, சரமபர்வம காட்டப்பட்டது என்னுமளவாக) (ஈஶ்வர ஸ்வாதந்தர்யத்

**ஸ்வாதந்த்ர்யத்துக்கு அஞ்சினவனுக்கு. ப்ரத₂மபர்வத்தைத்தள்ளி, சரமபர்வம் காட்டப்பட்டது.**

---

தந்த்ர்யத்துக்கஞ்சினவனுக்கு)—*ஶரண்யஹ்ருத₃யாநு கு₃ணமல்லாதபோது வரணமும் அகிஞ்சித்கரமாகையாலே.* "**क्षिपामि**" என்று நினைக்கில் நிவாரகரின்றிக்கேயிருக்கிற **भगवत्स्वातन्त्र्यभी**தனுக்கு. (ப்ரத₂மபர்வத்தைத்தள்ளி)—***सिद्धोपाय प्रभेद**மாயிருக்கிற **अर्चाविशिष्ट** வேஷத்தை நிஷேதி₄த்து.* (சரம பர்வம் காட்டப்பட்டது) **सिद्धोपाय**த்தினுடைய **अवस्थाभेद**மாய், "**आसन्नत्वात् दयालुत्वात् ज्ञानित्वात् गुणभावतः**" என்கிறபடியே. பரதந்த்ரனுமாய் த₃யாளுவுமான *ஆசார்யாவதார விஶிஷ்ட வேஷம் உபாயோபேயங்கள்* என்று காட்டப்பட்டதென்றபடி.இந்தச் சரமப்ரகரணத்தை நாயகரத்நம்போலேயென்று

---

துக்கு அஞ்சினவனுக்கு) என்கிறவிடத்தில் "**सिद्धिर्भवति वा नेति संशयोऽच्युतसेविनां। न संशयोऽस्ति तद्भक्तपरिचर्यारतात्मनाम्॥**" என்கிற ஶ்லோகமநுஸந்தே₄யம். **भगवत्स्वातन्त्र्य**த்தையமுக்கக் கடவ புருஷகாரஸம்ப₃ந்த₄ம் இருக்கச்செய்தே அதுக்கு அஞ்சுவான் என்னென்னில்; 1. "**यस्या वीक्ष्य मुखं तदिङ्गितपराधीनो विधत्तेऽखिलं। स्वर्गं दुर्गतिम्**" என்றும். "**यद्भ्रूभङ्गाः प्रमाणं स्थिरचररचनातारतम्ये मुरारेः**"என்றும். பிராட்டி. தம்முடைய**अरविन्दलोचनमनः**காந்தையாகையாகிறதன்மையாலே,**भगवत्स्वातन्त्र्य-कार्य**மான**चेतनदुर्गतिप्रदानादि**லீலைகளிலுங்கூட எம்பெருமானுக்கு ரஸம் விளையும்படியாக முகங்கொடுத்து ரஞ்ஜிப்பித்துக் கொண்டு. உசிதகாலங்களிலே "**उपायैर्विस्मार्य**" என்கிற படியே கச்சை நெகிழ்த்(து)தல் முதலான வ்யாபாரங்களாலே க்ரமேண வஶீகரிக்கவேண்டும்படி **भगवत्स्वातन्त्र्यं निरङ्कुश**மாயிருக்கையாலேயும். 2. பிராட்டிதாமும் அகி₂லஜக₃ந் மாதாவாயிருக்கையாலே. ப்ரியபரையாய்க்கொண்டு "**ऐश्वर्य-मक्षरगतिं**" என்கிறபடியே சேதநருசியை மீட்கமாட்டாதே. ஐஶ்வர்யாதி₃களைக் கொடுக்கத்தேடுமவளாயிருக்கையாலேயும் **स्वदोषानुसन्धान**த்தால் அஞ்சக்குறையில்லையிறே. ஆனால், சரமபர்வநிஷ்டூ₂ர்க்கு இதில்லாதபடியென்னென்னில்:

நாயகரத்நஸ்த₂ாநீயமாக மேலே (443 வா. வ்யா. அவ) வ்யபதே₃ஶிப்பதுமுண்டு. சரமத்துக்கு मध्यस्थितनायकरत्नस्थानीयत्वம் கூடும்படியென்னென்னில்—நாயகக்கல்லுக்கு स्थित्यवस्थैயும் निर्माणावस्थैயும் இரண்டவஸ்தை₂யுண்டு. அதில் ஸ்தி₂த்யவஸ்தை₂—परितोऽवस्थितरत्नमध्यக்திலேயாய், நிர்மாணவஸ்தை₂ प्रतिसम्बन्धितया मध्यप्रदेशनिष्पादकங்களான ரத்நாந்தரங்களினுடைய निर्माणங்களுக்குச் சரமமாயிருக்கும். ஆகையால், *நிர்மாணவஸ்தை₂யைப்பற்ற, चरमत्वमुपपन्नமென்று கண்டு கொள்வது.*

---

1. பிராட்டிமார்கள் திருமுலைத்தடத்தாலே நெருக்கிலும் அவ்வருகொன்றுமறியாதபடி எம்பெருமான்றானே மேல்விழுந்தநுப₄விக்கவேண்டும்படி அவனுக்கு அத்யந்தம் அபி₄மதராய். "கொடுவுலகம் காட்டேலே" என்று லீலாவிபூ₄தி ப்ரஸக்தியில் முடியும் தன்மையராய், "நின்கண் வேட்கையெழுவிப்பனே" என்று கேவலஹிதபரரான பராங்குஶ பரகால நாத₂ யாமுந யதிவராதி₃ பூர்வாசார்யர்களுடைய ஸம்ப₃ந்த₄முடையாருடைய தே₃ாஷமெல்லாம், வேர்ச்சூடுவார் மண்பற்றுப்போலேயும், திருவாய்ப்பாடியில் வெண்ணெய்போலேயும் அத்தலைக்கு பே₄ாக்₃யமாயிருக்கையாலேயும். 2. விபீ₄ஷணழ்வானோடு வந்த நால்வரையும் ராமகோ₃ஷ்டி₂யில் பரீக்ஷைபண்ணுமல் உள்ளேபுகுரவிட்டுக்கொள்ளுகையாலேயும். 3. "न संशयोऽस्ति तद्भक्तपरिचर्यारतात्मनाम्" என்று ஶாஸ்த்ரமுண்டாகையாலேயும். 4. உடையவருக்கு "உப₄யவிபூ₄தியையும் உமக்கும் உம்முடையார்க்கும் தந்தோம்" என்று நிரங்குஶஸ்வதந்த்ரனை எம்பெருமான்றானே தெற்குவீடான கோயிலிலும், வடக்கு வீடான திருமலையிலும். திருப்பவளச்செவ்வாய்திறந்து "मा ते भूदत्र संशयः" என்று ப்ரதிஜ்ஞைபண்ணியருளிச் செய்கையாலேயும். ஆசார்யாபி₄மாநாந்தர்க₃தர்கள் ப₄க₃வத் ஸ்வாதந்த்ர்யத்துக்கு விஷயபூ₄தரல்லாமையாலே அவர்கள் அதுக்கு அஞ்சவேண்டா என்னுமிடம் ஸம்ப்ரதிபந்நம் என்று கண்டுகொள்வது.

ஆக, இப்படி ஆறு ப்ரகரணமாய், ஆறர்த்த₂ ப்ரதிபாத₃கமாயிருக்கும்.

2\. ஒன்பது ப்ரகரணமாய், ஒன்பதர்த்த₂ ப்ரதிபாத₃கமான க்ரமம்

ஒன்பது ப்ரகரணமாய், ஒன்பது அர்த்த₂ ப்ரதிபாத₃கமாயிருக்கும் என்னவுமாம். 1.2. அந்தப் பக்ஷத்திலும், ப்ரத₂ம ப்ரகரணம் (வா. 5-22) பூர்வவத். 2. மேல் (ப்ரபத்திக்கு) (வா. 23) என்று தொடங்கி, (ப₄க₃வத்₃விஷய ப்ரவ்ருத்தி சேரும்) (வா.114) என்னுமளவும், பூர்வப்ரகரணோக்தோபாயஶேஷமாகையால், உபாய ப்ரகரணம். 3. (ப்ராபகாந்தர பரித்யாக₃த்துக்கும்) (வா 115) என்று தொடங்கி, (ஆகையாலே ஸாங்க₃ரூபமாயிருக்கும்) (வா. 141) என்னுமளவும் உபாயாந்தரதோ₃ஷ ப்ரகரணம். இப்ரகரணத்தில் ப்ரபத்த்யுபாய வைலக்ஷண்யகத₂நம் ப்ராஸங்கி₃கம். 4. (இவனவனைப்பெற நினைக்கும்போது) (வா. 142) என்று தொடங்கி, (இடைச்சியாய்ப்பெற்று

---

(ஆறு ப்ரகரணமாயித்யாதி₃) नानारत्नमयமான भूषणத்துக்குப் परभागातिशयसम्पादकतया ஷட்₃ரூபங்களும் அபேக்ஷிதங்களாயிருக்குமிறே. அத்தைப்பற்ற இங்கும் ஆறு ப்ரகரணமாயிருக்கிறது.

(ஒன்பதுப்ரகரணமாயித்யாதி₃) நவரத்நப்ரஸித்₃தி₄யைப்

---

ஆக, இத்தால், சரமஶ்லோகத்துக்கும் இப்ரப₃ந்த₄ சரமப்ரகரணத்துக்கும் सभयत्व-अभयत्वरूपமான वैलक्षण्यம் காட்டப்பட்டது. மேல் ஆறுவாக்யப்ரக்ரியையை நிக₃மிக்கிறார்,— (ஆக என்று தொடங்கி).

மேல், ஒன்பது வாக்யமான யோஜனையைப் பிரித்துக் காட்டுவதாக, அவ்வர்த்த₂த்தை ப்ரதிஜ்ஞை பண்ணுகிறார்,— (ஒன்பது என்று தொடங்கி)

விடுதல் செய்யும்படியாயிருக்கும்) (வா. 242) என்னு மளவும் ஸித்₄தோ₄பாயநிஷ்ட₂ருடைய வைப₄வ ப்ர கரணம். 5. (இப்படி ஸர்வப்ரகாரத்தாலும்) (வா. 243) என்று தொடங்கி, (உபேயவிரோதி₄களுமா யிருக்கும்)(வா.307) என்னுமளவும் ப்ரபந்ந தி₃நசர்யா ப்ரகரணம். 6. (தான் ஹிதோபதே₃ஶம் பண்ணும் போது) (வா.308) என்று தொடங்கி (சேதநனுடைய ருசியாலே வருகையாலே) (வா. 320) என்னுமள வும் ஸதா₃சார்ய லக்ஷணப்ரகரணம். 7. (சிஷ்யனென் பது) (வா. 321) என்று தொடங்கி, (உபகார ஸ்ம்ருதியும் நடக்கவேணும்) (வா. 365) என்னுமள வும் ஸச்சி₂ஷ்யலக்ஷண ப்ரகரணம். 8. (ஸ்வ தோ₃ஷாநுஸந்தா₄நம்) (வா. 366) என்று தொடங்கி (நிவர்த்தகஜ்ஞாநமப₄யஹேது) (வா. 406) என்னுமள வும், ப₄க₃வந்நிர்ஹேதுக விஷயீகார ப்ரகரணம். 9. (ஸ்வதந்த்ரனை) (வா. 407) என்று தொடங்கி,

---

பற்ற, रत्नभूषणस्थानीयமான இந்த ப்ரப₃ந்த₄த்துக்கும் नवप्रकरणात्मकत्वமென்று கண்டுகொள்வது. இந்த संख्याद्वयமும் இப்ரப₃ந்த₄ வ்யாக்₂யேயமான மந்த்ரரத்ந பத₃ஸங்க்₂யா பே₄த₃த்தை அவலம்பி₃த்திருக்கும். ஷட்ஸங்க்₂யை தான்— "षट्पदोऽयं" என்று சொல்லப்பட்ட பத₃ஸங்க்₂யைச்கு ஸாஸங்க₃தமிறே. நவஸங்க்₂யையும்—த்₃வயத்திலே "श्रीमन्"

---

(प्रकरणं) अवान्तरवाक्यं. (ஒன்பதர்த்த₂ ப்ரதிபாத₃கமாயிதி)— नवप्रकरणत्वे हेतुः. एवं पूर्वत्रापि. "अर्थैकत्वादेकं वाक्यं साकाङ्क्षं चेत् विभागे स्यात्" என்னக்கடவதிறே. அத்தை வகுத்துக் காட்டு கிறார்.— (அந்தப் பக்ஷத்திலும் என்று தொடங்கி) இந்த ஒன்பது ப்ரகரண பக்ஷத்திலும், ஆறு ப்ரகரண பக்ஷத் தில் சொன்ன முதல் ப்ரகரணமும், கடையில் இரண்டு

மேலடங்கச்சரமப்ராப்யப்ராபகப்ரகரணம்[407-463]. இவ்விரண்டு க்ரமத்தையும்பற்றவிறே,"பேறுதருவிக்கு

என்றும் "नारायण" என்றும் "चरणौ" என்றும் "शरणं"என்றும் "प्रपद्ये" என்றும் "श्रीमते" என்றும் "नारायणाय" என்றும் "न" என்றும் "मः"என்றும் सम्बुद्ध्यन्तपक्षத்திலே ஒன்பது பதங்கள் என்கிற ஸங்க்யையைக்குச் சேருமென்று கண்டுகொள்வது. (प्रथमप्रकरणं पूर्ववत्) என்றது— पुरुषकारोपायवैभवप्रतिपादकं என்றபடி. இப்படி உபந்யஸித்த ப்ரகாரத்வயத்துக்கும் प्राचीन-संवादம் காட்டுகிறார்.-(இவ்விரண்டு க்ரமத்தையும்பற்ற விறே) इत्यादिना. (தனியன்கள்) முக்தகமான गाथाद्वयं. (பேறு தருவிக்குமவள்தன் பெருமை) என்று புருஷகார வைபவமும். (ஆறு) என்று உபாயமும். (பெறுவான் முறை) என்று அதிகாரி க்ருத்யமும். (அவன் கூறு குருவைப் பணுவல்) என்று அந்த அதிகாரியினுடைய ஸத்குருபஸேவ

ப்ரகரணங்களும் ஸமாநம். நடுவில் மூன்று ப்ரகரணத்திலே, முதலிரண்டு ப்ரகரணங்களை நாலுப்ரகரணங்களாயும், மேலொன்றையும் இரண்டு ப்ரகரணங்களாயும், ஆக ஒன்பது ப்ரகரணமாக வகுத்தருளிச்செய்கிறார் என்று கண்டுகொள்வது. இப்படி இருவகையாக அவாந்தரவாக்ய யோஜனைகளுக்குப் பூர்வாசார்ய ஸம்ப்ரதாயம் காட்டுகிறார்.- (இவ்விரண்டு க்ரமத்தையும் பற்றவிறே என்று தொடங்கி). ஆறு வாக்யமாக யோஜனைக்குச் சேர்ந்த தனியன் (பேறித்யாதி). (பேறு) அத்வேஷம் தொடங்கியுண்டான பல பரம்பரைகளை. (தருவிக்குமவள்தன்) எம்பெருமானைக் கொண்டு கொடுப்பிக்கும் பெரியபிராட்டியாருடைய, (பெருமை) அஸாதாரணவைபவமும். இத்தால், "पुरुषकार-वैभवञ्च" என்கிற அர்த்தமும் சொல்லிற்று. (ஆறு) உபாயம். இத்தால், "साधनस्य गौरवं" என்கிற அர்த்தமும் சொல்லிற்று. (பெறுவான்முறை) अधिकारिकृत्यமும். (அவன் கூறுகுருவைப் பணுவல்) அந்தவதிகாரியினுடைய सद्गुरूपसेवनமும்.

மவன்தன் பெருமை'' "திருமாமகள்தன்'' என்கிற தனியன்களிரண்டும் அவதரித்தது; ஆகையாலே இரண்டு

---

நமும், (கொள்வதிலேயாகிய குளிர்ந்தவருள்) என்று ஹேதுக்வேந ஒன்றையும் கொள்ளாமலிருக்கிற நிர்ஹேதுக ப₄க₃வத் க்ருபையம். (மாறில் புகழ் நற்குருவின் வண்மை) என்று निस्तुलकल्याणगुणसद्गुरूपायत्व முமாகிற ஷடர்த்த₂ங்களை–இத்யாத்₃யர்த்த₂ம் கண்டுகொள்வது.

(திருமாமகள் இத்யாதி)(திரு)"विष्णोः श्रीः" என்கிற பெரிய பிராட்டியாரென்ன.(மாமகள் தன் சீர்) பெரியபிராட்டியார்க்கும் ஸம்பத்தான-திருவுக்கும்திருவாகிய எம்பெருமானென்ன, இவர்களுடைய. (அருளேற்றமும) க்ருபாதிஶய ப்ரயுக்தமான புருஷகாரோபாய வைப₄வமும். இது ப்ரத₂ம ப்ரகரணார்த்த₂ம். (திருமால் இத்யாதி₃) இது உபாய ப்ரகரணார்த்த₂ம். (அவ்வழியொழிந்தன) பூர்வோக்தோபாய வ்யதிரிக்தங்களான. (அனைத்தின்) ஸர்வோபாயங்களுடைய. (புன்மை) ஸ்வரூபாநுசிதத்வாதி₃தோ₃ஷங்கள். இது உபாயாந்தர தோ₃ஷ

---

(கொள்வதிலேயாகிய குளிர்ந்த அருள்தான்) निर्हेतुकभगवत्कृपै யும். (மாறில்) ஒப்பில்லாமலிருக்கிற. (புகழ்) கல்யாண கு₃ணங்களையுடைய. (நற்குருவின்) ஸத்₃கு₃ருவினுடைய (வண்மை) உபாயத்வமும். இத்தால் "गुरोरुपायताञ्च" என்கிற அர்த்த₂ம் சொல்லிற்று—என்று ஆறு ப்ரகரணார்த்த₂ங்களையும் கண்டுகொள்வது.

ஒன்பது ப்ரகரணமாகப் பண்ணும் யோஜனைக்குச் சேர்ந்த தனியன் (திருமாமகளித்யாதி₃). (திரு)—பெரிய பிராட்டியார் தாமேயான. (மாமகள் தன்) தலைமகளான ஜநகநந்தி₃நியினுடைய. (சீரருளேற்றமும) நிர்ஹேதுகக்ருபா ப்ரபா₄வமும்; (திருமால் சேவடி சேர் வழி நன்மையும்) ஸித்₃தோ₄பாய ஸ்வீகாரத்தினுடைய ஸ்வரூபாநுரூபதையும்;(அவ்வழியொழிந்தன அனைத்தின் புன்மையும்) तदितरसर्वधर्मங்களி

ப்ரகாரமுமநுஸந்தி,க்கக் குறையில்லை.

ப்ரகரணார்த்த₂ம். (மெய் இதயாதி₃) (மெய்வழி) வஸ்து ஸத்தான உபாயமான ஸித்₃தே₄ாபாயத்தில். († ஊன்றிய) இடையில் ஸ்வீகாரமநுபாயமாகையாலே अव्यवधानेन ஸக்த ரான. (மிக்கோர்) "स उत्तमोऽधिकारी स्यात्" என்கிற உத்த மாதி₄காரிகளுடைய. (பெருமையும்) வைப₄வமும். இது ஸித்₃தே₄ாபாயநிஷ்ட₂ருடைய வைப₄வப்ரகரணார்த்த₂ம். (ஆரணம் இத்யாதி₃) (ஆரணம் வல்லவர்) பரமரஹஸ்ய மான வேதா₃ந்தார்த்த₂ஜ்ஞாநமுடைய இவ்வதி₄காரிகள். (†அமர்) ஸ்வயம் ப்ரயோஜநம் என்று வர்த்திக்கிற. (நன்னெறி யும்) ஸமீசீநமான அநுஷ்டா₂ந பரிபாடியும். இது ப்ரபந்ந தி₃நசர்யா ப்ரகரணார்த்த₂ம். (நாரணனித்யாதி₃) (நாரணன் †தான்தரு) நாராயண சரண ப்ரத₃னான. (நற்குரு) ஸத்கு₃ரு வினுடைய, (நீதியும்) லக்ஷணமும். இது ஸதா₃சார்யலக்ஷண ப்ரகரணார்த்த₂ம். (†சோதியித்யாதி) (சோதி) ஜ்யோதிர்மய மான. (†மாமலர்) பெருமலரான பத்₃மம் போன்ற. இவை தானிலேயன்வயிக்கிறது. (†தொல்லருள் குருவின்) "कारुण्यात् शास्त्रपाणिना" என்று பூர்வஸித்₃த₄மான க்ருபையை நிரூபக மாக உடைய ஆசார்யனுடைய. (பாதம்) திருவடிகளிலே, (மாமலர்) மஹநீய புஷ்பங்களைக்கொண்டு. (பணிபவர்) ஆஶ்ரயிக்கும் ஸச்சி₂ஷ்யர்களுடைய. (தன்மையும்) லக்ஷண

னுடையस्वरूपविरुद्धत्वादिदोषமும்;(மெய்வழி†யொன்றியமிக்கோர் பெருமையும்)सिद्धोपायनिष्ठருடைய வைப₄வமும்;(ஆரணம் வல்ல வர்†அமரும்நன்னெறியும்)வேத₃ம் வல்லார்பொருந்தி வர்த்திக் கும்அநுஷ்டா₂நநியமமும்; (நாரணன்†தான்தரு நற்குருநீதியும்) எம்பெருமானை உபகரிக்கும் ஆசார்யனுடைய லக்ஷணமும், (†சோதி வானருள் தூய மா குருவின் பாத மாமலர் பணிபவர் தன்மையும்) ஜ்யோதிர்மயமான பரமபத₃த்தைக் கொடுத் தருளுமவனாய், தன்னிடத்திலும் ஶிஷ்யனிடத்திலும் ப₂லத்தினிடத்திலும் ப்ரதிபத்திமாறாட்டம் இல்லாத

†உரைகளில் தனியன் பாடபேதங்கள் குறிக்கொள்ளத்தக்கவை.

மும். இது ஸச்சிஷ்யலக்ஷண ப்ரகரணார்த்த₂ம். (தீதிலித்யாதி). (தீதில்) நிர்தோ₃ஷனை (வானவர் தே₃வன்) நித்ய ஸூரிஸ்வாமியான நிரங்குஶ ஸ்வதந்த்ரன். (உயிர்களை) ஆத்மாக்களை. (ஏதுவின்றி) ஹேதுவில்லாமல். (எடுக்கும் படியையும்) "उद्धरिष्याम्यहं देवि संसारात् स्वयमेव तान्" என்கிற படியே ஸம்ஸாரத்தினின்றும் உத்₃த₄ரிக்கும் ப்ரகாரமும். இது ப₄க₃வந்நிர்ஹேதுக விஷயீகார ப்ரகரணார்த்த₂ம். (மன்னிய வித்யாதி₃) (மன்னியவின்பமும்) ஆத்மாந்தஸ்த₂ாயியான ஆநந்த₃மும், (மாகதியும்) स्वपरस्वातन्त्र्यभीतिविरह த்தாலே ஸ்லாக்₄யமான உபாயமும், (குருவென்னும் நிலை) திருமந்த்ரத்தையுபதே₃ஶிக்க ஆசார்யனே யென்கிற நிஷ்டை₂. (பெறும் இன்பொருள் தன்னையும்) லபி₄க்கையாகிற விலக்ஷண ப்ரமேயத்தையும், இது சரமப்ராப்ய ப்ராபக ப்ரகரணார்த்த₂ம். (அசைவிலாவித்யாதி)सुदृढप्रमाणवेद-अन्तर्गत-पूर्वोक्तसर्वार्थங்களையும், இது ஸர்வப்ரகரண ஶேஷமாய், அர்த்த₂ாத் प्रथमप्रकरणसन्निविष्டமான உபோத்₃கா₄தார்த்த₂ம்-இத்யாதி₃யைக் கண்டு கொள்வது.

---

ஶாந்த₃த₄ஞயிருக்கிற ஸத்₃கு₃ருவினுடைய திருவடித்தாமரைகளை ஆஶ்ரயிக்கும் ஶிஷ்யர்களுடைய லக்ஷணமும். (தீதில் வானவர் தேவன் உயிர்களை ஏதுவின்றி யெடுக்கும்படியையும) அநாலோசித விஶேஷஞனை நிதயஸூரி ஸ்வாமியானவன், ஸம்ஸாரமக்₃நரான சேதநர்களை ஆகஸ்மிகமாக உத்₃த₄ரிக்கும்படியையும்; (மன்னியவின்பமும் மாகதியும் குருவென்னு நிலைபெறும் இன்பொருள் தன்னையும்) நித்யஶித்₃த₄மான பரம புருஷார்த்த₂மும். தத₃நுரூபமான உபாயமும் ஆசார்யனே என்கிற நிஷ்டை₂ பெறுகையாகிற ஶ்லாக்₄யமான அர்த்த₂ விஶேஷத்தையும்; இவ்வளவால், ஒன்பது ப்ரகரணார்த்த₂ங்களும் அடைவே சொல்லப்பட்டது.(அசைவிலா வேதமதனுள் அனைத்தையும்) நித்ய நிர்தோ₃ஷ ஸகலவேத₃ஸாரார்த்த₂ங்களையும். இத்தால், ஸர்வப்ரகரணங்களுக்கும் ஶேஷமான உபோத்₃கா₄தார்த்த₂ம் சொல்லப்பட்டது. மேல் ஸ்பஷ்டம்.

## ஆய்ப்படி அவதாரிகை தொடர்ச்சி

ஸித்₃தோ₄பாயத்தை வெளிப்பிக்கும் புருஷகாரவேஷமும், தது₃ந்மிஷித ஸித்₃தோ₄பாயவேஷமும், ததி₃தரோபாய த்யாக₃ ப்₃த்₃தி₄விசேஷமும், உபாயஸங்க₃ஸஹ ஸித்₃தோ₄பாயநிஷ்டா₂ ஸ்வபா₄வ விசேஷமும், தந்நிஷ்டா₂நுஷ்டா₂ந நியதிவிசேஷமும், தத்ப்ரத₃ாசார்யலக்ஷண விசேஷமும், தந்நிஷ்டா₂ஸச்சி₂ஷ்யலக்ஷண விசேஷமும், தத்₃பா₄வோத₃ய நிர்ஹேதுகத்வநிருபண விசேஷமும், தத்ஸ்வரூபாநுகு₃ண சரமப்ராப்யப்ராபக நிர்ணய விசேஷமும், ஆகிற அர்த்த₂விசேஷஸம்ப₃ந்த₄முடைய * இப்ரப₃ந்த₄ம் மந்த்ர த்ரயார்த்த₂மான ஸ்வரூப ஸாத₄ந புருஷார்த்த₂ விசேஷ ப்ரகாசகமாயிருக்கும். * இதில் ப்ரபந்நஸ்வரூபமும், தச்சரம ஸ்வரூபமும் சொல்லுகிற சதுர்த்த₂ ஸப்தம ப்ரகரணங்களில் ஸ்வரூபமும், ஸாத₄ந தத₃ங்க₃ தத்ஸ்வீகாராபேக்ஷித தத்ப்ரத₂மக்ருதி நிருபகங்களான த்₃விதீய த்ருதீய ப்ரத₂மாஷ்டம ப்ரகரணங்களில் ஸாத₄நமும், சரமப்ரபந்நசரித சரமசேஷி சரமப்ராப்ய ப்ரகாசகங்களான பஞ்சம ஷஷ்ட₂ சரமப்ரகரணங்களில் புருஷார்த்த₂ விசேஷமும் ப்ரகாசிக்கிறதிறே. ப்ரத₂மத்₃விதீயப்ரகரணங்களால் த்₂வயத்தில் ஸமாஸபத₃ார்த்த₂மும், த்ருதீய ப்ரகரணத்தால் உத்தமனில் ஸ்வீகார பூர்வபா₄வி த்யாக₃நிருபணமும், சதுர்த்த₂ ப்ரகரணத்தால் உத்தமனில் அநுஷ்டா₂த்ருஸ்வரூபமும், பஞ்சம சரமப்ரகரணங்களால் சரமசதுர்த்₂யர்த்த₂மும், ஷஷ்ட₂ப்ரகரணத் தால் சரமநாராயணபத₃ார்த்த₂மும், ஸப்தம ப்ரகரணத்தால் சரமநாமப₃த₃ார்த்த₂மும், அஷ்டமப்ரகரணத்தால் ப₃ஹுவ்ரீஹி ஸித்₃த₄ஸம்ப₃ந்த₄ாநுரூப ரக்ஷணநிர்ஹேதுகத்வமும், ***(தன் வஸ்துவைக் கொடுக்கக் கடவனல்லன்)*** [வா338] இத்யாதி₃யாலே சரமநமச் ப₃த₃ார்த்த₂மும் ப்ரகாசிக்கையாலே, இப்ரப₃ந்த₄ம் த்₃வயசர மார்த்த₂ப்ரகாசகமுமாயிருக்கும். *(ப்ராபகாந்தர பரித்யாக₃த்துக்கும்)* [வா115] இத்யாதி₃யால் ஸ்யப்பிலர்த்த₂மும், *(எல்லாமாசார்யனே)* [வா322] என்று அவத₄ாரணார்த்த₂மும், ***(மோக்ஷத்துக்கே ஹேதுவாயிருக்கும்)*** [வா433] என்று ணிச்சிலர்த்த₂மும் ப்ரகாசிக்கையாலே இது சரண்யாபி₄மததம சரமார்த்த₂ப்ரகாசகமுமாயிருக்கும்.

பிள்ளை ஒருநாள் ×வெள்ளத்திருமுற்றத்திலே சரமார்த்த₂த்தை யருளிச் செய்யாநிற்க, திருச்சானூரில் நம்பியார், திருவடிகளிலே

× 'வெளித்திருமுற்றம்' என்று வழக்கு.

விழுந்து, பேரருளாளப்பெருமாள் தமக்கு ஸ்வப்நத்திலே இரங்கின சரமார்த்த₂ ஸங்க்₃ரஹத்தை விண்ணப்பம்செய்ய, தாமநுஸந்தி₄க்கிற அர்த்த₂மும் அதுதானானமையைக்கண்டு விஸ்₂மித₃ராய், அவரையும் அங்கீ₃கரித்துப் போந்தருளுகிறவந்நாளிலே, பெரியபெருமாளும் ஸ்வப்நத்திலே திருவாய்மலர்ந்தருளினபடியே ப்ரப₃ந்தீ₄கரித்தருளின பரமசரமரஹஸ்யமாய்த்து சரமப்ரபந்நஜந ஸ்ரவண மநந ரஸந(ா?) போ₄க்₃ய பூ₄ஷணமான இந்த வசநபூ₄ஷணம்.

---

*ஈட்டின்படியே த்₃வய விவரணத்வத்தை அருளிச்செய்கிறார்.—(இப்ரப₃ந்த₄ந்தான் இத்யாதி₃நா) ஶரணாக₃தியாவது—த்₃வயம். तदर्थप्रतिपादकமாய், அத்தைப்பற்ற அதி₄க பரிமாணமாய். "मत्प्रिये" என்கிற அத்தைப்போலே எம்பெருமானுக்குப் பரமபோ₄க்₃யமாயிருக்கையாலே திருவாய்மொழியை (தீ₃ர்க்க₄ஶரணாக₃தி) என்கிறது. இங்கே. "मन्त्ररत्नं द्वयं न्यासः प्रपत्तिः शरणागतिः। नामानि मन्त्ररत्नस्य पर्यायेण निबोध मे" என்கிற वचनमनुसन्धेयம். பூர்வோத்தர க₂ண்ட₃ங்களைத் திருவாய்மொழியிலே व्यत्यासेन விவரிக்கையாலும், இங்கு क्रमेण விவரிக்கையாலும். க்ரமத்தைப்பற்ற साम्यம் विवक्षितமன்று. द्वयविवरणत्वमात्रத்திலே साम्यம் विवक्षितமென்று கண்டுகொள்வது.*

---

மேல். ஸ்ரீவசநபூ₄ஷணத்தினுடைய सकलवेदसंगृहीतार्थोपदेशात्मकதையை सकलवेदसंग्रह-रहस्यत्रय-विवरणात्मकत्व-प्रदर्शन-मुखத்தாலே த₃ர்ஶிப்பிக்கத் தொடங்கி, முதலிலே, இப்ப்ரப₃ந்த₄ம் ஆபாத₃குடம் प्राधान्येन द्वयविवरणात्मकமாயிருக்கையாலே, அத்தையே सदृष्टान्तமாகக் காட்டுகிறார் (இப்ப்ரப₃ந்த₄ந்தான்) என்று தொடங்கி. (தீ₃ர்க்க₄ஶரணாக₃தியான) என்று—நீண்டத்₃வயமென்று சொல்லப்படுமதான என்றபடி. (திருவாய்மொழிபோலே) என்றது—"उक्तार्थविशदीकारयुक्तार्थान्तरबोधनम्। मतं विवरणं ह्यत्र महितानां मनीषिणाम्॥" என்கிறபடியே. திருவாய் மொழியில் முதல் மூன்று பத்தாலே. "தொழுதெழு" "எம்மாவீட்டுத்திறம்" "ஒழிவில் காலம்" இத்யாதி₃களாலே उत्तरखण्डोक्तपरम-

# ஸ்ரீவசநபூ4ஷணத்தின் ரஹஸ்யத்ரய விவரணத்வம்

ஜீயர் வ்யாக்2யாந அவதாரிகை தொடர்ச்சி

இப்ரப3ந்த4ந்தான் தீ3ர்க்க4 ஶரணாக3தியான திருவாய்மொழிபோலே த்3வயவிவரணமாயிருக்கும். எங்ஙனேயென்னில், திருவாய்மொழியில் முதல் மூன்று பத்தாலே உத்தர க2ண்ட3ார்த்த2த்தையும், மேல் மூன்று பத்தாலே பூர்வக2ண்ட3ார்த்த2த்தையும் சொல்லி, மேல் நாலு பத்தாலே அவ்வுபாயோப

---

(முதல் மூன்று பத்தாலே) என்றது—"தொழுதெழு" "எம்மாவீட்டுததிறமும்" "ஒழிவில் காலமெல்லாம்" இத்யாதி3யைப்பற்ற. (மேல் மூன்று பத்தாலே) என்றது—"திருநாரணன தாள்" "ஆறெனக்கு" "அகலகில்லேன்" இத்யாதி3யைப்பற்ற. (மேல் நாலு பத்தாலே) என்றது—"கடல்ஞாலம் காக்கின்ற மின்னுநேமியன்" "உங்களோடெங்களிடையில்லையே" "நாராயணன் நங்கள் பிரான்" "அவா

---

पुरुषार्थस्वरूपம் விவரிக்கப்படுகையாலேயும். மேல் மூன்று பத்தாலே "திருநாரணன் தாள்" "ஆறெனக்கு" "அகலகில்லேன்" இத்யாதி3களாலே. पूर्वखण्डोक्त-सिद्धोपाय-स्वीकारம் விவரிக்கப்படுகையாலேயும், மேல் நாலு பத்தால் "கடல் ஞாலம் காக்கின்ற மின்னுநேமியன்" "உங்களோடெங்களிடையில்லை" "நாராயணன் நங்கள் பிரான்" "அவாவற்று வீடுபெற்ற" இத்யாதி3களாலே. भगवत्कल्याणगुण—स्ववैराग्य-आत्मेश्वरनिरुपाधिकबन्ध-फलावश्यंभावादिகளாகிற खण्डद्वयानुक्तोपयुक्तार्थங்களெல்லாம் விவரித்துச் சொல்லப்படுகையாலேயும். उक्तार्थविशदीकारकत्व—उपयुक्तार्थान्तरबोधकत्वरूप—प्रकारद्वयத்தாலும் द्वयविवरणமான திருவாய்மொழிபோலே யென்றபடி. (த்3வய விவரணமாயிருக்கும்) என்றது—पूर्वोक्तप्रकारद्वयத்தாலும் द्वयविवरणமாயிருக்கும் என்றபடி.

போக்₃யான கு₃ணங்களேயும், ஆத்மாத்மீயங்களில் தமக்கு நசையற்றபடியையும், அவனேடு தமக்குண்டான நிருபாதி₄க(ஸம்)ப₃ந்த₄த்தையும், தாம் ப்ரார்த்தி₂த்தபடியே பெற்றபடியையும் ப்ரதிபாதி₃க்கையாலே, தத₃நுரூபார்த்த₂ங்களேச் சொல்லித் தலைக்கட்டினுப் போலே, இதிலும், ப்ரத₂மத்திலே புருஷகாரத்தையும், அநந்தரம் உபாயத்தையும். அநந்தரம் ஏதது₃பாயாதி₄காரி நிஷ்டை₂யையும் சொல்லுகையாலே பூர்வ க₂ண்ட₃ார்த்த₂த்தையும், அவ்வதி₄காரி நிஷ்டை₂ சொல்லுகிறவளவில் உபேயாதி₄காராபேக்ஷிதங்களேச் சொல்லுகிற இதுக்குள்ளே உத்தரக₂ண்ட₃ார்த்த₂த்தையும் சொல்லி, மேல் ப்ரப₃ந்த₄ஶேஷத்தாலும், தது₃பதே₃ஷ்டாவான ஆசார்யனளவில் இவனுக்குண்டாக வேண்டும் ப்ரதிபத்த்யநுவர்த்தந ப்ரகாரங்களேயும், இவனுக்கு மஹாவிஶ்வாஸஹேதுவான ப₄க₃வந்நிர்

---

வற்று வீடுபெற்ற" என்றத்தைப்பற்றவென்று கண்டு கொள்வது. (ஆறு ப்ரகரணம்) என்கிறத்தை உட்கொண்டு அருளிச்செய்கிருர்.— (இதிலும் ப்ரத₂மத்தில் இத்யாதி₃). (तदुपदेष्टावான ஆசார்யன்)— த்₃வயோபதே₃ஷ்டாவான ஆசார்யன். இங்கே. "यस्तु मन्त्र द्वयं सम्यक् अध्यापयति वैष्णवः। आचार्यस्स तु विज्ञेयः भवबन्धविमोचकृत्॥" என்கிற वचनमनुसंधेयம். (மஹாவிஶ்வாஸ ஹேதுவான) प्रपद्ये என்கிற क्रियापदार्थान्तर्गत विश्वासहेतुவான. विश्वासे महत्वं-उपायलाघवादिभिरप्रकम्प्यत्वम्. இங்கு

---

இப்ரப₃ந்த₄த்தில் विवरणप्रकारद्वयத்தையும் வகுத்துக் காட்டுகிருர்.— (இதிலும்) என்று தொடங்கி. முதலிலே ஆறு ப்ரகரணமென்கிற பக்ஷத்தைப்பற்ற. முதல் மூன்று ப்ரகரணமும் खण्डद्वयोक्त-अर्थद्वय-विशदीकरणरूपமாகவும். மேல் மூன்று ப்ரகரணமும் आचार्यानुवर्तनक्रम-भगवन्निर्हेतुककृपाप्रभाव-उपा

ஹேதுகக்ருபா ப்ரப₄ாவத்தையும், வாக்யத்₃வயோக் தோபாயோபேய சரமாவதி₄யையும் சொல்லித் தலைக் கட்டுகையாலே.

ஒன்பதர்த்த₂ ப்ரதிபாத₃கமான பக்ஷத்திலும், பூர்வவாக்யத்தில் க்ரியாபதோ₃க்தமான ஸ்வீகாரம் உபாயாந்தர பரித்யாக₃ பூர்வகமாயல்லதிராமை யாலும், தி₃நசர்யையும் அப்பதத்தில் சொல்லப் படுகிற அதி₄காரிக்கே உள்ளதாகையாலும், ஸதா₃ சார்யலக்ஷணம் த்₃வயோபதே₃ஷ்டாவான ஆசார்யன் படி சொல்லுகிறதாகையாலும் த்₃வய விவரணமாக நிர்வஹிக்கக் குறையில்லை.

---

"அதுவுமவனதின்னருளே" இத்யாதி₃யைக் கண்டுகொள் வது. (வாக்ய த்₃வயேத்யாதி₃) सिद्धोपायोपेय-चरमावधिभूतமான आचार्योपायोपेयत्वம் आर्थिकமாகவும். नमश्शब्दतात्पर्यगतिயாலும். वाक्यद्वयोक्तமென்று विवक्षितம். (அப்பதத்தில் சொல்லப்படுகிற) "प्रपद्ये" என்கிற பத₃த்தில் உத்தமபுருஷனாலே சொல்லப் படுகிற வென்றபடி. (த்₃வய விவரணமாக) என்றது— अविशदमुक्तस्य विशदं उक्तिः, विशदमुक्तस्य अपेक्षितार्थान्तरकथनञ्च विवरणமாகையாலே विवरणत्वमुपपन्नமென்றபடி.

---

योपेयचरमावधिகளாகிற उपयुक्तार्थान्तरबोधनरूपமாகவும் வகுத்து. (இதிலும்) என்று தொடங்கி. (தலைக்கட்டுகையாலே) என்னுமளவாகக் காட்டியருளி; ஒன்பது ப்ரகரணமென்னும் பக்ஷத்திலும், உபாயப்ரகரணத்தில் பிரிந்த உபாயாந்தர தோ₃ஷ ப்ரகரணமும். அதி₄காரி நிஷ்டா₂ ப்ரகரணத்தில் பிரிந்த ப்ரபந்நதி₃நசர்யா ப்ரகரணமும், "सद्गुरूपसेवनम्" என்கிற ஆசார்யாநுவர்த்தந க்ரம ப்ரகரணத்தில் பிரிந்த ஆசார்ய லக்ஷணப்ரகரணமும், ஆகிற மூன்று ப்ரகரணங்களும். आक्षेपतःप्राप्तार्थ – विशदीकरणरूपங்களாயிருக்கையாலே. अनुक्त-उपयुक्त – अर्थान्तर – बोधकत्वरूप – द्वयविवरणत्वமுண்டாகையாலே,

இப்படி த்₂வய விவரணமானவிதிலே, த்₂வயந் தன்னிற்போலே, மற்றை ரஹஸ்யத்₃வயார்த்த₂ங் களும் ஸங்க்₃ரஹேணேக்தங்களாயிருக்கும்;எங்ஙனே யென்னில்:—

"அஹமர்த்த₂த்துக்கு" (வா.73) என்று தொடங்கி «அடியானென்றிறே»(வா.77)என்னுமளவாகவும்,«ஸ்வ ரூபப்ரயுக்தமான தா₃ஸ்யமிறே ப்ரதா₄நம்» (வா. 111) என்றும், ப்ரணவார்த்த₂ம் சொல்லப்பட்டது. «ஸ்வ யத்ந நிவ்ருத்தி» (வா.71) இத்யாதி₃யாலும், «தன்னைத் தானே முடிக்கையாவது» (வா.180) என்று தொடங்கி, «இப்படி ஸர்வப்ரகாரத்தாலும்» (வா.243) என்கிறதற் குக் கீழிலுள்ளத்தாலும்,நமஶ்ஶப்₃தா₃ர்த்த₂ம் சொல்லப் பட்டது. «பரப்ரயோஜநப்ரவ்ருத்தி» (வா.72) இத்யாதி₃ யாலும், «உபேயத்துக்கு இளைய பெருமாளையும்» (வா.80) இத்யாதி₃யாலும், «கைங்கர்யந்தான் ப₄க்தி

---

(த்₃வய விவரணமானவிதிலே இத்யாதி₃) द्वयविवरणत्वादेव तद्विवरणीय மந்த்ரத்துக்கும், तद्विवरणமான ஶ்லோகத்துக்கும்

---

அப்படிச் சொல்லக்குறையில்லையென்கிறார் (ஓன்பதார்த்த₂ப்ரதி பாத₃கமான என்று தொடங்கி, குறையில்லை என்னுமளவாக). இவ்விடத்தில் उक्तार्थविशदीकरणप्रकरणங்களிலே अनुक्तार्थप्रतिपादन மும்,மற்றவிடங்களில் மற்றவைபுமுண்டேயாகிலும்,ஊற்றத் தைப்பற்ற இப்படிச் சொல்லக்குறையில்லையென்று கண்டு கொள்வது. மேல், மற்ற ரஹஸ்யார்த்த₂ங்களுக்கும் இது संग्रहेण प्रतिपादकமாம்படியைத் தனித்தனியே த₃ர்ஶிப்பிக் கிறார்.— (இப்படியென்று தொடங்கி). (संग्रहेण) என்றது— த்₃வயார்த்த₂ம்போலே विस्तरेणவன்றியே संग्रहेणவென்றபடி.

மூலமல்லாதபோது» (வா. 281) இத்யாதி₃யாலும், த்ருதீயபத₃ார்த்த₂ம் சொல்லப்பட்டது.

«அஜ்ஞானத்தாலே» (வா. 43) இத்யாதி₃யாலும், «ப்ராபகாந்தர பரித்யாக₃த்துக்கும்» (வா.115) இத்யாதி₃யாலும், உபாயாந்தர த்யாக₃த்தை ஸஹேதுகமாகச் சொல்லுகையாலே தத்த்யாஜ்யதையையும் த்யாக₃ ப்ரகாரத்தையும் சொல்லுகிற பத₃த்₃வயார்த்த₂மும் சொல்லப்பட்டது. «இதுதனக்கு ஸ்வரூபம்» (வா.55) இத்யாதி₃யாலும், "ப்ராப்திக்குபாயம் அவன் நினைவு" (வா. 66) இத்யாதி₃யாலும், " மாமேகம் ஶரணம் " என்கிற பத₃ங்களிலர்த்த₂ம் சொல்லப்பட்டது. "ப்ர

---

सँग्रहेण व्याख्यानமாயிருக்குமென்றபடி.

---

ரஹஸ்யத்ரயத்திலும் வைத்துக்கொண்டு. திருமந்த்ரம் इतर-रहस्यमूलமாய்க்கொண்டு सर्वोत्कृष्टமாயிருக்க, அதினுடைய அர்த்த₂ம் இப்ரப₃ந்த₄த்தில் ப்ராதே₃ஶிகமாய். த்₃வயார்த்த₂ப்ரதிபாத₃நமே सार्वत्रिकமாவானென்னெனில்; 1. திருமந்த்ரத்துக்கு साधकपरिग्रहமுண்டாகையாலே. அதில்லாதபடி "सदाचार्य-मूलोऽनादिसिद्धो मन्त्ररत्नः" என்று ஶ்ருதி சொல்லுகையாலேயும், 2. *"பிள்ளை புருஷகாரமாகஜீயர் திருவடிகளை ஆஶ்ரயித்தாரொரு ஸ்ரீ வைஷ்ணவர்க்கு. ஜீயர். மூந்துற த்₃வயத்தில் பூர்வவாக்யமாத்ரத்தை இடையனெறிந்த கொம்புபோலே உபதே₃ஶித்துவிட்டு. பின்பு. அவருடைய அதி₄காரமறிந்து கொண்டு. உத்தரவாக்யத்தையுமருளிச்செய்தார்"* என்கிற ஐதிஹ்யமுண்டாகையாலேயும். *सदाचार्य-सम्प्रदाय-परम्पराप्राप्तமாய் अनन्यसाधारणமான த்₃வயந்தானே उपदेशात्मकமான இப்ரப₃ந்த₄த்துக்கு உள்ளுறையாகவேணும்* என்கிற ஔசித்யத்தாலே அப்படியாகக் குறையில்லையென்று கண்டு கொள்வது. மேல் (அஜ்ஞாநத்தாலே) என்று தொடங்கி,

**பத்த்யுபாயத்துக்கு'' (வா. 134) இத்யாதி3யாலே, "வ்ரஜ'' என்கிற ஸ்வீகாரவைலக்ஷண்யம் சொல்லப் பட்டது. "அவனிவனை'' (வா.143) என்று தொடங்கி, "ஸ்வாதந்த்ர்யத்தாலே வரும் பாரதந்த்ர்யம் ப்ரப3லம்» (வா.148) என்னுமளவும் ஸர்வபாபங்களையும் தள்ளி அங்கீகரிக்கும் ஈச்வரஸ்வாதந்த்ர்யத்தையும், "க்ருபா ப2லமுமநுப4வித்தேயறவேணும்» (வா. 402) என்று ப2லஸித்3தி4யில் கண்ணழிவில்லாமையும் சொல்லுகை யாலே உத்தரார்த்த2த்தில் அர்த்த2ம் சொல்லப் பட்டது.**

ஜீயர் வ்யாக்2யாநாவதாரிகை முற்றிற்று.

---

(வேத3ார்த்த2மித்யாதீ3தி) மூல ச்தி லும் पूर्वोक्तरीत्या(ப.2) वेद-शब्दोच्चारणं मङ्गलानुष्ठानமென்று கண்டுகொள்வது. இன்னமும், "भूवादीनां वकारोऽयं मङ्गलार्थं प्रयुज्यते" என்று மஹாபா4ஷ்யத்தில சொல்லுகையாலே. (வேத3ார்த்த2ம்) என்று वकारप्रयोगம் मङ्गलानुष्ठानமாகிறது. இது शास्त्रादियில் मङ्गलम्. "மங்களாசாஸனம்" (வா. 244) என்கிறவிடத்தில் मङ्गलशब्दம் शास्त्रमध्यத்தில் मङ्गलम्. "ப2லபர்யந்தமாக்கும்" (வா. 463) चरमरहस्यविवरणत्वத்தை அருளிச்செய்கிறார்.— (உத்தரார்த்த2த்தில் அர்த்த2ம் சொல்லப்பட்டது) என்னுமளவாக.

ஆக. ( இப்ரப3ந்த4த்தில் — வேத3ார்த்தமறுதியிடுவது ) (பக்கம்42) என்று தொடங்கி. இவ்வளவால். இப்ரப3ந்த4த்தின் अवान्तरवाक्ययोजनाप्रकारங்களையும், महावाक्ययोजनाप्रकारத்தையும், इतररहस्यद्वयसहितமான द्वयार्थनिर्णयात्मकत्वத்தையும். व्याख्यानाङ्गமாக அருளிச்செய்தாராய்த்து.

மேல். அடைவே व्याख्यानமிட்டருளுகிறார். "पदच्छेदः पदार्थोक्तिः विग्रहो वाक्ययोजना। आक्षेपस्य समाधानं व्याख्यानं पञ्चलक्षणम्" என்னக்கடவதிறே.(வேதார்த்த2மித்யாதி3)(ப.69)என்கிறதுக்கு

## ஆய்ப்படி — வ்யாக்₂யாநம்

1. அவதாரிகை:-இதில் ப்ரத₂ம வாக்யத்தாலே, வேத₃தாத்பர்யம்-இப்ரப₃ந்த₄விஷயம், அத்தையறுதியிடுகை—ப்ரயோஜநம், நிர்ணயக நிர்ணேயத்வாதி₃ — ஸம்ப₃ந்த₄ம், ஸாரார்த்த₂ஶ்ரோதா — அதி₄காரி, என்னுமிவை ஸூசிதங்கள். இந்த ப்ரத₂ம வாக்யத்தால், உபப்₃ரும்ஹ்யோபப்₃ரும்ஹண விஶேஷத்தையருளிச்செய்கிறார்.

---

*என்கிறவிடத்தில்* **फलशब्दप्रयोगम् शास्त्रान्तमङ्गलम्.** *ஆக,* **"मङ्गलादीनि मङ्गलमध्यानि मङ्गलान्तानि हि शास्त्राणि प्रथन्ते। वीर-पुरुषाण्यायुष्मत्पुरुषाणि च॥"** *என்கிற ப்ரக்ரியையும் இங்கு உண்டென்று கண்டுகொள்வது.*

"**चोदनालक्षणार्थो धर्मः**" *என்கிறவிடத்திலே* '**चोदनैव लक्षणं यस्य**' *என்கிற அம்ஶத்தில், அவதா₄ரணத்தாலே* **चोदनेतरप्रमाण***ங்களுக்கு* **धर्मे प्रामाण्याभाव***ம் ஸித்₃தி₄த்த தாய், அத்தை ஸ்த₂ாபிப்பதாக,* "**सत्सम्प्रयोगे पुरुषस्येन्द्रि-याणां बुद्धिजन्म तत्प्रत्यक्षं**" *இத்யாதி₃* **प्रत्यक्षसूत्रादि***களாலே* **प्रत्यक्षादिप्रमाण***ங்களையும்* **तद्विषय***ங்களையும் அவற்றுக்கு* **धर्म-प्रामाण्यविरह***த்தையும் உபபாதி₃த்தாப்போலே, இங்கும்,* (வேத₃ார்த்த₂ம்) (வா. *1*) *என்ற ஸாவதா₄ரண நிர்தே₃ஶத் தாலே* **वेदेतरव्यावृत्ति लब्धै***யாய்,* **तत्स्थापनार्थ***மாக* **प्रत्यक्षादिप्रमाण***ங் களையும்,* **तद्विषय***ங்களையும், அவற்றுக்குத்* **तदर्थे प्रामाण्याभाव***த் தையுமுபபாதி₃க்கவேண்டுகையாலே, அத்தையுபபாதி₃த்துக்*

---

( இவ்வாக்யத்தாலே அருளிச்செய்கிறார் ) *(ப. 74) என்கிற வாக்யத்தோடே அந்வயம். மூலத்தில்* **प्रथमवाक्यावतारि***கை.—* ( ப்ரமாதாவானவனித்யாதி₃ ). *மூலத்தில்* ( வேத₃ார்த்த₂ம் ) *என்கிற முதல் வாக்யத்திலே, "வகாரம்-அம்ருதவாசியாய், ஈகாரம்-ஐஶ்வர்யவாசியாய், இரண்டையும் கொடுக்கு மவனை* "**वश्च ईश्च वयौ. वयौ ददातीति वेदः**" *என்று வேத₃ஶப்₃த₃ம் சொல்லுகையாலே,*"**सकलफलप्रदो हि विष्णुः**"*என்றும்,*"**सर्वलाभाय केशवः**" *என்றும் சொல்லுகிறபடியே* **भोगमोक्षप्रद-सिद्धोपायरूप-वस्तुनिर्देशरूप-मङ्गलं सिद्ध***மென்று கண்டுகொள்வது.*

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

பரமகாருணிகரான பிள்ளைலோகாசார்யர் அருளிய

# ஸ்ரீவசநபூ4ஷணம்

மூலம்

## 1. வேத3ார்த்த2மறுதியிடுவது ஸ்ம்ருதீதி ஹாஸ புராணங்களாலே.

ஜீயர் வ்யாக்2யாநம்

*1.* **அவதாரிகை-(வேத3ார்த்த2மித்யாதி3) ப்ரமாதா வானவன் ப்ரமாணத்தைக்கொண்டிறே ப்ரமேயத்தை நிஸ்சயிப்பது. அந்த ப்ரமாணந்தான், ப்ரத்யக்ஷாதி3 ரூபேண அஷ்டவித4மாகச் சொல்லுவர்கள். அதில்**

---

*கொண்டு வாக்யதாத்பர்யத்தை அருளிச்செய்கிறார்*,-(प्रमाताவா னவன்)*என்றுதொடங்கி*(அருளிச்செய்கிறார்) *என்னுமளவாக*. (ப்ரமாதாவானவன்)— *ப்ரமிதியை ஸம்பாதி3க்குங்கொள்ளு மவன். இங்கு*, " निखिलोऽपि चेतयमानः प्रमाणतः प्रमेयं परिच्छिन्दन् " *இத்யாதி3ஸஹஸ்ரநாமபா4ஷ்யப்ரக்ரியையும்*, "सर्वेषां पुरुषाणां प्रमाणाधीन-प्रमेयनिश्चयानाम्" इत्यादि-श्रुतप्रकाशिकाप्रक्रियैயு *ம்* सूचितम्.

(प्रत्यक्षादि)इति आदिपद*த்தாலே*अनुमानादिकं विवक्षितम्.(சொல்லு வர்கள்)—तत्तद्वादि*களென்றபடி*. (प्रत्यक्षमेकमित्यादि) "प्रत्यक्षमेकं

---

*(அஷ்டவித4மாக) என்றது—* " प्रत्यक्षमेकं चार्वाकाः कणाद-सुगतौ पुनः। अनुमानञ्च तच्चापि सांख्याः शब्दं च ते अपि। न्यायैक-देशिनोऽप्येवं उपमानं च केचन। अर्थापत्त्या सहैतानि चत्वार्याह प्रभाकरः। अभावषष्ठान्येतानि भाट्टा वेदान्तिनस्तथा। संभवैतिह्ययुक्तानि तानि पौराणिका जगुः॥" *என்கிறபடியே. ப்ரத்யக்ஷம். அநுமாநம். ஆக3மம். உபமாநம். அர்த்தா2பத்தி. அபா4வம். ஸம்ப4வம். ஐதிஹ்யம் என்று அஷ்டவித4மாகவென்றபடி. அதில். ப்ரத்யக்ஷமாவது-சக்ஷுராதி3ந்த்3ரியங்கள். இது சார்வா*

"प्रत्यक्षमेकं चार्वाकाः" (ப்ரத்யக்ஷமேகம் சார்வாகா:) இத்யாதி₃யில் சொல்லுகிற ப₃ாஹ்யகுத்₃ருஷ்டிகளைப்

चार्वाकाः कणादसुगतौ पुनः। अनुमानञ्च तच्चाहुः सांख्याः शब्दञ्च ते अपि। न्यायैकदेशिनोऽप्येवं उपमानञ्च केचन। अर्थापत्त्या सहैतानि चत्वार्याह प्रभाकरः। अभावषष्ठान्येतानि भाट्टा वेदान्तिनस्तथा। सम्भवैतिह्ययुक्तानि तानि पौराणिका जगुः॥" என்கிறவிடத்தில் என்றபடி. (பா₃ஹ்யர்கள்) चार्वाकादिन्यायैकदेशिपर्यन्तர்கள். (குத்₃ருஷ்டிகள்)

கர்க்கு ப்ரமாணம். அநுமாநமாவது–ப்ரத்யக்ஷாதி₃ஸித்₃த₄மான தூ₄மாதி₃ஹேதுக்களாலே அப்ரத்யக்ஷங்களான வஹ்ந்யாதி₃களை உண்டென்று அறிகைக்குடலான. "यत्र धूमः तत्राग्निः" इत्यादिव्याप्तिनिश्चयविशिष्टமான हेतुसंसर्गज्ञानம். இதிரண்டும் காணாத₃ஸௌக₃தர்களுக்கு ப்ரமாணம். ஆக₃மமாவது–ஶாஸ்த்ரமும், ஆப்தவாக்யமும். இது மூன்றும் ஸாங்க்₂ய பூ₄ஷணர்களுக்கு ப்ரமாணம். உபமாநமாவது–பசுவைக்கொண்டு மரையை யறிகைக்குடலான सादृश्यज्ञानம். இது நாலும் உத₃யநாசார்யனுக்கு ப்ரமாணம். அர்த்தா₂பத்தியாவது–"पीनो देवदत्तः दिवा न भुङ्क्ते" என்றால் भोजनमन्तरा पीनत्वमनुपपन्नமாகையாலே रात्रिभोजनसाधकமான श्रुतदृष्टार्थान्यथानुपपत्तिज्ञानம். இது அஞ்சும் ப்ராப₄ாகரர்களுக்கு ப்ரமாணம். அப₄ாவமாவது–घटाभावादिग्राहकமான घटाद्यनुपलब्धि. அதாவது–கண்ணுக்குத் தோற்றாமை. இது ஆறும் ப₄ாட்ட வேதா₃ந்திகளுக்கு ப்ரமாணம். ஸம்ப₄வமாவது— "ஆயிரமுள்ளவனிடத்தில் நூறுண்டு" என்கிற உபபத்தி. ஐதிஹ்யமாவது–अज्ञातमूलपुरुषकமாய், शिष्टपरिगृहीतமுமான "इह वटे यक्षस्तिष्ठति" இத்யாதி₃களான ப்ரவாத₃ங்கள். இது எட்டும் பௌராணிகர்களுக்கு. (சொல்லுவர்கள்) என்றது— பௌராணிகர் சொல்லுவர்களென்றபடி. பரமப்ராமாணிகரான பிள்ளை லோகாசார்யர் பண்ணுமிடத்தில் (வேதா₃ர்த்த₂ம்) என்று தொடங்கி, ஆக₃மமாத்ரத்தை நிர்தே₃ஶிப்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (அதில்) என்று தொடங்கி. (பா₃ஹ்யர்)–வேத₃ப்ராமாண்யாநப்₄யுபக₃ந்தாக்கள். (குத்₃ருஷ்டிகள்)—

போலன்றியே, ப்ரத்யக்ஷாநுமாநாக₃மங்கள் மூன்றையும் ப்ரமாணதயா அங்கீ₃கரித்து, உபமாநாதி₃பஞ்சகத்தையும் அவற்றிலே யதா₂யோக₃ம் அந்தர்ப்ப₄விப்பித்து, அவற்றில் ப்ரத்யக்ஷம் இந்த்₃ரிய க்₃ரஹண யோக்₃யங்களிலும், அநுமாநம் ப்ரத்யக்ஷஸித்₃த₄ வ்யாப்தி க்₃ரஹணாநுரூபமாக, கதிபயபரோக்ஷார்த்த₂ங்களிலும் ப்ரமாணமாகவும், அதீந்த்₃ரியார்த்த₂த்தில்

---

प्राभाकरादिपौराणिकपर्यन्तர்கள். (ப்ரத்யக்ஷாநுமாநாக₃மங்கள் மூன்றையுமிதி) "प्रत्यक्षमनुमानञ्च शास्त्रं च विविधागमम्" इत्यादि मनुवचनம் இங்கு अनुसन्धेयம்.

(உபமாநாதி₃பஞ்சகத்தையுமித்யாதி₃) உபமாநத்தையும், அர்த்தா₂பத்தியையும், ஸம்ப₄வத்தையும் அநுமாநத்திலே அந்தர்ப்ப₄விப்பித்து, அப₄ாவம் ப்ரத்யக்ஷத்திலே அந்தர்பூ₄தம், ஐதிஹ்யம் अनिर्दिष्टवक्तृक-प्रवादपरम्परै யாகையாலே ஶப்₃த₃த்திலே அந்தர்பூ₄தமென்று கண்டுகொள்வது. "प्रत्यक्षानुमानागमाख्यं प्रमाणजातम्" என்கிற ப₄ாஷ்யத்தையும் "प्रत्यक्षादिदृष्टसम्बन्ध-विशिष्टविषयत्वात्" என்கிற ப₄ாஷ்யத்தையும் உட்கொண்டருளிச்செய்கிறார்.—(ப்ரத்யக்ஷமித்யாதி₃). (இந்த்₃ரியக்₃ரஹணம்) இந்த்₃ரியஸந்நிகர்ஷ:. सन्निकर्षयोग्यங்களிலென்றபடி. (ப்ரத்யக்ஷஸித்₃த₄வ்யாப்தீதி) प्रत्यक्षगृहीतव्याप्तिविषयक-परामर्शात्मक-ग्रहणानुरूपமாக வென்றபடி. चक्षुराद्युत्पन्नव्याप्तिनिश्चयानुगुणமாகவென்றுமாம். (அதீந்த்₃ரியார்த்த₂த்தில்) அத்யந்தாதீந்த்₃ரியார்த்த₂க்

---

ப₄ாட்டப்ராப₄ாகராதி₃கள். (அவர்களைப் போலன்றியே) என்றது முன்சொன்ன எட்டு ப்ரமாணங்களில் சிலவற்றுக்கு ப்ராமாண்யமும், மற்றவைகளுக்கு அப்ராமாண்யமும் சொல்லும் அவர்களைப்போலன்றிக்கே யென்றபடி. இத்தால் ஸாங்க்₂யஸாம்யம் நிரஸ்தம். (யதா₂யோக₃ம்) என்றது யதா₂ந்யாயம் என்றபடி. (அந்தர்ப்ப₄விப்பித்து) என்றது அப₄ாவத்தை ப்ரத்யக்ஷத்திலும், ஐதிஹ்யத்தை ஆக₃மத்தி

ஶாஸ்த்ரமே ப்ரமாணமாகவும் நிஷ்கர்ஷித்து, அது தன்னிலும், “वेदे कर्त्राद्यभावात् बलवति हि नयैस्त्वन्मुखे नीयमाने तन्मूलत्वेन मानं तदितरदखिलं जायते” (வேதே₃ கர்த்ராத்₃ய ப₄ாவாத் ப₃லவதி ஹி நயை: த்வந்முகே₂ நீயமாநே தந்மூலத்வேந மாநம் ததி₃தரத₃கி₂லம் ஜாயதே)என்கிற

---

தில். (ஶாஸ்த்ரமே) என்கிற அவத₄ாரணத்தால் प्रत्यक्षानुमानங்கள் अनर्हங்களென்கிறது. இத்தால், ஸாங்க்₂யர்களும் प्रत्यक्षानुमानागमங்கள் மூன்றையுமே ப்ரமாணமாகக் கொண்டார்களேயாகிலும், அநுமாநத்துக்கு அத்யந்தாதீந்த்₃ரிய விஷயத்தில் ப்ரவ்ருத்தியும், ஶாஸ்த்ரத்துக்கு अनुमानसिद्धार्थ-विषयकत्वமும் கொண்டார்களாகையாலே, अभ्युपगमप्रकारभेदமிருக்கையாலே सांख्यवैषम्यमुपपन्नமென்று तात्पर्यம்.

“प्रवृत्तिर्वा निवृत्तिर्वा कृतकेणेतरेण वा। पुंसां येनोपदिश्येत तच्छास्त्रमुपपद्यते॥” என்கிற வார்த்திக க்₃ரந்த₂த்தை உட்கொண்டருளிச்செய்கிறார்,—(அது தன்னிலுமித்யாதி₃). (வேத₃ இதி) கர்த்தாவான புருஷனும், அவனடியாகவரும் தோ₃ஷமூலத்வமுமின்றிக்கேயிருக்கையாலே ஸ்வவ்யதிரிக்த ப்ரமாணங்களைப்பற்ற ப₃லிஷ்ட₂மான வேத₃மானது, ஸாமாந்ய விஶேஷந்யாயாதி₃களாலே தேவர் விஷயமாக நயிக்கப்படாநின்றுள்ளவளவில் तद्व्यतिरिक्तस्मृत्यादिसकलமும் அந்த

---

லும், மற்ற மூன்றையும் அநுமாநத்திலும் அந்தர்ப்ப₄விப்பித்து என்றபடி. (ஶாஸ்த்ரமே) என்று அவத₄ாரணம் अन्येषां प्रामाण्यनिरसनार्थம்.

(அதுதன்னிலும்) என்றது—श्रुति-स्मृति-इतिहास-पुराण-पाञ्चरात्र-कर्मब्रह्ममीमांसा-ऐतिह्य-भेदभिन्नமான அந்த ஆக₃மந்தன்னிலுமென்றபடி. வேத₃ம் ப்ரப₃லமென்னுமிடத்துக்கு ப்ரமாணம் காட்டுகிறார்,— (वेदे कर्त्राद्यभावात्) इत्यादिना. “कर्त्राद्यभावात्-बलवति वेदे—नयैः—हि—त्वन्मुखे नीयमाने सति—तदितरदखिलं—तन्मूलत्वेन मानं-जायते” என்று ஶ்லோகாந்வயமாய்.“पुरुषबुद्धिमूलक-

**படியே ஸ்வப்ராமாண்யத்துக்கு மூலஸாபேக்ஷமான பௌருஷேய ஶாஸ்த்ரத்தைப்பற்ற,ஸ்வத:ப்ராமாண்ய**

---

*வேத₃த்தை மூலமாக உடைத்தாய்க்கொண்டே ப்ரமாண மாகிறதென்று* **अर्थाभिप्रायेण** *அருளிச்செய்கிறார்.*—(**ஸ்வப்ரா மாண்யத்துக்கித்யாதி₃**). (**பௌருஷேய ஶாஸ்த்ரத்தைப்பற்ற**)- *புருஷ க்ருத ஶாஸ்த்ரத்தைப்பற்ற.* (**ஸ்வத: ப்ராமாண்ய முடையவித்யாதி₃**) *ஜ்ஞாநத்துக்கும் ஶப்₃த₃த்துக்கும்*

---

*மல்லாமையாலே* **स्वप्रामाण्य***த்தில்* **इतरनिरपेक्ष***மாய்க்கொண்டு ப₃லவத்தான வேத₃மானது, வேத₃ாந்த ப்ரஸித்₃த₄ங்களான ஸத்தர்க்கங்களாலே தேவரீரையே ப்ரதிபாதி₃க்கிறதாக வொருங்கவிடப்பட்டிருந்துள்ளவளவில். புருஷபு₃த்₃தி₄மூல கங்களான இதர ஶாஸ்த்ரங்களெல்லாம் வேத₃த்தை* **व्याख्येय***மாக உடையதாயிருக்கையாலே ப்ரமாணங்களா கிறன" என்றர்த்த₂ம் திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார்* (**ஸ்வப்ராமாண்யத்துக்கு**) *என்று தொடங்கி.*

(**பௌருஷேயேதி**) **मूलापेक्षत्वे हेतुगर्भविशेषण***ம்.* (**பௌருஷேய**) *என்றது*—**पुरुषबुद्धिमूलक***மான என்றபடி. இங்கு புருஷஶப்₃த₃ம்* **चेतनेश्वरसाधारण***ம்.* **स्वप्रामाण्यमूलसापेक्षत्व***த்துக்கு,* **पौरुषेयत्व***ம் ஹேது வானபடியென்னென்னில், ஒருவன் ஒரு வாக்யம் சொல்லும் போது* "**अर्थं बुद्ध्वा शब्दरचना**" *என்கிற ந்யாயத்தாலே அர்த்த₂மறிந்தே சொல்லவேண்டியிருக்கையாலும். அந்த அறிவுதான் வேத₃மூலகமல்லாதபோது* **भ्रमप्रमादादिसम्भावन***கை யாலே அந்த வாக்யத்தில்* **अप्रामाण्यसंशय***முண்டாகை யாலும்.* **भ्रमप्रमादादिदोष***ங்களில்லாத வேத₃த்தாலுண்டான ஜ்ஞாநத்தால் சொல்லப்படுகிற வாக்யத்திலேயே அந்த அப்ராமாண்யஶங்கை வாராதபடியிருக்கையாலும், அப்ராமாண்ய ஶங்காவிநிர்முக்தமான வாக்யமே ப்ர மாணமாகவேண்டுகையாலும்* **पौरुषेयत्वं स्वाश्रयप्रामाण्य-वेदसापेक्षत्वहेतु***வென்னத்தட்டில்லை.* (**ஶாஸ்த்ரத்தைப்பற்ற**) *என்றது—ஶாஸ்த்ரங்களைப்பற்ற என்றபடி.* "**पाञ्च-**

முடைய வேத₃மே ப்ரப₃ல ப்ரமாணமாகவும் அறுதி யிட்டிருக்கும் பரமவைதி₃கராகையாலே, இப்ரப₃ந்த₄த்தில் தாமருளிச்செய்கிற அர்த்த₂ங்களெல்லாம் வேத₃ ப்ரதிபாத்₃யமென்னுமிடம் தோற்ற முதலிலே வேத₃த்தை ப்ரமாணமாக அங்கீகரித்துக்கொண்டு தத₃ர்த்த₂நிர்ணயம் பண்ணும் க்ரமத்தை இவ்வாக்யத்தாலே அருளிச்செய்கிறார்.

வ்யா:—அகி₂லஹேய ப்ரத்யநீகத்வ கல்யாணைகதாநத்வங்களாலே ஈஶ்வரன் அகி₂லப்ரமேய விலக்ஷணனாயிருக்குமாப்போலேயிறே, அபௌருஷேயத்வ நித்யத்வங்களாலே வேத₃ம் அகி₂ல ப்ரமாண வில

---

प्रामाण्यம் स्वाभाविकம். अप्रामाण्यம் दोषकृतம். வேத₃த்துக்கு வக்தாவில்லாமையாலே प्रामाण्यம் निर्बाधமென்று तात्पर्यம். (பரமவைதி₃கராகையாலே இதி) வைதி₃க பத₃த்தாலே பா₃ஹ்யரையும். பரம பத₃த்தாலே குத்₃ருஷ்டிகளையும் வ்யாவர்த்திக்கிறது. (முதலிலே வேத₃த்தை ப்ரமாணமாக அங்கீகரித்துக்கொண்டு) என்றத்தால். "वेदोऽखिलो धर्ममूलं तद्विदां च स्मृतिशीले" என்று உபக்ரமித்த கௌ₃தமத₄ர்மஸூ இவ்விடத்திலே தோற்றுகிறதென்று ஸூசிதம். (அர்த்த₂நிர்ணயம் பண்ணும் க்ரமத்தை) उपबृंहण–करणकृत्वरूपமான ப்ரகாரத்தை யென்றபடி.

---

रात्रस्य कृत्स्नस्य वक्ता नारायणः स्वयम्" என்கிறபடியே भगवत्कर्तृकமான पाञ्चरात्रத்துக்கு भ्रमप्रमादादिसम्भावनामूलकाप्रामाण्यஶங்கையில்லையேயாகிலும். "इदं महोपनिषदं सर्ववेदसमन्वितम्। सांख्ययोगकृतान्तेन पाञ्चरात्रानुशब्दितम्॥"என்று. அது வேத₃வ்யாக்₂யாநமாகச்சொல்லப்படுகையாலே. व्याख्यानप्रामाण्यம்मूलप्रामाण्यसापेक्षமாகையாலே, அதுவும் वेदसापेक्षம் என்று கண்டுகொள்வது. (இவ்வாக்யத்தாலே)என்றது-கீழ் உபாத்தமான(வேத₃ார்த்த₂) (வா. 1) இத்யாதி₃யான இவ்வாக்யத்தாலேயென்றபடி.

x ஆய். வ்யா:—(வேதார்த்த2ம் இத்யாதி3) ப்ரத்யக்ஷாதி3 ப்ரமாண விலக்ஷணமாய், பரோக்ஷார்த்த2ப்ரகாசகமாய், அபௌருஷேயமாய். x

---

*வேத3த்திநுடைய ப்ராப3ல்யத்தை உபபாதி3க்கிறார்.—* **(அகி2லேத்யாதி3யாலே).** "**वेदशास्त्रात्परं नास्ति न दैवं केशवात्परम्**" *என்று* **सहोपादान**ம் *இருக்கையாலே* **साम्य**ம் **व्यञ्जित**ம். *அதில்,* **केशव-शब्द**க்*காலே* **क्लेशनाशनत्व-केशिहन्तृत्व**ங்கள் *சொல்லுகையாலே* **अखिलहेयप्रत्यनीकत्व**மும். **ब्रह्मरुद्रोत्पादकत्व - प्रशस्तकेशयुक्तत्व**ங்கள் *சொல்லுகையாலே* **कल्याणैकतानत्व**மும் *சொல்லப்பட்டது.* **एवंभूत**னை *கேசவனோடே ஸஹநிர்தே3சிக்கையாலே* **लब्ध**மான *ஸாம்யமும்* **निर्दोषगुणवत्त्व**ங்*களாலேயாகிறது.* "**वेदयतीति वेदः**" *என்கிற வ்யுத்பத்தியிலே* **कालोपाधिनिर्देश**மில்லாமையாலே **नित्यत्व**மும் **अपौरुषेयत्व**மும் *லப்3த4ம். இத்தையுட்கொண்டருளிச்செய்கிறார்* **(அகி2லேதி). (அகி2லப்ரமேயவிலக்ஷணனாயிருக்குமாப்போலே)** *என்றது*—**त्रिविधचेतनाचेतनविलक्षण**னா*யிருக்குமாப்போலே என்றபடி.* **उपमानानुगुण**மாக **अपौरुषेयत्वरूप निर्दोषत्व**ம் **प्रथमनिर्दिष्ट**மாகிறது. **नित्यत्वं सर्वकालसंबन्धित्वरूपं विवक्षितम्.**

---

*கீழ்ச்சொல்லப்பட்ட* **वेदप्रामाण्यान्यनैरपेक्ष्य**த்தை, *அந்த வேத3ங்களுக்கு,* "**वेदैश्च सर्वैः अहमेव वेद्यः**" *என்கிறபடியே* **स्वप्रतिपाद्यवस्तु**வோடுண்டான *ஔசித்யாதிசய ப்ரத3ர்சநமுக2த்தாலே* "**समस्तशब्दमूलत्वात् अकारस्य स्वभावतः। समस्तवाच्य-मूलत्वात् ब्रह्मणोऽपि स्वभावतः॥ वाच्यवाचकसंबन्धः तयोरर्थात्प्रतीयते।**" *என்று* **औचित्यातिशय**த்*தாலே காரணசப்3த3ம் காரணவஸ்துவான ப்3ரஹ்மத்தைச் சொல்லக்கடவது என்றாப்போலே, அகி2லஹேயப்ரத்யநீகனாய். கல்யாணைகதாநனான ஸர்வேச்வரனை நித்யநிர்தோ3ஷ ஸகலகு3ணபூர்ணமான ச்ருதி ப்ரதிபாதி3க்கை உசிதம் என்று காட்டி ஸ்தி2ரீகரிக்கிறார்.—* **(அகி2லஹேயப்ரத்யநீக) இத்யாதி3யாலே.** **अखिलहेयप्रत्यनीकत्वसदृशधर्म**ம் **अपौरुषेयत्व**ம். **कल्याणैकतानत्वसदृशधर्म**ம் **नित्यत्व**ம். *இந்த நித்யத்வம், ஸாத்விகவிஷயத்தில்* **भगवद्दयितत्व**மும்,

---

x இனி சில ஒற்றைப்படைப் பக்கங்களில் மேலே சிறிய எழுத்துக்களில் ஆய் வ்யாக்2யானம் தொடர்ச்சியாகத்தரப்படுகிறது. ஆய் வ்யாக்2யானமில்லாத பக்கங்களில் ஜீயர் வ்யாக்2யானம் மேலே பெரிய எழுத்துக்களில் தரப்படுகிறது.

க்ஷணமாயிருக்கும்படி. வேத₃த்தினுடைய அபௌரு ஷேயத்வாதி₃,"वाचा विरूप नित्यया"(வாசா விரூப நித்யயா) இத்யாதி₃ ஶ்ருதியாலும். "अनादिनिधना ह्येषा वागुत्सृष्टा स्वयम्भुवा। आदौ वेदमयी दिव्या यतस्सर्वाः प्रसूतयः॥" (அநாதி₃ நித₄நா ஹ்யேஷா வாகு₃த்ஸ்ருஷ்டா ஸ்வயம்பு₄வா। ஆதௌ₃ வேத₃மயீ தி₃வ்யா யதஸ்ஸர்வா: ப்ரஸூதய:॥) இத்யாதி₃ஸ்ம்ருதியாலும் ப்ரதிபாதி₃க்கப்படாநின்ற திறே. இந்த ஶ்ருதிஸ்ம்ருதிகள் வேத₃நித்யத்வத்தைச் சொல்லுகையாலே, தத₃பௌருஷேயத்வமும் ஸித்₃த₄ மிறே. அத ஏவ ப்₄ரம விப்ரலம்ப₄ ப்ரமாத₃ாஶக்திரூப தோ₃ஷசதுஷ்டய ஸம்ப₄ாவநாக₃ந்த₄ரஹிதமாயிருக் கும். பௌருஷேயத்வமிறே அவை வருகைக்கு மூலம்.

ஆகையாலே, उपमानगतकल्याणैकतानत्वस्थानीयமான கு₃ணமா கிறது. (அகி₂ல ப்ரமாண விலக்ஷணம்)-स्मृतीतिहासपुराणादिरूप-त्रिविध-प्रमाण-व्यावृत्तமென்றபடி. இங்கே, வேத₃த்துக்கு நித்யத் வம் आनुपूर्वी-नित्यत्वம் विवक्षितம். ஶ்ருதியிலே "विरूप" इति ஸம் பு₃த்₃தி₄. x(விரூபையாய்-ப₃ஹுவிதை₄யாய். நித்யையாய்-ஸர்வ காலஸம்ப₃ந்தி₄நியுமான வாக்கினாலேயென்றபடி(றுமாம்?).)

ஆஸுரப்ரக்ருதிகளுக்கு அவகா₃ஹிக்கவொண்ணாதபடி மறை யாயிருக்கையுமாகிற, ப்ரமேயவஸ்துவான ஈஶ்வரனுடைய பரத்வஸௌலப்₄யங்களுக்கு ஸத்₃ருஶமான கு₃ணங்களுக் கும் உபலக்ஷணம். வேதா₃பௌருஷேயத்வாதி₃களில் ப்ர மாணம் காட்டுகிறார் (வேத₃த்தினுடையவித்யாதி₃) ("வாசா விரூப நித்யயா வ்ருஷ்ணே சோத₃ஸ்வ") என்றதுக்கர்த்த₂ம்— வாராய் விரூபனை வ்ருஷ்ணியே! (நித்யயா)—நித்யை யாய் இருந்துள்ள. (வாசா)—ஶ்ருதியாலே, ஸ்தோத்ரம் பண்ணக்கடவாய் என்று. ஶ்ருத்யுக்தமான நித்யத்வத்தை ஸ்ம்ருதி வசநத்தாலே விவரித்துக் காட்டுகிறார்.—(அநாதி₃) இத்யாதி₃நா. उत्पत्तिविनाशरहितनित्यनिर्दोषமான இந்த ஶ்ருதிரூப

x குண்ட₃லிதம் சில பிரதிகளில் இல்லை.

அவிச்சி₂ந்நபாட₂ ஸம்ப்ரதா₃யஸித்₃த₄மாய், யதா₂ர்த்த₂ப்ரகாசகமாய், ஸ்வத:ப்ரமாணமாய் "வேத₃யதீதி வேத₃:" என்று பு₃பு₄த்ஸுக்களுக்கு ஸ்வார்த்த₂ப்ரகாசகமான வேத₃த்தின் கர்மப்₃ரஹ்மமாகிற பூர்வாபரபா₄கார்த்த₂த்தை. ஸம்சய விபர்யயமற நிச்சயிப்பது.

---

(**अनादिनिधना**)-**उत्पत्ति-नाश-शून्या**. ச்ருதிஸ்ம்ருதிகளிலே நித்யத்வ *மாத்ரம் சொல்லியிருக்க, அபௌருஷேயத்வம் ஸித்₃தி₄க்கும்படி எங்ஙனே? என்னும் சங்கையிலே அருளிச்செய்கிறார்,-(இந்த* **விதயாதி₃) नित्यत्वादपौरुषेयत्वं, अपौरुषेयत्वान्निर्दोषत्वं** *என்கிறவிது* **विवक्षितம். भ्रमः-अन्यथाज्ञानम्. विप्रलम्भः-बुद्धिपूर्वकपरभ्रमोत्पादन-रूपवञ्चनम्. प्रमादः-अनवधानम्. अशक्तिः-करणापाटवम्. यथार्थ-द्रष्टृत्वे सति यथार्थवक्तृत्वं-आप्तत्वम्.** *அதில். பூர்வ த₃ளதே₃ாஷம்-ப்₄ரமப்ரமாத₃ங்கள்; உத்தரத₃ளதே₃ாஷம் — விப்ரலம்ப₄ா*

---

*மான வாக்கானது. கல்பாதி₃யிலே ப்₃ரஹ்மாவினாலே ப்ர வசநம் பண்ணப்பட்டது. யாதொரு அந்த வேத₃த்தாலேயே எல்லாப் பதா₃ர்த்த₂ங்களினுடைய நாமரூப ஸ்ருஷ்டிகளும் உண்டாயத்தின என்று ஸ்ம்ருத்யர்த்த₂ம். இந்த ஸ்ம்ருதிவசநத்தால் ச்ருத்யுக்த நித்யத்வம் உத்பத்தி விநாசசூந்யத்வரூபமென்று சொல்லுகையாலே. அபௌ ருஷேயத்வம் அர்த₂ாநுபபத்திஸித்₃த₄ம் என்று அருளிச் செய்கிறார் (இந்த) என்று தொடங்கி. அபௌருஷேயத்வம் ஸித்₃தி₄த்தபோதே நிர்தோ₃ஷத்வமும் ஸித்₃த₄மென்று அருளிச்செய்கிறார் (அதஏவ) என்று தொடங்கி. (ப்₄ரமம்)— ப்₄ரமப்ரயுக்தமான விருத்₃த₄ார்த்த₂கத்வம். (விப்ரலம்ப₄ம்)— வஞ்சநாப்ரயுக்த விருத்₃த₄ார்த்த₂கத்வம். (ப்ரமாத₃ம்)— அநவதா₄ாந ப்ரயுக்த அர்த்த₂பா₃த₄ம். (அசக்தி)—* **अशक्तिप्रयुक्त वस्तुबोधनासामर्थ्यम्. भ्रमविप्रलम्भप्रमादाशक्ति***களாகிற* **कर्तृदोष***ங்கள்* **प्रबन्धगत***மாம்போது இ டியேயாகவேணுமிறே.*

*அபௌருஷேயத்வ ஸித்₃தி₄யால் இந்த தோ₃ஷாபா₄வம் அர்த்த₂ஸித்₃த₄மானபடி யென்னென்ன அருளிச்செய்கிறார் - (பௌருஷேயத்வமிறே) என்று தொடங்கி.* "**कारणाभावात्कार्या-भावः**" *என்று கருத்து. வேத₃த்தினுடைய அகி₂லப்ரமாண*

x இப்படியிருக்கையாலே இதுக்கு மேற்பட்டதொரு ஶாஸ்த்ரமில்லை. ஆகையாலேயிறே, "सत्यं सत्यं पुन-स्सत्यं उद्धृत्य भुजमुच्यते। वेदशास्त्रात् परं नास्ति न दैवं केशवात्परम्॥" (ஸத்யம் ஸத்யம் புநஸ் ஸத்யம் உத்₃த்₄ருத்ய பு₄ஜமுச்யதே। வேத₃ஶாஸ்த்ராத் பரம் நாஸ்தி ந தை₃வம் கேஶவாத் பரம்॥)என்று ஐதிஹாஸிகராலும் பௌராணிகராலும் ஏககண்ட₂மாகச் சொல்லப்பட்டது. இதினேற்றமெல்லாம் திருவுள்ளம்பற்றியிறே "சுடர்மிகு சுருதி" என்று நம்மாழ்வார் அருளிச்செய்தது.

---

ஶக்திகள் என்று கண்டுகொள்வது. (இதுக்கு மேற்பட்டதொரு ஶாஸ்த்ரமில்லை)-வேத₃த்துக்கு மேற்பட்டதொரு ஹிதாநுஶாஸநமில்லையென்றபடி. உக்தார்த்த₂ங்களுக்கு ப்ரமாணம் (ஸத்யம் ஸத்யம இத்யாதி₃) प्रामाण्यातिशय-सिद्ध्यर्थं "सत्यं सत्यं सत्यं" என்று த்ரிவாரம் சொல்லிற்று. (வேத₃ஶாஸ்த்ராத் பரம்) वेदात्मकशास्त्रादुत्कृष्टं. अत्र योग्यतया "शास्त्रे" என்கிற

---

வைலக்ஷண்யத்தை நிக₃மிக்கிறார் (xஆகையாலே)என்று. அதினுடைய நிஸ்ஸமாப்₄யதி₄கதையை शपथगर्भप्रमाणमुखத்தாலே இசைவிக்கிறார்.— (ஆகையாலேயிறே) என்று தொடங்கி. (வேத₃ஶாஸ்த்ராத் பரம் நாஸ்தி) என்றது— வேத₃த்தைக் காட்டில் வேறு ஸாக்ஷாத் ஶாஸ்த்ரம் இல்லையென்றபடி. *இதர ஶாஸ்த்ரங்களும் வேத₃மூலகங்களாகையாலே வேத ஶாஸ்த்ரங்களாகக் கடவதித்தனையொழிய, ஸ்வதந்த்ர ஶாஸ்த்ரங்களாக மாட்டாதிறே.* இந்த ஶ்லோகத்தில் "பர"ஶப்₃த₃ம் உத்க்ருஷ்டவாசியாய்போது வேத₃ஸமமானதொரு ஶாஸ்த்ரமுண்டென்று தோன்றுமாகையாலே, "பரஶப்₃த₃ம் அந்யவாசி" என்று மீமாம்ஸையில் அண்ணனய்யன் அருளிச்செய்தருளினார். ஆனால், இதுக்கு மேற்பட்டதொரு ஶாஸ்த்ரமில்லையென்கைக்கு இத்தை ப்ரமாணமாகவெடுத்தபடியென்னென்னில் : இதரஶாஸ்த்ரஸாமாந்

---

x இங்கு, வ்யாக்₂யாந பாடமும், எ-உரை பாட₂மும் வேறுபடுகின்றன.

வேத₃ார்த்த₂ாநுஸாரிணிகளான ஸதா₃சாராதி₃ நிர்ணயகப்ரமாண மான மந்வாதி₃ ஸ்ம்ருதிகளாலும், புராவ்ருத்தரூபங்களான இதி ஹாஸங்களாலும், ஸர்க்க₃ாதி₃பஞ்சலக்ஷணோபேதங்களான புராணங்க ளாலும் என்கிறார். முதலிலே (வேதம்) என்று. "**ஆதௌ₃ வேதா₃: ப்ரமாணம்**" என்கிற ஆசார்யோக்தியை யநுஸந்தி₄க்கிறார். வேத₃ ஶப்₃த₃ம் உப₄யப₄ாக₃ஸாமாந்யவாசியாகையாலே அர்த்த₂ஶப்₃த₃மும் ஸாமாந்ய வாசியுமாமிறே. (அர்த்த₂மறுதியிடுவது) என்று ஶப்₃த₃ மறுதியிடுகையை வ்யாவர்த்திக்கிறது. "**இதிஹாஸ புராணப்₄யாம்**

---

விஶேஷ்யம் வரும். (**केशवात्**)-**ब्रह्मरुद्रोत्पादकात्, प्रशस्तकेशात्, क्लेशनाशनात्, केशिहन्तुश्च**, (**परं**)–**उत्कृष्टं**, (**दैवं**)–**देवता, नास्तीत्यर्थं**ம் கண்டுகொள்வது. (**ஐதிஹாஸிகராலும்**)–இதிஹாஸ வித்துக் களாலும். (**பௌராணிகராலும்**)–புராண வித்துக்களாலும். (**ஏககண்ட₂மாக**) "**कण्ठो वाचकशब्दे स्यात्**" ஏகாநுபூர்வீக ஶப்₃தமாக வென்றபடி. இவ்விடத்திலே. "**यथाहुरैतिहासिकाः पौराणिकाश्चैव–सत्यं सत्यं पुनस्सत्यं"इत्यादि–सहस्रनामभाष्यसन्दर्भ**த்தைக் கண்டுகொள்வது. (**சுடர்**) தேஜஸ்ஸாலே. (**மிகு**) அதிஶயிதை யான. (**சுருதி**) ஶ்ருதியென்றபடி.

---

யத்தை நிஷேதி₄க்கால். ஶைத பஞ்சாஶந்யாயத்தாலே உத்க்ருஷ்டஶாஸ்த்ரம் கழியுண்ணும் என்று கருத்தாலே யென்று கண்டுகொள்வது. "வலங்கொண்ட இதுக்குச் சேராதவை மநுவிபரீதங்கள்போலே" (**ஆசார்யஹ்ருதயம் வா. 64**) என்று, திருவாய்மொழிக்குச் சேராதவை த்யாஜ் யங்களாயிருக்கையாலே. அதில் பரிக்₃ரஹாதிஶயத்தாலேயும் வேத₃ங்களினுடைய நிஸ்ஸமாப்₄யதி₄கதையை அறிவிக்கிறார் (**இதினேற்றமெல்லாம்**) என்று தொடங்கி. "சுடரடி" என்று சொன்ன ப்ரமேயத்துக்கு ஸத்₃ருஶமாக "சுடர்மிகு சுருதி" என்கையாலே **पूर्वोक्तप्रमाणप्रमेयसौसादृश्यं व्यञ्जितम्**. இத்தால் த்₃வயவிவரண ப்ரவ்ருத்தரான ஆழ்வார், முதலிலே வேத₃ங்களையே ப்ரமாணமாகப் பரிக்₃ரஹிக்கை யாலே மூலத்திலும் முதலிலே **वेदरूपप्रमाणनिर्देश**ம் மிகவும் **संप्रदायानुरूप**மென்று **सूचितम्**.

அவரைப் பின்செல்லுமவராய் அபி4யுக்தாக்3ரே ஸரரான பட்டரும், "आदौ वेदाः प्रमाणं" (ஆதௌ3 வேதா3: ப்ரமாணம்) என்ருரிறே. இத்தை வேத3 மென்கிறது. "वेदयतीति वेदः" (வேத3யதீதி வேத3:) என்கிற வ்யுத்பத்தியாலே பு3பு4த்ஸுக்களாய் ஆஸ்திகரா யிருப்பார்க்கு ஸ்வார்த்த2 ப்ரகாஶகமாயிருக்கையாலே.

---

(அவரைப் பினசெல்லுமவராய்) தத3நுஸாரிகளாய். अभियुक्तानां அக்3ரேஸரரான–முன் நடக்குமவரான என்றபடி. ஆழ்வாரைப் பின்செல்லுகையே அபி4யுக்தாக்3ரேஸரத்வத்துக்கு ஹேதுவென்று வ்யஞ்ஜிகம். இங்கே (அபி4யுக்தத்வமாவது)-वेदप्रामाण्यनिरूपणाधिकृतत्वं. "अभियुक्ताश्च ये यत्र यन्निबन्धप्रयोजनाः। तद्गतगुणदोषाणां ज्ञाने चाधिकृता मताः॥" என்றிறே அபி4யுக்தஸ்வரூபம் சொல்லிற்று. (ஆதௌ3 வேதா3: ப்ரமாணம்) "धर्मं जिज्ञासमानानां प्रमाणं प्रथमं श्रुतिः" என்கிறபடியே வேத3ங்கள் அநந்யமூலகப்ராமாண்ய யுக்தங்களென்று ஸ்ரீரங்க3ராஜஸ்தவத்திலே அருளிச்செய்தாரென்றபடி. (இத்தையித்யாதி3) (வேத3யதீதி வேத3:–என்கிற வ்யுத்பத்தியாலே இதி) "विद् ज्ञाने" என்கிற தா4துவின் மேலே णिच् வந்து, அதின் மேலே पचाद्यच् प्रत्ययம் வந்து, णिच्प्रत्ययத்துக்கு லோபம்

---

ஆழ்வார்கள் உண்டபோதொரு வார்த்தையும் உண்ணுதபோதொரு வார்த்தையும் சொல்லுமவர்களாகையாலே. அவருடைய ஸம்மதிமாத்ரம் போராதென்று ஆசார்ய ஸம்வாத3ம் காட்டுகிருர் (அவரை) என்று தொடங்கி. இன்னமும், அந்த வேத3த்தினுடைய ஸர்வாதி4கத்வத்தை அதினுடைய நாமநிர்வசநத்தாலும் அறிவிக்கிருர்.–(இத்தை) என்று தொடங்கி. "विद्यते ज्ञायते अनेनेति वेदः" என்னுதே "वेदयतीति वेदः" என்று கர்த்ரிவ்யுத்பத்தியாலே அருளிச்செய்தது, "अविस्तृतास्सुगंभीराः रामानुजमुनेर्गिरः। दर्शयन्तु प्रसादेन स्वं भावमखिलं दृढम्॥" என்கிறவிடத்திலும். "तद्भाष्यं स च भाष्यकृत् स च हरिः सम्यक् प्रसीदन्तु नः" என்கிறவிடத்திலும்

**ஶாஸ்த்ராத் நரஸ்தீவ்ராதி3ஶௌஷதா4த்। பா4ரத: ஶாஸ்த்ர ஸாரோऽயம் அத: காவ்யாத்மநா க்ருத:॥) "विष्णौ वेदेषु विद्वत्सु गुरुषु ब्राह्मणेषु च। भक्तिर्भवति कल्याणी भारतादेव धीमताम्॥ (விஷ்ணௌ வேதே3ஷு வித்3வத்ஸு கு3ருஷு ப்3ராஹ்மணேஷு ச। ப4க்திர் ப4வதி கல்யாணீ பா4ரதாதே3வ தீ4மதாம்॥) இத்யாதி3களாலே புராண விஶேஷங்களிலே இதிஹாஸம் ஶ்லாகி4க்கப்படா நின்றதிறே.**

---

*ப்ரபு4வாக்யம் போலே; புராணவாக்யம் ஸுஹ்ருத்3வாக்யம் போலே; காவ்யம் அபி4மதவிஷயமான காந்தையினுடைய உபதே3ஶம்போலே.** "**यद्वेदात् प्रभुसंमितात् अधिगतं शब्दप्रधानाच्चिरम्, यच्चार्थप्रवणात् पुराणवचनात् प्राप्तं सुहृत्संमितात्। कान्तासंमितया यया सरसतामापाद्य काव्यश्रिया कर्तव्ये कुतुकी बुधो विरचितः तस्यै स्पृहां कुर्महे॥**" *என்கிறவித்தை யோஜித்துக் கொள்வது.* (**விஷ்ணௌவித்யாதி3**) (**विष्णौ**)-"**विष्णुपोतम्**" *என்கிற ஸித்3தோ4பாய விஷயத்திலும்.* (**वेदेषु**)-"**विष्णुनामा स वेदेषु**" *என்கிறபடியே அந்த ஸித்3தோ4பாயத்தை ப்ரதிபாதி3க்கிற வேத3ங்களிலும்.* (**विद्वत्सु**)-"**विदुः कृष्णं**" *என்கிறபடியே அந்த வேத3ங்களைக்கொண்டு விஷ்ணுபோதத்தை யறிகிற அநுகூலர் விஷயத்திலும்,* (**गुरुषु**)-*அந்த ப்ரமாண ப்ரமேயங்களை அந்த ப்ரமாதாக்களுக்கு உபதே3ஶிக்கிற ஆசார்ய விஷயத்திலும்.* (**ब्राह्मणेषु**)-*அந்த ஆசார்யர்களுக்கு உகந்த விஷயமென்று கிஞ்சித்கார்யரான ப்3ரஹ்மநிஷ்ட2ர் விஷயத்திலும்.* (**कल्याणी**)-**स्वयंप्रयोजन**பூ4தையான. (**भक्तिः**)-*ப்ரேமவிஶேஷமானது.* (**धीमतां**)-*ஸத்த்வோத்கர்ஷமடியாகப் பிறந்த நிஷ்கர்ஷ ஜ்ஞாநமுடையவர்களுக்கு.* (**भारतादेव**

---

*மதிநலம் பெற்றவர்களிடங்களிலேயும்.* (**ப்3ராஹ்மணேஷு**)-**ब्रह्म इमे ब्राह्मणाः, भागवताः तेषु; (कल्याणी)-स्वतः प्राप्यभूता; (भारतादेव)** *என்று அவதா4ரித்துச் சொன்னது. உபாயவைப4வபரமான*

வர்ணிக்குமதாய், அபக்ஷபாதியாய், அநந்யபரமாய், ப4க3வத்3கு3ண சேஷ்டிதோப4யப்ரகாஶகமாய், ''*யதி3ஹாஸ்தே(தி?) தத3ந்யத்ர யந்நேஹாஸ்தே(தி?)ந தத் க்வசித்*'' என்று பூர்ணார்த்த2முமான இதிஹாஸம்

---

**भवति)-ग्रन्थान्तरनिरपेक्ष**மாக ப4ாரதத்திலே உண்டாகிறதென்றபடி. (மதி மந்த2ாநம்) **इत्यादि-प्रमाणोपादान**பரிபாடிக்கு இந்த ஶ்லோகோபாதா3நத்தில் விஶ்ராந்தியாலே ஒரு விஶேஷம் வ்யஞ்ஜிதம். எங்ஙனேயென்னில்; (**ஸித்3தோ4பாயத்தைச் சொல்லிக்கொண்டு போந்து, ஈஶ்வரஸ்வாதந்த்ர்யத்துக்கஞ்சினவனுக்கு ப்ரத2மபர்வத்தைத்தள்ளி, சரமபர்வம் காட்டப்பட்டது**) (பக்கம் 51) என்றிறே மூலத்துக்கு ப்ரதா4ந ப்ரமேயம் சொல்லிற்று. அதுதான் வேத3தாத்பர்யவிஷயம் என்னுமிடம் இதிஹாஸாதி3களைக்கொண்டு நிஷ்கர்ஷிக்கிறார் என்றும் சொல்லிற்றிறே (ப104). அப்படி ஸித்3தோ4பாயப்ரப்4ருதி சரமபர்வ பர்யந்தமான அர்த்த2ங்களிலே ப4ாரதத்துக்குத்தாத்பர்யம் என்னுமிடம் மஹாப4ாரத வைப4வ ப்ரதிபாத3கமான புராண விஶேஷஸ்த2மான இந்த வசநஸ்த2 நிர்தே3ஶ க்ரமவிஶேஷத்தாலே ஆவிஷ்க்ருதம் என்று திருவுள்ளம்பற்றியாய்த்து—முடிவில் இந்த வசநம் உபாத்தம் என்று கண்டுகொள்வது. (**வேத3வேத்3யே**) என்கிறவிது ஸ்காந்த3வசநம். (மதிமந்த2ாநம்) என்கிறவிது **वायुप्रोक्तश्लोक**ங்களில் வசநம். (பி3பே4தி க3ஹநாத்) என்கிறவிது ப4விஷ்யத் புராணஸ்த2வசநம். (வ்யாஸ வாக்ய) **इति** மார்க்கண்டே3ய புராண வசநம். (ஆதி3)ஶப்3த3த்தாலே. "**तस्माद्रामायणं देवि वेद एव न संशयः। सर्वव्याकरणान्यत्र स्वयं न्यस्तानि वेधसा॥**" என்கிற ஸ்காந்த3 வசநமும். "**यस्य द्वैपायनः पुत्रः स्वयं विष्णुरजायत। प्रकाशो जनितो येन महाभारतचन्द्रमाः॥**" என்கிற மாத்ஸ்ய வசநமும். "**कृष्णद्वैपायनं व्यासं विद्धि नारायणं प्रभुम्। कोह्यन्यो भुवि मैत्रेय महाभारतकृद्भवेत्॥**" என்கிற புராணரத்ந வசநமும் விவக்ஷிதம்.

---

இதில் விஷ்ணுப4க்தி உண்டாகிறாப்போலே புருஷகார வைப4வபரமான ஸ்ரீராமாயணத்தில் உண்டாகாதென்கைக்

மத்₄யஸ்த₂தையாவது— “यस्मिन् कल्पे तु यत्प्रोक्तं पुराणं ब्रह्मणा पुरा। तस्य तस्य तु माहात्म्यं तत्स्वरूपेण वर्ण्यते॥” (யஸ்மிந் கல்பே து யத் ப்ரோக்தம் புராணம் ப்₃ரஹ்மணு புரா। தஸ்ய தஸ்ய து மாஹாத்ம்யம் தத்ஸ்வரூபேண வர்ண்யதே॥) என்று, ஸர்வபுராணத்துக்கும் ப்ரவர்த்தகன் ப்₃ரஹ்மாவாய், அவனுக்கு யாதொரு கல்பத்திலே கு₃ணத்ரயத்தில் யாதொரு கு₃ணம் விஞ்சியிருந்தது, அந்த கு₃ணுநுகு₃ண தே₃வதையினுடைய மாஹாத்ம்யத்தைப் புராணத்திலே சொல்லுகையாலே பக்ஷபாதிகளாயிருக்கும் புராணங்கள் போலன்றிக்கே, லௌகிக வைதி₃க ஸகலார்த்த₂ நிர்ணயத்திலே அதி₄க்ருதங்களாகையாலே ஒரு விஷயத்திலும் பக்ஷபாதமின்றிக்கேயிருக்கை.

---

(மத்₄யஸ்த₂தையாவது) *இத்யாதி₃*—“यस्मिन् कल्पे तु” *என்கிற வசநம்* मात्स्यपुराणस्थम्. *அதுக்கர்த்த₂ம்* (ஸர்வபுராணத்துக்கும்) *இத்யாதி₃.* (यत्पुराणं) *என்கிற* यच्छब्दफलितं (ஸர்வபுராணத்துக்கும்) *இதி.* (यस्मिन्)-यद्गुणप्रचुरे, (कल्पे)-ब्रह्मणो दिवसे, (सः)-बुद्धिस्थः कल्पविशेषणभूतो गुणः, (स्वरूपं)-निरूपकधर्मो यस्य, सः-तथोक्तः-तेन (ब्रह्मणा), (यत् पुराणं) (प्रोक्तं)-प्रवर्तितं, “तस्मिन् कल्पे” “तस्मिन् पुराणे” इत्यध्याहारः. यत्तदोर्नित्यसम्बन्धात्, तस्मिन् कल्पे, तस्मिन् पुराणे, (तस्य तस्य)-कल्पगुणविशिष्टस्य कर्तृगुणविशिष्टस्य अग्न्यादेः, (माहात्म्यं वर्ण्यते) *என்று விவக்ஷித்து அருளிச்செய்கிறுர்* (அவனுக்கு யாதொரு கல்பத்திலே) *இத்யாதி₃.* (யாதொரு கல்பத்திலே)— यद्गुणप्रचुर*மான* கல்பத்திலே. (तत्स्वरूपेण) इत्यत्र स्वरूपपदं—प्राचुर्योपलक्षक*மென்று*

---

*காக.* (கல்பம்)— *ப்₃ரஹ்மதி₃வஸம்.* (யஸ்மிந் கல்பே)— *என்றது—ஸாத்விக ராஜஸ தாமஸ தி₃நங்களிலே யாதொரு*

ப்ரப₃லம் என்கிருர். (இரண்டு) என்கிற இணைப்பால் இவற்றின் ஏகப₄ரகே₃ாபப்₃ரும்ஹணத்வ ஸாம்யமும். ஸ்வஸ்வலக்ஷணஸித்₃த₄ பே₄த₃மும், அந்யோந்ய ப்ரதியோகி₃த்வமும் தோன்றுகிறது. 3.

---

*திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிருர்* (யாதொருகுணம் விஞ்சியிருந்தது) *என்று.* (तस्य तस्य) *என்கிற* तच्छब्दद्वय*மும்.* (यस्मिन्) (तत्स्वरूपेण) इति यत्तच्छब्दनिर्दिष्ट-कल्प-कर्तृ-गुणविशिष्टपर *மென்று திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிருர்* (அந்த கு₃ணாநுகு₃ணேதி). गुणानुगुणत्वं च-स्वयं तद्गुणप्रचुरत्वे सति स्वोपासकानामपि तत्प्रयोजकत्वम्। "अग्नेः शिवस्य" इत्यादिप्रकरणस्थ-अग्नि-शिव-चतुर्मुख-पितृ-सरस्वती-हरि-शब्दार्थ*ங்களை* क्रोडीक*ரித்து ஸாமாந்யேந அருளிச்செய்கிருர்* (தேவதையினுடைய) *இதி.* (यत्प्रोक्तं) इति यच्छब्दबलाध्याहृत-तच्छब्दार्थ*ம்* (புராணத்திலே) *இதி. அந்த கல்பத்திலே என்று ஶேஷ:.* *இங்கே* "अतः तस्मिन् कल्पे तस्मिन् पुराणे तत्तद्गुणप्रचुरस्य तस्य तस्य दैवतस्य माहात्म्यं वर्ण्यत इत्यर्थः" *என்கிற* वेदार्थसङ्ग्रहदीपिकावाक्य*த்தைக் கண்டுகொள்வது.* (லௌகிகார்த்த₂ங்கள்) — *த₃ண்ட₃நீதி முதலானவற்றில் சொல்லுகிற அர்த்த₂ங்கள்.* (வைதி₃கார்த்த₂ங்கள்) — *கர்ம ப்₃ரஹ்மங்கள்.* (அதி₄க்ருதங்களாகையாலே) - *தத்பரங்களாகையாலே என்றபடி.* (பக்ஷபாதம்) — अर्थस्थितिमनपेक्ष्यापि तात्पर्यातिरेकः. *இதில்லாமலிருக்கை மத்₄யஸ்த₂தை என்று கூட்டுவது.*

---

*தி₃நத்திலே என்றபடி.* (தஸ்ய தஸ்ய) *என்றது — அந்தந்த கு₃ணாநுகு₃ணதே₃வதையினுடைய என்றபடி.* (தத்ஸ்வரூபேண) *என்றது — அந்தந்த கு₃ணங்களையுடைய புராணத்தாலேயென்றபடி. பக்ஷபாதமில்லாதமை தெரிந்தபடியென்னென்ன அருளிச்செய்கிருர்,* — (லௌகிகவைதி₃க) *இத்யாதி₃யாலே.* (லௌகிகங்கள்) — *இந்த்₃ரிய க்₃ரஹண யோக்₃ய பதா₃ர்த்த₂ங்கள். இத்தால், லௌகிகவிஷயங்களில் பக்ஷபாதமின்றிக்கேயிருக்கையாலே. வைதி₃கங்களிலும் அப்படியென்னுமிடம் நிஶ்சிதம் என்று சொல்லப்பட்டது.*

கர்த்துராப்ததமத்வமாவது — ப்ரப₃ந்த₄கர்த்தா வானவன், யதா₂(ர்த்த₂)த₃ர்ஶந ஸாமர்த்₂யத்தையும், யதா₂த்₃ருஷ்டார்த்த₂வாதி₃த்வத்தையும் மிகவுமுடையவனுயிருக்கை.

"अथेतिहासपुराणयोः इतिहासा बलीयांसः; कुतः? तेषां परिग्रहातिरेकात्, सर्वत्र माध्यस्थ्येन भूतार्थप्रतीतेः, वचनसौष्ठवेन, कर्तुराप्ततमत्वावगतेश्च" (அதே₂திஹாஸபுராணயோ: இதிஹாஸாப₃லீயாம்ஸ:; குத:? தேஷாம் பரிக்₃ரஹாதிரேகாத், ஸர்வத்ர மாத்₄யஸ்த்₂யேந பூ₄தார்த்த₂ப்ரதீதே:, வசநஸௌஷ்ட₂வேந, கர்த்துராப்ததமத்வாவக₃தேஶ்ச।) என்று தொடங்கிப் பரிக்₃ரஹாதிஶயாதி₃களாலே புராணத் இதிஹாஸ ப்ராப₃ல்யம் ஸாமாந்யேந தத்வநிர்ணயத்திலே உய்யக்கொண்டாராலும், "महाभारतं हि परिग्रह-

(கர்த்துரித்யாதி₃) तमप्प्रत्ययार्थம் (மிகவும்) இதி. உக்தார்த்த₂த்துக்கு ப்ராசீநஸம்வாத₃ம் (अथेतिहासेत्यादि). (इतिहासपुराणयोः) इति निर्धारणे सप्तमी. (बलीयांसः)-स्मृत्यपेक्षया புராணங்கள் ப₃லவத்துக்கள், तदपेक्षया இதிஹாஸங்கள் ப₃லவத்துக்கள் என்றபடி. (सर्वत्र)-லௌகிக வைதி₃க விஷயங்களிலே (भूतार्थप्रतीतेः)-विद्यमानार्थप्रतीतेः. (वचनसौष्ठवेन)-वाक्यसौघटवेन; पूर्वापराविसंवादेन अतिवादतात्पर्यविरहेण என்றபடி. (ஸாமாந்யேந)-ஸ்ரீராமாயணம், பா₄ரதம் என்கிற விஶேஷநிர்தே₃ஶம் இன்றிக்கே என்றபடி. (परिग्रहविशेषः)—पुराणेषु

இவ்விடத்திலே, "ஒரு நாயக" (4-1) திருவாய்மொழியைக் கொண்டு, "சூழ் விசும்பணி முகிலி" ன் (10-9) ப்ராமாண்யமறிந்தபடியை த்₃ருஷ்டாந்தமாக்கிக்கொள்ளவும்.

(வசநஸௌஷ்ட₂வேந) என்றது — "यन्मनसा मन्यते(चेतयते?) तद्वाचा वदति" என்கிற ந்யாயத்தாலே, மநஸ்ஸிலே அந்யதா₂

विशेषावसितम्" (மஹாப₄ரதம் ஹி பரிக்₃ரஹ விஶேஷா வஸிதம்) என்று தொடங்கி, "धर्मे चार्थे च कामे च मोक्षे च भरतर्षभ। यदिहास्ति तदन्यत्र यन्नेहास्ति न तत् क्वचित्—इति लौकिक-वैदिक-सकलार्थ-निर्णयाधिकृतत्वेन, क्वचिदपि अपक्षपातित्वाच्च, पुराणेभ्यो बलवत्तरम्" (த₄ர்மே சார்த்தே₂ ச காமே ச மோக்ஷே ச ப₄ரதர்ஷப₄। யதி₃ஹாஸ்தி தத₃ந்யத்ர யந்நேஹாஸ்தி ந தத் க்வசித்॥-இதி லௌகிக வைதி₃கஸகலார்த்த₂நிர்ணயாதி₄க்ருதத்வேந, க்வசித₃பி அபக்ஷபாதித்வாச்ச புராணேப்₄யோ ப₃லவத்தரம்॥) என்னுமதளவாக, பரிக்₃ரஹாதிஶயத்தாலும், மத்₄யஸ்த₂தையாலும், புராணங்களிற்காட்டில் இதிஹாஸ விஶேஷமான மஹாப₄ாரதத்துக்குண்டான

---

ஶ்லாகி₄க்கப்படுகை. (यत् अन्यत्रास्ति तत् इहास्ति)-इति கூட்டுவது. யாதொரு ப்ரமேயம் இதுக்கு அந்யமான லோகவேத₃ங்களிலே ப்ரதிபாத்₃யதயா இருக்கிறது—அது இங்கே ப்ரதிபாத்₃யதயா இருக்கிறது என்று விவக்ஷித்து (லௌகிகவைதி₃க) इत्याद्युक्तம். (यन्नेहास्ति न तत् क्वचित्)—இதிலின்றிக்கேயிருப்பது புறம்பின்றிக்கேயிருக்கும் என்றபடி. (यदिहास्ति तदन्यत्र) என்று அந்வயவ்யாப்தியும். (यन्नेहास्ति न तत् क्वचित्) என்று வ்யதிரேகவ்யாப்தியும்சொல்லிற்றென்று விவக்ஷித்து, (सकलार्थ) इत्युक्तம். (இதிஹாஸ விஶேஷமான) என்றது—"महाभारतं हि" என்று इतिहासत्वव्याप्यमहाभारतत्वरूप-विशेषधर्मத்தையிட்டு நிர்தி₃ஷ்டமான என்றபடி. இது "रामायणवत् महाभारतं शरणम्" என்று ப₄ட்டராலே அருளிச்செய்யப்பட்ட ஸ்ரீராமாயணத்துக்கும் உபலக்ஷணம். இது

---

ப₄ாவம் உண்டாகில் வாக்கிலே தோன்றுமென்று கருத்தாலே. (உய்யக்கொண்டார்) உடையவர் காலத்திலே ப்ரஸித்₃த₄ரான தூப்புல் உய்யக்கொண்டார். 3.

## 4. அத்தாலே அது முற்பட்டது.

ப்ராபல்யம் ஸ்ரீஸஹஸ்ரநாம பாஷ்யத்திலே பட்டராலும் ப்ரதிபாதிக்கப்பட்டதிறே. 3.

4. அவ:-அதின் ப்ராபல்யத்தை இசைவிக்கிறார் (அத்தாலே) என்று தொடங்கி.

வ்யா:-அந்த ப்ராபல்யத்தாலே, "इतिहासपुराणं पञ्चमम्" (இதிஹாஸபுராணம் பஞ்சமம்) என்றும், "इतिहासपुराणाभ्याम्" (இதிஹாஸ புராணாப்யாம்) என்றும் ஶ்ருதிஸ்ம்ருதிகளிலே இரண்டையும் சேரச் சொல்லுகிறவளவில், இதிஹாஸமானது புராணத்துக்கு முன்னே சொல்லப்பட்டதென்கை. த்வந்த்வ ஸமாஸத்தில் அல்பாச்தரமாதல் அப்யர்ஹிதமாதலிறே

உய்யக்கொண்டார் க்ரந்தத்தில் பண்ணின सामान्यनिर्देश व्यावृत्ति. (ஸ்ரீஸஹஸ்ரநாம பாஷ்யத்திலே)—பகவத்குண தர்ப்பணத்திலேயென்றபடி. அதுக்கு "महाभारतसारत्वात्" இத்யாதி ஸ்வபதங்களை, "महाभारतं हि" இத்யாதி ஸ்வ வாக்யங்களாலே வர்ணிக்கையாலே. "स्वपदानि च वर्ण्यन्ते" என்கிற பாஷ்யலக்ஷணமுண்டென்று பாஷ்ய ப்ரஸித்தி உபபர்கைகயென்று (ஸஹஸ்ரநாம பாஷ்யத்திலே) என்று அருளிச்செய்தார் என்று கண்டுகொள்வது. 3.

4. (அதின் ப்ராபல்யத்தை)—புராணங்களிற் காட்டில் இதிஹாஸத்துக்குண்டான ப்ராபல்யத்தை. (இசைவிக்கிறார்)—ஸம்வதிப்பிக்கிறார் என்றபடி. "इतिहासपुराणं पञ्चमम्" इति भूमविद्यावाक्यम्. इतिहासाश्च पुराणानि च इतिहासपुराणं; समाहारद्वन्द्वः. 'इतिहासपुराणाभ्यां' इति, ஜாத்யேகவசனான்தங்களான इतिहास

4. அல்பமான அச்சையுடையது (அல்பாச்தரம்). அச்-

4. அவ:—இந்த ப்ராபல்ய ஸித்₃த₄மான இதிஹாஸத்தி னுடைய ப்ராதா₄ந்யத்தை மூதலிக்கிருர் மேல் (அத்தாலே) இத்யாதி₃யால்.

வ்யா:—ப்ரதிபாத்₃யார்த்த₂விஶேஷஸித்₃த₄ ப்ராபல்யத்தாலே புராணங்களில் வ்யாவ்ருத்தமான இதிஹாஸமானது, ''*இதிஹாஸாந்*

---

**पुराणशब्द**ங்களுக்கு **इतरेतरयोगद्वन्द्वः**। *இது* **बार्हस्पत्यस्मृतिवचनम्**. *ப்ரபலம் முற்படும் என்னுமதுக்கு ஶப்₃த₃ஶா நுஶாஸநத்தை ப்ரமாணமாகக் காட்டுகிருர்* ( **த்₃வந்த்₃வ ஸமாஸத்தி லித்யாதி₃நா** ). ( **த்₃வந்த்₃வ ஸமாஸத்தில்** ) *என்றது— ப்ரக்ருதமான ''இதிஹாஸ புராண'' என்கிற* **த்₃வந்த்₃வ** *ஸமாஸத்திலென்றபடி. அல்லது 'த்₃வந்த்₃வஸமாஸ ஶாமாந் யத்தில்'' என்று சொல்லப்பார்க்கில்,* **"धन्तम्" "लघ्वक्षरम्" "ऋतुनक्षत्राणाम्" "भ्रातुर्ज्यायसः" "अजाद्यदन्तम्"** *என்று த்₃வந்த்₃வ ஸமாஸத்தில் முற்படுமவை பலவுமுண்டாகை யாலே,* '' **அல்பாச்தரமாதல் அப்₄யர்ஹிதமாதலிறே முற் படுவது** '' *என்று நியமிக்கவொண்ணுதிறே. ''இதிஹாஸ புராண''* **என்கிற** *த்₃வந்த்₃வத்திலே. கீழ்ச்சொன்ன* **க்₄யந்தாதி₃களுக்கு** *விஷயந்தான் முதலிலேயில்லையிறே. இனி பரிஶேஷிப்பது அஜாத்₃யத₃ந்தம், அல்பாச்தரம். அப்₄யர்ஹிதம் என்கிற மூன்றுமிறே. அதில் ''அஜாத்₃ய த₃ந்தம்'' என்கிற இத்தை ''அல்பாச்தரம்'' ''அப்₄யர் ஹிதம்'' என்கிறவிரண்டும் பரத்வாத் பா₃தி₄க்குமிறே. இனி அதிலும் பரிஶேஷித்தது ''அல்பாச்தரம், அப்₄யர் ஹிதம்'' என்கிற இரண்டுமேயிறே. இத்தையெல்லாம் திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிருர்* ( **அல்பாச்தரமாதல் அப்₄யர்ஹிதமாதலிறே முற்படுவது** ) *என்று. அல்பாச்தர மாவது—இரண்டில் வைத்துக்கொண்டு ஒன்றிற்காட்டில் ஒன்று ந்யூந ஸங்க்₂யாகமான உடலெ(உயிரெ?)ழுத்தை*

---

*உயிரெழுத்து.* (அப்₄யர்ஹிதத்வம்)—ஶ்ரைஷ்ட்₂யம். **ஶ்ருதி**

முற்படுவது. அதில் அல்பாச்தரமன்றியிலேயிருக்க, அது முற்பட்டது அப்4யர்ஹிதத்வத்தாலேயிறே. இந்த அப்4யர்ஹிதத்வத்துக்கு மூலம் அதின் ப்ராப3ல்யமென்று கருத்து.

அத2வா, ( ஸ்ம்ருதீதிஹாஸபுராணங்களாலே ) என்று ப4ாக3த்3வயோபப்3ரும்ஹணங்களையும் ஸமஸ்தமாகச் சொல்லுகிறவிடத்தில் "इतिहासाश्च पुराणानि च इतिहासपुराणानि; स्मृतयश्च इतिहासपुराणानि च स्मृतीतिहासपुराणानि" (இதிஹாஸாஸ்ச புராணநி ச இதிஹாஸபுராணநி; ஸ்ம்ருதயஸ்ச இதிஹாஸ புராணநி ச ஸ்ம்ருதீதிஹாஸ

---

புடைத்தாயிருக்கிற பத3ம். அப்4யர்ஹிதமாவது—ஒன்றிற்காட்டில் ஒன்று ஶ்ரேஷ்ட2வாசகமாயிருக்கிற பத3ம். ( அதிலித்யாதி3 ) புராணஶப்3த3த்திற்காட்டில் ந்யூநாச்கமன்றிக்கே அதி4காச்கமான இதிஹாஸபத3ம் புராணஶப்3த3த்திற்காட்டில் முற்பட்டது. புராணாபேக்ஷயா ஶ்ரேஷ்ட2மான இதிஹாஸத்துக்கு வாசகமாகவிருக்கையாலேயென்றபடி. अल्पाच्तरत्वात् புராணஶப்3த3ம் முற்படப்ரஸங்கி3க்க, अभ्यर्हितत्वात् இதிஹாஸஶப்3த3ம் முற்படப்ரஸங்கி3க்க, இப்படித் துல்யப3லவிரோத4ம்வரில், परत्वात्, "अल्पाच्तरम्" என்கிற வித்தை பா3தி4த்து "अभ्यर्हितं पूर्वम्" என்கிற ஶாஸ்த்ரமே ப்ரவர்த்தித்து, இதிஹாஸஶப்3த3ம் முற்பட்டது என்று கருத்து. இத்தைத் திருவுள்ளம்பற்றியிறே, "इतिहासस्य पुराणेभ्योऽप्यभ्यर्हितत्वं विशेषः। 'अल्पाच्तरम्' इति पुराणशब्दस्य पूर्वनिपाते प्राप्ते 'अभ्यर्हितं पूर्वं प्रयोक्तव्यं' इति

---

ஸ்ம்ருதிகளிலேமுற்படுகையை உபபாதி3க்குமதிலுங்காட்டில், "लीलार्थमपि यद्ब्रूयुः" "ता एव भवन्ति शास्त्राणि" "சொல்லுமவிடு சுருதியாம்" என்கிறபடியே முன்பு இப்ரப3ந்த4த்திலே சேர்க்கப்பட்ட பூர்வாசார்ய வசநத்தில் முற்பட்டமையை

*புராணாநி கல்பாந்* " " *இதிஹாஸ புராணாப்₄யாம்* " என்று உப ப்₃ரும்ஹ்ய உபப்₃ரும்ஹணங்களிலே, புராணங்களில் முற்பட

---

**पूर्वनिपातितस्य इतिहासस्य अभ्यर्हितत्वप्रतीतेः ॥**" என்று *ஶ்ருத ப்ரகாஶிகாப₄ட்டரருளிச்செய்ததென்று கண்டுகொள்வது.* "**सर्वतोऽभ्यर्हितं पूर्वम्**" *என்றிறே* **महाभाष्यकारवचनम्.** *இங்கே* "அத்தாலே அது முற்பட்டது" (வா 4) *என்னுமதுக்கு உதா₃ ஹரணமாக* "**यद्ब्राह्मणानीतिहासान् पुराणानि**" *என்கிற வ்யஸ்த ப்ரயோக₃ஸ்த₂லத்தைத எடாதொழிந்தது,* "**इतिहासपुराणाभ्यां वेदं समुपबृंहयेत्**" *என்கிற* **वचनच्छायानुकारि***யான* "வேத₃ார்த்த₂ மறுதியிடுவது" (*வா. 1*) *என்கிற வாக்யத்திலே* "**इतिहास-पुराणाभ्याम्**" *என்கிறவிதுவே* **झटिति बुद्धिस्थ***மாகையாலும், த்₃வந்த்₃வஸமாஸத்தில் அப்₄யர்ஹிதத்துக்குப் பூர்வ ப்ரயோக₃ம் ஶாஸ்த்ரீயமாகையாலும், வ்யாஸ ஸ்த₂லங்களில் அதுக்குப் பூர்வப்ரயோக₃ம்* **पुरुषेच्छाधीन***மாய் அநியதமாகை யாலும், த்₃வந்த்₃வஸமாஸோதா₃ஹரணமே உசிதமென்னு மபி₄ப்ராயத்தாலேயென்று கண்டுகொள்வது.*

(அத₂வேதி)–"அத்தாலே அது முற்பட்டது" (*வா 4*) *என்றால் அது எவ்விடத்திலே முற்பட்டது என்னும் அதி₄கரணா காங்க்ஷையிலே,* **ग्रन्थान्तरस्थप्रयोग***ம்* **अधिकरणत्वेन** *ஸம்ப₃ந்தி₄க்கு மதிலுங்காட்டில்* **प्रकृतग्रन्थ***த்திலே* **पूर्वप्रस्तुत***மான ப்ரயோக₃மே* **अधिकरणत्वेन** *ஸம்ப₃ந்தி₄க்கை* **शीघ्रभावि** *என்று கருத்து.* (**इतिहासाश्च पुराणानि च इतिहासपुराणानि**) **इति प्रथमं द्वन्द्वसमासः**; **अभ्यर्हितत्वात् इतिहासस्य पूर्वनिपातः.** **अनन्तरं** (**स्मृतयश्च इतिहास-पुराणानि च स्मृतीतिहासपुराणानि**) **इति द्वन्द्वगर्भो द्वन्द्वः.** "**स्मृतयश्च इतिहासाश्च पुराणानि च स्मृतीतिहासपुराणानि**" *என்று* **त्रिपदद्वन्द्व***மும்*

---

*உபபாதி₃க்கையே ஆப்₃தயிஶயத்துக்கும் உபஸ்தி₂திலாக₄வத் துக்கும் சேர்ந்திருக்கையாலே அருளிச்செய்கிறார்* (அத₂வா) *என்று தொடங்கி.* ( சொல்லுகிறவிடத்தில் ) *என்றது—சொல்லுகிற இப்ரப₃ந்த₄க₄டிதமான பூர்வாசார்ய வாக்யத்தில் என்றபடி. ஆனால்* "ஸ்ம்ருதீதிஹாஸ" (*வா 1*)

புராணுநி) என்றிப்படி இவர்க்கு ஸமாஸவிவக்ஷை யாகையாலே, அல்பாச்தரமான புராணத்துக்கு முன்னே இதிஹாஸத்தையருளிச்செய்ததின் கருத்தை ( இவையிரண்டிலும் ) (வா. 3) இத்யாதி₃யாலே அருளிச்செய்கிறராகவுமாம். இந்த யோஜனையில் (அத்தாலே அதுமுற்பட்டது)(வா.4) என்கிறவிதுக்கு, அத்தப்ராப₃ல்யத்தாலே(இதிஹாஸ புராணங்களாலே) (வா. 1) என்கிறவிடத்தில் புராணத்துக்கு முன்னே இதிஹாஸம் சொல்லப்பட்டது என்று பொருளாகக் கடவது.

---

ஸாது₄வேயாகிலும். இதிஹாஸபுராணங்களுக்கு உத்தர ப₄ாகே₃ாபப்₃ரும்ஹணத்திலே तुल्यवदेकक्रियान्वयित्वமிருக்கை யாலும், "இதிஹாஸ புராணம்" இத்யாதி₃ த்₃வந்த்₃வ ப்ரயோக₃ம் பலவிடங்களிலேயிருக்கையாலே * "अवयवप्रसिद्धेः समुदायप्रसिद्धिर्बलीयसी" என்கிற ந்யாயம் * இங்கு ப்ர வர்த்திக்கையாலும், த்₃வந்த்₃வக₃ர்ப₄த்₃வந்த்₃வமே யுக்தம். இங்கே. "अभ्यर्हितं पूर्वम्" என்கிற ஶாஸ்த்ரத்தாலே "इतिहास पुराणस्मृतयः" என்று. அப்₄யர்ஹிதமான इतिहासपुराणद्वन्द्वம் முற்படக்கடவதீயென்னில். "अभ्यर्हितं पूर्वम्" என்கிறவிது அநித்யமாகையாலே இது முற்படக்கடவதல்ல. அல்பாச்தர மான ஸ்ம்ருதிஶப்₃த₃ம் முற்படக்கடவது. ஆனால். 'ப்ரத₂ம த்₃வந்த்₃வத்திலே अभ्यर्हितत्वात् इतिहासशब्दம் முற்படும். द्वन्द्वगर्भद्वन्द्वத்திலே "अभ्यर्हितं पूर्वम्" என்று அநித்யம் என்னு மத்தாலே अल्पाच्तरं पूर्वम् என்னுமதுவே ப்ரவர்த்திக்கிறது' என்கிற விவக்ஷையில் நிதா₃நமென்னென்னில்; (1) "अभ्यर्हितं

---

இத்யாதி₃ வாக்யத்தில். ஸ்ம்ருதியிலுங்காட்டில் उत्तरभागोप- बृंहणतया ஶ்ரேஷ்ட₂ங்களான இதிஹாஸபுராணங்கள் முற் பட்டு "இதிஹாஸ புராணஸ்ம்ருதிகளாலே" என்று வாக்ய ஶைலியாக வேண்டாவோ? என்னில்; இவ்விடத்தில் ப்ரா

எடுக்கப்பட்டது என்று. இதின் ப்ராப3ல்யம் ஸ்தி2ரீகரிக்கப்படுகிறது. ஆக. வேத3த்தின் உப4யபா4க3ார்த்தே2ாபப்3ரும்ஹண

---

पूर्वं अनित्यम्" என்கிறவிது ज्ञापकसिद्धமாகையாலே असार्वत्रिकம். அப்படி க்வாசித்கமான அநித்யத்வத்தை प्रथमद्वन्द्वத்திலே கொள்ளுமதிற்காட்டில் जघन्यமான द्वन्द्वगर्भद्वन्द्वத்தில் கொள்ளுகை न्याय्यम्. (2) किञ्च, पूर्वोत्तरभागात्मकமான வேத3த்தில் பூர்வபா4க3த்துக்கு उपबृंहणம் पूर्वनिर्दिष्टங்களான ஸ்ம்ருதிகளென்றும். उत्तरभागोपबृंहणம் उत्तरनिर्दिष्टங்களான இதிஹாஸபுராணங்களென்றும் विभागज्ञापनம் ஆவஶ்யகமாகையாலே. द्वन्द्वगर्भद्वन्द्वத்திலே "अभ्यर्हितं पूर्वम्" என்கிறவிதியுடைய अनित्यत्वமும். "अल्पाच्तरम्" என்கிற ஶாஸ்த்ர ப்ரவ்ருத்தியும் கொள்ளுகை யுக்தம்; अपेक्षितक्रमानुगुणமாக अनुशासनप्रवृत्तियும் ஸித்3தி4க்தால் அநுகூலமிறே. "இதிஹாஸ புராணம்" इत्यादिप्रथमद्वन्द्वக்திலே இங்ஙனொரு ப்ரயோஜநமில்லாமையாலே औत्सर्गिकமான अभ्यर्हितपूर्व-निपातशास्त्रप्राबल्यம் கொள்ளுகையே யுக்தம். இத்தையெல்லாம் திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் (இப்படி இவர்க்கு ஸமாஸ விவக்ஷையாகையாலே) இத்யாதி3. (ஒருங்கவிடுகை)–

---

ப3ல்ய தெ2ௌர்ப3ல்யங்கள் अभ्यर्हितत्वानभ्यर्हितत्वहेतुக்களாக விவக்ஷிதங்களாகையாலே. उत्तरभागविवरणத்தில் இதிஹாஸத்துக்கு ப்ராப3ல்யம்போலே पूर्वभागविवरणांशத்தில் ஸ்ம்ருதிகளுக்கு ப்ராப3ல்யம் துல்யமாகவுண்டாகையாலே. அல்பாச்தரமான ஸ்ம்ருதி ஶப்3த3மே முற்படவேண்டுகையாலே விரோத4மில்லையென்று கண்டுகொள்வது. ஆராத4நம் ப்3ரஹ்மத்துக்கு ஶேஷமானாப்போலே. ப்3ரஹ்மமும் கர்மதயா ஆராத4நத்துக்கு ஶேஷமாயிருக்கையாலும். ஸாத4க ஸாத4ாரண ப்ராப்யபூ4தமான ப்3ரஹ்மத்தையபேக்ஷித்து. ப்ரபந்நாஸாத4ாரண ப்ராப்யமாய். व्यक्तचतुर्थीप्रार्थनीयமாயிருந்துள்ள ஆராத4நத்துக்கு प्राप्यत्वाकारத்தாலே உத்கர்ஷமுண்டாகையாலும் अर्थोत्कर्षमूलकமான स्मृतीतिहासादिप्राबल्यदौर्बल्यங்கள் विवक्षानुगुणமாக அவ்யவஸ்தி2தங்களாகக் கடவதிறே.

ஆக, வேத₃ார்த்த₂ நிர்ணயம் பண்ணுமளவில், தது₃பப்₃ரும்ஹணங்களாலே பண்ணவேணுமென்றும், அதில் பூர்வோத்தர ப₄ாகோ₃பப்₃ரும்ஹணங்கள் இன்னதென்றும், உத்தரப₄ாகோ₃பப்₃ரும்ஹணங்களான இதிஹாஸபுராணங்களில் இதிஹாஸம் ப்ரப₃லம் என்றும் அருளிச்செய்கையாலே, மேல் தாம் அருளிச்செய்யப்புகுகிற அர்த்த₂ங்களுக்கு ப்ரமாணம் ஒருங்கவிட்டருளினாராய்த்து. **4.**

---

வ்யவஸ்தை₂ பண்ணுகை. "ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களாலே" (வா. 1) என்கிறவிடத்திலே, "ப₄க₃வச் ச₂ாஸ்த்ரத்திலே" (வா. 392) என்று தாம் மேலே प्रमाणत्वेन உத₃ாஹரிக்கிற ஸ்ரீபாஞ்சராத்ரத்தையும் ஒக்க உபாதா₃னம் பண்ணாமையென்னென்னில்; ஸ்ம்ருதியையெடுத்தவித்தால், அந்த ஸ்ம்ருதிக்கு மூலபூ₄தமான ப₄க₃வச்ச₂ாஸ்த்ரமும் அர்த்த₂ாத் உபாத்தம் என்றும். இதிஹாஸபுராணங்களை யெடுத்தவித்தால், அவற்றில் ப்ரமாணதமத்வேந ப்ரதிபாதி₃க்கப்பட்ட ப₄க₃வச்ச₂ாஸ்த்ரமும் அர்த்த₂ாத் உபாத்தமாம் என்றுமபி₄ப்ராயத்தாலே ப₄க₃வச்ச₂ாஸ்த்ரத்தையெடுத்

---

"प्राबल्यात् स्मृतितः पुराणवचसाम्" என்று ஸ்ம்ருதியிலுங்காட்டில் புராணம் ப்ரப₃லமென்று அண்ணனய்யன் அருளிச்செய்தது.—भगवदाराधनरूपकर्मத்தை फलान्तरार्थமாகவும், देवतान्तराराधनरूपமாகவும் शास्त्रास्तिक्यादिजननार्थं चेतनगुणानुगुणமாக ப்ரதிபாதி₃த்து ப₄க₃வத்₃வைப₄வம் குன்றும்படி பண்ணுகிற அஸாத்விக ஸ்ம்ருதிகளையபேக்ஷித்து, ஸாத்விகாசாரவிஷயத்தில் தத்வநிர்ணயைகபரங்களாய், ப₄க₃வத்₃ வைப₄வத்தை நன்றாகச் சொல்லுகிற புராணங்கள் ப்₃ரப₃லமென்னும் கருத்தாலே. ஆகில், புராணங்கள்போலே பக்ஷபாதமுடையதுகளான ஸ்ம்ருதிகள் வேத₃ார்த்த₂விவரண ப்ராமாண்யத்தில் து₃ர்ப₃லமென்னக்குறையென்? என்னில்,

பே₄த₃மும், பூர்வோபப்₃ரும்ஹணத்தில் ப்ரப₃லமான உத்தரோப ப்₃ரும்ஹணத்₃வயத்தில் ப்ரத₂மோபப்₃ரும்ஹணத்தின்ப்ராத₄ாந்யமும் சொல்லிற்றுய்த்து. இவ்வளவும் இப்ரப₃ந்த₄ாரம்ப₄ம். 4.

---

தருளிற்றிலர். भगवच्छास्त्रம் मन्वादिस्मृतिகளுக்கு मूलभूतமென்னு மிடமும். इतिहासादौ प्रमाणतमत्वेन प्रतिपादितமென்னுமிடமும். "अत्र सूत्रकाराभिप्रायो मोक्षधर्मवचनैः अवगम्यते। तथाहि तत्र श्रीपाञ्चरात्रस्य बहुमुखं प्रामाण्यं प्रपञ्चितम्" என்றும். "अस्मात् प्रवक्ष्यते धर्मान् मनुस्स्वायंभुवस्स्वयम्—इति मन्वादिभिरुपजीव्यत्वम्" என்றும் ஶ்ருதப்ரகாஶிகையிலே வ்யக்தம். ஆனாலும், ப்ரத₄ாந ப்ரமாணத்துக்கு अर्थात् उपादानமும், अप्रधानத்துக்கு आभिधानिकोपादानமும் ஆகிற இதுக்கு மூலமென்னென்னில். शारीरकसूत्र ப்ரக்ரியையாயிருக்கும். எங்ஙனேயென்னில், शारीरक ஸூத்ரத்திலே "स्मृत्यनवकाशदोषप्रसङ्ग इति चेन्न अन्यस्मृत्यनवकाशदोषप्रसङ्गात्" என்று. मन्वादिस्मृतिகளுக்கு प्रामाण्यसिद्धवत्कारेण कपिलस्मृति बाधकत्वத்தைச்சொல்லி, அந்த மந்வாதி₃ஸ்ம்ருதிகளுக்கும் மூலபூ₄தமான ஸ்ரீபாஞ்சராத்ரத்தினுடைய ப்ராமாண்யத்தை "उत्पत्त्यसम्भवात्" இத்யாதி₃ ஸூத்ரங்களாலே

---

இங்கு, वक्तृदोषप्रयुक्तமான பக்ஷபாதமே पुराणदौर्बल्यहेतुவாக விவக்ஷிதமாகையாலே. "त्रैगुण्यविषया वेदाः" என்கிறபடியே आस्तिक्यादिजननार्थமாக गुणानुगुणसाध्यसाधनங்களை விதி₄க்கிற வேத₃வாக்யங்களினுடைய பக்ஷபாதமடியாக அதுகளினுடைய உபப்₃ரும்ஹணங்களான ஸ்ம்ருதிகளுக்கும் பக்ஷபாதம் வருகையாலேயும். அந்தப் பக்ஷபாதந்தான் மூலாநுகு₃ணமாகவிருக்கையாலே प्रामाण्यातिशयहेतुவாகையாலேயும். प्रयोजनान्तरतात्पर्यமின்றிக்கே सत्त्वोत्तमाधिकारिபரான சேதநர்க்குத் தத்வஹித புருஷார்த்த₂ங்களை உள்ளபடியறிவிக்கையிலே ऐदम्पर्येण ப்ரவ்ருத்தமான உத்தரபா₄க₃த்துக்கு உபப்₃ரும்ஹணங்களாயிருந்துவைத்தும் புராணங்கள் साध्यान्तरसाधनान्तरपरங்களாகைக்கடியான केवलवक्तृदोषप्रयुक्तपक्षपातம் ஸ்ம்ருதிகளுககில்லாமையாலே அதுகளுக்கு स्वार्थप्रामाण्यத்தில் इतिहासापेक्षया दौर्बल्यமில்லையென்று கண்டுகொள்வது. அன்றிக்கே,

## புருஷகார வைப,வம்

**5. அவ:-முதலிலே (வேத₃ார்த்த₂ம்) (வா.1) இத்யாதி₃யாலே வேத₃தத₃ர்த்த₂ ததுபப்₃ரும்ஹணங்களை ஸாகல்யேந உபாத₃ாநம் பண்ணி, அந்த வேத₃த்தினுடைய பூ₄ர்வபா₄க₃ உத்தரபா₄க₃ ததுபப்₃ரும்ஹணவிபா₄க₃ங்களையும் பண்ணிஞரேயாகிலும், சேதநருடைய உஜ்ஜீவநத்துக்கு அபேக்ஷிதார்த்த₂ங்களை அருளிச்செய்ய**

---

*ஆக்ஷேபித்து, ஸமாதா₄நம் பண்ணிற்றிறே; அத்தையநுரோதி₄க்தாய்த்து இவர் இப்படிச்செய்தருளிற்றென்று கண்டுகொள்வது.* 4.

5. (வேத₃ார்த்த₂மறுதியிடுவது) (வா 1)என்று தொடங்கி, **साकल्येन वेदार्थनिरूपणप्रतिज्ञाप्रत्यभिज्ञापक**மான உபோத்₃கா₄தத்தைப்பண்ணி. **प्रतिज्ञानुगुण**மாக **साकल्येन वेदार्थनिरूपण**ம் பண்ணுமல் **तदेकदेशोत्तरभाग**த்தில் ஏகதே₃ஶமான **पुरुषकारवैभवादि-मात्र**த்தை நிரூபிக்கபடியென்? என்கிற ஶங்கையைப் பரிஹரித்துக்கொண்டு உபோத்₃கா₄தத்தோடே ப்ரப₃ந்த₄த்துக்கு ஸங்க₃தியை அருளிச்செய்கிருர் (முதலிலே) இத்யாதி₃நா. இங்கே, (பண்ணிஞரேயாகிலும்) **इत्यन्तं शङ्कानुवाद**ம், (சேதநருடைய) **इत्यादिकं परिहार**மென்று கண்டுகொள்வது. (**उज्जीवनं**)-**मोक्षः**. இங்கே. "**सामान्येन विशेषसमर्थनं अर्थान्तरन्यासः**" என்கிறபடியே விவக்ஷித விஶேஷத்தில் தாத்பர்யாதிஶயத்தாலே **सामान्यकीर्तन**ம் **श्रोतृबुद्ध्यतिशयकर**மாகையாலே ஸாமாந்ய ப்ரதிஜ்ஞையும் ஏகதே₃ஶமாத்ரநிரூபணமும் கூடும் என்று

---

**पूर्वभागोपबृंहण**த்தைப் பூர்வமும்,**उत्तरभागोपबृंहण**ங்களைப் பிற்பாடும் சொல்லுகையே க்ரமத்துக்கு உசிதமாகையாலே ஸ்ம்ருதி முற்பட்டது என்றுமாம். 4.

5. அடியிலே (வேத₃ார்த்த₂மறுதியிடுவது) (வா.1) என்று ஸாமாந்யமாகச்சொல்லி, "இதிஹாஸஶ்ரேஷ்ட₂மான"(வா.5)

**இழிந்தவராகையாலும், அதுதான் பூர்வப₄ாக₃வேத்₃ய மன்றிக்கே உத்தர ப₄ாக₃வேத்₃யமாகையாலும், பூர்வ**

---

*பரிஹாராபி₄ப்ராயம் கண்டுகொள்வது. இவ்விடத்திலே. "***अथातो ब्रह्मजिज्ञासा***" என்கிறது. வேத₃த்திலுடைய ப₄ாக₃த்₃வயார்த்த₂ நிரூபணத்துக்கும் ஸாமாந்ய ப்ரதிஜ்ஞை என்கிற யோஜனையிலே* **प्रतिज्ञातवेदार्थसामान्यैकदेश***மான பூர்வப₄ாக₃ார்த்த₂த்தை நிரூபியாமல் தஶே₃கதே₃ஶமான உத்தரப₄ாக₃ார்த்த₂ மாத்ரத்தை நிரூபித்த ஸூத்ரகார ஶைலியையும். "***अथातो धर्मजिज्ञासा***" என்றே* **भागद्वयविचार***த்துக்கும் ஸாமாந்ய ப்ரதிஜ்ஞை யென்கிற யோஜனையிலே.* **प्रतिज्ञातार्थैकदेश***மான உத்தர ப₄ாக₃ார்த்த₂த்தை நிரூபியாமல் தஶே₃கதே₃ஶமான பூர்வ ப₄ாக₃ார்த்த₂மாத்ரத்தை நிரூபித்த பூர்வமீமாம்ஸா ஸூத்ரகாரருடைய ஶைலியையும்* **दृष्टान्ततया** *கண்டுகொள்வது. அங்கே,* **क्रमेण** *கு₃ருஶிஷ்யர்களாலே* **भागान्तरार्थनिरूपणं** *பண்ணப்பட்டதே யென்ன அருளிச்செய்கிறார்.— (* **பூர்வப₄ாக₃த்தில்**

---

*என்று தொடங்கி* **उत्तरभागार्थनिर्णय***த்தில் முதலிலே இழியவாமோ? என்கிற ஶங்கையிலே; " முமுக்ஷுக்களுக்கு முந்துற முன்னம் அறியவேண்டும் ஸித்₃தோ₄பாயமானது உத்தர ப₄ாக₃வேத்₃யமாயிருக்கையாலேயும். பூர்வப₄ாக₃ப்ரதிபாத்₃யமான கைங்கர்யம்* **सिद्धोपायाधिकारिकृत्यान्तर्भूत***மாயிருக்கையாலேயும். த்₃வயவிவரணரூபமான இப்ரப₃ந்த₄த்தில்—முதலிலே* **पुरुषकारोपायवैभवात्मक-उत्तरभागार्थनिर्णय***மும்— உத்தரப₄ாக₃ார்த்த₂மான புருஷார்த்த₂ாதி₃களை நிர்ணயிக்கிற த்₃வயோத்தர க₂ண்ட₃ார்த்த₂ விவரணரூப ப்ரகரணங்களிலே கைங்கர்ய ரூப கர்மங்களும். "***प्रपद्ये***" என்கிற* **उत्तमाश्रिताधिकारिस्वरूप विवरणस्थल***ங்களிலே நிஷித்₃த₄பரிஹாராதி₃களும் நிர்ணயிக்க வேண்டுகையாலே,* **अधिकारिकृत्यप्रकरण***த்தில் பூர்வப₄ாக₃த்தில்* **उपादेयार्थविशेषनिर्णय***மும்-ஸங்க₃தம்" என்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார்* **( முதலிலே )** *இத்யாதி₃நா.* **( ப்ரதி**

ப4ாக3த்தில் முமுக்ஷுவுக்கு ஜ்ஞாதவ்யாம்ஸமுள்ளதும், உத்தர ப4ாக3ார்த்த2ங்களான ஸ்வரூபோபாய புருஷார்த்த2 ப்ரதிபாத3ந ஸ்த2லங்களிலே தத்தத3நு கு3ண(மாக) த்யாஜ்யோபாதே3ய கத2நமுகே2ந ஜ்ஞாபிக்கலாயிருக்கையாலும், உத்தர ப4ாக3ார்த்த2 நிர்ணயத்திலே ப்ரவ்ருத்தராய், அதுதன்னிலும் ப4க3வத் ஸ்வரூபரூபகு3ணவிபூ4திகளையும் ப4க3வது3பாஸநாதி3

---

முமுக்ஷுவுக்கு ஜ்ஞாதவ்யாம்ஸமுள்ளதும்) இத்யாதி3. अत्रापि பூர்வப4ாக3ார்த்த2த்தையும் स्वयमेव विवक्षानुगुणமாக ஸங்க்3ரஹமாக நிரூபித்தாரென்று கருத்து. (தத்தத3நு கு3ணத்யாஜ்யோபாதே3ய கத2நமுகே2ந) என்றது—स्वरूपाद्यननुगुणनिषिद्धकाम्याङ्गत्वादिகளாலே த்யாக3ார்ஹதையென்ன. लोकसङ्ग्रहतया कैङ्कर्यत्वादिना ஸ்வீகாரார்ஹதையென்ன. एतत्कथनद्वारेण என்றபடி. இங்கே, "उत्तरभागे च तत्तदर्थोपयिकतया प्रसक्तानां पूर्वभागार्थानां शिक्षणीयत्वं, प्रदर्शितयैव दिशाऽनुक्तानामपि शिक्षणीयार्थान्तराणां सुकरनिर्वाहत्वञ्चाभिप्रेत्य ब्रह्मसूत्राण्येव भगवान् भाष्यकारः प्रारभते विवरीतुम्" என்கிற श्रुतप्रकाशिकाச்ச2ாயை ஸ்பு2ரிதையென்று கண்டுகொள்வது. (ப4க3வது3பாஸநாதி3களையும்) என்கிற "ஆதி3" ஸப்3த3த்தாலே. நாமகீர்தநாத்3யுபாயாந்தரங்களும், ஸித்3தோ4பாய வரணாதி3களும், அநுப4வ கைங்கர்யாதி3களும் ஸங்க்3ருஹீதங்கள். ஸாரம்—ஸித்3தோ4பாய

---

பாத3ந ஸ்த2லங்களிலே) என்றது — இப்ரப3ந்த4த்தில் ப்ரதிபாத3ந ஸ்த2லங்களிலே என்றபடி. (தத்தத3நுகு3ணமாக)—ஸ்வரூபோபாய புருஷார்த்த2ாநுகு3ணமாக. (த்யாஜ்யோபாதே3ய கத2நமுகே2ந) என்றது—அதி4காரி ஸ்வரூபமான நிஷித்3த4பரிஹாரமும், கைங்கர்யரூபமான விஹிதாநுஷ்ட2ாநமுமே பூர்வப4ாக3 ப்ரதிபாத்3யமென்னும் கருத்தாலே. உபப்3ரும்ஹணங்களைக்கொண்டு வேதா3ர்த்த2ம் நிர்ணயிக்கிறாராகில், விஷயவிஸய பூர்வபக்ஷாதி3களின்றிக்கே லௌகிகோக்தியாலே அருளிச்செய்கிறதென்? என்ன.

**களையும் பரக்கநின்று ப்ரதிபாதி₃க்கிறவிடங்களில், ஸாராஸார விவேகபூர்வகமாக தாத்பர்யார்த்த₂ங்களை ஸங்க்₃ரஹித்து, ஸம்ஶய விபர்யயமறச் சேதநர்க்கு ப்ரதிபத்தி விஷயமாம்படி அருளிச்செய்து செல்லுகிறார் மேல். அதில், ப்ரத₂மத்திலே, உத்தரபா₄கோ₃ப**

---

*வரணாதி₃கள். அஸாரம்—உபாஸநாதி₃கள். அஸாரம்—ஸ்வார்த்த₂ாநுப₄வாதி₃கள்.* **ஸாரம்**–*பரார்த்த₂கைங்கர்யாதி₃கள்.* **(அருளிச் செய்து செல்லுகிறார் மேல்)** "**இதிஹாஸ ஶ்ரேஷ்ட₂மான**" *(வா. 5) என்று தொடங்கி,* "**ப₂லபர்யந்தமாக்கும்**" *(வா 463) என்னுமதளவான* **उपरितनसन्दर्भ***த்தாலே ப்ரதிபாதி₃த்துக்கொண்டு போருகிறார் என்றபடி. கீழ் ப்ரமாணநிர்தே₃ஶம் பண்ணியருளினார்; இனி தத₃நுகு₃ணமாக ப்ரமேய நிர்தே₃ஶம் பண்ணியருளுகிறார் என்று ஸங்க₃தியென்று கருத்து. அநந்தரம்.* "**இவையிரண்டிலும்**" *(வா 3)***इत्याद्यनन्तरपूर्ववाक्य***த்தோடே* "**இதிஹாஸஶ்ரேஷ்ட₂மான**" *(வா 5)***इत्यादिप्रबन्धादिमवाक्य***த்துக்கு* **सङ्गतिकथनपूर्वकं** *வாக்யார்த்த₂மருளிச்செய்கிறார்.—* **(அதில் ப்ரத₂மத்திலே)** *இத்யாதி₃நா.* "**அத்தாலே அதுமுற்பட்டது**" *(வா. 4) என்று,* **द्वन्द्वसमास***த்தில்* **पूर्वप्रयोग***மாகிற* **अभ्यर्हितत्वलिङ्गम् पुराणापेक्षया** *இதிஹாஸத்துக்கிருக்கிறாப்போலே, இதிஹாஸங்களிலே தாரதம்யம் இருக்கிறமைக்கு ஸூசகமான* **तादृशपूर्वनिपात***ம் காணாமையாலே அவற்றில் தாரதம்யமில்லையென்று ப்ரதிபத்தி பண்ணி*

---

*அருளிச்செய்கிறார்* **(அது தன்னிலும்)** *என்று தொடங்கி.* **(பரக்கநின்று ப்ரதிபாதி₃க்கிறவிடங்களில்)**–*இதிஹாஸபுராண பாஞ்சராத்ர ப்₃ரஹ்மமீமாம்ஸைகளில்.* **(ஸாராஸார விவேக:)**–*ஸாராஸாரவிபா₄க₃:.* **(ஸங்க்₃ரஹித்து)**–*ஆசார்ய முக₂த்தாலே தாம் கேட்டு நிஶ்சயித்தபடியே.* "**गुरुभ्योऽर्थश्रुतश्शब्दैः तत्प्रयुक्तैश्च योजितः**" *என்கிறபடியே பூர்வாசார்யஸ்ரீஸூக்திகளாலே ஸங்க்₃ரஹித்து.* **(சேதநர்க்கு)**—*ஸ்த்ரீபா₃லாதி₃ சேதநர்க்கு.* **( ப்ரதிபத்தி )**—*அவிசால்யமான நிஶ்சயம்.*

ப்₃ரும்ஹணத்₃வயத்தில் ப்ரப₃லமாகச் சொன்ன இதி ஹாஸங்களில் வைத்துக்கொண்டு ஸ்ரீராமாயணத்தி னுடைய ப்ராப₃ல்யத்தை ப்ரகாஶிப்பியாநின்று கொண்டு தத்ப்ரதிபாத்₃ய விஶேஷத்தை அருளிச்செய் கிறார் (இதிஹாஸ ஶ்ரேஷ்ட₂ம்) என்று தொடங்கி.

வ்யா:-ஸ்ரீராமாயணத்துக்கு இதிஹாஸஶ்ரேஷ்ட₂ தையா(த்வமா)வது, "वाल्मीकये महर्षये सन्दिदेशासनं ततः। ब्रह्मणा समनुज्ञातः सोऽप्युपाविशदासने ॥" (வால்மீகயே மஹர்ஷயே ஸந்தி₃தே₃ஶாஸநம் தத:। ப்₃ரஹ்மணா ஸமநுஜ்ஞாத: ஸோऽப்யுபாவிஶத₃ாஸநே॥) என்று ஸகல(ஸர்வ)லோக பிதாமஹனான ப்₃ரஹ்மாவா(வி)லே ஸம்ப₄ாவிதனான ஸ்ரீவால்மீகி ப₄க₃வானாலே ப்ரணீதமாகையாலும்,

---

ப்ரஶ்நம் பண்ணுமவிருக்கிற ஶ்ரோதாக்களைக் குறித்து—भूमविद्याचार्यன். "एष तु वा अतिवदति, यस्सत्येनातिवदति" என்று स्वयमेव भूमोपदेशपर्यवसानभूमिभूतனான புருஷோத்தமனை உப பாதி₃த்தாப்போலே—இவரும் स्वयमेव ஸ்ரீராமாயணத்தி னுடைய இதிஹாஸோத்தமத்வத்தை அருளிச்செய்கிறா ரென்று கருத்து. இதுதான் "இதிஹாஸஶ்ரேஷ்ட₂மான" (வா. 5) என்று सिद्धवन्निर्देशத்தாலே व्यञ्जितம். இத்தால்—इतिहासेषु श्रीरामायणप्राबल्यं, पुराणापेक्षया इतिहाससामान्यத்தைப்பற்ற प्रसिद्धமென்று सूचितम्. இஸ்ஸித்₃த₄வந்நிர்தே₃ஶமும். "श्रीरामायणवन्महाभारतं शरणम्"என்கிற श्रीसहस्रनामभाष्यस्थनिर्देशानुसारेण என்று தாத்பர்யம்.

---

இத்தால், விஷய விஶயாதி₃ ப்ரத₃ர்ஶந பூர்வகமாக விசாரித்து நிர்ணயிக்குமளவில். பெண்ணுக்கும் பேதைக்கும் அவகா₃ஹிக்கவொண்ணாதாகையாலே இப்ரப₃ந்த₄ாரம்ப₄ம் நிஷ்ப₂லமாம் என்று ஸூசிதம்.

## 5. இதிஹாஸ ஶ்ரேஷ்ட₂மான ஸ்ரீராமாயணத்தால் சிறையிருந்தவளேற்றஞ் சொல்லுகிறது ; மஹாப₄ாரதத்தால் தூதுபோனவனேற்றஞ்சொல்லுகிறது.

---

5. அவ:—இப்படி ப்ரத₄ாநமான இதிஹாஸத்₃வயந்தான், அர்த்த₂விஶேஷ தாரதம்யமுடைத்தென்கிறார் மேல் (இதிஹாஸாதி₃ வாக்யத்₃வயத்தால்).

வ்யா:—மஹாப₄ாரத ராமாயணமாகிற இதிஹாஸத்₃வயத்தில், ப்ரதிபாத்₃யார்த்த₂விஶேஷத்தைப்பற்ற ஶ்ரேஷ்ட₂மான ஸ்ரீராமா

---

प्रमाणग्रन्थத்துக்கு तथाविधग्रन्थान्तरापेक्षया श्रैष्ठ्यं प्रामाण्यप्रकर्षहेतुக்களான कर्त्रादिप्रकर्षத்தாலென்றே கொள்ளவேணும்; प्रतिपाद्यार्थविशेषத்தைப்பற்ற ஶ்ரேஷ்ட₂மென்கை உசிதமன்று; प्रामाण्यसन्देहம் கிடக்கில் प्रतिपाद्यार्थத்துக்கு आत्मलाभமே து₃ர்லப₄மாகையாலே स्वप्रतिपादकग्रन्थத்துக்குத் தான் श्रेष्ठताहेतुவாகமாட்டாதென்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார்,— (ஸ்ரீராமாயணத்துக்கித்யாதி₃). (ஸம்ப₄ாவிதனை)—கௌ₃ரவிதனை. இது भगवदवतारभूतव्यासप्रणीतभारतापेक्षया श्रेष्ठताहेतुவானபடியென்னென்னில்; ப₄ாரதம் பண்ணின பின்பும்

---

(ஸகலலோக பிதாமஹனான ப்₃ரஹ்மாவினாலே ஸம்ப₄ாவிதனை) என்றது—"ब्रह्मणा समनुज्ञातः" என்றதினர்த்த₂ம். (ஸம்ப₄ாவிதனை)—பூஜிதனை. ப்₃ரஹ்மபூஜிதனைல் இவன் ப்ரப₃ந்த₄ம் ஶ்ரேஷ்ட₂மானபடியென்னென்னில்; "विप्राणां ज्ञानतः श्रैष्ठ्यं" என்றும், "योऽनूचानः स नो महान्" என்றும் சொல்லுகிறபடியே. ஸர்வலோக பிதாமஹனை ப்₃ரஹ்மா இவனை ஸம்மாநிக்கும்போது தன்னில் இவனுக்குண்டான ஜ்ஞாநாதி₄க்யத்தைக் கொண்டே ஸம்மாநிக்கவேண்டுகையாலே. அவ்வளவு ஜ்ஞாநமுடையவனுடைய ப்ரப₃ந்த₄ம் ஶ்ரேஷ்ட₂மாகக்

"न ते वागनृता काव्ये काचिदत्र भविष्यति" (ந தே வாக3 ந்ருதா காவ்யே காசித3த்ர ப4விஷ்யதி) என்று ப்3ரஹ்மா அநுக்3ரஹிக்கையாலே இதிற்சொன்ன அர்த்த2ங்களெல்லாம் மெய்யாகக் கடவதாகை யாலும், "यावद्रामायणकथा लोकेषु प्रचरिष्यति" (யா(தா?)வத்3 ராமாயணகதா2 லோகேஷு ப்ரசரிஷ்யதி) என்று ஸகலலோக பரிக்3ரஹமுண்டாகையாலும், இதிஹாஸாந்தரங்களைப்பற்ற ப்ரப3ல ப்ரமாணமா யிருக்கை. இது தன்னை நடுவிற்றிருவீதிப்பிள்ளை ப4ட்டர் தத்வத்ரய ப்ரப3ந்த4த்தில் ப்ரமாணாதி4காரத் திலே அருளிச்செய்தாரிறே. இன்னமும், "वेदवेद्ये परे पुंसि"

*அபரிதுஷ்டனான வ்யாஸப4க3வானுக்கு ஸ்ரீநாரத3ப4க3வான் வந்துதோற்றி. சில அர்த்த2விஶேஷங்களை உபதே3ஶித்து, ஸ்ரீப4ாக3வதத்தைப்பண்ணச்சொல்ல, வ்யாஸ ப4க3வானும் அப்படிச்செய்ய. அந்த அபரிதோஷம் தீர்ந்ததென்கையாலே, ப்3ரஹ்மபுத்ரனான நாரத3ப4க3வானடியாக ப்ரவ்ருத்தமான ப4ாக3வதநிர்மாணத்தாலே தீரக்கடவ அபரிதோஷஸஹமான ப4ாரதத்தைப்பற்ற. அந்த நாரத3ப4க3வானுக்குப் பிதாவான*

*குறையில்லையிறே. ஆசார்ய ஸந்நிதி4யில் உச்ச்2வாஸநிஶ்வா ஸங்களைக் கூச்சமறவிடுகையுங்கூட நிஷித்3த4மாகச்சொல்லா நிற்க, ஸ்வாசார்யனான நாரத3ப4க3வானுக்கும் ஆசார்யனாய். தனக்குப் பரமாசார்யனாய், அவனுக்கு "ये केचास्मच्छ्रेयांसो ब्राह्मणाः" என்று உபதே3ஶப்ரகரணத்தில் பூஜ்யதமனாகச் சொல்லப்பட்ட ப்3ரஹ்மாவின் முன்னே "सोऽप्युपाविशदासने" என்று ஆஸநத்திலிருந்தானென்று சொல்லுகிறது ஶ்ரைஷ்ட்2யத்துக்குடலாம்படியென்னென்னில்: "போ4க3 த3ஶையில் ஈஶ்வரன் அழிக்கும்போது நோக்க வேணுமென்று அழியாதொழிகை"(முமுக்ஷுப்படி 92) என்கிறபடி, नमःपदार्थ- पारतन्त्र्यज्ञाने ஆசார்யவிஷயத்தில் இவனுக்கு அநுஷ்டா2ந*

யணத்தால் *"காவ்யம் ராமாயணம் க்ருத்ஸ்நம் ஸீதாயாஶ்சரிதம் மஹத்"* என்று பிறர் சிறையை விடுவிக்க, பெருமாளைப் பிரிந்து

---

*ப்₃ரஹ்மாவாலே பூஜிதனை வால்மீகி ப₄க₃வானாலே ப்ரணீதமான ஶ்ரீராமாயணம் ஶ்ரேஷ்ட₂மாகக் கடவதிறே.* (ந தே வாகி₃த்யாதி₃) "अज्ञातं नास्ति ते किञ्चित्" *என்னுமாப் போலே வ்யதிரேகோக்தியாலே ஸத்யத்தினுடைய* प्रायिकत्व *நிவ்ருத்தி லப்₃தைகயாகையாலே,* अन्यत्र याथार्थ्यं प्रायिक*மென்று* வ்யஞ்ஜிதமாகையாலே भारतापेक्षया श्रैष्ठ्यं सिद्धम्. (யா(தா?)வதி₃த்யாதி₃) "லோகேஷு" *என்கிற ப₃ஹுவசநார்த்த₂ம்* (ஸகலலோகேதி). "ப்ரசரிஷ்யதி" *என்கிற இதினுடைய அர்த்த₂ம்* (பரிக்₃ரஹமித்யாதி₃). *இது* भारतापेक्षया अधिककालपरिग्रह*த்துக்குமுபலக்ஷணம். இப்படி* अधिककालाधिकदेशपरिग्रह*முண்டாகையாலே* भारतापेक्षया श्रेष्ठ*மென்றபடி.* (இன்ன

---

*பர்யந்தமானபடி சொல்லுகிறதாகையாலே உத்கர்ஷஹேதுவாகக் குறையில்லை.* कर्तुराप्ततमत्वे प्रमाण*ங்காட்டினார் கீழ்; மத்₄யஸ்த₂தையிலே ப்ரமாணங்காட்டுகிறார்* – (ந தே வாகி₃த்யாதி₃னா). *பரிக்₃ரஹாதிஶயத்திலே ப்ரமாணங்காட்டுகிறார்,*– (யா(தா?)வதி₃த்யாதி₃னா). या(ता?)वत्पदं साकल्यपरम्. (இதிஹாஸாந்தரங்களைப் பற்ற) *என்றது—மற்ற இதிஹாஸங்கள் இப்படி ப்₃ரஹ்மாவினுடைய அநுக்₃ரஹமூலகங்களாகக் காணுமையாலும். இது* नारदानुग्रह*மாய் வந்தாப்போலே மற்றவைகளுக்கு ஸம்ப்ரதா₃ய பரம்பரை காணுமையாலும்.* *எம்பெருமான்றானே இத்தைத் திருவோலக்கமாக எழுந்தருளியிருந்து ஸாமகா₃நத்தோபாதி திருவுள்ளமுகந்து திருச்செவி சாத்தியருளினதாகையாலும்.* *ப₄விஷ்யத₃ர்த்த₂ ப்ரதிபாத₃கமான உத்தரகாண்ட₃மெல்லாம் ஒன்று தப்பாமல் மெய்யாகக் காண்கையாலும் பா₄ரதாதி₃களைப்பற்ற இதுக்கு ஏற்றம் சொல்லக்குறையில்லை—என்னுமபி₄ப்ராயத்தாலே. இன்னமும் இதின் வைலக்ஷண்யத்தை "ஸாக்ஷாத்₃ வேத₃மே ராமாயணமாக அவதரித்தது" என்று சொல்லுகிற ப்ரமாணத்தாலே த்₃ருடீ₄கரிக்கிறார்* (இன்னமும்) *என்று தொடங்கி.*

(வேத3வேத்3யே பரே பும்ஸி) இத்யாதி3ப்படியே ஸர்வ ஸ்மாத்பரனான ஸர்வேஶ்வரன் ஸம்ஸாரி சேதந ரக்ஷணார்த்த2மாக இதர ஸஜாதீயனாய் வந்து அவ தரித்தாப்போலே, ஸர்வப்ரமாணோத்க்ருஷ்டமான வேத3மும், தத3வதார கு3ணசேஷ்டித ப்ரதிபாத3ந முகே2ந தத3ாஶ்ரயணருசியை ஸம்ஸாரிகளுக்கு உண்டாக்கி ரக்ஷிக்கைக்காக ஸ்ரீராமாயணரூபேண அவதரித்ததென்று சொல்லப்படுகையாலும். இதி னுடைய ஏற்றம் ஸம்ப்ரதிபந்நம். பிராட்டியென்னாதே (சிறையிருந்தவள்)என்றருளிச்செய்தது, அவளுடைய த3யாதிஶயத்தை ப்ரகாஶிப்பிக்கைக்காக. தே3வ தே3வதி3வ்யமஹிஷியான தன் பெருமையையும் சிறை யிருப்பின் தண்மையையும் பாராதே, தே3வஸ்த்ரீகள் சிறையை விடுவிக்கைக்காகத் தான் சிறையிருந்தது

மும்)–किञ्च इत्यर्थः। (வேதே3த்யாதி3) "பரே" என்கிறதினர்த் த2ம் (ஸர்வஸ்மாத்பரனை) இதி. புருஷஶப்3த3பர்யாயமான பும்ஶப்3தா3ர்த்த2ம் (ஸர்வேஶ்வரன்)இதி. "उत्तमः पुरुषस्त्वन्यः.... बिभर्त्यव्यय ईश्वरः" என்னக்கடவதிறே. "परित्राणाय" இத் யாதி3யையுட்கொண்டருளிச்செய்கிறார்.–(ஸம்ஸாரீத்யாதி3). "த3ஶரதா2த்மஜே—ஜாதே" என்கிறதினர்த்த2ம் (இதரேத் யாதி3). ப்ரமேயஶேஷமிறே ப்ரமாணம்; गुणानां प्रधानानु- वर्तित्वात्, गुणभूतமானவேத3ம் प्रधानभूतवेद्यानुगुणजन्मभाक् ஆய்த்து என்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் (அவதரித்தாப் போலே) என்று. வேத3ஶப்3த3த்தில் कालोपाधिनिर्देशविरहलब्ध மான நித்யத்வாதி3 ஸித்3த4மான इतरवैलक्षण्य (ஸர்வப்ரமா

ஶ்லோகார்த்த2ம் (ஸர்வஸ்மாத் பரனைவித்யாதி3). இவ்விடத் தில்,ஶப்3த3த்துக்கு ஶப்3தா3ந்தரரூபேண அவதாரம் கூடாமை யாலே வேதா3ப்4மாநிபுருஷனானவன் வேதா3ர்த்த2ப்ரதி பாத3கமான ஸ்ரீராமாயணத்தில் பண்ணுமதி4ஷ்டா2நத்தை

சிறையிருந்த பிராட்டியுடைய க்ருபாதிஶயத்தால் வந்த ஏற்றம் சொல்லுகிறது. "வேத₃ாநத்₄யாபயாமாஸ மஹாப₄ாரத பஞ்சமாந்"

---

ணேதி). ஶப்₃த₃ப்ரமாணத்தினுடைய வஸ்துஸாமர்த்₂யா நுகு₃ண ப்ரயோஜநத்தை அருளிச்செய்கிறார் (தத₃வதா ரேத்யாதி₃நா). "ஸாக்ஷாத்—ஆஸீத்" என்று ப்ரத்யக்ஷ மாய்த்தென்றாய். ப்ரத்யக்ஷப₄ாவமாவது—அவதாரம் என் றருளிச்செய்கிறார்.— (அவதரித்ததென்று சொல்லப்படுகை யாலும்) இதி. இத்தால். *வ்யாஸப₄க₃வாந் வேத₃த்தைக் காவ்யாத்மநா பண்ணின ப₄ாரதத்தைப்பற்ற. அந்த வேத₃மே வால்மீகிப₄க₃வாந் பக்கல் நின்றும் ராமாயணாத் மநா ஆவிர்பூ₄தம் என்று சொல்லப்பட்ட ஸ்ரீராமாயணம் அஜஹத் ஸ்வப₄ாவமான வேத₃ாவதார விஶேஷமாகை யாலே ஶ்ரேஷ்ட₂ம்* என்று ஸ்பு₂டம். என்று திருவுள்ளம் பற்றி அருளிச்செய்கிறார் (ஸம்ப்ரதிபந்நமிறே) என்று. (ஸம்ப்ரதிபந்நம்)—निर्विवादतया प्रसिद्धम्. "சிறையிருந்தவள்" என்கிற நிர்தே₃ஶ ப்ரயோஜநத்தை அருளிச்செய்கிறார் (பிராட்டியென்னாதே) இத்யாதி₃நா. (த₃யாதிஶயத்தை)— எம்பெருமானுடைய த₃யையிலுங்காட்டில் விஞ்சின த₃யையை. "द्रष्टुं न सहते देवी क्लिष्टान् स्वपरिचारकान्। करुणा-स्रान्वितमुखी" என்கிறவிது விவக்ஷிதம். (தண்மை)—நிகர்ஷம். (தே₃வஸ்த்ரீகளிதி) "एवमार्तासु योषित्सु कृपा कस्य न जायते"

---

வேத₃த்திலுடைய அவதாரமாகச் சொல்லுகிறதென்று கண்டுகொள்வது. சிறையிருப்பால் த₃யை ப்ரகாஶிக்குமோ வென்ன அருளிச்செய்கிறார்.— (தே₃வதே₃வேத்யாதி₃நா). स्वानर्थशतानादरेणापि परदुःखापाकरणप्रवृत्तियும் दयापारवश्यकार्यமாகை யாலே, கார்யம் காரணத்துக்கு ப்ரகாஶகமாகக் குறையில்லை யென்று கண்டுகொள்வது. "यद्भ्रूभङ्गाः प्रमाणम्" என்கிற படியே ஸர்வத்தையும் ப்₄ருப₄ங்க₃மாத்ரத்தாலே நிர்வஹிக்க வல்லளாயிருக்க, தே₃வஸ்த்ரீ சிறையை விடுவிக்கைக்காகத் தான் சிறையிருந்தாள் என்கை உபபந்நமோ? ஆனபின்பு,

த3யாபரவஶயாயிறே. ப்ரஜை கிணற்றிலே விழுந் தால் ஒக்கக் குதித்தெடுக்கும் மாதாவைப்போலே, இச்சேதநர் விழுந்த ஸம்ஸாரத்திலே தானும் ஒக்க வந்து பிறந்து, இவர்கள் பட்டதைத் தானும்பட்டு ரக்ஷிக்கையாலே, நிருபாதி4க மாத்ருத்வ ஸம்ப3ந்த4த் தால் வந்த நிரதிஶய வாத்ஸல்யத்துக்கும் ப்ர காஶகமிறேயிது இந்த கு3ணாதி4க்யத்தை வெளி யிடுகைக்காகவிறே பரமாசார்யரான நம்மாழ்வார் " தனிச்சிறையில் விளப்புற்ற கிளிமொழியாள் " [திருவாய்4-8-5]என்று அருளிச்செய்தது. அவருடைய தி3வ்யஸூக்தியிறே இவரிப்படி அருளிச்செய்கைக்கு மூலம். சிறையிருப்பு தண்மையாவது கர்ம நிப3ந்த4ந மாகிலிறே. ஆஶ்ரிதரான தே3வர்களுடைய ஸ்த்ரீகள் சிறையை விடுவிக்கைக்காக, தன்னநுக்3ரஹத்தாலே தானே வலியச் செய்ததாகையாலே, ஏற்றத்துக்கு உடலாமித்தனையிறேயிது. ஸம்ஸாரிகளோடொக்க க3ர்ப4வாஸம் பண்ணிப் பிறக்கிறவிது, " பலபிறப்பா யொளிவரும் " [ திருவாய் 1-3-2 ] என்னும்படி ஸர்வேஶ்வரனுக்குத் தேஜஸ்கரமாகிறது, கர்ம நிப3ந் த4நமன்றிக்கே அநுக்3ரஹநிப3ந்த4நமாகையிறே. ஆன பின்பு, இதுவும் அநுக்3ரஹநிப3ந்த4நமாகையாலே, இவளுக்குத் தேஜஸ்கரமாமித்தனை. இத்தை ராவண ப3லாத்காரத்தாலே வந்ததாக நினைப்பார் இவன்

---

என்கிறவிது பிராட்டி பக்கல் சொல்லவேண்டாவிறே யென்று கருத்து. (நிரதிஶயவாத்ஸல்யத்துக்கும்)—நிரதிஶய

---

ப்4ருகு3ஶாபாதீ4நமாய் வந்த அவதாரத்தில் மெய்ப்பாட்டுக் காகச் சிறையிருந்தாளாகச் சொல்லவேண்டாவோ? என்கிற

என்று பஞ்சமவேத₃மான மஹாபா₄ரதத்தால் * இன்னார் தூத னென்று கழுத்திலே மடக்கோலை கட்டி தூதுபோன க்ருஷ்ண

---

ஸ்நேஹத்துக்கும். (இந்த கு₃ணதி₃க்யத்தை)—த₃யாதி₃க்யத்தையும், நிரதிஶயவாத்ஸல்யத்தையும். (தனிச்சிறையி லித்யாதி₃) (தனிச்சிறையில்)—தனிமைக்கு அநர்ஹையா யிருக்குமவளுக்கும் தனிமையை உண்டாக்கின சிறையிலே. (விளப்புற்ற)—விளப்பு—விளம்ப₃நம். ப்ரஸித்₃தி₄யென்றபடி; அத்தை, உற்ற—ப்ராபித்த. "தே₃வஸ்த்ரீகள்காலில் விலங்கை வெட்டிவிடுகைக்காகத் தன்னைப் பேணாதே அங்கே புக்குத் தன் காலிலே விலங்கைக் கோத்துக்கொண்டவள் என்று நாட்டிலே ப்ரஸித்₃தை₄யானவள்" என்று ஈட்டி லர்த்த₂ம். (கிளிமொழியாள்)—கிளிபோன்றவாக்கையுடைய வள் என்றர்த்த₂ம். "उत्पत्स्यते हितार्थं वः" என்று இவளு டைய உத்பத்தி தே₃வஹிதார்த்த₂மென்றபோதே, துல்ய ந்யாயேந உத்பத்த்யநுப₃ந்தி₄கர்மங்களும் தே₃வஹிதார்த்த₂ மென்று ஸித்₃தி₄க்குமே; अनुग्रहहेतुकत्वத்தாலே இதுக்கு தோ₃ஷத்வமில்லை; गुणातिशयप्रयुक्ततया गुणत्वமுமுண்டென்று கருத்து. (பலபிறப்பாய்)—ப₃ஹுஜந்மங்களையுடையவளாய். (ஒளி வரும்)—तत्प्रयुक्ततेजोतिशयத்தையுடையவன் என்றபடி.

---

ஶங்கையிலே, "இவளிப்படி இவ்விபூ₄தியிலவதரித்துச் செய்ததெல்லாம் ஸம்ஸார மக்₃நரான சேதநர் பக்கல் நிருபாதி₄க வாத்ஸல்யத்தாலே" என்னுமத்தை த்₃ருஷ்டாந்த முக₂த்தாலே அறிவித்து, அதுதானே இவளுடைய நிரதிஶய வாத்ஸல்யத்துக்கும் ப்ரகாஶகமென்கிறார் (ப்ரஜை) என்று தொடங்கி. (விளப்புற்ற) ப்ரஸித்₃த₄மான. ஆனால் இவள் இப்படி வாத்ஸல்யத்தாலே சிறையிருந்தாள் என்னில் தோ₃ஷமாகாதோவென்ன அருளிச்செய்கிறார்.-(சிறையிருப்பு) என்று தொடங்கி. க₃ர்ப₄வாஸாதி₃களும் கு₃ணப்ரகாஶகங் கள் என்னுமத்தை த்₃ருஷ்டாந்தத்தாலே இசைவிக்கிறார் (ஸம்ஸாரிகளோடு) இத்யாதி₃நா. "काव्यं रामायणम्" என்கிற

ஶக்திவிஶேஷமறியாத க்ஷுத்₃ரரிறே. "शीतो भव" (ஶீதோ ப₄வ) என்றவள், "नष्टो भव" (நஷ்டோ ப₄வ) என்னமாட்டாளன்றே. ஆகையால், இது தன் அநுக்₃ரஹத்தாலே பரரக்ஷணார்த்த₂மாகச் செய்த செயலாகையாலே, இதுவே இவள் த₃யாதி₃கு₃ணங்களுக்கு ப்ரகாஶகமென்று திருவுள்ளம்பற்றியாய்த்து இவர் (சிறையிருந்தவள்) என்று அருளிச்செய்தது. ஸ்ரீராமாயணமெல்லாம் இவளுடைய ஏற்றம் சொல்லுகிறதென்னுமிடம், "काव्यं रामायणं कृत्स्नं सीतायाश्चरितं महत्" (காவ்யம் ராமாயணம் க்ருத்ஸ்நம் ஸீதாயாஶ்சரிதம் மஹத்) என்று ஸ்ரீவால்மீகி ப₄க₃வான் தானே வாயோலையிட்டு வைத்தானிறே. "श्रीमद्रामायणमपि परं

---

(காவ்யமித்யாதி₃) "रामायणं कृत्स्नं-काव्यं—महत्-सीतायाश्चरितम्" என்றந்வயம். ராமாயணமான காவ்யம் முழுதும் ப்ரதா₄நமான பிராட்டியுடைய சரிதமென்றர்த்த₂ம். ஶப்₃த₃ரூபமான காவ்யத்தோடே அர்த்த₂ரூபமான சரிதத்துக்கு अंशांशिभावात्सामानाधिकरण्यम्. "ராமாயணம்" என்கிற

---

விடத்தில் "रामायणं कृत्स्नं सीतायाश्चरितं महत्" என்றிருக்கையாலே, "रघुवरचरितम्" என்கிற வசநம் सीताचरितशेषभूतराघवचरितपरமென்று கண்டுகொள்வது. அடிதொடங்கி இருவருடைய சரிதமும் சொல்லாநிற்க, ஸீதாசரிதமாகச் சொல்லுகிறபடியென்னென்னில், ப்₃ரஹ்ம ப்ரஸாத₃த்தாலே வால்மீகிவாயிலே முதலிலே ராமாயணத்துக்கெல்லாம் ஸங்க்₃ரஹமாக வந்த "मानिषाद्" என்கிற ஶ்லோகத்திலே, க்ரௌஞ்சியினுடைய க்ரௌஞ்சவியோக₃ம் ப்ரதா₄ந தாத்பர்ய விஷயமாயிருக்கையாலே, பிராட்டியினுடைய பிரிவொன்றுமே ராமாயணத்துக்கு ப்ரதா₄ந ப்ரதிபாத்₃யமாக வேண்டுகையாலேயும், "दशशिरसश्च वधम्" என்று ப்ராதே₄ஶிகமான ராவணவத₄த்தோடொக்க

னுடைய ஸௌலப₄ரக்ஷகத்வத்தால் வந்த ஏற்றம் சொல்லுகிறது. இதிஹாஸத்வம் இரண்டுக்கும் ஒத்திருக்க, ஸ்ரீராமாயணத்தின் ஶ்ரேஷ்ட₂தை(க்குக் காரணம்)? ஶப்₃த₃வைஷம்யத்தாலன்று, உப₄ய மும் ஸம்ஸ்க்ருதமாகையால்; வக்த்ருவைஷம்யத்தாலுமன்று, உப₄யவக்தாக்களும் ருஷிகளாகையால்; க்₃ரந்த₂ப₃ாஹுள்யத்தாலு

---

ஸமாக்₂யையைப் பற்ற, "ஸீதாயாஶ் சரிதம்" என்கிற வாக்யப்ரமாணம் ப்ரப₃லம். "ரகு₄வரசரிதம்" என்கிற வாக்யத்தைப்பற்ற, "க்ருத்ஸ்நம்" என்கிற பத₃ஶ்ருதி ப்ரப₃லே. "மஹத்" என்று, பிராட்டி சரிதத்துக்கு ப்ரதா₄ந ப்ரதிபாத்₃யத்வம் சொல்லுகையாலே. பெருமாளுடைய अप्रधानतया प्रतिपाद्यत्वमादाय வாக்யஸமாக்₂யைகளும் உபபந்நங் கள். प्राणेभ्योऽपि க₃ரீயஸிக்கு प्रधानप्रतिपाद्यत्वमुपपन्नम्. பரம ப்ரணயியானவர்க்கு प्रणयिनीपारतन्त्र्यமும் गुणावहம். இத்தை யருளிச்செய்கிறார்,-(வாயோலையிட்டு வைத்தானிறே) என்று. வாயென்று ஶப்₃த₃மாய், पूर्वोक्त-वाक्यप्रमाणத்தையும் पदश्रुतिயை யும் சொல்லிற்றாய், அத்தை ஓலையிட்டு வைத்தானென்றபடி. அன்றிக்கே,(வாயென்று)உக்தாநுபூர்வியாலே ஓலை வாயிலிட்டு வைத்தானென்றுமாம். வாய்—இடம். (ஸ்ரீமதி₃த்யாதி₃) श्रीरस्यास्ति इति श्रीमत्. "ऋचः सामानि यजूंषि सा हि श्रीरमृता" என்கிறபடியே वेदत्रयप्रतिपाद्यपुरुषार्थமாகிற ஸ்ரீயையுடைத்தான வென்றபடி. "वेदैश्च संमितम्" என்னக்கடவதிறே. இத்தால், भगवद्गुणमात्रप्रतिपादकங்களான புராணங்களைப்பற்ற வ்யா

---

"रघुवरचरितम्"என்று மற்றும் ரகு₄வரசரிதங்களையும் சொல்லு கிறது என்று சொன்னாப்போலன்றியே, ப்ரப₃ந்த₄வக்தா தாமே, "कृत्स्नम्" என்றும், "महत्" என்றும் ப்ரதிபாத்₃ கத்துக்கு ஒரு விஶேஷணமும், ப்ரதிபாத்₃யத்துக்கொரு விஶேஷணமும் இட்டுவைக்கையாலே,"रघुवरचरितम्" என்கிற ஶ்லோகத்தில், ப்ருத₂க்காகச்சொன்ன ராவணவத₄ம் ரகு₄வர சரிதாந்தர்க₃தமானாப்போலே, ரகு₄வர சரிதமும் ஸீதா சரிதஶேஷமென்று वक्त्रभिप्रायமாகையாலேயும், ஸீதாசரித மென்னக் குறையில்லை. ஸஹ்ருத₃யராகில் वक्त्रभिप्रेतத்தை

प्राणिति त्वच्चरित्रे" (ஸ்ரீமத்₃ ராமாயணமபி பரம் ப்ராணிதி த்வச்சரித்ரே) என்றருளிச்செய்தாரிறே ப₄ட்டர்.

அநந்தரம் மஹாப₄ாரத ப்ரதிபாத்₃யத்தை அருளிச்செய்கிறார் (மஹாப₄ாரதத்தால்) என்று தொடங்கி. "कृष्णद्वैपायनं व्यासं विद्धि नारायणं प्रभुम्। को ह्यन्यो भुवि मैत्रेय महाभारतकृद्भवेत्॥" (க்ருஷ்ண த்₃வைபாயநம் வ்யாஸம் வித்₃தி₄ நாராயணம் ப்ரபு₄ம்। கோ ஹ்யந்யோ பு₄வி மைத்ரேய மஹாப₄ாரதக்ருத்₃ப₄வேத்॥) "एवंविधं भारतं तु प्रोक्तं येन महात्मना। सोऽयं नारायणस्साक्षात् व्यासरूपी महामुनिः॥" (ஏவம்வித₄ம் ப₄ாரதம் து ப்ரோக்தம் யேந மஹாத்மநா। ஸோऽயம் நாராயணஸ்ஸாக்ஷாத் வ்யாஸரூபீ மஹாமுநி:॥) என்று ப₄க₃வத₃ாவேஶாவதாரமாய், "स होवाच व्यासः पाराशर्यः" (ஸ ஹோவாச வ்யாஸ: பாராஶர்ய:) என்று ஆப்ததமனாக ப்ரஸித்₃த₄னா

---

வ்ருத்தி சொல்லிற்று. (பரம்)—உத்க்ருஷ்டம். இத்தால் இதிஹாஸாந்தரங்களைப்பற்ற வ்யாவ்ருத்தி சொல்லிற்று. (ராமாயணமபி)—ராமாயணமும். கீழே உபநிஷத்தைச் சொல்லிற்றிறே; அத்தை ஸமுச்சயிக்கிறது "அபி" என்கிற பத₃ம். அன்றிக்கே, மேலே "வேத₃ாநபி ச" என்று ஸமுச்சயத்₃வயமாய், அதிலொன்று இங்கே வரக்கடவதாய், இங்குத்தை "அபி" என்கிறவிது விரோத₄வாசகமாய், ஸமாக்₃யா ப₃லத்தாலே பெருமாளுக்கு ப்ரதிபாத₃கமாயிருந்ததே யாகிலுமென்றபடி. (த்வச்சரித்ரே)—தேவரீருடைய சிறையிருப்பு முதலான தி₃வ்யசேஷ்டிதங்களிலே. (ப்ராணிதி)- "अन प्राणने" என்கிற த₄ாத்வர்த்த₂த்திலே "ப்ர" ஶப்₃த₃ார்த்

---

யிறே அர்த்த₂மாக நிஶ்சயிப்பது. இவ்வாக்யத்துக்கு ஆசார்ய ஸம்மதி காட்டுகிறார் (ஸ்ரீமத்₃ராமாயணமபி) இத்யாதி₃நா. (சரித்ரே)-புருஷகாரவைப₄வே. (ப்ராணிதி)–

மன்று. மஹாபா₄ரதமே பு₃ஹூ₃ளமாகையால். இனி தூ₃த்ய ப்ர பா₄வத்தைப் பகல் விளக்குப்படுத்தும் சிறையிருந்த ப்ரபா₄வம் சொல்லுகையாகிற அர்த்த₂வைஷம்யமே காரணமாகக்கடவது. பிறர் காலில் விலங்கறச் சிறையிருந்தும், பிறரநர்த்த₂ம் காணில் கால்நடைகெட்டும். ஸ்வாபா₄விக பாரதந்த்ர்யமுடையளாயும் இருக்கும் இளநெஞ்சான புருஷகாரத்தின் ஏற்றம் சொல்லும் ஸாரதமத்தோடொக்குமோ.— தந்தை காலில் விலங்கற வந்தும் சிறைப்படாமல் நழுவியும், பிறரநர்த்த₂ம் கண்டு கால் நடை தந்துபோய் கௌ₄ளண பாரதந்த்ர்யம் பா₄விக்கும் வன்னெஞ்சுடைய ஸ்வதந்த்ரோபாய வைப₄வம் சொல்லும் ஸாரப்ரமாணம்? "இப்படி (இதிஹாஸ ஶ்ரேஷ்ட₂ம்) என்று ஸாரதமப்ரமாணத்தை ப்ரத₂மத் திலே உபாத₃ாநம் பண்ணின வித்தால் ஸாரதம ப்ரமாண வேத்₃ய

---

*த₂ம் அந்தர்நீதமாயிருக்க, மீளவும் "ப்ர" ஶப்₃த₃த்தாலே, மிகவும் ப்ராணத₄ாரணத்தைப் பண்ணுகிறதென்று சொல்லுகிறது. (த்வச்சரித்ரே—ப்ராணிதி) என்கிறவித்தால்— ஸ்ரீராமாயணத்துக்குப் பிராட்டியுடைய சரித்ரம் ஜீவிதம் என்று லபி₄க்கது. இத்தால், ஸ்ரீராமாயணத்துக்கு* **व्यङ्ग्यमर्यादया प्रतिपाद्यम्**—*பிராட்டியினுடைய சரித்ரமென்று ஸித்₃தி₄த்தது.* "**जीवितं व्यङ्ग्यवैभवम्**" *என்றிறே* **काव्यज्ञसमय**ம். *அதில் "அநிதி" என்று* **गुणीभूतव्यङ्ग्यविधया प्रतिपाद्यत्व**த்தை *வ்யாவர்த்திக்கிற (ப்ராணிதி) என்கிறவித்தால்—* **वाच्याति-शायिव्यङ्ग्यविधया प्रतिपाद्य**ம் *பிராட்டியுடைய சரிதமென்று லபி₄த்தது. ஆக,* **वाच्यविधया** *பெருமாள் ப்ரதிபாத்₃யரான மையைப்பற்ற, "ராமாயணம்" என்கிற ஸமாக்₂யைக்கும் விரோத₄மில்லையென்று ஸித்₃தி₄த்தது.* **ध्वनिप्रधानं काव्य**மிறே- **उत्तमं काव्य**ம். *இத்தைத்திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார்,-* (அருளிச்செய்தாரிறே ப₄ட்டர்) *என்று.*

(*பாராஶர்ய:*) — *பராஶராத்மஜ:*, **अनन्तरापत्य**த்திலே **गोत्रत्वारोपात् प्रत्यय**ம் *வந்து கிடக்கிறது.* **वेदान् व्यस्यतीति-वेद**

---

*ஜீவதி.* "**जीवितं व्यङ्ग्यवैभवम्**" *என்னக்கடவதிறே.*

யிருந்துள்ள ஸ்ரீவேத₃வ்யாஸ ப₄க₃வானாலே, "वेदान-ध्यापयामास महाभारतपञ्चमान्" (வேதா₃நத்₄யாபயாமாஸ மஹாப₄ாரத பஞ்சமாந்) என்கிறபடியே பஞ்சம வேத₃மாக ப்ரணீதமாய், அநேக புராண ப்ரஶஸ்தமாயிருந்துள்ள மஹாப₄ாரதமும், ஸ்ரீராமாயணத்தோபாதி ப்ரப₃லப்ரமாணம். இதுவும் நடுவில்திருவீதிப்பிள்ளை ப₄ட்டர் தாமேயருளிச்செய்தார். பெரியப₄ட்டரும் ஸ்ரீ ஸஹஸ்ரநாம ப₄ாஷ்யோபோத்₃க₄ாதத்திலே "श्रीरामायणवत् महाभारतं शरणम्" (ஸ்ரீராமாயணவத் மஹாப₄ாரதம் ஶரணம்) என்றருளிச்செய்தாரிறே. ஸர்வேஶ்வரன் என்னுதே (தூதுபோனவன்) என்றது, அவனுடைய ஆஶ்ரித பாரதந்த்ர்யத்தை ப்ரகாஶிப்பிக்கைக்காக. தே₃வதே₃வனை தன் பெருமையையும், செய்கிற தொழிலின் தண்மையையும் பாராதே, பாண்ட₃வர்களுக்காகக் கழுத்திலே ஓலைகட்டித் தூது போய்த் தது ப்ரணத பாரதந்த்ர்யருசிபரவஶனாயிறே. இது தான் இவனுடைய ஆஶ்ரயணஸௌகர்யாபாத₃கமான நீர்மைக்கு உடலாயிருந்துள்ள வாத்ஸல்யாதி₃களுக்கெல்லாம் ப்ரகாஶகமாயிருப்பதொன்றிறே. இந்த கு₃ணாதி₄க்யத்திலே ஈடுபட்டிறே "இன்னார் தூதனென நின்றான்" [பெரியதிருமொழி 2-2-3] என்றும், "குடைமன்னரிடை நடந்த தூதா" [பெரியதிருமொழி 6-2-9] என்றும் திருமங்கையாழ்வார் அருளிச்செய்தது. அந்த தி₃வ்ய ஸூக்தியிறே இவரிப்படியருளிச்செய்கைக்கு மூலம். *பேசிற்றே பேசுகையிறே இவர்களுக்கேற்றம்.* தூதுபோனது தண்மையாவது—கர்மவஶ்யதையடியாக வரிலிறே. ஐச்ச₂மாக ஆஶ்ரித விஷயத்தில் செய்கிற தாழ்ச்சியெல்லாம் ஏற்றத்துக்கு உடலாயிறே இருப்பது. "स उ श्रेयान् भवति जायमानः"

சரமஶேஷியாய், ஸம்ஸாரிகள் சிறையை விடுவிக்கைக்காக இக்கரைப் பட்டுச் சிறையிருந்தும், அவர்கள் வெஞ்சொல் பொறுத்தும், இன்

---

व्यासः. "व्यासः पाराशर्यः" என்கிறவிடத்தில் வ்யாஸ ஶப்3த3ம் नामैकदेशे नामग्रहणம். இக்கைத் திருவுள்ளம்பற்றியருளிச் செய்கிறார் (வேத3வ்யாஸ ப4க3வானாலே)யென்று. (மஹாப4ாரதமுமிதி)- "एकतश्चतुरो वेदा भारतं चैकमेकतः। समागतैस्सुरर्षिभिः तुलामारोपितं पुरा॥ महत्त्वे च गुरुत्वे च ध्रियमाणं ततोऽधिकम्। महत्त्वात् भारवत्त्वाच्च महाभारतमुच्यते॥" என்கிற निरुक्तिवचनं இங்கே अभिप्रेतम्. (ஶ்ரீராமாயணத்தோபாதி)-தத்துல்யதயா; இத்தால்- उपमानतया निर्दिष्टமான ஶ்ரீராமாயணத்தைப்பற்ற. उपमेयतया निर्दिष्टமான மஹாப4ாரதத்துக்கு किञ्चिदप्राधान्यம் உண்டென்று கருத்து. இதுதான், மூலத்திலே, மஹாப4ாரதத்துக்கு "இதிஹாஸ ஶ்ரேஷ்ட2மான" என்று விஶேஷணோபாதா3நத்தாலே வ்யஞ்ஜிதம். (செய்கிற தொழிலின் தண்மை)— செய்யப் படுகிற தூ3த்யமாகிற க்ருத்யத்தினுடைய நிகர்ஷம். प्रणतानां पारतन्त्र्यं-ப்ரணதரிட்ட வழக்காயிருக்கை; तत्र रुचिः- अभिप्रीतिः, तया विवशः—अस्वाधीनः என்றபடி. (ஆஶ்ரயண ஸௌகர்யாபாத3கமான) என்றது—चाक्षुषपूर्वकसमाश्रयणे निग्रहापादकत्वाशक्यत्वान्यतरबुद्धिनिवर्तनद्वारा आश्रयणप्रवृत्तिजनकज्ञान- विषयமானவென்றபடி. வாத்ஸல்யம் — निग्रहापादकत्वबुद्धियை யும், ஸௌலப்4யம்—अशक्यत्वबुद्धियையும் நிவர்த்திப்பிக்கும். (நீர்மை)—परत्वप्रतिद्वन्द्विயான सौलभ्यம். (இந்த கு3ணாதி4க்யத திலே)—தூ3த்ய ப்ரயோஜகமான सौलभ्यादिगुणातिशयத்திலே. (ஈடுபட்டு)—विवशராய். (இன்னார் தூதனென)—லோகத்தார் பாண்ட3வதூ3தனென்று சொல்ல. (நின்றான்)—அதுவே ஹேதுவாக நிலைபெற்றானென்றபடி. (குடைமன்னரிடை)- அபி4ஷிக்தக்ஷத்ரியராகையாலே குடைக்கு அர்ஹரான குரு ராஜாக்களான து3ர்யோத4நாதி3கள் நடுவிலே. (நடந்த தூதா)—நடந்த தூதனே என்றபடி. (பேசிற்றே பேசுகை

---

"स उ श्रेयान् भवति जायमानः" என்கிறவிடத்தில் உகாரம்-ஏவ

(ஸ உ ஶ்ரேயாந் ப⁴வதி ஜாயமாந:) என்று, 'பரார்த்த₂மாகப் பிறக்கையாலே நிறம்பெறும்' என்று ஶ்ருதி சொன்னவிது, பரார்த்த₂மாகத் தன்னிச்சை₂யாலே செய்யுமவையெல்லாம் இவனுக்குத் தேஜஸ்கரமென்னுமதுக்கு உபலக்ஷணமிறே. இவன் செய்த தூ₃த்யத்தை மாந்த்₃யஹேதுவாக நினைப்பார் அறிவு கேடரில் தலையானவர்களித்தனை. அறிவில் தலை நின்றவர்கள், "எத்திறம்" [திருவாய் 1-3-1] என்று மோஹிக்கும்படியாயிறே யிருப்பது. இப்படியிருந்துள்ள இந்நீர்மையிலேற்றத்தை வெளியிடுகைக்காக வாய்த்து, இவர் (தூதுபோனவன்) என்றருளிச் செய்தது. மஹாபா⁴ரதமெல்லாம் இவனுடைய ஏற்றம் சொல்லுகையிலே தத்பரமாகையாலேயிறே— மஹாபா⁴ரதகதை₂ சொல்லத் தொடங்குகிறவன் "नारायणकथा-मिमाम्" (நாராயண கதா₂மிமாம்) என்றது. ஆக இப்ரப₃ந்த₄த்₃வயத்துக்கும் ப்ரதா₄ந ப்ரதிபாத்₃யங்கள் இன்னதென்னுமிடம் ப்ரகாஶிப்பிக்கப்பட்டது.5.

---

யிறே இவர்களுக்கேற்றம்) என்றது — பூர்வர்களுடைய ஶப்₃த₃த்தையே அநுஸரித்து ஶப்₃த₃ப்ரயோகா₃தி₃களைப் பண்ணுகை. ஸம்ப்ரதா₃யைக நிரதரான பிள்ளைலோகாசார்யர் முதலான பூர்வாசார்யர்களுக்கு, கு₃ருஶிஷ்யக்₃ரந்த₂விரோத₄ங்களைப் பரமதாதி₃களாலே பரிஹரிக்க வேண்டும் அருமையுடைய ஜைமிந்யாதி₃களைப்பற்றவும், "अस्मिन्नर्थे पातयामः" என்னுமவர்களைப் பற்றவும் उत्कर्षपर्यवसायியான वैलक्षण्यமென்றபடி. (அறிவில் தலைநின்றவர்)— ஸம்யக்₃ஜ்ஞாநபராகாஷ்டை₂யிலே நிலைநின்ற நம்மாழ்வார்

---

காரார்த்த₂ம். "அந்தப்பரமபுருஷன் அவதரித்தே ஶ்ரேயஸ்வியாகிறான்" என்றர்த்த₂ம். (அறிவில் தலைநின்றவர்கள்)— ஆழ்வார்கள். ("नारायणकथामिमाम्") என்கிறவிடத்தில்,

சொல்சொல்வாரைத்தேடியும், ஆற்றமை கரை புரண்டும் பாரதந்த்ர்யத்தை நோக்கியும், ஸ்வசக்தியைக் கைவிட்டும், சக்திமாந் பின்தொடரும்படியாயும், ஆஸுர ப்ரக்ருதிகளுக்கு ஹிதம் சொல்லியும், ததீ₃யர் வரக்கண்டு ஸத்தையைப் பெற்றும், தத்ஸ்பர்ச முள்ளது பெற்றுப் பாடாற்றியும், ததீ₃யவிக்₃ரஹமங்க₃ளாசாஸநம் பண்ணியும், ததீ₃யருடன் ஸல்ல(ா)பித்துத் தாபமாறியும், ஸாபராத₄ராளவிலும் க்ருபாளுக்களாயும், அநந்யார்ஹராயும், அநந்யதை₃வராயும், அநந்யபோ₄ககு₃ராயும் போரும் பரமாப்த கூ₄டகருடைய தன்னேற்றம் இப்ரப₃ந்த₄த்திலே ஆமூலசூட₃ம் ப்ரதா₄ந ப்ரமேயம் என்னுமிடம் தோற்ற முதலிலே பி₃ந்து₃ப்ரக்ஷேபம் செய்தருளுகிறார்''- என்று பிள்ளையருளிச்செய்வர். 5.

---

*போல்வார். (எத்திறம் என்று)-பிரானே! இதென்ன ப்ரகாரமென்று. ( மோஹிக்கும்படியாய் )—மூர்ச்சி₂க்கும்படியாய்; பக்வனுகிறதுக்கு முன்பு, ப்ராப்தையுமாய், ஸ்நிக்₃தை₄யுமான தாயாராலே கட்டுண்டமைக்கு ஆறுமாஸம் மோஹித்தபடி கண்டால், ப்ரௌட₄னான பின்பு, அகத₃ர்ஹருமாய், நெஞ்சில் மாத்ரவமுடையருமான து₃ர்யோத₄நாதி₃கள் விஷயத்திலே தண்மைக்கெல்லையான தூதுபோனமைக்கு மோஹிப்பரென்னுமிடம் சொல்லவேண்டாவிறேயென்று கருத்து. (தத்பரமாகையாலே)— தாத்பர்யயுக்தமாகையாலே. இத்தால்* **अभिधानवृत्त्या गाङ्गयादिप्रतिपादन**ம் *பண்ணிலும் விரோத₄மில்லையென்றபடி.* 5.

---

*நாராயணஶப்₃த₃ம் தூதுபோன க்ருஷ்ணனையே காட்டும்படியெங்ஙனே யென்னில்.* **" नरो मनुष्यार्जुनयोः "** *என்கிறபடியே நரனென்று அர்ஜுநனுக்குப்பேராய்* **" नरसम्बन्धिनो नाराः"** *என்று பாண்ட₃வர்களை நாரஶப்₃த₃ம் சொல்லி,* **"कृष्णाश्रयाः कृष्णबलाः "** *என்கிறபடியே, அவர்களுக்கெல்லாம் ஆஶ்ரயபூ₄தனும், நிரங்குஶஸ்வாதந்த்ர்யத்தாலே அவர்களை நிருபகராம்படி தௌ₃த்யாதி₃களாலே அவர்களை ஆஶ்ரயித்திருக்கிற கண்ணனை நாராயணஶப்₃த₃ம் சொல்லுகிறதென்று கண்டு கொள்வது.* 5.

தரித்தவாறே. வேத₃ம் தத₃வதார கு₃ணசேஷ்டிதங்களை ப்ரதிபாதி₃க்கைக்காக ஸ்ரீவால்மீகி ப₄க₃வான் பக்கல் நின்றும் ஸாக்ஷாத்₃ ராமாயண ரூபேண அவதரித்தது—என்று. (மதி மந்த₂நம் ஆவித்₄ய)(ப.112) என்கிற ஶ்லோகத்துக்கர்த்த₂ம்— ஸ்ரீவேத₃ வ்யாஸ ப₄க₃வானாலே வேத₃மாகிற ஸமுத்₃ரத்தில் நின்றும் ஜ்ஞாநமாகிற மத்தையிட்டுக்கடைந்து எல்லாருடையவும் ஆத்மோஜ்ஜீவநார்த்த₂மாக சந்த்₃ரனைப்போலே ஸுக₂கரமான இந்த மஹாபா₄ரதம் உண்டாக்கப்பட்டது— என்று. (வ்யாஸ வாக்ய ஜலௌகே₄ந) (ப. 112) என்கிறதுக்கர்த்த₂ம்—வேத₃மாகிற பர்வதத்தில் நின்றும் பிறந்திருப்பதாய், அத₄ர்மமாகிற மரங்களை வேரோடே பிடுங்கிப் பொகடுவதாய் இருக்கிற வ்யாஸனுடைய வாக்ய ஜலப்ரவாஹத்தாலே பூ₄மியானது அஜ்ஞாநமாகிற அழுக்கின்றியிலே பண்ணப்பட்டது—என்று. (பி₃பே₄தி) (ப. 112) என்கிறதுக்கர்த்த₂ம்—க்ரூரமான ஔஷத₄நிமித்தமாக ப₄யப்படுவாரைப் போலே சேதநன் க₃ம்பீ₄ரமான வேதா₃ந்த ஶாஸ்த்ர நிமித்தமாக ப₄யப்படுகையாலே ஶாஸ்த்ர ஸாரமாக இது காவ்யரூபேண பண்ணப்பட்டது—என்று. (விஷ்ணௌ வேதே₃ஷு) (ப. 114) என்கிறதுக்கர்த்த₂ம்—பு₃த்₃தி₄மான்களுக்கு மஹாபா₄ரதத்தாலே — ஸர்வேஶ்வரனிடத்திலும், வேத₃ங்களிலும், பா₄க₃வதர்களிடங்களிலும், ஆசார்யர்களிடங்களிலும் நன்றான பக்தியானது உண்டாகாநின்றது— என்று.

## வாக்யம் 4

த்₃வந்த்₃வஸமாஸத்தில் அல்பாச்தரமன்றோ முன்னே சொல்லிக்கொள்ளவேணும் என்று சொல்லிற்று. ஆகையாலே புராணம் முற்படவேண்டியிருக்க இதிஹாஸம் முற்படுகைக்கு ஹேது ஏது? என்கிற ஶங்கையிலே, "அப்₄யர்ஹிதம் பூர்வம்" என்று சொல்லுகையாலே இது முற்படக்கூடுமென்கிறார் (த்₃வந்த்₃வஸமாஸத்தில்) (ப. 120) என்று தொடங்கி, "ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களாலே" என்று

இரண்டையும் எடுத்தால் இரண்டுக்கும் அர்த்த2மருளிச் செய்யாதே இதிஹாஸத்துக்குத் தாத்பர்யம் ஏது என்கிற ஶங்கையிலே அருளிச்செய்கிறார் (அத2வா) (ப. 122) இத்யாதி3. ஸ்ம்ருதி ஒரு கோடியும் இதிஹாஸபுராணம் ஒரு கோடியுமாக இவர்க்கு விவக்ஷையாகையாலே. "இவை இரண்டிலும் வைத்துக்கொண்டு இதிஹாஸம் ப்ரப3லம். அத்தாலே அது முற்பட்டது" (வா. 3. 4) என்கிறார் என்றபடி.

## வாக்யம் 5

(முதலிலே) (ப. 128) இத்யாதி3— (ஸ்ரீமத்3ராமாயணமபி) (ப. 140) என்கிறதுக்கர்த்த2ம்— ஶ்லாக்4யமான ஸ்ரீமத்3ராமாயணமும் தேவரீர் வைப4வத்தைச் சொல்லியே ஜீவியாநின்றது—என்று. "இதிஹாஸ ஶ்ரேஷ்ட2மான" (வா. 5) என்கிறவித்தை இங்கேயும் அந்வயித்துக்கொண்டு, ஸ்ரீராமாயணத்துக்கு இதிஹாஸ ஶ்ரேஷ்ட2தை சொன்னாப் போலே மஹாபா4ரதத்துக்கும் இதிஹாஸஶ்ரேஷ்ட2தையை அருளிச்செய்கிறார் (க்ருஷ்ணத்3வைபாயநம்) (ப.142) என்று தொடங்கி. இதுக்கர்த்த2ம் — க்ருஷ்ணத்3வைபாயநனை வ்யாஸனை ஸ்வாமியான நாராயணனாக அறி. வாராய் மைத்ரேயனே! நாராயணனையொழிய எவன்தான் பூ4மியிலே மஹாபா4ரதத்தைப் பண்ணுகிறவன்?-என்று. (ஏவம்வித4ம்) (ப. 142) என்கிறதுக்கர்த்த2ம்—இப்படிப்பட்ட மஹாபா4ரதமானது யாதொரு மஹாத்மாவினாலே சொல்லப் பட்டது. இந்த வ்யாஸரூபியான மஹாமுநியானவன் ஸாக்ஷாத் நாராயணன் காண்-என்று. இந்த ஶ்லோகங்களிலே வ்யாஸனை நாராயணன் என்று சொல்லுகையாலே ராம க்ருஷ்ணாத்3யவதாரம்போலே இதுவுமோர் அவதாரமாகத் தோற்றியிருக்கிறதே; இவனோ நாராயணன்? என்கிற ஶங்கையிலே அருளிச்செய்கிறார் (ப4க3வதா3வேஶாவதாரம்) (ப. 142) என்று. "ப்3ரஹ்ம ருத்3ரார்ஜுந வ்யாஸ ஸஹஸ்ரகர பா4ர்க்க3வா:। ஶக்த்யாவேஶாவதாராஸ்து

விஷ்ணோஸ் தத்காலவிக்₃ரஹா:॥'' என்று ப₄க₃வச்சா₂ஸ்த்ரத்திலே ப்₃ரஹ்ம ருத்₃ராதி₃களோபாதி வ்யாஸனையும் ப₄க₃வதா₃வேஶாவதாரமாகச் சொல்லிற்றிறே.

## வாக்யம் 6

ராமாயணம் பிராட்டி வைப₄வம் சொல்லிற்று என்றும் மஹாபா₄ரதத்தால் க்ருஷ்ணன் வைப₄வம் சொல்லிற்று என்றும் அருளிச்செய்துவிட அமையாதோ? (இவையிரண்டாலும்) என்று மீள அருளிச்செய்ததுக்குக் கருத்தென்? என்கிற ஶங்கையிலே அருளிச்செய்கிறார் (உபப்₃ருஂம்ஹண முகே₂ந) (ப. 148) என்று தொடங்கி. 'புருஷகாரமும் உபாயமும் சொல்லிற்றாய்த்து' என்னாதே "புருஷகார வைப₄வமும் உபாயவைப₄வமும் சொல்லிற்றாய்த்து''(வா.6)என்றருளிச் செய்தாரிறே; இவர்களுக்கு வைப₄வமாவது ஏது? என்கிற ஶங்கையிலே அருளிச்செய்கிறார் (அபராத₄ பூ₄யிஷ்டா₂ரான) (ப. 148) என்று தொடங்கி. "புருஷகாரபூ₄தையுடைய வைப₄வமும் உபாயபூ₄தனுடைய வைப₄வமும்'' என்னாதே. (புருஷகாரம்) என்றும் (உபாயம்) என்றும் சொன்னதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (புருஷகாரம் என்றும்) (ப. 148) இத்யாதி₃. புருஷகாரத்வமும் உபாயத்வமும் அவர்களுக்கு அஸாதா₄ரணம் என்னுமதுக்கு ப்ரமாணம் காட்டுகிறார் (இது தன்னை) (ப. 150) என்று தொடங்கி. (மத்ப்ராப்திம் ப்ரதி)(ப.150) என்கிற ஶ்லோகத்துக்கர்த்த₂ம்-ஸம்ஸாரத்திலே அத₄:பதியாநிற்கிற ஜந்துக்களுக்கு லக்ஷ்மியானவள் மஹாத்மாக்களாலே என்னுடைய ப்ராப்தியைக் குறித்துப் புருஷகாரையான மாத்ருத்வப்ரயுக்தமான ஆப்தத்வம் அதி₄கம் என்னும்படி புருஷகாரமாகக் கல்பிக்கப் பட்டாள். எனக்கும் இதுவே மதம். வேறொரு அடையாளம் இல்லை-என்று. (அஹம் மத்ப்ராப்த்யுபாயோ வை) (ப. 150) என்கிறதுக்கர்த்த₂ம் — ஸாக்ஷால்லக்ஷ்மீபதியான நான்தானேயிறே என்னுடைய ப்ராப்திக்குபாயம்; உபதே₃ஶத்தாலும், கண்ணழகாலும் கண்ணழிவற என்னை

வ ஶீ க ரி த் து க் கார்யங்கொள்ளவல்ல வீறுடையளான லக்ஷ்மியானவள். புருஷகாரத்தாலே என்னுடைய ப்ராப்தியைக் கூட்டுவியாநிற்கும்; இவளுடைய புருஷகாரத்வரூபமான இந்த விஶேஷம் வேதா₃ந்தங்களிலே சொல்லப் படாநின்றது—என்று. "ஆகிஞ்சந்யம் ஒன்றையுமே தஞ்சமாகவுடையரான சில பா₄க்₃யாதி₄கர். என்னுடையதிருவடித் தாமரைகள் இரண்டையும் ப்ரபத்திபண்ணி அத்தாலே ப்ரியப்பட்ட நெஞ்சையுடையராய். மீளவும் லக்ஷ்மியைப் புருஷகாரமாக வரித்து அத்தாலே என்னுடைய க்ஷமையையடைந்து. என்னையே உபாயோபேயங்கள் இரண்டுமாக அடைந்து, அத்தாலே க்ருதக்ருத்யராய் வேறொன்றில் பொருந்தாத நெஞ்சையுடையராய்க்கொண்டு என்னை அடையா நிற்பர்கள்" என்று (ஆகிஞ்சந்யைக ஶரணா:) (ப. 154) என்கிறதுக்கர்த்த₂ம். (ஏதத் ஸாபேக்ஷ ஸம்ப₃ந்த₄ாத்) (ப. 156) என்கிறதுக்கர்த்த₂ம் — மற்றுமுண்டான நிர்மல ஸ்வரூபரான—நாய்ச்சிமார், ஸூரிகள். ஆசார்யர்கள் இவர்கள் புருஷகாரபூ₄தராகிறது. பிராட்டியோடு ஸம்ப₃ந்த₄ங்கொண்டொழிய.ஸ்வத:புருஷகாரமாகமாட்டார்கள்-என்று. இவர்கள் சொன்னாலும், 'இவளைப் பற்றினவர்களன்றோ' என்று எம்பெருமான் இவர்கள் சொன்ன கார்யம் செய்யுமென்று கருத்து.

## வாக்யம் 7

"புருஷகாரமாம்போது" (வா. 7) என்றதுக்கு 'புருஷகாரமாம் காலத்திலே' என்று தோற்றிற்றிறே; அப்படியாமன்று புருஷகாரமாகாத காலமும் ஒரு காலமுண்டு என்று வ்யதிரேகத்தாலே ஸித்₃தி₄க்கையாலே. இவளுடைய நித்யயோக₃த்துக்கு விருத்₃த₄ம் என்று திருவுள்ளம்பற்றி (புருஷகாரமாமிடத்தில்) (ப. 162) என்று வ்யாக்₂யாநம் பண்ணுகிறார். "ஈஶ்வர விஷயத்தில் பாரதந்த்ர்யாநந்யார்ஹத்வங்கள் நித்யமுக்தர்க்கும் மற்றுமுள்ள பிராட்டிமார்க்கும் ஸாத₄ாரணமாயிருக்க. இவளுக்கு விஶேஷமேது?"

என்கிற ஶங்கையிலே; பட்டமஹிஷியாகையாலும், பத்நீத்வ ப்ரயுக்தமாகையாலும் அவர்கள்பாரதந்த்ர்யத்திற் காட்டில் இவள்பாரதந்த்ர்யத்துக்கு விஶேஷமுண்டு என்றும், ஸ்வரூபநிரூபகத்வரூபமான அநந்யார்ஹத்வ ப்ரயுக்தமாயிருக்கையாலே அவர்களிற் காட்டில் இவளநந்யார்ஹத்வத்துக்கு விஶேஷமுண்டு என்றும் அருளிச்செய்கிறார் (ஈஶ்வர விஷயத்தில்) (ப. 168) இத்யாதி. 'நித்யையான அந்த நான் அந்த ப்ரஹ்மத்துக்கு நாளுகையாகாநின்றேன்' என்று (அஹந்தா) (ப. 170) என்கிறதுக்கர்த்தம்.

## வாக்யம் 8

'தேவதேவ திவ்யமஹிஷியான தனக்கு மநுஷ்யையாய் அவதரிக்க வேண்டுகைக்குக் காரணம் ஏது?' என்கிற ஶங்கையிலே அருளிச்செய்கிறார் (தேவத்வே) (ப. 176) என்று தொடங்கி. (அபத்யலாபோ வைதேஹி) (ப. 182) என்கிற ஶ்லோகத்துக்கர்த்தம்—நமக்குப் பிள்ளையாகிற பேறு வந்து கிட்டிற்று; ஸகாமையான நீ எத்தை இச்சியாநின்றாய்; நீ இச்சித்தவற்றையெல்லாம் சொல்—என்று. (ந கல்வத்யைவ) (ப. 186) என்கிறதுக்குத் தாத்பர்யம்—இளையபெருமாளைப் பார்த்து. "நீர் இந்த வார்த்தை கேட்டபோதே ப்ராணனை விட்டேனாகில், 'தனக்கேற தோஷமுண்டானவாறேயன்றோ ப்ராணனை விட்டாள்; இப்படிக் கொத்தாரை வைத்துக்கொண்டிருந்தாரே' என்னும் அவத்யம் பெருமாளுக்கு வாராதபடி பரிஹரிக்கக் கடவேன்" என்று. (யதாஹம்) (ப. 192) என்கிறதுக்கர்த்தம்—'பெருமாளொழிய வேறொருத்தரையறியேன்' என்று சொன்ன வார்த்தை மெய்யாகில், பூமிப்பிராட்டி இடம் தருவாளாக—என்று. (யதுதாந்யத்) (ப. 195) என்கிறதுக்கு—பின்னையும் மற்றும் பிராட்டியுடைய அவதாரம் தொடக்கமாக யாதொன்று சொல்லுவார்கள், இதெல்லாம் ஸ்ரீரங்கநாயகியாராய் இருக்கைக்கு க(ஶ்ரீ)ரமம் செய்தவிடம்-என்று. (ஸ தம்) (ப. 204) என்கிறதுக்கர்த்தம் — ஸர்வ

ஶரண்யனான பெருமாள், பூ₄மியிலே ஶரணம்புக்க வத₄ார்ஹனான காகத்தை க்ருபையாலே ரக்ஷித்தருளினார்—என்று. இங்கு, க்ருபை என்கிறது—க்ருபாஜநகையான பிராட்டியைச் சொல்லுகிறது. (புரத:)(ப.204) என்கிறதுக்கர்த்த₂ம்—பூ₄மியிலே முன்னே விழுந்த காகத்தைக்கண்டு அதின் தலையை அவர் திருவடிகளிலே கூட்டினார்—என்று. (தமுத்தா₃ப்ய) (ப. 204) என்கிறதுக்கர்த்த₂ம்—க்ருபாம்ருத ஸமுத்₃ரமாய் கு₃ணவானாயிருக்கிற பெருமாள் அவனைத் திருக்கையாலே எடுத்து ரக்ஷித்து க₃யையாலே பார்த்தார்—என்று. (மாதர் மைதி₂லி) (ப. 208) என்கிறதுக்கர்த்த₂ம்—மாதாவே! மைதி₂லியே! அபராத₄ங்களைப் பண்ணின கையுலராத ராக்ஷஸிகளை பவாந்த்மஜன் நிமித்தமாக ரக்ஷியா நிற்கிற உம்மாலே, ஶரணம் புகுந்த காகவிபீ₄ஷணாதி₃களை ரக்ஷித்த பெருமாள்கோ₃ஷ்டி₂ அல்பமாகப் பண்ணப் பட்டது; நெருங்கின அபராத₄த்தையுடைய நம்மை, இப்படிக்கொத்த க்ஷமை ஸூகி₂ப்பிப்பதாக—என்று.

## வாக்யம் 14

அறியாத அர்த்த₂ங்களை அடைய அறிவித்தால், ஆசார்ய க்ருத்யம் ஏறிட்டுக் கொண்டதாகவேணுமோ? என்ன (அஜ்ஞாத ஜ்ஞாபநம்) (ப 238) இத்யாதி₃, ப்ரக்ருத்யாத்ம விவேகமுடையனாயிருக்கிற அர்ஜுநன் தே₃ஹாத்மாபி₄மாநியோ? என்கிற ஶங்கையிலே, தே₃ஹாத்மாபி₄மாந கார்யமான ப₃ந்து₄ ஸ்நேஹம் இவனுக்குண்டாகையாலே, தே₃ஹாத்மாபி₄மாநியென்னுமிடம் நிஶ்சிதம் என்கிறார் (தே₃ஹாநுப₃ந்தி₄களான) (ப.240) இத்யாதி₃, (நத்வேவாஹம்) (ப. 240) என்கிறதுக்கர்த்த₂ம்—நான் ஒருக்கால் இல்லையானேன் என்கிறதில்லை; நீயும் ஒருக்கால் இல்லையானாய் என்கிறதில்லை; இந்த ராஜாக்களும் ஒருக்காலும் இல்லையானார்கள் என்கிறதில்லை; இப்போது இல்லையானார்கள் என்கிற தில்லையானாலும், மேலொருக்கால் நஶிக்கக்கடவர்களாயிருந்தார்களோ? என்னில், (ந சைவ) இத்யாதி₃—இனி மேலொரு

காலத்திலும், நாம் எல்லாரும் இல்லையாகக் கடவோம் என்கிறதில்லை—என்று. ஆக, இத்தால் ஆத்மபரமாத்ம விவேகம் சொல்லிற்று. மேலில் ஶ்லோகத்தால், ப்ரக்ருத்யாத்ம விவேகம் சொல்லுகிறது.— (தே₃ஹிநோऽஸ்மிந்) (ப. 240) என்கிறதுக்கர்த்த₂ம்—தே₃ஹ விஶிஷ்டனான ஆத்மாவுக்கு இந்த ஶரீரத்திலே பா₃ல்யயௌவநவார்த₄க்யங்கள் யாதொருபடி உண்டாயிருக்கிறது, அப்படியே காண் இந்த ஶரீரத்தைவிட்டு வேறொரு ஶரீர(ாந்தர)த்தை ப்ராபிக்கை; இத்தால், பா₃ல்யயௌவந வார்த₄க்யங்களில் பூர்வபூர்வா வஸ்தை₂ விடுகை நாஶமாய்த்தோற்றாதாப்போலே இச் சரீரத்தைவிட்டு ஶரீராந்தரத்தை ப்ராபிக்கையும் நாஶமாய்த் தோற்றாதென்று கருத்து; ஶரீரத்தைவிட்டு ஶரீராந்தரத்தை ப்ராபிக்கை தே₃ஹாத்₃வ்யாவ்ருத்தனுக்கொழியக் கூடாமை யாலே. இத்தாலே ப்ரக்ருத்யாத்மவிவேகம் சொல்லிற்று; (தீ₄ரஸ்தத்ர) (ப. 240) இத்யாதி₃—அறிவுடையவன் இது விஷயமாகக் கலங்கான்—என்று. (அந்தவந்த:) (ப. 240) என்கிறதுக்கர்த்த₂ம்—நித்யனாய், அநாஶியாய், ஜ்ஞாந ஸ்வரூபனாகையாலே அளவிறந்த வைப₄வத்தையுடையனான ஶரீரிக்கு இத்தே₃ஹங்களெல்லாம் நஶ்வரமாகச் சொல்லப் பட்டன; (நித்யஸ்ய—அநாஶிந:) என்கிற இரண்டுக்கும் வாசியென்? என்னில், ஒன்று உத்பத்தியில்லை என்றது; ஒன்று விநாஶமில்லை என்கிறது. "அந்தவந்த இமே தே₃ஹா: நித்யஸ்யோக்தா: ஶரீரிண:। அநாஶிநோऽப்ரமேயஸ்ய தஸ் மாத்₃யுத்₄யஸ்வ பா₄ரத॥" (ந ஜாயதே ம்ரியதே வா கதா₃சித் நாயம் பூ₄த்வா ப₄விதா வா ந பூ₄ய:। அஜோ நித்யஶ்ஶாஶ் வதோऽயம் புராண: ந ஹந்யதே ஹந்யமாநே ஶரீரே॥) (ப.240) இதுக்கர்த்த₂ம்—(ந ஜாயதே ந ம்ரியதே) இவ்வாத்மா சாவது மில்லை பிறப்பதுமில்லை; (நாயம் பூ₄த்வா ப₄விதா வா ந பூ₄ய:) இப்போது பிறவியும் சாவும் இல்லையேயாகிலும், ஸ்ருஷ்டி காலத்தில் உண்டான பிறவியும், ஸம்ஹார காலத்தில் உண் டான நாஶமும்உண்டோ? என்னில், அதுவுமில்லை என்கிறது; (அஜ:)ஷட்₃பா₄வவிகாரமில்லை என்கிறதிலே தாத்பர்யமாக

உபலக்ஷணம்; (நித்ய:) "ந ஜாயதே ந ம்ரியதே" என்கிறவிதி னுடைய அநுபா₄ஷணம்; (ஶாஶ்வத:) ஸம்ஹாரகாலத் திலும், ஸ்ருஷ்டி காலத்திலும் அசித்துக்கு வரக்கடவ ஸ்தூ₂ல ஸூக்ஷ்ம பரிணாமமில்லை என்கிறது; (புராண:) *தேனும் பாலும் கன்னலும் அமுதுமாகத்தித்தித்து; (ந ஹந் யதே ஹந்யமாநே ஶரீரே) ஶரீரம் ஹந்யமாநமாய் உள்ளவள வில் தான் ஸம்ஹரிக்கப்படான்—என்று. (வாஸாம்ஸி ஜீர்ணாநி யதா₂ விஹாய நவாநி க்₃ருஹ்ணாதி நரோऽபராணி। ததா₂ ஶரீராணி விஹாய ஜீர்ணாநி அந்யாநி ஸம்யாதி நவாநி தே₃ஹீ ||) (ப. 240) இதுக்கர்த்த₂ம்—நரனானவன் ஜீர்ணப் புடவைகளை விட்டுப் புதுப்புடவை யுடுக்கும் யாதொருபடி, அப்படியே தே₃ஹ விஶிஷ்டனான ஆத்மாவானவன் ஒரு ஶரீரத்தை எடுத்தால் அது அநுப₄வக்ஷமமல்லாதவளவிலே, அவற்றை விட்டு வேறே புதிய ஶரீரங்களை எடுத்துக் கொள்ளும்—என்று. (பூ₄மி ராபோऽநலோ வாயு: க₂ம் மநோ பு₃த்₃தி₄ரேவ ச। அஹங்கார இதீயம் மே பி₄ந்நா ப்ரக்ருதி ரஷ்டதா₄ ॥ அபரேயம், இதஸ்த்வந்யாம் ப்ரக்ருதிம் வித்₃தி₄ மே பராம்| ஜீவபூ₄தாம் மஹாபா₃ஹோ யயேத₃ம் தா₄ர்யதே ஜக₃த்||) (ப.242) இதுக்கர்த்த₂ம்—ப்ருதி₂வ்யாதி₃பூ₄தங்களும் ப்ரக்ருதி மஹாந் அஹங்காரங்களாய்க்கொண்டு எட்டு வகையாக பி₄ந்நமானவிது எனக்குத் தாழ்ந்த ஶரீரம்; யாதொன்றாலே இந்த தே₃ஹங்களெல்லாம் தா₄ரிக்கப்படுகிறது, அப்படியான ஆத்ம வஸ்துவை எனக்கு உத்க்ருஷ்டமான ஶரீரமாக அறி—என்று. (ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி₃ ஸந்நிவிஷ்ட: மத்த: ஸ்ம்ருதி: ஜ்ஞாநமபோஹநம் ச) (ப. 242) இதுக்கர்த்த₂ம்—எல்லாருடைய ஹ்ருத₃யத்திலும் நானிருப்பன்; என்னால்—பூர்வாநுபூ₄த விஷயமான ஸ்ம்ருதியும், ஶ்ராவண ஜ்ஞாநமும், அஜ்ஞாநமும் உண்டாகாநிற்கும்—என்று. (ஈஶ்வரஸ் ஸர்வ பூ₄தாநாம் ஹ்ருத்₃தே₃ஶேऽர்ஜுந திஷ்ட₂தி। ப்₄ராமயந் ஸர்வ பூ₄தாநி யந்த்ராரூடா₄நி மாயயா ||) (ப.242) இதுக்கர்த்த₂ம்—ஈஶ்வரனானவன், ஶரீரமாகிற யந்த்ராரூட₄ங்களான ஸர்வ பூ₄தங்களையும் மாயையால் ப்₄ரமிப்பித்துக்கொண்டு ஸர்வாத்

மாக்களுடைய ஹ்ருத₃யத்திலே இருக்கும்—என்று. (ப்ரக்ருதே: க்ரியமாணாநி கு₃ணை: கர்மாணி ஸர்வஶ:। அஹங்கார விமூட₄ாத்மா கர்த்தாऽஹமிதி மந்யதே ||) (ப. 244) இதுக்கர்த்த₂ம்-அஹங்காரத்தாலே விமூட₄மான மநஸ்ஸையுடையவன் ப்ரக்ருதியினுடைய கு₃ணமடியாக வருகிற கர்மங்களெல்லாவற்றையும் நான் பண்ணுகிறேன் என்று விசாரியாநிற்கும்—என்று. (யததோ ஹ்யபி கௌந்தேய! புருஷஸ்ய விபஶ்சித:। இந்த்₃ரியாணி ப்ரமாதீ₂நி ஹரந்தி ப்ரஸப₄ம் மந: ||) (ப. 244) இதுக்கர்த்த₂ம்—ப்ராஜ்ஞனான சேதநன் இந்த்₃ரியங்களை ஜயிக்கவேணுமென்று யத்நம் பண்ணாநிற்கச் செய்தேயும், ப₃லிஷ்ட₂ங்களான இந்த்₃ரியங்களானவை மநஸ்ஸை ப₃லாத்கரித்துத் தன் வஶத்திலே இழாநிற்கின்றன—என்று. (அஸம்ஶயம் மஹாபா₃ஹோ மநோ து₃ர்நிக்₃ரஹம் சலம்) (ப. 244) இதுக்கர்த்த₂ம்—அர்ஜுநன் "என்னாலே மநஸ்ஸை நியமிக்கப் போகாது" என்ற வார்த்தையைக்கேட்டு, "நின்றவிடத்தில் நில்லாத மநஸ்ஸை நிக்₃ரஹிக்கப்போகாது"—என்று. (தாநி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர:। வஶே ஹி யஸ்யேந்த்₃ரியாணி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டி₂தா ||) (ப. 244) இதுக்கர்த்த₂ம்—அந்த இந்த்₃ரியங்களையெல்லாம் நியமித்து, நம்மோடே கூட்டரவை ப்ரார்த்தி₂யாநின்று கொண்டு மத்ப்ரிய(பர?)னாயிருக்கக் கடவன்; யாவனொருவனுக்கு இந்த்₃ரியங்கள் ஸ்வவஶமாயிருக்கும், அவனுக்கிறே ப்ரஜ்ஞை நிலைநின்றதாவது—என்று. (யதோ யதோ நிஶ்சரதி மந: சஞ்சலம் அஸ்தி₂ரம்। ததஸ்ததோ நியம்யைதத் ஆத்மந்யேவ வஶம் நயேத் ||) (ப. 245). இதுக்கர்த்த₂ம்—அஸ்தி₂ரமாய், சஞ்சலமான மநஸ்ஸு யாதொரு யாதொரு இடத்திலே ஓடும், அங்கே அங்கே அவற்றின் தோ₃ஷங்களைக் காட்டி மநஸ்ஸைத் திருப்பி ஸ்வவஶமாக்கிக் கொள்ளக் கடவன்—என்று. (சதுர்வித₄ா ப₄ஜந்தே மாம் ஜநாஸ்ஸுக்ருதிநோऽர்ஜுந। ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தா₂ர்த்தீ₂ ஜ்ஞாநீ ச ப₄ரதர்ஷப₄ ||) (ப 245) இதுக்கர்த்த₂ம்—ஆர்த்தன் முதலாக நாலு வகைப்பட்ட ஸுக்ருதிகளான ஜநங்கள் நம்மை

ஆம்ரயிப்பார்சள்—என்று. (த்₃வெள பூ₄தஸர்கெ₃ள லோகே ऽஸ்மிந் தை₃வ ஆஸுர ஏவ ச| தை₃வீ ஸம்பத் விமோக்ஷாய நிப₃ந்த₄ாயாஸுரீ மதா ||) (ப. 245) இந்த லோகத்தில், "தை₃வம்" என்றும், "ஆஸுரம்" என்றும் இரண்டு பூ₄தஸ்ருஷ்டியுண்டு; அவற்றில், தை₃வஸம்பத்தானது மோக்ஷத்தின் பொருட்டாயிருக்கும்; ஆஸுரஸம்பத்தானது ஸம்ஸாரத்தின் பொருட்டாயிருக்கும் — என்று அர்த்த₂ம். (ஹந்த தே கத₂யிஷ்யாமி விபூ₄தீராத்மந: ஶுப₄ா:| ப்ராத₄ாந்யத: குருஶ்ரேஷ்ட₂ நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மே||) (ப. 246) இதுக்கர்த்த₂ம்—ஐயோ! என்னுடைய நல்ல விபூ₄திகளை ஸமுதா₃யமாகச் சொல்லுகிறேன்; "அதுவென்? பரக்கச் சொல்லலாகாதோ?" என்ன, என் விபூ₄திப் பரப்புக்கு ஒரு முடிவில்லை—என்று. (பஶ்யாமி தே₃வாந் தவ தே₃வ தே₃ஹே ஸர்வாந் தத₂ா பூ₄தவிஶேஷஸங்க₄ாந்| ப்₃ரஹ்மாணமீஶம் கமலாஸநஸ்த₂ம் ருஷீம்ஶ்ச ஸர்வாந் உரகா₃ம்ஶ்ச தீ₃ப்தாந்||) (ப. 246) இதுக்கர்த்த₂ம்—தேவரீர் திருமேனியிலே தே₃வர்களையும் காணுகின்றேன்; மற்றுமுண்டான பூ₄தவிஶேஷஸமூஹங்களெல்லாவற்றையும் காணுகின்றேன்; தாமரைப்பூவை ஆஸநமாகக் கொண்டிருக்கிற ப்₃ரஹ்மாவையும், அவனுக்குப் பரதந்த்ரனான ருத்₃ரனையும் மற்றுமுண்டான (தி₃வ்யரான)? மஹர்ஷிகளையும், உஜ்ஜ்வலங்களான அஷ்டநாகங்களையும் காணுகின்றேன் — என்று. (மந்மநா ப₄வ மத்₃ப₄க்தோ மத்₃யாஜீ மாம் நமஸ்குரு| மாமேவைஷ்யஸி யுக்த்வைவம் ஆத்மாநம் மத்பராயண:||) (ப.247) என்னிடத்தில் ப₄க்தியையுடையனாய்க்கொண்டு என்னிடத்தில் மநஸ்ஸை வை; என்னிடத்தில் ப₄க்தியையுடையனாய்க் கொண்டு என்னைத் திருவாராத₄நம் பண்ணு; என்னிடத்தில் ப₄க்தியையுடையனாய்க்கொண்டு என்னையே அடைவுதி— என்று.

(உபாயோபேயத்வே) (ப. 252) என்கிறதுக்கு— உபாயோபேயத்வங்களிரண்டும் உமக்கு ஸ்வரூபம், வந்

தேறியன்று—என்று. 'இவ்வுபாயோபேயத்வங்கள் ஸ்வ ரூபம் என்கிறது என்கொண்டு அறிவோம்?' என்கிற ஶங்கை யிலே அருளிச்செய்கிறார் (உப₄யலிங்க₃விஶிஷ்டதை) (ப. 252) இத்யாதி₃; உப₄யலிங்க₃விஶிஷ்டதையாவது—அகி₂லஹேயப்ரத்யநீகத்வ கல்யாணைகதாநத்வங்கள் இரண்டோடும் கூடியிருக்கை; அகி₂லஹேயப்ரத்யநீகத்வத்தாலே உபாயத்வம் ப₂லிதம்; அதாவது எல்லாருடைய அஶுத்₃தி₄யைப் போக்குகையாலே; கல்யாணைகதாநத்வத்தாலே உபேயத்வம் ப₂லிதம். ஆசார்ய க்ருத்யத்துக்கு அர்த்தி₂த்வம் உண்டாகையாலே "தானே" (வா.14) என்னக்கூடாது. உபாய க்ருத்யம் தனக்கேயுள்ளதொன்றாகையாலே. "ஏறிட்டுக் கொண்டான்" (வா. 14) என்னக்கூடாது. ஆனால் "தானே யேறிட்டுக் கொண்டான்" (வா.14) என்கிறவிது அவ்விரண்டிலும் கூடும்படியென்னென்ன அருளிச்செய்கிறார் (ஆசார்ய க்ருத்யம் ஏறிட்டுக்கொள்ளுகிறவளவில்) (ப.254) இத்யாதி₃. (கார்ப்பண்ய தோ₃ஷோபஹத ஸ்வபா₄வ: ப்ருச்சா₂மி த்வா த₄ர்ம ஸம்மூட₄சேதா:। யச்ச்₂ரேயஸ்ஸ்யாந்நிஶ்சிதம் ப்₃ரூஹி தந்மே ஶிஷ்யஸ்தேऽஹம் ஶாதி₄ மாம் த்வாம் ப்ரபந்நம்॥) (ப. 254) இதுக்கர்த்த₂ம்—து₃:க்கி₂த்வமாகிற தோ₃ஷத்தாலே கலங்கின ஸ்வபா₄வத்தையுடையனாய், த₄ர்மாத₄ர்மமின்னதென்றறியாத மநஸ்ஸையுடையனாய்க்கொண்டு, உம்மைக் கேளாநின்றேன்; எனக்கு யாதொன்று நன்மையாம், அத்தை நிஶ்சயித்து அருளவேணும்; நான் உம்முடைய ஶிஷ்யன்; உம்மை ஶரணம் புகுந்த என்னை நியமித்தருளவேணும்—என்று.

## வாக்யம் 15

(உப₄யத்துக்கும் ஸாத₄ாரண வைப₄வத்தை அருளிச்செய்கிறார்) (ப. 256) என்கிறதுக்கு நியாமகமேதென்று அருளிச்செய்கிறார் (தத்தத₃ஸாத₄ாரண) (ப.258) இத்யாதி₃. அஸாத₄ாரண வைப₄வம் சொல்லுகிறதுக்கு ப்ரயோஜநம் அருளிச்செய்கிறார் (உப₄யத்துக்கும்) (ப. 258) இத்யாதி₃.

"தோ₃ஷத்தையும் கு₃ணஹாநியையும் பார்த்து உபேக்ஷியாத வளவன்றிக்கே" (வா. 15) என்கைக்கு, இவையிரண்டும் உபேக்ஷிக்கைக்கு ஹேதுவோ என்ன அருளிச்செய்கிறார் (இத₃ம் குரு) (ப. 260) இத்யாதி₃. புருஷகாரோபாயங்கள் இரண்டுக்கும் பொதுவான வைப₄வம் சொல்லுகையாலே. இவ்வளவும் ஈஶ்வரன்வாத்ஸல்யத்தை அருளிச்செய்தார். இனிமேல், பிராட்டியுடைய வாத்ஸல்யத்தை அருளிச் செய்கிறார் (இவ்வாத்ஸல்யந்தான்) (ப. 264) இத்யாதி₃.

## வாக்யம் 16

கர்மவஶ்யனான சேதநனுக்கு தோ₃ஷகு₃ணஹாநிகள் இரண்டும் வருமென்று சொல்லலாம்; அகர்மவஶ்யர்களுக்கு தோ₃ஷகு₃ணஹாநிகள் இரண்டும் வருமென்று சொல்லக் கூடாதென்னுமத்தை விவக்ஷித்துக்கொண்டு (எங்ஙனே என்னில்) (ப. 266) என்கிறார். அகர்மவஶ்யராயிருக்கிறவர்களுக்கு அக்ருத்யகரணம் கல்பிக்கை அஸங்க₃தமாயிருந்ததீயென்ன (இதுதான்) (ப. 268) இத்யாதி₃.

## வாக்யம் 17

(பு₃த்₃த்₄வா ச நோ ச) (ப. 272) என்கிறதுக்கர்த்த₂ம்— அறிந்தும் அறியாமேயும் அக்ருத்யகரணம் முதலான அபசாரங்களாலே கெட்டுப்போனேன்—என்று. (அதிக்ராமந் ஆஜ்ஞாம்) (ப. 272) என்கிறதுக்கர்த்த₂ம்—விதி₄நிஷேத₄ங்களில் தேவரீர் பண்ணிவைத்த ஆஜ்ஞையை எதிர் நினைத்தேன்—என்று.

## வாக்யம் 18

"அங்கீ₃காரத்துக்கு அவைதன்னையே பச்சையாக்குகை" (வா. 15) என்கிற வாக்யத்தை விவக்ஷித்துக்கொண்டு "ராக்ஷஸிகள்" (வா. 18) என்கிற வாக்யத்துக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் (இப்படி புருஷகாரமும் உபாயமும்) (ப. 276) இத்யாதி₃. ராக்ஷஸிகள் தோ₃ஷத்தைப் பச்சையாகக்கொண்டு அங்கீ₃கரித்தது மூலத்தில் இல்லையே? என்ன (ஏவம்பூ₄தைகளான) (ப. 278) இத்யாதி₃.

## வாக்யம் 19

ராக்ஷஸிகள்தோ₃ஷம் சொல்லுகிறவிடத்தில் ஶங்கையை யிட்டுப் பரிஹரியாமல். அர்ஜுநனிடத்திலே ஶங்கை யிடுவானென்? என்ன (இப்படி தோ₃ஷ ப்ரஸித்₃தி₄) (ப.280) இத்யாதி₃. ( ஆப₄ரணஸ்யாப₄ரணம் ப்ரஸாத₄நவிதே₄: ப்ரஸாத₄நவிஶேஷ:| உபமாநஸ்யாபி ஸகே₂ ப்ரத்யுபமாநம் வபுஸ் தஸ்யா: ||) (ப. 280) இதுக்கர்த்த₂ம்-அந்த ஊர்வஶியு டைய ஶரீரமானது. ஆப₄ரணத்துக்குமாப₄ரணமாயிருக் கும்; ப்ரஸாத₄ந விதி₄யாவது-வஸ்த்ரா(த்₃யா?)லங்காரம்; அலங் காரத்துக்கும் அலங்காரமாயிருக்கும்; (உபமாநஸ்யாபி ஸகே₂ ப்ரத்யுபமாநம்) என்றது—இவளுடைய முக₂த்தைக் கண்டு சந்த்₃ரனை அறியலாமாயிருக்கும்—என்று. ப₃ந்து₄க்கள் பக்கல் ஸ்நேஹமும் காருண்யமும் நல்லதன்றோ என்ன, (இவற்றில் ஸ்நேஹ காருண்யங்கள்)(ப. 284) இத்யாதி₃. (அஸ்தா₂ந....) (ப. 284) இதுக்கர்த்த₂ம்—ஸ்தா₂நமல்லாத ஸ்தா₂நத்திலே உண்டான ஸ்நேஹ காருண்யங்களென்ன. ஸ்வத₄ர்ம மான யுத்₃த₄த்திலே அத₄ர்மபு₃த்₃தி₄யென்ன இவற்றாலே கலங்கியிருக்கிறவனை—என்று. ஸ்நேஹ காருண்யங்கள் தோ₃ஷமென்னுமிடத்தை ஸப்ரமாணமாக உபபாதி₃க்கிறார் ( த₄ர்மக்ஷேத்ரே ) (ப. 284) என்று தொடங்கி. (இதுக் கர்த்த₂ம்)—புண்ய க்ஷேத்ரமான குருக்ஷேத்ரத்திலே யுத்₃த₄த்திலே இச்சையுடையவர்களாய்க்கொண்டு கூடின வர்கள்—(என்று.) (ந காங்க்ஷே....) (ப. 286) நான் விஜயமும், ராஜ்யமும், ஸுக₂மும் ஆசைப்படுகிறே னல்லேன்; எங்களுக்கு ஸுக₂மும் ராஜ்யமும் ப்ராணனும் ஏதுக்காக? அவற்றைக்கொண்டு கார்யமில்லை. "ராஜ்யாதி₃ களையெல்லாம் வேண்டா என்கிறதுக்குக் கருத்தென்?" என்று க்ருஷ்ணன் கேட்க, சொல்லுகிறான் (யேஷாமர்த்தே₂) (ப.286) இத்யாதி₃-யாவர் சிலர்க்காக ராஜ்ய போ₄க₃ ஸுக₂ங்க ளெல்லாம் எங்களாலே ஆசைப்படப்பட்டது. அவர்கள் யுத்₃த₄த்திலே, ப்ராணன்களிலும் த₄நங்களிலும் ஆசையற்று வந்தார்கள்; ஆனபின்பு, எங்களுக்கு ராஜ்யத்தில் நசையற

அமையும். (தாந் ஸமீக்ஷ்ய.... ) (ப. 286) குந்தியுடைய பிள்ளையானவன், யுத்₃த₄ம் பண்ணவேணுமென்று கூடி யிருக்கிற தன் ப₃ந்து₄க்களைக் கண்டு, மிக்க க்ருபையோடே கூடிக்கொண்டு, து₃:க்க₂ப்பட்டு ஒரு வார்த்தை சொன்னுன். கீழே 'இவர்களை ஸம்ஹரித்தால் வம்ஶக்ஷயம் பண்ணினதாம்' என்று சொன்னுன். "உங்களைக் கொன்ருல் இத்தோ₃ஷம் வாராதோ? அவர்கள் செய்கிற மந்த்ரம் நீயும் செய்ய வொண்ணுதோ?" என்ன, "அவர்கள் அறியாமையாலே செய்கிருர்கள்; அறிந்த நமக்குப் பரிஹரிக்கவேண்டாவோ" என்கிருன் (கத₂ம் ந ஜ்ஞேயம்) (ப. 286) இத்யாதி₃— ஜநார்த₃நனே! குலக்ஷயமடியாக வந்த தோ₃ஷத்தை அறிந்த நம்மாலே இந்தப் பாபத்தினின்றும் திரும்புகை எங்ஙனே அறியமாட்டாதிருக்கிறது? ஆகையால் அவஶ்யம் பரிஹரிக்கவேண்டாவோ? (அஹோ ப₃த....) (ப.286) ராஜ்ய ஸுக₂த்தில் ஆஶையாலே ப₃ந்து₄க்களை ஸம்ஹரிக்க உத்₃ யோகி₃த்தோம் என்பது யாதொன்று. ஆகையாலே நாங்கள் மஹாபாபத்தைப் பண்ண உத்₃யோகி₃த்தோமே! ஐயோ! இதொரு ஆஶ்சர்யமிருந்தபடியென்!

## வாக்யம் 20

"அவன் அஶக்தனுய்க் கண்டிருந்தானன்றே; த₄ர்ம பு₃த்₃தி₄யாலே யன்ரோ பொறுத்திருந்தது" என்ன அருளிச் செய்கிருர் (கோ₃விந்த₃ புண்ட₃ரீகாக்ஷ) (ப.288) இத்யாதி₃.

## வாக்யம் 21

1. தோ₃ஷத்தின் கொடுமையாவது — தலையறுக்க வேண்டும் குற்றம் உண்டாயிருக்கை; அத்தை "நிரஸிக்க ப்ராப்தமாயிருக்க" (வா.21) என்று மூலத்தில் சொல்லுகை யாலே (இத்தோ₃ஷத்தின் கொடுமையை உபபாதி₃க்கிருர்) (ப.292) என்கிருர். 2. இந்த யோஜனையில் "நிரஸிக்க ப்ராப்த மாயிருக்க"(வா.21)என்கிறதுக்கு ஸங்க₃தியாமித்தனையல்லது "வைத்தது—த்₃ரௌபதி₃யுடைய மங்க₃ள ஸூத்ரத்துக்காக" (வா. 21) என்கிறவிதுக்கு ஸங்க₃தியாகமாட்டாதென்று

திருவுள்ளம்பற்றி. இவ்வாக்யத்துக்கெல்லாம் சேர இன்னமும் ஒரு யோஜனை அருளிச்செய்கிறார் (அன்றிக்கே இத்தோ₃ஷம்) (ப. 292) இத்யாதி₃. "பாண்ட₃வர்கள்" (வா.21) என்கிற வாக்யத்தில், முற்தின யோஜனையில், "ப்ரத₄ாந தோ₃ஷம்" (வா. 20) என்கிறத்தை தளமாக்கிக்கொண்டு இவ்வாக்யத்துக்கு ஸங்க₃தி சொல்லலாயிருக்கையாலே, கீழ் வாக்யத்தோடே சேர்த்தியுண்டு; அநந்தரயோஜனையில் கீழ் வாக்யத்தோடே இவ்வாக்யம் சேரும்படியென்? என்னில், "த்₃ரௌபதீ₃பரிப₄வம் கண்டிருந்தது" (வா. 20) என்று தொடங்கி, அர்ஜுனன் ஒருவனுக்குமிறே தோ₃ஷம் சொல்லிற்று; இப்படி இவன் ஒருவனிடத்திலே ஒதுக்க வேணுமோ? ஐவர்க்கும் ஒவ்வாதோ! என்று இப்படி ஸங்க₃தி சொல்லிக்கொள்வது என்று நினைத்து (இத்தோ₃ஷம் ஐவர்க்கும் ஒவ்வாதோ) (ப. 292) என்கிறார்.

## வாக்யம் 22

தூ₃த்ய ஸாரத்₂யங்கள் பண்ணிற்றும் ப்ரபத்த்யுபதே₃ஶம் பண்ணிற்றும் இவளுக்காக" (வா. 22) என்னுமிடம் எங்ஙனே? என்ன அருளிச்செய்கிறார் (தூது போய்த்தது) (ப.296) இத்யாதி₃. (ந யோத்ஸ்யாமி)—யுத்₃த₄ம் பண்ணக் கடவேன் அல்லேன். (ஸர்வ) (ப. 298) இத்யாதி₃—கீழ் உபதே₃ஶித்த அர்த்த₂ங்களெல்லாவற்றிலும் பரமரஹஸ்யமாய், ஸர்வோத்க்ருஷ்டமான வார்த்தையை என்பக்கல் நின்றும் கேள்; எனக்கு த்₃ருட₄னாக இஷ்டனாகாநின்றாய் என்று கொண்டு உனக்கு ஹிதம் சொல்லாநின்றேன்; என்னிடத்திலே ப₄க்தியை யுடையனாய்க்கொண்டு, என் பக்கலிலே மநஸ்ஸை வை; என்னைத் திருவாராத₄நம் பண்ணு; என்னை வணங்கு; இப்படியானால் என்னையே கிட்டுவாய்; இது மெய்; உனக்கு ப்ரதிஜ்ஞை பண்ணுநின்றேன். நீ எனக்கு இஷ்டனாகை யாலே. ஆப்தனான உனக்குப் பொய் சொல்லுவனோ? "அறியாத அர்த்த₂ங்களிலே வாத்ஸல்யாதி₃கள் ஸூசிதமான படி" (ப. 300) என்னென்னில்; விஶ்வருபத்தைக் காட்டுகை

யாலே ஸ்வாமித்வமும், தத்வவிவேகம் சொல்லுகிறவிடத்திலே ஸௌலப்₄யமும் சொல்லிற்று. (அஸ்மாந் வேத்த₂....) (ப. 300) தான் தூது எழுந்தருளுகிறபோது, த₄ர்மபுத்ரனை "நானங்குப்போனால் சொல்லும்படி எங்ஙனே?' என்று கேட்க, அப்போது த₄ர்மபுத்ரன் சொன்ன வார்த்தையாய்த்து இஸ்லோகம்; "எங்களையறிவீர்; ஶத்ருக்களையறிவீர்; அங்குப்போனால் சொல்லும் கார்யமறிவீர்; வார்த்தை சொல்லவும் வல்லீர்; ஆகையாலே, எங்களுக்கு யாதொன்று ஹிதமானது, அத்தை து₃ர்யோத₄நன் சொல்லப்படுவனாக" விக்₃ரஹ விஶிஷ்டனானவனே உபாயமாகையாலே, உபாயத்வம் சொல்லுகையாலே "சரணௌ" என்கிற பதமும் ஸூசிதம் (ப. 302).

**இரண்டாம் அநுப₃ந்த₄த்தில் ப்ரத₂மப்ரகரணம் ஸமாப்தம்.**

ஶ்ரீ:
ஶ்ரீமதே ராமாநுஜாய நம:

## அநுப₃ந்த₄ம் 3

# மற்றோர் அரும்பத₃வுரை

### வாக்யம் 4

"அத்தாலே அது முற்பட்டது" (வா. 4) என்கிறதினுடைய யோஜநாத்₃வயத்துக்கும் "அப்₄யர் ஹிதம்" என்றதுக்கும் இனி பே₄த₃ம். முந்தின யோஜனைக்கு (ப. 120) அத்தாலே என்றது—ப்ரமாண ப₃லமாகிற அத்தாலே—என்றபடி. இரண்டாம் யோஜனைக்கு (ப. 122) அத்தாலே என்றதுக்கு—"ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்கள்"(வா. 1) என்கிற ஸமஸ்தபத₃மான இடத்துக்கு, இப்படி இவர்க்கு ஸமாஸ விவக்ஷையாகிற அத்தாலே—என்றபடி.

### வாக்யம் 9

ஈஶ்வரநிமித்தமாகவொழிய திருவடி நிமித்தமாகப் புருஷீகரித்தமை புருஷகாரமோ? என்ன (ஆகையால் இரண்டு த₃ஶையிலும்) (ப. 208) இத்யாதி₃. (இதுவும்

கூட்டக் குறையில்லை) என்றது—திருவடிநிமித்தமாகப் புருஷீகரித்தமையும் கூட்டக்குறையில்லை—என்றபடி.

## வாக்யம் 10

கீழே. "ஸம்ஶ்லேஷ விஶ்லேஷங்களிரண்டிலும் புருஷ காரத்வம் தோற்றும்" (வா. 9) என்றவிடத்தில். இளைய பெருமாள். காகம் இவர்கள்நிமித்தமாகப் பெருமாள் விஷயத்திலும், ராக்ஷஸிகள்நிமித்தமாகத் திருவடி விஷயத் திலும் புருஷீகரித்தமையன்றோ ப்ரஸ்தாவப்? இங்கே, ஈஶ்வரனை அங்கீகாரோந்முகனாக்குகை, சேதநனை ஆஶ்ரய ணோந்முகனாக்குகை என்று வ்யாக்யாநம் பண்ணக்கூடுமோ? என்ன (ஸம்ஶ்லேஷதஶையில் இளையபெருமாளுக்காக) (ப. 210) இத்யாதி. (ஶ்ருணோதி) (ப. 212)—கேட்குகை என்றபடி. (ஶ்ரூணாதி) (ப. 212)—பரப்புகை என்றபடி.

## வாக்யம் 14

"ஆசார்ய க்ருத்ய" (வா. 14) இத்யாதி வாக்யத்ரயத் துக்கும்—அர்த்தித்வமும் இன்றிக்கே அந்யக்ருத்யமான வற்றையும் ஏறிட்டுக்கொண்டானோ? என்ன (ஆசார்ய க்ருத்யம் ஏறிட்டுக்கொள்ளுகிறவளவில்) (ப.254) இத்யாதி.

## வாக்யம் 15

கீழே புருஷகார ஸ்வரூபம் சொன்னாப்போலே உபாய ஸ்வரூபம் சொல்லிற்றோ? என்ன (உபாயத்துக்கும்) (ப.258) இத்யாதி. இது அவாந்தரஸங்கதி.

## வாக்யம் 16

(இவ்வர்த்ததத்வமறியாதவர்களுக்கு)(ப.270)என்றது- 'தோஷகுணஹாநிகளையே பச்சையாகக்கொண்டு அங்கீ கரிக்கும்' என்கிற அர்த்த தத்வமே அறியாதவர்களுக்கு— என்றபடி.

## வாக்யம் 22

இவளுக்காகச் செய்தான் என்றால், அர்ஜுநனுடைய தோஷகுணஹாநிகளைப் பச்சையாகக் கொண்டான் என்று சொல்லும்படியென்? என்ன (ஆக இப்படி அஸ்தாந ஸ்நேஹாதிகளும்) (ப. 298) இத்யாதி.

மூன்றும் அநுபந்தத்தில் ப்ரதமப்ரகரணம் ஸமாப்தம்.

## அநுப₃ந்த₄ம் 4

## ந்யாயங்கள் (न्यायानां-अनुक्रमणिका)

(அட்டவணை)

நாலாம் அநுப3ந்த4த்தில் ப்ரத2மப்ரகரணம் முற்றிற்று.

## அநுப3ந்த4ம் 5

## ஶப்3தா3ர்த்த2ங்கள்

(அட்டவணை)

(ஸ்ரங்குஶ)

ஐந்தாம் அநுப₃ந்த₄த்தில் ப்ரத₂மப்ரகரணம் முற்றிற்று.

## அநுப₃ந்த₄ம் 6

# உதா₃ஹரிக்கப்பட்ட பெரியோர்களின் திருநாமங்கள்

( அட்டவணை )

ஆறும் அநுப3ந்த4த்தில் ப்ரத2மப்ரகரணம் முற்றிற்று.

## அநுப₃ந்த₄ம் 7

# நிஷ்கர்ஷங்கள்



ஏழாம் அநுப₃ந்த₄த்தில் ப்ரத₂மப்ரகரணம் முற்றிற்று.

## அநுப₃ந்த₄ம் 8

## பரிஷ்காரங்கள் (परिष्काराणां अनुक्रमणिका)

( அட்டவணை )

42. श्रियः अनन्यार्हत्वं 168
43. श्रियः शरणत्वं 182
44. श्रीदेवीकृपायाः परमत्वं 232
45. सङ्ग्रहत्वं 5
46. ஸஹிப்பிக்கை 44
47. सारासारविवेकः 20, 21
48. स्वरूपनिरूपकत्वं 171

எட்டாம் அநுப₃ந்த₄த்தில் ப்ரத₂மப்ரகரணம் முற்றிற்று.

## அநுப₃ந்த₄ம் 9

# வ்யாக்₂யா த்₃வயத்தில் காணப்படும் பே₄த₃ம்

*(1) மணற்பாக்கத்துநம்பியார் என்று பெரியஜீயர் (ப. 33). திருச்சானூர் நம்பியார் என்று ஆய் (ப. 60). விரோத₄ பரிஹாரம் அரும்பதவுரைகளில் (ப. 33)*

*(2) 9-வது ஸூத்ரத்தில் (ப. 198) த₃ஶாத்₃வய புருஷகாரத்வம் ப்ரமேயம் என்று பெரியஜீயர்; (ப. 199ல்) ஸம்ஶ்லேஷத₃ஶாக்₃ரஹணம் த்₃ருஷ்டாந்தார்த்த₂ம் என்று ஆய்.*

*(3) ஈஶ்வரன் மீளாமைக்கடி நிருபணத்தில் பே₄த₃ம் (ப. 232, 235)*

*(4) ஆசார்யக்ருத்யம்ஆருடையது என்ற நிஷ்கர்ஷத்தில் பே₄த₃ம். (பெரியஜீயர் ப. 238)—ஆசார்யக்ருத்யமான அஜ்ஞாதஜ்ஞாபநம் ஶரண்யக்ருத்யமன்றே. (ஆய் ப. 251)—ஆசார்யத்வம் ஸ்வகு₃ணமாயிருக்க.*

*(5) உபாயக்ருத்யம் ஏறிட்டுக்கொண்டமை நிருபணத்தில் பே₄த₃ம் (252, 253)*

*(6) ப்ரத₂மப்ரகரண ப்ரதிபாத்₃யம்-உப₄யவைப₄வம் ப்ரதா₄ந ப்ரமேயம் என்று பெரியஜீயர் (ப. 302). ப்ரத₂ம ப்ரகரணப்ரதிபாத்₃யம் புருஷகாரவைப₄வம்; உபாயவைப₄வம் தச்சே₂ஷதயா உக்தம் என்று ஆய் (ப. 303).*

ஒன்பதாம் அநுப₃ந்த₄த்தில் ப்ரத₂மப்ரகரணம் முற்றிற்று.

## அநுப$_3$ந்த$_4$ம் 10

# அரும்பத விளக்கங்களில் காணப்படும் பே$_4$த$_3$ங்கள்

| பக்கம் | |
|---|---|
| 3.5 | "ஸகல" ஶப்$_3$தா$_3$ர்த்த$_2$ நிரூபணத்தில் பே$_4$த$_3$ம் |
| 5.6 | "ஆகாரத்ரய" நிரூபணத்தில் பே$_4$த$_3$ம் |
| 7.8 | "நித்யாஸங்குசித" ஶப்$_3$தா$_3$ர்த்த$_2$ நிரூபணத்தில் பே$_4$த$_3$ம் |
| 9 | "யோக்$_3$யதா" ஶப்$_3$தா$_3$ர்த்த$_2$ நிரூபணத்தில் பே$_4$த$_3$ம் |
| 10 | "மாயா" "ப$_4$க$_3$வந் மாயா" என்று பாட$_2$ பே$_4$த$_3$ம் |
| 10.11 | "ஸ்வப்ரகாஶ" ஶப்$_3$தா$_3$ர்த்த$_2$ நிரூபணத்தில் பே$_4$த$_3$ம் |
| 12 | "படுகுழிகள்" "படுகுழி" என்று பாட$_2$ பே$_4$த$_3$ம் |
| 12 | "தத$_3$நுகு$_3$ண" "தத்தத$_3$நுகு$_3$ண" என்று பாட$_2$ பே$_4$த$_3$ம் |
| 13 | பரமப்ராபகத்வ நிரூபணத்தில் பே$_4$த$_3$ம் |
| 13 | அத்யந்த வைமுக்$_2$ய நிரூபணத்தில் பே$_4$த$_3$ம் |
| 18 | "அறிந்தே" என்ற அவதா$_4$ரணார்த்த$_2$ நிரூபணத்தில் பே$_4$த$_3$ம் |
| 24 | "தாத்பர்ய" ஶப்$_3$தா$_3$ர்த்த$_2$ நிரூபணத்தில் பே$_4$த$_3$ம் |
| 31.32 | "பெருமாளும்" ஶப்$_3$தா$_3$ர்த்த$_2$ நிரூபணத்தில் பே$_4$த$_3$ம் |
| 37 | "வசநபூ$_4$ஷண" ஶப்$_3$தா$_3$ர்த்த$_2$ நிரூபணத்தில் பே$_4$த$_3$ம் |
| 57.58 | "திருமாமகள்" தனியன் பாட$_2$த்திலும் அர்த்த$_2$த்திலும் பே$_4$த$_3$ம் |
| 78 | "பர" ஶப்$_3$தா$_3$ர்த்த$_2$ நிரூபணத்தில் பே$_4$த$_3$ம் |
| 96 | "ஈஹா" ஶப்$_3$தா$_3$ர்த்த$_2$ நிரூபணத்தில் பே$_4$த$_3$ம் |
| 106 | "ஶாகா$_2$ர்த்த$_2$ங்கள்" "ஶாகா$_2$ந்தரங்கள்" என்று பாட$_2$ பே$_4$த$_3$ம் |
| 144 | "ருசிபரவஶ" என்று வ்யாக்$_2$யாந பாட$_2$ம்; "ருசிவிவஶ" என்று அண்ணாவப்பங்கார் ஸ்வாமி பாட$_2$ம் |
| 180 | "பீ$_4$தைகளாய்" "பீ$_4$தபீ$_4$தைகளாய்" என்று பாட$_2$ பே$_4$த$_3$ங்கள் |
| 202 | ஜயந்தனைப்பற்றிய விசாரத்தில் பே$_4$த$_3$ங்கள் |
| 233-238 | ராவணனைத் திருத்தாதொழிந்தமை நிரூபணத்தில் பே$_4$த$_3$ம் |

பத்தாவது அநுப$_3$ந்த$_4$த்தில் ப்ரத$_2$மப்ரகரணம் முற்றிற்று.

# அநுப$_3$ந்த$_4$ம் 11

## உத$_4$ாஹ்ருத க்$_3$ரந்த$_2$ங்கள்

(அட்டவணை)

[வ்யாக்$_2$யாநங்களிலும், அரும்பதவுரைகளிலும் எடுக்கப் பட்ட வேத$_3$வேத$_4$ாந்த தி$_3$வ்யப்ரப$_3$ந்த$_4$வசநங்கள் தவிர்ந்த மற்ற வசநங்களை உட்கொண்ட கிரந்தங்களுக்குத் தெரிந்தவரையில் இங்கு அட்டவணை கொடுக்கப்படுகிறது. ஐதிஹ்யவ்யாகர ணைதி$_3$விஷயங்கள் எடுக்கப்படும் பக்கங்களும் காட்டப்படு கின்றன. எல்லா ப்ரகரணங்களிலும் உள்ள எல்லா ப்ரமாணங் களுக்கும் ஆகரம் முதலானவை கடைசி ப$_4$ாக$_3$த்தில் கொடுக்கப்படும்.]

1 அதிமாநுஷஸ்தவம் 283
2 அஷ்டஶ்லோகீ 41. 55
3 ஆசார்யஹ்ருத$_3$யம் 79. 240. 241. 243
4 ஆபஸ்தம்ப$_3$த$_4$ர்ம ஸூத்ரம் 287
5 ஈடு 3. 139
6 உத்தரமீமாம்ஸா 83. 88. 97. 127. 129. 178. 252. 266. 268. 287
7 ஐதிஹ்யங்கள் 16. 26. 27. 33. 53, 60. 66
8 குறுந்தொகை 175
9 க$_3$த்$_3$யத்ரயம் 10 42. 53, 162 196. 260. 264. 266
10 கீ$_3$தா 6 11 17. 19. 21. 50. 51. 66. 75. 85. 136 149, 161 171. 240—248 252 261. 262. 271, 283—287, 290 296—299, 301
11 கீ$_3$தாப$_4$ாஷ்யம் 2. 171. 245 247. 288
12 கீதார்த்த$_2$ஸங்க்$_3$ரஹம் 50. 51. 284. 285. 288
13 கௌ$_3$தமத$_4$ர்மஸூத்ரம் 74
14 சது:ஶ்லோகீ 153
15 சரமோபாயநிர்ணயம் 27
16 தத்வத்ரயம் 134
17 தத்வதீ$_3$பம் 228
18 தத்வநிர்ணயம் 118
19 தாத்பர்யதீ$_3$பிகா 117
20 திருக்குறள் 175

பதினொராம் அநுப₃ந்த₄த்தில் ப்ரத₂மப்ரகரணம் முற்றிற்று.

## அநுப₃ந்த₄ம் 12
# பாட₂ஶோத₄நங்கள்

[பழைய பதிப்புகளில் லேக₂கப்ரமாத₃ாதி₃களால் ஏற்பட்டுவிட்ட பாட₂ங்களும், நமது பதிப்பில் அவற்றின் ஶோத₄நங்களும் கீழே கொடுக்கப்படுகின்றன]

| பக்கம் | வரி | பாட₂ம் | ஶோத₄நம் |
|---|---|---|---|
| 51 | 24 | என்றும் | என்ற |
| 56 | 10 | உக்தமான | முக்தகமான |
| 68 | 18 | ஸாத₄ாரண | ஸாவத₄ாரண |
| 70 | 14 | தூ₃ஷண | பூ₄ஷண |
| 86 | 29 | படுகிறது மேல் | படுகிறது. மேல் |
| 87 | 10 | என்னுமளவாக. (பாரா) | என்னுமளவாக (பாரா இல்லை) |
| 98 | 23 | ஸஞ்சாரிதமாகையாலே | ஸஞ்சாரிதமாகையாலேயும் |
| 107 | 30 | [(அபேக்ஷித....) ப்ரதீகத₄ாரணமில்லை;] | [ப்ரதீகத₄ாரணம் அச்சிடப்பட்டுள்ளது] |
| 109 | 26 | என்கிறது. மேல் | என்கிற மேல் |
| 129 | 4 | என்கிற வேத₃ | என்கிறது. வேத₃ |
| 154 | 10 | விஶிஷ்ய | விஶிஷ்ட |
| 159 | 24 | ஸர்வாதி₄காரத் வார்த்த₂மான | ஸர்வாதி₄....மாக. |
| 161 | 11 | हितबुद्ध्यापि | हितबुद्ध्या |
| 166 | 20 | एकमेव | एक एव |
| 172 | 18 | ஶேஷிஶேஷத்வ | ஶேஷஶேஷத்வ |
| 175 to 179 | | பக்கம் 175முதல் 179ல் "உடையளாயிருக்கையாலே" என்பதீறாக உள்ள எம்பார் ஜீயர் ஸ்வாமி அரும்பதவுரைப்பங்க்திகள் பிழையாக ஏழாவது வாக்யத்தின் முடிவில் அச்சிடப்பட்டிருந்தன; நமது பதிப்பில் எட்டாவது வாக்யத்தின் தொடக்கத்தில் அச்சிடப்பட்டுள்ளன. | |
| 175 | 18 | அள்ளிக்கொண்டத்தே பயப்பு | அள்ளிக்கொள்வற்றே பசப்பு |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 175 | 20 | பயத்தலாவேன் | பரத்தலானே |
| 177 | 8 | देवत्वे देवदेहा विष्णोः | विष्णोः देवत्वे देवदेहा |
| 185 | 23 | கருத்து என்றும் | கருத்து என்று |
| 205 | 13 | हरे त्वत्तः | हरेस्त्वत्तः |
| 205 | 17 | பொறுத்திருக்கையன்று | பொறுத்திருக்கை என் ? |
| *223 | 17 | विकृति | இக்ருதி |
| 229 | 20 | श्रावयत्युत | श्रावयत्येत |
| 229 | 26 | कर्महेतुकवैमुख्यமும். புண்யபாப ஹேதுக வைமுக்₂யமும். | कर्महेतुकवैमुख्यமும். |
| 231 | 4 | இவ்வுபதேஶ | இவனுபதே₃ஶ |
| 233 | 10 | அருளாதொழிந்தது | அருளாதொழிந்த |
| 236 | 27,28 | என்று அவன் குடியிருப்பால் | என்றவன் குடிப் பிறப்பால் |
| 243 | 2 | பரிஹாரத்வமாகிற | பரிஹாரகத்வமாகிற |
| 247 | 19 | चाद्यं पुरुषं | चाद्यं |
| 250,251 | கடைசிவரிகள் | ஶங்காபூர்வகமாக | ஶங்காபரிஹாரபூர்வகமாக |
| 259 | 2 | தத்பூர்வ | தத்பூர்வக |
| 259 | 22 | वैभवगत | वैभवागत |
| 261 | 8 | காட்டேறின | காம்ப்பேறின |
| 261 | 15 | उभयसाधारणமான | उभयसाधारणस्वरूपமான |
| 262 | 19 | என்கிற வசநம் | என்கிற |
| 267 | 4 | நினைக்கை | நினைக்கில் |
| 267 | 23 | फल्गुत्वेन | अफल्गुत्वेन |
| 269 | | 17வது வாக்யம் ஆய்ப்படியில் "அக₂டித" என்று தொடங்கி. "உண்டாகையாகிறது" என்பதிருக உள்ள பங்க்திகள் ஓலைசுவடியின் பக்கமாறுதலாலே மாறி விழுந்திருக்கின்றன. சரி செய்யப்பட்டு 16-வது வாக்யத்தின ஈற்றில் நம்மால் அச்சிடப்பட்டுள்ளன. | |

* இது நம்முடைய பதிப்பிலும் பிழையாக விழுந்திருக்கிறது. திருத்திக்கொள்ளவும்.

| | | | |
|---|---|---|---|
| 271 | 8 | தேடின | அடியறத்தேடின |
| 275 | 17 | अमिद्रोग्धुं | ह्यमिद्रोग्धुं |
| 281 to 295 | | 281-295 பக்கங்களில் ஆய்ப்படியில் தனித் தனி அவதாரிகை இல்லாமையால். 19. 20. 21 வாக்யங்கள் ஆய்ப்படியில் ஒரே வாக்ய மாகக் கொள்ளப்பட்டிருப்பது தெளிவு. 19, 20 வாக்யங்களின் ஆய் வ்யாக்₂யாநம் "....ஸங்கித்து (285)....என்று பரிஹரிக்கிறார் (289)" என்று ஒரே பாராவாக இருப்பது காணத்தக்கது. பழைய பதிப்பில் தனி வாக் யங்களாகக் கொண்டு தனிப்பாராக்களாகப் பிரித்து அச்சிட்டிருப்பது தவறு. | |
| 281 | 17 | परिकर्म | प्रतिकर्म |
| 282 | 19 | "தலை" | "தலைவன்" |
| 283 | 10,11 | என்கிறவிடத்தில் | "केशवस्यात्मा" என்கிறவிடத்தில் |
| 298 | 4,7 | த்₃ருட₄ இதி | த்₃ருட₄மிதி. |

## அநுப₃ந்த₄ங்கள்

| | | | |
|---|---|---|---|
| 11 | 21 | அவற்றுக்குத்தரம் | உத்தரம்—அவற்றுக்கு |
| 17 | 5,7 | விவக்ஷயாகையாலே என்றபடி...என்கிறார் | விவக்ஷயாகையாலே ...என்கிறார் என்றபடி. |
| 18 | 26 | என்றபடி. புருஷகாரமாக | என்னும்படி புருஷகாரமாக |
| 20 | 18,19 | "நீர் இந்த வார்த்தை கேட்டபோதே" என்பது அந்வயிக்கவில்லை; "நீர் சொன்ன இந்த வார்த்தை..." என்றோ "நீர் இந்த வார்த்தை சொல்லக் கேட்டபோதே" என்றோ இருக்க வேண்டும். திருத்திக்கொள்ளவும். | |
| 20 | 29 | க்ரமம் | ஶ்ரமம் |
| 26 | 30 | ஸாத₄ரண | அஸாத₄ரண |
| 31 | 9,10 | சொல்லப்படுவன்" ஆக, விக்₃ரஹ.... | சொல்லப்படுவனாக." விக்₃ரஹ.... |

பனிரண்டாம் அநுப₃ந்த₄த்தில் ப்ரத₂மப்ரகரணம் முற்றிற்று.

## ★ ஸ்ரீஸூக்திமாலா வெளியீடுகள் ★

பதவுரை, அரும்பதவுரை, ப்ரமாணத்திரட்டு முதலானவற்றோடு கூடிய பெரியவாச்சான்பிள்ளை முதலான பூர்வாசார்யர்களின் க்ரந்தங்கள்.

| க்ரந்தங்கள் | விலை | தபால் |
|---|---|---|
| 1. பரந்த ரஹஸ்யம் முதலிய எட்டு ரஹஸ்யங்கள் | 1-50 | -35 |
| 2. ஸ்தோத்ரரத்நசதுஃஶ்லோகீ ஜிதந்தே வ்யாக்யானங்கள் | 3-00 | -55 |
| 3. திருப்பல்லாண்டு வ்யாக்யானம் | 1-50 | -35 |
| 4. முதல் திருவந்தாதி வ்யாக்யானம் | 1-88 | -40 |
| 5. பெருமாள் திருமொழி வ்யாக்யானம் | 1-38 | -40 |
| 6. திருமாலை வ்யாக்யானம் | 2-75 | -50 |
| 7. திருவாசிரியம் பெரியதிருவந்தாதி வ்யாக்யானம் | 1-63 | -40 |
| 8. சதுஃச்லோகீ வ்யாக்யானம் (நாயனாராச்சான்பிள்ளை) | 1-50 | -35 |
| 9. கத்ய வ்யாக்யானங்கள் | 2-00 | -47 |
| 10. நாச்சியார் திருமொழி வ்யாக்யானம் | 4-00 | -75 |
| 11. திருச்சந்தவிருத்த வ்யாக்யானம் | 3-00 | -55 |
| 12. நான்முகன திருவந்தாதி வ்யாக்யானம்(விவரணத்துடன்) | 2-00 | -50 |
| 13. ஸ்ரீராமாயண தனிச்லோகம் (விவரணத்துடன்) I Part. | 3-50 | -65 |
| ஷை இரண்டாம் பாகம் (விவரணத்துடன்) | 7-00 | 1-25 |
| 14. திருப்பள்ளியெழுச்சி வ்யாக்யானம் | 0-50 | -25 |
| 15. பாசுரப்படி ராமாயணம் (விலையில்லை தபால்கூலி 0-10) | | |
| 16. அமலனாதிபிரான் வ்யாக்யானங்கள் | 1-88 | -40 |
| 17. கண்ணிநுண்சிறுத்தாம்பு வ்யாக்யானம் | 2-75 | -50 |
| 18. சிறியதிருமடல் வ்யாக்யானம் (விவரணத்துடன்) | 1-38 | -35 |
| 19. முமுக்ஷுப்படி வ்யாக்யானம் | 3-00 | -55 |
| 20. பெரியதிருமடல் வ்யாக்யானம் (விவரணத்துடன்) | 1-50 | -35 |
| 21. முதல்திருவந்தாதி, அப்பிள்ளையுரை(விவரணத்துடன்) | 3-00 | -55 |
| 22. இரண்டாந்திருவந்தாதிவ்யாக்யானம்(விவரணத்துடன்) | 4-00 | -75 |
| 23. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம் (சரமோபாயநிர்ணயம், பெரியதிருமுடியடைவு முதலானவற்றுடன் கூடியது) | 7-00 | 1-00 |
| 24. ஸ்ரீவசநபூஷண வ்யாக்யாநம் 4-அரும்பதவுரைகளுடன் முதல்பாகம் | 6-00 | 1-00 |

## ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. திருப்பாவை வ்யாக்யானம் | 3-00 | -55 |
| 2. (போதாயந) ஸந்த்யாவந்தநம் பதவுரையுடன் | 0-31 | -10 |
| 3. (போதாயந) உபாகர்மவிதி | 0-31 | -10 |
| 4. புருஷஸூக்த வ்யாக்யானம் | 0-75 | -25 |
| 5. நாராயணஸூக்த வ்யாக்யானம் | 0-75 | -25 |
| 6. ஸ்ரீஸூக்த வ்யாக்யானம் | 2-00 | -48 |
| 7. பூ நீளா விஷ்ணுஸூக்த வ்யாக்யானங்கள் | 1-75 | -50 |
| 8. தேஹளீச ஸுப்ரபாதம் | 0-25 | -10 |
| 9. ராமாநுஜதேசிக ஸ்தோத்ரங்கள் | 1-00 | -35 |
| 10. விசிஷ்டாத்வைதவிஜயம் (முதல் பாகம்) | 10-00 | 1-50 |
| 11. சாதிமத ஆராய்ச்சி | 2-00 | -25 |
| 12. ஸ்ரீலக்ஷ்மீ ந்ருஸிம்ஹஸ்தவம் | 0-37 | -15 |

| | | |
|---|---|---|
| 13. ஸந்மதகாரிகாவளீ | 1-75 | -48 |
| 14. விஷ்ணுசித்தவிஜயம் முதல் பாகம் | 5-00 | 1-00 |
| ஷை இரண்டாம் பாகம் | 7-00 | 1-50 |
| 15. கம்பனின் சமயம் முதல் பாகம் | 1-00 | -30 |
| 16. சாரீரககாரிகாவளீ (முதல் பாகம்) | 3-00 | -60 |
| 17. பெரியாழ்வார் ப்ரபாவம் | 4-00 | -75 |
| 28. ஸாத்விகவிஜய ஸர்வஸ்வம் (தபால் உள்பட 50பை) | | |
| 19. ஸந்த்யாவந்தநபாஷ்யம் | 3-00 | -71 |
| 20. திருப்பல்லாண்டு வ்யாக்யாநம் | 1-50 | -35 |

கிடைக்குமிடம்:-

ஸ்ரீ. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட்
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஆழ்வாராசார்யர்களின் அருளிச்செயல்களுக்கு
எளிய தமிழ் விரிவுரைகளுடன் வெளிவரும்
சிறந்த ஸ்ரீ வைஷ்ணவ மாதப்பத்திரிகை

# ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்

வேதம், ஸ்மிருதிகள், இதிஹாஸங்கள் முதலியவற்றி லிருந்து ஸ்ரீமந்நாராயணனின் பெருமையை விளக்கும் விஷ்ணு சித்தவிஜயம் என்னும் சிறந்த க்ரந்தமும், தமிழில் கீதா வ்யாக்யானமும், திவ்ய ப்ரபந்தங்களுக்கு எளிய விவரணங்க ளோடு கூடிய பூர்வாசார்ய வ்யாக்யானங்களும் விசிஷ்டாத் வைத ப்ரகரணக்ரந்தமான விவரண ஸஹித சாரீரககாரிகாவளி யும் மற்றும பல விஷயங்களும் வெளிவருகின்றன.

ஆசிரியர்:—

ஸ்ரீ. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட்
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

**வருடச் சந்தா ரூ. 5-00.**

ஸர்வஜித் மார்கழி 28வ (**12—1—1948**) முதல்
தொடர்ந்து நடைபெறுகிறது.

சென்னையில் நமது வெளியீடுகளனைத்தும் கிடைக்குமிடம்:-

ஸ்ரீ. S. K. ராமராஜ அய்யங்கார்,
29, A. பஜார் ரோடு, மயிலை மதராஸ்-4.

ஸ்ரீ:

ஸ்ரீ மதே ராமாநுஜாய நம:

ஸ்ரீ வைஷ்ணவரத்நமாலா - 24

அன்னபுகழ் முடும்பை அண்ணல் உலகாசிரியன்
இன்னருளால் செய்தருளிய

# ஸ்ரீ வசநபூ4ஷணம்

## உபாயவைப4வப்ரகரணம்

பதிப்பாசிரியர்

ஸ்ரீ.உ.வே. கோயில் ஆத்தான் விஜயராகவாசார்யஸ்வாமி

ஸ்ரீ.உ.வே. காரப்பங்காடு வேங்கடாசார்யஸ்வாமி
நினைவு வெளியீடு

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



ஸ்ரீவைஷ்ணவரத்நமாலா - 24

அன்னபுகழ்முடும்பை அண்ணல் உலகாசிரியன்
இன்னருளால் செய்தருளிய

# ஸ்ரீவசநபூ$_4$ஷணம்

## உபாயவைப$_4$வப்ரகரணம்

திருநாராயணபுரத்து ஆய்(ஜநந்யாசார்யர்),
மணவாளமாமுநிகள் அருளிச்செய்த
வ்யாக்$_2$யாநங்கள்,
மாமுநிகள் வ்யாக்$_2$யாநத்துக்குத்
திருமழிசை அண்ணாவப்பங்கார் ஸ்வாமி,
ஸ்ரீபெரும்பூதூர் ஒன்றான எம்பார் ஜீயர் ஸ்வாமி
அருளிய அரும்பத$_3$வுரைகள்,
மற்றும் இருவர் அருளிய அரும்பத$_3$வுரைகள்
அடங்கியது

பதிப்பாசிரியர்
ஸ்ரீ.உ.வே. கோயில் ஆத்தான் விஜயராகவாசார்யஸ்வாமி

ஸ்ரீ.உ.வே. காரப்பங்காடு வேங்கடாசார்யஸ்வாமி நினைவு வெளியீடு

விஜய வருஷம், ஆனி மூலம் — விலை ரூ. 100

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஒரு விண்ணப்பம்

ஸ்ரிய:பதியான ஸர்வேச்வரன் தனது க்ருபையாலே நமக்குச்செய்தருளின உபகாரங்கள் பல. ப்ரளயகாலத்தில் அசித்தைப்போலக்கிடந்த நமக்குப்பொறிபுலன்களையும், தர்மஸாதநமான ஆக்கையையும் கொடுத்தளித்தது ஸர்வேச்வரனது பேருதவியாகும். நமது அறியாமையாகிற இருளை நீக்குவதற்கும், 'இது நல்லது, இது தீயது' என்று விவேகித்தறிவதற்கும் சாஸ்த்ரங்களை நமக்குத்தந்தருளியுள்ளான். இவற்றுள் சிலவற்றை முந்நீர்வண்ணனும், சிலவற்றை முனிவரையிடுக்கியும் வெளியிட்டான். அதாவது தானே ஹம்ஸாவதாரமெடுத்து, அன்னமாய் அன்று அங்கருமறை பயந்தது, பதரிகாச்ரமத்தில் தானே சிஷ்யனுமாய், ஆசார்யனுமாய் நின்று திருமந்த்ரத்தை வெளியிட்டது, க்ருஷ்ணனும் அர்ஜுநனுக்கு கீதோபதேசம் செய்தது முதலியவை நேராகச்செய்த சாஸ்த்ரோபதேசமாகும்.

அங்ஙனன்றியே சில முனிவர்களை ஆவேசித்து வெளியிட்டருளின சாஸ்த்ரங்களும் உள்ளன. அவற்றுள் மிகச்சிறந்தவை, வேதவ்யாஸரிடத்தில் ஆவேசித்து வெளியிட்ட உயர்ந்த நூல்களேயாம். இந்நூல்களிலும் மிகவும் ஸாரமானது வேதாந்தத்தின் உட்பொருள்களை வேதாந்தவாக்யங்களைக்கொண்டே ஆராய்ந்து நிர்ணயம் செய்யக்கூடிய 'ப்ரஹ்மஸூத்ரம்' என்பதாகும். இது ஸூத்ரவடிவில் மிகச்சுருக்கமாக அமைந்திருப்பதால் இதற்குப்பலர் அபார்த்தங்களைக்கற்பிக்கலாயினர். இந்த வாதங்களையெல்லாம் நிரஸித்து அதன் உண்மைப்பொருள் இன்னதென்று உலகிற்கு விளக்குவதற்காகத்திருவனந்தாழ்வானை ஸ்வாமி எம்பெருமானாராக அவதரிக்கச்செய்து ஸ்ரீபாஷ்யம் என்னும் உயர்ந்த க்ரந்தம் மூலம் தத்த்வநிர்ணயம் செய்தருளினான். அதேபோல் வேதாந்தஸாரார்த்தங்களை இதிஹாஸபுராணங்களைக்கொண்டு வெளியிடுவதாகத்திருவுள்ளம் பற்றி வடக்குத்திருவீதிப்பிள்ளை என்ற ஆசார்யருக்குத்திருக்குமாரராகத்தானே அவதரித்து, ஸத்ஸம்ப்ரதாயஸரணியில் வந்தபடியே முந்தைய பெரியோர்களின் வசநங்களை மிகுதியாகக்கொண்டதும், தம் சொற்களை மிகக்குறைவாகக்கொண்டதுமான ரத்நபூஷணம் போன்றதொரு க்ரந்தத்தின் வாயிலாக வெளியிட்டருளினான். இந்நூலை நிர்மாணித்த ஆசிரியரே இதற்கு 'ஸ்ரீவசநபூஷணம்' என்று பெயர் சூட்டியருளினார். ஆனால் இதுவும் பல அரிய அர்த்தங்களைத்தன்னுளடக்கிக்கொண்டு ஸூத்ரவடிவில் மிகச்சுருக்கமாக அமைந்திருந்தபடியால், முன்போலவே திருவனந்தாழ்வானை மணவாளமாமுநிகளாகத்திருவவதாரம் செய்வித்து அதற்கொரு அத்புதமான வ்யாக்யாநமிடுவித்தான்.

தர்சநஸ்தாபநார்த்தமாக ஸ்வாமி எம்பெருமானார் நியமித்த எழுபத்துநான்கு ஸிம்ஹாஸநாதிபதிகளுள் முடும்பைநம்பி என்றொரு ஆசார்யர் இருந்தார். அவருடைய திருவம்சத்தில், உத்தமமான ஸ்ரீவத்ஸகோத்ரத்தில் ஆசார்யநியமநாநுகுணமாகத்திருவவதரித்தவர் ஸ்வாமி பிள்ளைலோகாசார்யராவார். "திருவோணத்தான் உலகாளும்" என்றொரு வசநமுண்டு. அதற்கிணங்க ஓர் ஐப்பசித்திருவோணத்தில் திருவவதரித்த இந்த ஆசிரியர் 'லோகாசார்யர்' என்று திருநாமமிடப்பட்டதோடல்லாமல் அத்விதீயமான தமது ப்ரமாணப்ரமேயரக்ஷணக்ருத்யங்களால் ஸ்ரீவைஷ்ணவவுலகையாண்டமை குறிப்பிடத்தக்கது. தர்மோபதேசம் பெறுவதற்கு ஸர்வரும் அதிகாரிகள். "விதிதஸ்ஸ ஹி தர்மஜ்ஞ: சரணாகதவத்ஸல:" என்று பிராட்டி ராக்ஷஸனான ராவணனுக்கும் உபதேசிக்கவில்லையா? ஆனால் ப்ரசாந்தசித்தத்வசமாந்விதத்வாதியுக்தர்களே ப்ரஹ்மவித்யைக்கு அதிகாரிகள். அவர்களிலும் ஜ்ஞாநபாகவிசேஷயுக்தர்களே ரஹஸ்யக்ரந்தங்களுக்குத்தகுதி பெற்றவராகிறார்கள்.

ஸத்ஸம்ப்ரதாயலப்தமான பல அநர்க்கமான அர்த்தவிசேஷங்களை அவற்றின் சீர்மைகருதி அஷட்கர்ணமாகப்பேணி வந்தனர் முன்புள்ள ஆசார்யர்கள். பிற்பாடர்கள் இந்த அர்த்த-விசேஷங்களையெல்லாம் இழக்கலாகாது என்னும் பெருங்கருணையாலே இவற்றை க்ரந்தாரூட-மாக்கியருளினர் பிள்ளை லோகாசார்யர். இவை சிறிதும் பெரிதுமாகப்பதினெட்டு நூல்களாயின. இவற்றுள் ஸ்ரீவசநபூஷணத்துக்குள்ள பெருமை மற்ற நூல்களுக்கில்லையென்று உபதேசரத்தின-மாலையில் மணவாளமாமுனிகள் வியந்து பாடியுள்ளார். ஸ்ரீவசநபூஷணத்தின் பெருமை ஏழு பாடல்களில் அநுபவிக்கப்படுகிறது. இந்நூலின் ஆழ்பொருள்களையெல்லாம் அறிபவர் துர்லபர்; அறிந்தும் அதன்படி அநுஷ்டிப்பவர் அதிதுர்லபர். ஸ்ரீவசநபூஷணவிசே-ஷார்த்தங்களை உள்ளியும், உரைத்தும் போதுபோக்குவது தமக்கு அத்யந்தப்ரியமாயிருப்பதாக மாமுநிகள் அருளியுள்ளார். "வாக்யாலங்க்ருதிவாக்யாநாம் வ்யாக்யாதாரம் நமாமி தம்" என்று மாமுனிகளின் திநசர்யையில் ஸ்ரீவசநபூஷணகாலக்ஷேபம் குறிப்பிடத்தக்கது.

திருநாராயணபுரத்து ஆய் என்கிற ஜநந்யாசார்யர் ஸ்ரீவசநபூஷணத்திற்கு அநதிஸங்க்ரஹ-மானதொரு வ்யாக்யாநம் செய்தருளியுள்ளார். அநதிவிஸ்த்ருதமான மாமுனிகளின் வ்யாக்யாநமானது நமக்கு காலக்ஷேபக்ரந்தமாகத்திகழ்கிறது. இதன் அர்த்தபுஷ்டி அரும்பத-வுரைகளிலிருந்து புலனாகும். மூலக்ரந்தமான ஸ்ரீவசநபூஷணம் மிகவும் கம்பீரமாக அமைந்திருப்பதால் அதன் வ்யாக்யாநங்களும் அவ்வாறே உள்ளன. நம்போல்வார் அந்த சீரிய அர்த்தவிசேஷங்களை அறிந்து அநுபவிக்கவேணும் என்னும் பரந்த மனப்பான்மையோடு சில மஹான்கள் மாமுனிகளின் வ்யாக்யாநத்துக்கு அரும்பதவுரைகள் அருளியுள்ளனர். வசநபூடணத்தின் ஆழ்பொருள்கள் பலவற்றை அறிவிக்கவல்ல இந்த அரும்பதவுரைகள்கொண்டு நாம் மிகவும் பயனடையலாம். நரங்கலந்த சிங்கமாக எம்பெருமான் எடுத்த அவதாரத்தில் கடநாத்புதம்(சேர்த்திவழகைப்)போல், செந்திறத்த தமிழும் வடமொழியும் ஒருங்கிணைந்து அத்புதமான மணிப்ரவாளநடையில் இந்த அரும்பதவுரைகள் அமைந்துள்ளன.

இதற்கு அமைந்துள்ள நான்கு அரும்பதவுரைகளில் இரண்டனுக்கு ஆசிரியர் திருநாமம் தெரியவில்லை. இவை மிகவும் சுருக்கமாக உள்ளன; ஒருசில ஸூத்ரங்களுக்கே செய்யப்-பட்டுள்ளன. அடுத்தது திருமழிசை அண்ணாவப்பங்கார்ஸ்வாமி அருளியது; இன்னொன்று எம்பார்ஜீயர்ஸ்வாமி ஸாதித்தது. நூற்பரப்புக்கஞ்சாமல் இவ்விரு ஆசிரியர்களும் நம்மிடத்தி-லுண்டான பரமக்ருபையே ஹேதுவாக அநுக்ரஹித்துள்ள இவ்வுரைகளில் முத்தும், மணியும், வயிரமும், நன்பொன்னுமாக விசேஷார்த்தங்கள் ஆங்காங்கே பதித்துவைக்கப்பட்டுள்ளன. கடினமான பதங்களுக்குப்பொருள் காட்டுவதில் இவர்களுக்கு நோக்கில்லை. மாமுனிகளின் வ்யாக்யாநத்திலுள்ள அருமையான, விலைமதிக்கமுடியாத பதங்களின் உட்பொருளை ப்ரகாசப்-படுத்துவதே இவர்களது லக்ஷ்யமாகும். ஆழ்கடலில் முழுகி, மூச்சடக்கி, முத்தெடுப்பாரைப்போலே, வ்யாக்யாநத்திலுள்ள ஒவ்வொரு பதத்திலுடைய தாத்பர்யத்தையும், அதற்கு முன்னோடியான ப்ரமாணவசநத்தையும், மாமுனிகளின் திருவுள்ளத்தை விளக்கவல்ல உபபத்திகளையும் சாஸ்த்ரமர்யாதையில் எடுத்துக்காட்டியுள்ளார்கள். இவ்வாசிரியர்கள் ஸகலசாஸ்த்ர-பாரங்கதர்களானபடியாலே, இவர்களது ஜ்ஞாநம் கடல்போல் ஆழ்ந்து பரந்துகிடக்கிறது; எனவே இவர்கள் கையாண்டுள்ள பல ப்ரமாணவசநங்களின் ஆகரம் கிடைக்கப்பெற்றிலோம். ஸம்ப்ரதாயார்த்தங்கள், நிஷ்கர்ஷங்கள், பரிஷ்காரங்கள், ந்யாயங்கள் என்றிவையெல்லாம் மலிந்து கிடக்கும் இந்த அரும்பதவுரைகளின் பெருமை அநுபவைகவேத்யம்.

இந்த அரும்பதவுரைகளில் நாம் அதிகமாகக்காண்பது காரணபாஹுள்யம் என்பதாகும்; அதாவது ஒரு அர்த்தத்தை நிலைநாட்டுவதற்காகப்பல காரணங்களைக்கூறுதல். இக்காரணங்கள் மேற்கோள், உதாஹரணம், அநுமாநம், ந்யாயம் என்று பலவகைப்பட்டிருக்கும். ஒரு ஹேதுவில் தோஷசங்கையால் ஹேத்வந்தரம் நிர்த்தேசிக்கப்படுகிறதென்பதன்று; ஒருவருக்கு ஒரு ஹேதுவால் மநஸ்ஸமாதாநம் ஏற்படாவிடினும் இன்னொன்றால் ஏற்படக்கூடும்; வஸ்துத: பல ஹேதுக்கள் இருக்கிறபடியால் அவற்றையெல்லாம் எடுத்துக்காட்டுதல் பொருத்தமும் கூட. எனவே காரணபாஹுள்யமென்பது அர்த்தநிர்ணயத்துக்கு புஷ்கலமேயன்றி தோஷாயவாகாது.

ஆறு ப்ரகரணங்களைக்கொண்ட ஸ்ரீவசநபூஷணத்தில் இரண்டாவது ப்ரகரணமான 'உபாய-வைபவப்ரகரணம்' இப்போது வெளியிடப்படுகிறது. 23வது வாக்யத்தில் தொடங்கி 79வது வாக்யத்தில் நிறைவுபெறும் இந்த ப்ரகரணத்தில் ப்ரபத்திஸ்வரூபம் பரக்கவுரைக்கப்பட்டுள்ளது. ப்ரபத்திக்கு தேசாதிநியமங்களேதுமில்லை, விஷயநியமமேயுள்ளது, அவ்விஷயந்தான் அர்ச்சா-வதாரம், அர்ச்சாவதாரத்தின் வைலக்ஷண்யம், அதில் ப்ரபத்தி பண்ணும் அதிகாரிகளின் மூவகை, ப்ரபத்தியை உபாயமாக்கினால் வரும் தீங்குகள், எம்பெருமானே உபாயம் ஆகிய விஷயங்கள் இந்த ப்ரகரணத்தில் ப்ரதிபாதிக்கப்பட்டுள்ளன. அவதாரிகை, ஸங்கதி, பொருள்-விளக்கம், ப்ரமாணோபபத்திகள் போன்றவற்றைத்தன்னுளடக்கிய மாமுனிகளின் வ்யாக்யா-நத்தின் ஹ்ருதயத்தை ப்ரகாசப்படுத்துபவையான அரும்பதவுரைகள் மஹாநிதி போன்றவை. 'விண்ணெல்லாம் உண்டோ விலை' என்றும், 'கடல் மண்ணெல்லாம் விலையோ' என்றும் வியக்கத்தக்கனவாயும், 'வையமெல்லாம் பெறும்' என்று உகக்கத்தக்கனவாயும் உள்ள அரும்பதவுரைகள் இப்பொழுதே முதன்முதலில் தமிழ் எழுத்தில் அச்சிடப்படுகின்றன.

ஒவ்வொரு அர்த்தத்தின் பூர்ணமான தாத்பர்யத்தை விளக்குவதே அரும்பதவுரைகாரர்களின் குறிக்கோள். இதற்கு க்ரந்தவிஸ்தரபயம் தடையாகவில்லை. எடுத்துக்காட்டாக 'இதுதனக்கு ஸ்வரூபம் தன்னைப்பொறுதொழிகை' என்கிற 55வது வாக்யத்தில் ப்ரபத்தி அநுபாயம் என்னுமர்த்தத்தை பஹுமுகமாக அண்ணாவப்பங்கார்ஸ்வாமி நிரூபித்துள்ளார். 'அஹமர்த்தத்-துக்கு ஜ்ஞாநாநந்தங்கள் தடஸ்தமென்னும்படி தாஸ்யமிறே அந்தரங்கநிரூபகம்' என்னும் 73வது வாக்யவுரையில் புங்காநுபுங்கமாக ப்ரச்நசரங்களைத்தொடுத்துக்கொண்டு ஸமாதாந-மருளிச்செய்யும் பாங்கு விஸ்மயநீயமானது. ப்ராஸங்கிகமாக 'ஆஸ்தாம் தே குணராசிவத்...', 'இதம் பூர்ணம்...' போன்ற ப்ரமாணவசநங்களுக்கு விரிவான உரை அருளியுள்ளது அறிவு-வேட்கைக்கு விருந்தாக அமைகிறது. அதேபோல் எம்பார்ஜீயர் ஸ்வாமி தமக்கே உரித்தான பாணியில் த்ரௌபதீசரணாகதியைப்படம் பிடித்துக்காட்டுவதுபோல் விவரித்துள்ளார். 'ப்ராப்தாவும், ப்ராபகனும், ப்ராப்திக்குகப்பானுமவனே' என்கிற 70வது வாக்யவுரையில் இவர் செய்தருளியுள்ள மோக்ஷலக்ஷணபரிஷ்காரம் மஹோபகாரமாகும்.

சில வருஷங்களுக்கு முன்பு ஓர் அஸாதாரணமான ஸாதாரண-ஆண்டில் அழகு திகழ்ந்திடும் ஐப்பசித்திருமூலத்தன்று இந்த ஸ்ரீவசநபூஷணத்தின் முதல் ப்ரகரணமான புருஷகாரவைபவம் இரண்டு வ்யாக்யாநங்களோடும், நான்கு அரும்பதவுரைகளோடும், விரிவான புரோபந்த-அநுபந்தங்களோடும் வெளியிடப்பட்டது. நமது ஸம்ப்ரதாயத்தில் ஸிம்ஹங்களாகத்திகழ்ந்த மஹாவித்வான்களின் துணைகொண்டு புத்தூர் ஸ்ரீ.உ.வே.க்ருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி எடுத்த பெருமுயற்சியே இந்த வெளியீடாகும். ஆனால் மேற்கொண்டு ப்ரகரணங்கள் வெளிவர-வில்லை. இந்தத்திருப்பணியைத்தொடரவேண்டும் என்ற ஆவலாலும், உயர்ந்த நூல்கள்

அழியாமல் பராமரிக்கப்படவேண்டும் என்பதாலும், ஸ்வஸத்தாஸப4ர்த்த2மாகவும், அநர்ஹனா-யிருந்தபோதிலும் ஆர்வத்தால் இப்பணியை மேற்கொண்டேன்.

பல ஆண்டுகளுக்கு முன் தெலுங்குலிபியில் அச்சிடப்பட்ட க்ரந்த2த்தை ஆதா4ரமாகக்கொண்டு இப்பொழுது இந்நூல் வெளியிடப்படுகிறது. பாட2பேத3ங்கள், ஆசிரியர் குறிப்புகள், ப்ரமாணா-கரங்கள் யாவும் அப்படியே மேற்கொள்ளப்பட்டுள்ளன. எளிமையைக்கருதி மேற்கோளுக்-கருகிலேயே அதன் ஆகரம் கொடுக்கப்பட்டுள்ளது. பிழையிருக்கும்போல் தோன்றுமிடங்களில் திருந்திய பாடத்தை அடைப்புக்குறிகளுக்குள் ஒரு கேள்விக்குறிமுன்னுகக்கொடுத்துள்ளேன். விரிவான விஷயாநுக்ரமணிகை சேர்க்கப்பட்டுள்ளது. இதில் அந்தந்த விஷயம் மூலத்தின் எந்த வாக்யத்தைப்பற்றியது என்று கொடுக்கப்பட்டுள்ளது. கையாளப்பட்ட ந்யாயத்தின் பெயரோடு அதன் பொருளும் சுருக்கமாகத்தரப்பட்டுள்ளது. அரும்பத3வுரைகள் மிகவும் ப்ரௌட4மாவும், ஶாஸ்த்ரீயமாவும் அமைந்துள்ளபடியால் சில கடி2னமான பத3ங்களின் பொருளை விளக்கும் வகையில் குறிப்புகள் பிற்சேர்க்கையாக அளிக்கப்படுகின்றன. இக்குறிப்பு-களை எழுதிக்கொடுத்தும், பிழைத்திருத்தம் செய்யும்போது பேருதவிபுரிந்தும், சிலவிடங்களில் பாட2ஶோத4நங்கள் செய்துகொடுத்தும் உபகரித்தருளிய வித்3வான் ஸ்ரீ.உ.வே. திருப்புல்லாணி ஸுந்தரராஜ ஐயங்கார் ஸ்வாமி திறத்தில் அடியேன் க்ருதஜ்ஞதையைத்தெரிவித்துக்கொள்கிறேன். சில வருஷங்களுக்கு முன் ஒரு ப்ராசீநமான தெலுங்கு ஸ்ரீகோஶத்தைக்கொடுத்து உபகரித்த ஸ்ரீ.உ.வே.திருவல்லிக்கேணி M.A. வேங்கடக்ருஷ்ணன் ஸ்வாமிக்கும், சீரான நிலையிலுள்ள ஒரு தெலுங்குலிபி பதிப்பைக்கொடுத்து உபகரித்த ஸ்ரீ.உ.வே. ஸ்ரீமுஷ்ணம் லக்ஷ்மீவராஹ-தாதாசார்யஸ்வாமிக்கும் நன்றி தெரிவித்துக்கொள்கிறேன். இப்பதிப்பில் பிழைகள் புகாவண்ணம் பலமுறை ஶோதி4க்கப்பட்டுள்ளது. மேலும் பிழை தென்பட்டால் க்ருபையோடு அடியேனுக்குத்-தெரிவிக்கவேணுமாய் ப்ரார்த்தி2க்கிறேன்.

இந்த அரிய நூல் வெளிவருவதற்கு த்3ரவ்யஸஹாயம் செய்தருளிய ஸ்ரீ.உ.வே.ஸ.K. ரங்கராஜன் ஸ்வாமி, பெங்களூர், ஸ்ரீ.உ.வே.V.ஸுந்தரராஜன் ஸ்வாமி, சென்னை, ஸ்ரீ.உ.வே. T.நாராயணன் ஸ்வாமி, திருவல்லிக்கேணி, ஸ்ரீ.உ.வே.R.ரங்கபாஷ்யம் ஸ்வாமி, மையிலை ஆகிய மஹான்களுக்கு அடியேனுடைய க்ருதஜ்ஞதையைத்தெரிவித்துக்கொள்கிறேன். இவர்களுக்கு எம்பெருமான் ஸகலமங்களங்களையும் அநுக்3ரஹிக்குமாறு ப்ரார்த்தி2க்கிறேன்.

இந்த உயர்ந்த க்3ரந்த2த்தின் பெருமைக்குச்சேர இதைக்கண்ணுறும் ஆஸ்திகர்கள் எம்பெருமானுடைய தி3வ்யமங்க3ளவிக்3ரஹத்தைப்போலவே இந்நூலையும் போற்றிப்பேண வேண்டுமென்று ஸவிநயம் ப்ரார்த்திக்கிறேன். ஸஹ்ருத3யஸஹ்ருத3யர்களுக்கு இந்நூல் பேரின்ப-மளிக்கும் என்று நம்புகிறேன். மேலுள்ள ப்ரகரணங்களும் நல்லமுறையில் வெளிவர தி3வ்யத3ம்பதிகளும், ஸகலபூர்வாசார்யர்களும் அருள்புரியட்டும்.

தாஸன்
விஜயராகவன்

4-7-2001
வ்ருஷ வரு (கல்யப்தம் 5103) ஆனி 20

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## முன்னுரை

(ஸ்ரீ.உ.வே.க்ருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி,M.A.,B.L.[ஸுதர்சனர்] ,ஆசிரியர் -
ஸ்ரீவைஷ்ணவஸுதர்சனம், 5, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி - 620 017)

பிள்ளைலோகாசார்யர் அருளிய ரஹஸ்யங்களில் ஸ்ரீவசநபூஷணம் தலைமை பெற்றது. அதற்கு மாமுனிகள் அருளிய வ்யாக்யானம் மிகவும் சிறப்புற்றது. இதற்குப்பல அரும்பதவுரைகளும் அமைந்தன. இவையனைத்தையும் கொண்ட ஸ்ரீவசநபூஷணவ்யாக்யானப்பதிப்பு தெலுங்குலிபியிலேயே அச்சிடப்பட்டுள்ளது. அதில் புருஷகாரவைபவத்தைச்சொல்லும் முதல் இருபத்திரண்டு சூர்ணைகள் கொண்ட பகுதி பல பரிஷ்காரங்களுடனும், அநுபந்தங்களுடனும் தமிழ் எழுத்துக்களில் அடியேனால் மாமுனிகள் அறுநூற்றாண்டு நிறைவு விழாவான ஸாதாரணவருஷம் ஐப்பசித்திருமூலத்தில் வெளியிடப்பட்டது. பல காரணங்களால் அதன் மேல் பகுதிகள் இதுவரை அச்சாகாமல் இருந்தது. இந்தச்செயற்கரிய பணியை நிறைவுபடுத்த முயற்சி மேற்கொண்டு ஸ்ரீ.உ.வே. ஆத்தான் விஜயராகவாசார்யர்ஸ்வாமி இப்போது இருபத்துமூன்றாவது சூர்ணை முதல் எழுபத்தொன்பதாவது சூர்ணை ஈறான உபாயவைபவத்தைக்கூறும் இரண்டாம் பகுதியை மிகச்சிறந்த முறையில் பதிப்பித்து வெளியிட்டிருக்கிறார். அரும்பதவுரைகளில் பலவிடங்களில் திருப்புல்லாணி ஸ்ரீ.உ.வே.ஸுந்தரராஜஐயங்கார்ஸ்வாமியால் பல குறிப்புகள் கொடுக்கப்பட்டுள்ளது. காலக்ஷேபம் சொல்பவர்களுக்கும், கேட்பவர்களுக்கும் இந்நூல் மிகவும் பயன்படும்.

இதே முறையில் மேற்பகுதிகளும் விரைவில் வெளிவரவேண்டுமென்று எம்பெருமானை ப்ரார்த்திக்கிறோம்.

ஸ்ரீவைஷ்ணவதாஸன்
ஸ்ரீகிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்

3-5-2001

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## பிள்ளைலோகாசார்யர் தனியன்

லோகாசார்யாய கு3ரவே க்ருஷ்ணபாத3ஸ்ய ஸூநவே ।
ஸம்ஸாரபோ4கி3ஸந்த3ஷ்டஜீவஜீவாதவே நம: ॥

## ஜநந்யாசார்யர் (திருநாராயணபுரத்து ஆய்) தனியன்

ஆசார்யஹ்ருத3யஸ்யார்த்த2ா: ஸகலா யேந த3ர்ஶிதா: ।
ஸ்ரீஸாநுதா3ஸமமலம் தே3வராஜம் தமாஶ்ரயே ॥

## மணவாளமாமுனிகள் தனியன்

ஸ்ரீஶைலேஶத3யாபாத்ரம் தீ4ப4க்த்யாதி3கு3ணார்ணவம் ।
யதீந்த்3ரப்ரவணம் வந்தே3 ரம்யஜாமாதரம் முநிம் ॥

## திருமழிசை அண்ணாவப்பங்கார் ஸ்வாமி தனியன்

ஸகலமஹீபரத்நகநகாஞ்சிதஸந்மகுட-
நிகரவிசித்ரகாந்திபரிவீதநிஜாங்க்4ரியுக3: ।
புரவரபூ4மிஸாரஸுசிரார்ஜிதபுண்யப2லம்
வரகு3ணவீரராக4வகு3ருர்ஜயதாத் ஸுசிரம் ॥

## எம்பார்ஜீயர் ஸ்வாமி தனியன்

ஸ்ரீவாதூ4லரமாப்ரவாலருசிரஸ்ரக்ஸைந்யநாத2ாம்ஶஜ-
ஸ்ரீகு3ர்விந்த்3ரமஹார்யலப்3த4நிஜஸத்ஸத்தம் ஶ்ரிதாபீ4ஷ்டத3ம் ।
ஸ்ரீராமாநுஜமுக்2யதே3ஶிகஸத்கைங்கர்யஸம்ஸ்த2ாபகம்
ஸ்ரீமத்3வேங்கடலக்ஷ்மணார்யயமிநம் தம் ஸத்3கு3ரும் ப4ாவயே ॥

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஆய் வ்யாக்2யாநம்

## விஷயாநுக்ரமணிகை

பக்கம்

விஷயாநுக்ரமணிகை

## விஷயாநுக்ரமணிகை



ஆய் வ்யாக்2யாநத்தில்
விஷயாநுக்ரமணிகை
முடிந்தது

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
பெரியஜீயர் வ்யாக்2யாநம்
விஷயாநுக்ரமணிகை

பெரியஜீயர் வ்யாக்2யானம் விஷயாநுக்ரமணிகை

பெரியஜீயர் வ்யாக்₂யாநம் விஷயாநுக்ரமணிகை



பெரியஜீயர்வ்யாக்₂யாநத்தில் விஷயாநுக்ரமணிகை முடிந்தது

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

திருமழிசை அண்ணாவப்பங்கார்ஸ்வாமி அரும்பத₃விளக்கம்

விஷயாநுக்ரமணிகை

பக்கம்

விஷயாநுக்ரமணிகை

விஷயாநுக்ரமணிகை

பக்கம்

பக்கம்

பக்கம்

93. ப்ரபத்தி உபாயமாகமாட்டாமைக்குக்காரணங்கள் (வாக்யம் 59)

94.(1) ததே3கஶேஷத்வமாவது – ஸ்வார்த்த2தாரஹிதப4க3வத3திஶயாத4ாநார்ஹத்வம். ததே3கரக்ஷ்யத்வமாவது – அத்3ருஷ்டத்3வாரகஸாத4நாநுஷ்ட2ாநேந ஸ்வகர்த்ருக-ரக்ஷணகர்மத்வாநர்ஹத்வே ஸதி உபாயாநபேக்ஷப4க3வத்3ரக்ஷ்யத்வம்(வா 60)
(2) அப்ரதிஷேத4மாவது – பரகீயப்ரவ்ருத்த்யாக்2யயத்நாநுகூலபுருஷாபி4ப்ராயம் (வாக்யம் 60)
(3) ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயநிவ்ருத்தியாவது – அத்3ருஷ்டத்3வாரகஸாத4நவிஷய-நிவ்ருத்த்யாக்2யயத்நவிஶேஷம் (வாக்யம் 60)

94-95 அதி4காரரூபேண த்3ருஷ்டோபகாரகதயா ஆத்மஜ்ஞாநமும், ப்ரதிப3ந்த4கா-ப4ாவவித4யா த்3ருஷ்டோபகாரார்த்த2மாக அந்வயவ்யதிரேகஶாலிமாத்ரமாய்க்-கொண்டு காரணமல்லாத ஸாத4நாந்தரநிவ்ருத்தியும் வேண்டுமதொழிய அத்3ருஷ்டத்3வாரகஸாத4நமாயிருப்பதொன்றும் ப2லஸித்3தி4க்கு வேண்டா (வாக்யம் 60)

95.(1) அதி4காராபேக்ஷை உபாயநைரபேக்ஷ்யவிரோதி4யன்றே, ப4க்திவத் ப4க3வத்-ப்ரஸாத3த்3வாரகஸாத4நாபேக்ஷையிறே நைரபேக்ஷ்யவிரோதி4(வாக்யம் 60)
(2) நமஶ்ஶப்3த3த்தால் அறியப்படும் அர்த்த2ம் – ப்ரணவமாகிற உபக்ரமத்தில் அறியப்படும் ததே3கரக்ஷ்யத்வத்துக்கு அநுகு3ணமாயுள்ள ஸாத4நாந்தரப்ரவ்ருத்தி-நிவ்ருத்திரூபமான அப்ரதிஷேத4மாகும் (வாக்யம் 60)
(3) இவன் 'மத்ப2லஸாத4நத்வாந்மத3ர்த்த2மித3ம் கர்ம' என்றுகொண்டு ஸாத4நா-நுஷ்ட2ாநம் பண்ண, தந்மூலகமாக அவன் ப2லப்ரத3ாநம் பண்ணினால், அந்த அதிஶயம் இவனுக்காகையாலே ஸாவத4ாரணஶேஷித்வப்ரதிஸம்ப3ந்தி4யான நிருபாதி4கஶேஷித்வத்துக்கு வைகல்யம் வரும் (வாக்யம் 61)

96.(1) ஸித்3தே4ாபாயத்துக்கு நைரபேக்ஷ்யமிருப்பதால் ஸாத்4யோபாயவிதி4க்கு அதி4காரவிதி4த்வமே உசிதமாகும்(வாக்யம் 61)
(2) விஶ்வாஸபூர்வகப்ரார்த்த2நாமாத்ரத்தை ப4ாஷ்யகாராதி3கள் அநுஷ்டி2த்ததும் அதி4காரார்த்த2மாகவல்லது ஸாத4நத்வேந அன்று (வாக்யம் 61)

97.(1) ஸ்வாப4ாவிகபாரதந்த்ர்யம் உபாயாப4ாவஹேது. அநாதி3வாஸநையால் வரும் அஶக்தியினால் விளையும் பாரதந்த்ர்யமானது ஸ்வாப4ாவிகமன்றாகையால் உபாயாப4ாவஹேதுவன்று (வாக்யம் 62)
(2) உபாயபரவாக்யங்களைக்காட்டிலும் ப்ரப3லங்களான தத்த்வபரவாக்யங்களில் ஈஶ்வரனுக்கு அநந்யஸாத்4யத்வம் ஸித்3தி4க்கிறது. உபாயபரவாக்யங்களிலுள்ள 'ஏக'ஶப்3த3ாதி3களால் ப்ரபத்திக்கு அநுபாயத்வம் ஸித்3தி4க்கிறது(வாக்யம் 62)
(3) விதி4க்கு க்ருதிஸாத்4யத்வமாத்ரமர்த்த2ம். யோகே3ாபாஸநாதி3களிலே உபாயாந்தராப4ாவத்தாலே உபாயத்வம் ஸாமர்த்2யகல்ப்யம் (வாக்யம் 62)
(4) ப்ரபத்திவிதி4யும் அத்4யயநவிதி4போலே வித்4யந்தராபேக்ஷிதாதி4கார-ஸித்3த்4யர்த்த2விதி4யாம். ஸித்3தே4ாபாயத்தின் ப்ரவ்ருத்திக்கு ப்ரதிப3ந்த4கமான ஸாத்4யோபாயத்தின் ஸ்வாஸந்த்யாக3த்துக்கு ஹேது. ப்ரபத்தி அநுபாயம் என்ற அத்4யவஸாயத்துக்கு ப்ரயோஜகமான ப4க3வது3பாயத்வாத்4யவஸாயவிதி4யுமாம். (வாக்யம் 62)

விஷயாநுக்ரமணிகை

பக்கம்

பக்கம்

அர்ச்சாவதாரபர்யந்தாவதாரப2லமாகையாலே ப4க3வானே ப்ராப்தா (வா 70)

(2) ஸத்யஸங்கல்பத்வம் - அஹேதுத்வே ஸதி அதிப்ரஸங்க3வாரகமான (ஸர்வ-முக்திப்ரஸங்க3பரிஹாரகமான) வ்யாஜத்தை(வரணமாகிற ஸஹகாரியை)யிட்டு ரக்ஷிப்பதாக அடியிலே பண்ணிவைத்த அமோக4ஸங்கல்பயுக்தத்வம் (வா. 70)

(3) நிரங்குஶஸ்வதந்த்ரன் - ஸ்வஸங்கல்பமந்தரேண ஸ்வயமந்யைஶ்ச நிவார்ய-னன்றிக்கேயிருக்கிறவன் (வாக்யம் 70)

104.(1) பாரதந்த்ர்யம் - பராதீ4நஸ்வரூபஸ்தி2த்யாதி3மத்த்வம். - ப4க3வத3பி4ப்ராயாநு-வித4ாயிஸ்வரூபாதி3மத்த்வம் (வாக்யம் 71)

(2) தனக்கென்ன ஒன்றில் ரஸமின்றிக்கே இருக்கையாவது - ப4க3வத்3போ4க3த்தை ஸம்பாதி3ப்பதற்காகவே வந்த ஸ்வபோ4க3ம் தவிர்ந்த போ4க3மில்லையாயிருக்கை

105.(1) தத்3விஷயப்ரீதி: । ஸ: விஷய: யஸ்யாஸ்ஸா தத்3விஷயா, தத்3விஷயா ச ஸா ப்ரீதிஶ்ச தத்3விஷயப்ரீதி: (வாக்யம் 72)

(2) பரார்த்த2கர்த்ருத்வபோ4க்த்ருத்வங்கள் இருக்கையாலே கர்த்ருத்வபோ4க்த்ருத்வஸாமாந்யாபா4வம் கொள்ளுகிற பா3ஹ்யாதி3பக்ஷ-யாகாது (வாக்யம் 72)

(3) 'படியாய்க்கிடந்து' - பரப்ரயோஜநப்ரவ்ருத்தி. 'பவளவாய்' - தஜ்ஜந்யமான தந்முகோ2ல்லாஸம். 'காண்பேனே' - தத்3விஷயப்ரீதி (வாக்யம் 72)

(4) ப்ரயத்நத்துக்கு பாரதந்த்ர்யாநுகு3ணமான ப்ரயோஜநம், சைதந்யத்துக்கு ஶேஷித்வாநுகு3ணமான ப்ரயோஜநம் இவற்றின் பரிஷ்காரங்கள் (வாக்யம்72)

106.(1) ஶேஷத்வாதி3களைக்காட்டிலும் ஜ்ஞாத்ருத்வாதி3களை ப்ரதா4நமாக்கி தத3நுகு3ணமாக ஶேஷத்வாதி3களை யோஜிக்கவேணுமென்ற பூர்வபக்ஷத்துக்கான யுக்திகள் (வாக்யம் 73)

(2) ஆத்மத்வோபாஸநந்யாயம் (உபாஸகர்களின் ஆத்மா என்றே ப்3ரஹ்மத்தை உபாஸிக்கவேணுமென்பதே இந்த ந்யாயம்) (ஶா.மீ.4-1-3) (வாக்யம் 73)

(3) ஜ்ஞாத்ருத்வகர்த்ருத்வாநுகு3ணமாக ஶேஷத்வத்தை யோஜிக்கும் ப்ரகாரம் - ஸ்வபோ4க3ார்த்த2ம் ஸாத4நாநுஷ்டா2நமாய் ப4க3வது3பாஸநமும், அநுப4வ-கைங்கர்யங்களும் ஸ்வபோ4க்த்ருத்வார்த்த2மாயிருக்கை (வாக்யம் 73)

107.(1) ப்ரணவத்திலுள்ள மகாரம் ('ம்') 'மந - ஜ்ஞாநே', 'மநு - அவபோ3த4நே', 'மாங் - மாநே', 'மதி2 - ஹர்ஷே' என்ற தா4துக்களிலிருந்தும் வ்யுத்பந்நமாகிறது

(2) கைமுதிகந்யாயம்(தன்னடையே வரும் என்ற ந்யாயம்) (வாக்யம் 73)

(3) 'தடஸ்த2'ஶப்3தா3ர்த்த2ம். ஸ்வரூபநிஷ்ட2மன்றிக்கேயிருந்துகொண்டு வ்யாவர்த்தகமாயிருக்குமது தடஸ்த2ம் - ம்ருஷாவாதி3யின் கூற்று. பரம்பராஸம்ப3ந்த4விஶேஷணத்தாயிருந்துகொண்டு வ்யாவர்த்தகமாயிருக்குமது தடஸ்த2ம் - ஸித்3தா4ந்தியின் கூற்று. (வாக்யம் 73)

(4) 'தா3ஸ'ஶப்3த3ப்ரவ்ருத்திநிமித்தம் - ஶேஷத்வே ஸதி சேதநத்வம் (வாக்யம் 73)

(5) ஜீவாத்மாவின் ஸத்தை, ப4க3வத்ஸ்வரூபத்தால் நிரூபிக்கப்பட்ட ப்ரகாரதை-யினால் வந்த ஶேஷத்வத்துக்கு அதீ4நமான ஸத்தையையுடையவன் ஜீவாத்மா. ஸத்தைக்குக்காரணமான ஶேஷத்வத்தையிட்டு அவனை நிரூபித்த பிறகே மற்ற ஆகாரங்களையிட்டு அவனுக்கு மற்ற வஸ்துக்களிலிருந்து வேறுபாட்டைக்காட்ட

பக்கம்

111 (3) 'அடியேனுள்ளான்' (திருவாய்.8-8-2) என்ற அந்யபரோக்தியிலும் ஶேஷத்வத்தினுடைய அப்4யர்ஹிதத்வம் ஸித்3த4மாகையாலே இது அந்தரங்க3நிரூபகம் என்பது அபக்ஷபாதிப்ரமாணஸித்3த4ம் (வாக்யம் 73)

(4) வைஶேஷிகஸத்தா - தே3ஶகாலாதி3ஸம்ப3ந்த4ம். விலக்ஷணஸத்தா - ப4க3வச்சே2ஷத்வஜ்ஞாநம் (வாக்யம் 74)

(5) 'ஏதி ஜீவந்தமாநந்தோ3 நரம் வர்ஷஶதாத3பி'(ரா.ஸு.34-6) என்பது ந்யாயம். (ஜீவித்திருப்பவனை நூறு வருஷம் கழித்தாவது ஆநந்த3ம் வந்தடையும்). ஸத்தாயா: புருஷார்த்த2ப்ராப்தியோக்3யதாந்யாயம் என இதற்குப்பெயர் (வா74)

111-112 'ஸ்வோஜ்ஜீவநேச்ச2ா...' என்ற ப்ரமாணவசநத்தின் அர்த்தம்(வாக்யம் 74)

112. (1) கு3ணஸித்3தி4ந்யாயம்.(ஒரு கு3ணத்தின் ஸித்3தி4க்காக இன்னொரு பதா3ர்த்த2த்தின் ஸம்ப3ந்த4ம் வேணும்) (வாக்யம் 74)

(2) உரிமை - கடமை - அர்ஹத்வம். அவித்3யை - ஸ்வரூபஜ்ஞாநாபா4வம்.(வா75)

(3) (அந்யவிஷயங்களிலே) தொண்டுபட்டிருக்கையாவது - அநர்த்த2ாவஹமான அதிஶயாத4ாநசாபலத்தையுடைத்தாகை(வாக்யம் 75)

(4) ஆக3ந்துகத்வம் - பூர்வோத்தரகாலாஸத்த்வே ஸதி கிஞ்சித்கால-ஸத்த்வம்(வா75)

(5) ஸ்வாதந்த்ர்யாந்யஶேஷத்வங்களுக்கு விவக்ஷிதமாயுள்ள ஆக3ந்துகத்வமாவது - சேதநாவித்3யாதி3ஸஹக்ருதப4க3வத்ஸங்கல்பஸித்3த4த்வம் (வாக்யம் 75)

113.(1) தத்3விரோதி4த்வம் - தது3த்பத்திப்ரதிப3ந்த4கத்வம் (வாக்யம் 76)

(2) மூதலிக்கை - ஹேதூக்திபூர்வகமாக ஸித்3த4ம் என்று கூறுதல் (வாக்யம் 77)

(3) ஸ்வாதந்த்ர்யம் - ஸ்வஶேஷத்வாபி4மாநம் (வாக்யம் 77)

(4) 'ஆர்ப்பென்பதுவே பொருதலும், சிரித்தலும், தூளியும், ஓசையும் நாற்பெயரே' (வாக்யம் 77)

114.(1) அபி4ஜந: - 'யத்ரபூர்வைருஷிதம் ஸோऽபிஜந:' (வ்யாகரணஸூத்ரகாஶிகா-வ்ருத்தி 4-3-90) - பூர்வர்களால் வஸிக்கப்பட்ட தே3ஶம் அபி4ஜநம் (வா- 78)

(2) சரணமாவது - யஜுராதி3ஶாக2ாவிஶேஷம் (வாக்யம் 78)

(3) நிஷேத4த்துக்கு, நிஷேத்4யமான அநுஷ்ட2ாநமானது அநிஷ்டஜநகம் என்று காட்டுவதிலே தாத்பர்யம் (வாக்யம் 79)

(4) 'ஏகாந்தீ'ஶப்3த3ார்த்த2ம். ஏகாந்தியானவன் க்ருஷ்ணப்ராப்தியில் ப4க்த்யுபா-யத்தை தே3வதாந்தரங்களுடனும் விஷயாந்தரங்களுடனும் ஸமமானது என்று நிஶ்சயித்து க்ருஷ்ணனையே ஸாத4நமாகக்கொண்டவன் (வாக்யம் 79)

(5) 'மாதா பிதா ப்4ராதா நிவாஸஶ்ஶரணம் ஸுஹ்ருத்3க3தி: நாராயண:' என்கிற ப்ரமாணத்திலே ஏகாந்திக்கு 'மாதா பிதா' என்று குலமும், 'நிவாஸ:'என்று க்3ராமமும் சொல்லுகையாலே அவனுக்கு க்3ராமகுலாதி3களெல்லாம் ப4க3வானேயாவான் (வாக்யம் 79)

அண்ணங்கராச்சார்ஸ்வாமி அரும்பத3விளக்கத்தில்விஷயாநுக்ரமணிகை முடிந்தது

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
எம்பார் ஜீயர்ஸ்வாமி அரும்பத3விளக்கம்
விஷயாநுக்ரமணிகை

பக்கம்

விஷயாநுக்ரமணிகை



உபாயவைப4வவிஷயாநுக்ரமணிகை முடிந்தது

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமல்லோககு3ரவே நம:

## ஸ்ரீவசநபூ4ஷணத்திற்குத்திருநாராயணபுரம் ஆய்(ஜநந்யாசார்யர்) அருளிய வ்யாக்2யாநம்

23.மேல் (ப்ரபத்திக்கு) என்று துடங்கி (ப்ரவ்ருத்தி சேரு)(வா-114)மளவாக (மஹாப4ாரதத்தால் உபாயவைப4வம்)(வா-6) என்றும், (ப்ரபத்த்யுபதே3ஶம் பண்ணிற்றும்)(வா-22) என்றும், ப்ரஸ்துதமு-மாய், ப்ராஸங்கி3கமுமான உபாயவைப4வத்தையருளிச்செய்கிறார். அர்ஜுநனுக்கு ப்ரபத்த்யுபதே3ஶம் பண்ணுகிறவிடத்து ஒரு தே3ஶாதி3நியதி கண்டிலோம், இதுக்கொரு நியதியுமில்லையோவென்ன, விஷய-நியதியொழிந்த அந்நியதிகளொன்றுமில்லையென்கிறார். (ப்ரபத்திக்கு)(வா-23) இத்யாதி3யால்.

**23.ப்ரபத்திக்கு தே3ஶநியமமும், காலநியமமும், ப்ரகாரநியமமும், அதி4காரி-நியமமும், ப2லநியமமுமில்லை.**

---

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமல்லோககு3ரவே நம:

ஸ்ரீமத்3வரவரமுநயே நம:

## ஸ்ரீவசநபூ4ஷணத்திற்குப்பெரியஜீயர் திருவாய்மலர்ந்தருளிய வ்யாக்2யாநம்

### அவதாரிகை

23.கீழுக்தமான உபாயத்தினுடைய ஸ்வீகாரரூபையாய், (ப்ரபத்த்யுபதே3ஶம் பண்ணிற்றும்) என்று ப்ராஸங்கி3கமாக ப்ரஸ்துதையான ப்ரபத்தியினுடைய படியை விஸ்தரேண அருளிச்செய்கிறார் மேல். அதில் ப்ரத2மத்தில், அர்ஜுநனுக்கு ப்ரபத்த்யுபதே3ஶம் பண்ணுகிற-வளவில் யுத்3த4பூமியிலே ஒருகாலவிஶேஷம் பாராமல் ஸ்நாநாதி3களுமின்றிக்கேயிருக்க, உபதே3ஶிப்பானென்? இதுக்கு தே3ஶாதி3நியமங்களில்லையோ? என்கிற ஶங்கையிலே அருளிச்செய்கிறார் (ப்ரபத்திக்)கென்று துடங்கி.

### வ்யாக்2யாநம்

ப்ரபத்தியாவது - ப4க3வச்ச2ரணவரணம். தே3ஶநியமமாவது - புண்யதே3ஶங்களிலே செய்ய-வேணும், அந்யதே3ஶங்களிலாகாதென்னுமது. காலநியமமாவது - வஸந்தாதி3காலங்களிலே செய்யவேணும், அந்யகாலங்களிலாகாதென்னுமது. ப்ரகாரநியமமாவது - ஸ்நாநபாத3-ப்ரக்ஷாளநாதி3பூர்வகமாகச்செய்யவேணும், ப்ரகாராந்தரத்தாலே செய்யவொண்ணாதென்னுமது.

(ஆ.வ்யா.)-"முமுக்ஷுர்வை ஶரணமஹம் ப்ரபத்3யே"(          ), "உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேன்" (திருவாய்.6-10-10) என்றித்யாதி3ப்ரஸித்3த4மாய், நிஷ்க்ருஷ்டஸ்வரூபாநுரூபமாய், மஹாவிஶ்வாஸரூபஸித்3தே4ாபாயமான (ப்ரபத்திக்கு), "த4ர்மக்ஷேத்ரே"(கீ3தை 1-1) என்கிற தே3ஶநியமமும், "ப்3ராஹ்மே முஹூர்த்தே சோத்த2ாய"(          )என்கிற (காலநியமமும்), "ப்ரக்ஷால்ய பாத3ாவாசாமேத்" (          ) என்கிற (ப்ரகாரநியமமும்), த்ரைவர்ணிகாதி4காரமாகிற (அதி4காரிநியமமும்), ஜ்யோதிஷ்டோமாதி3ஸித்3த4(ப2லநியமமுமில்லை).

**24.விஷயநியமமேயுள்ளது.**

24.ஸுலப4வஸ்துவே தனக்கு விஷயமாகவேணுமென்னுமிந்த (விஷயநியம)மொன்று(மே)யுள்ளது.

**25.கர்மத்துக்குப்புண்யக்ஷேத்ரம், வஸந்தாதி3காலம், ஶாஸ்த்ரோக்தங்களான தத்தத்ப்ரகாரங்கள், த்ரைவர்ணிகர் என்றிவையெல்லாம் வ்யவஸ்தி2தங்களாயிருக்கும்.**

25.இதுபோலன்றியே ப்ரஸ்துதரூபமான ஸாத4நத்துக்கு இந்நியதிகளொன்றுங்குலையவொண்ணு-

---

(ஜீ.வ்யா.)-அதி4காரிநியமமாவது - த்ரைவர்ணிகராகவேணும், அத்ரைவர்ணிகராகவொண்ணு-தென்னுமது. ப2லநியமமாவது - த்3ருஷ்டாத்3ருஷ்டப2லங்களில் இன்னப2லத்துக்கிது ஸாத4நம், அந்யப2லத்துக்கு ஸாத4நமன்றென்னுமது. தே3ஶகாலஸாத்3கு3ண்யவைகு3ண்யங்களடியாக வரும் அதிஶயாநதிஶயங்களை உடைத்தாவதொன்றல்லாமையாலும், தீர்த்த2த்திலே அவகா3ஹிக்கு-மளவில் ஶாத்3த4ாஶாத்3த4விப4ாக3மற அவகா3ஹிக்கலாயிருக்குமாப்போலே ஸ்வயமேவ பவித்ரமாய், ஶாத்3த4ாஶாத்3த4விப4ாக3மறத்தன்னோடந்வயிக்கலாம்படி இருக்கையாலும், வர்ணத்3யநுரூபமாயிருப்பதொன்றன்றிக்கே ஸ்வரூபாநுரூபமாயிருப்பதொன்றாகையாலும், சேதநருடைய ருச்யநுகு3ணமான ப2லவிஶேஷங்களுக்கு ஸாத4நமாவதொன்றாகையாலும். இந்நியமங்களொன்றுமிதுக்கில்லை என்கிறது. "ந ஜாதிபே4த3ம் ந குலம் ந லிங்க3ம் ந கு3ணக்ரியா: । ந தே3ஶகாலௌ நாவஸ்த2ாம் யோகோ3ஹ்யயமபேக்ஷதே ।। ப்3ரஹ்மக்ஷத்ரவிஶஶ்ஶூத்3ரா: ஸ்த்ரியஶ்சாந்தரஜாதய: । ஸர்வ ஏவ ப்ரபத்3யேரந் ஸர்வதா4தாரமச்யுதம் ।।" (ப4ா.ஸம்.முதல் அத்4யா.) என்று ப்ரபத்திக்கு தே3ஶகாலப்ரகாராதி4காரிநியமாப4ாவம் ப4ாரத்3வாஜஸம்ஹிதையிலும், "ப்ரபத்தே: க்வசித3ப்யேவம் பராபேக்ஷா ந வித்3யதே । ஸா ஹி ஸர்வத்ர ஸர்வேஷாம் ஸர்வகாமப2லப்ரதா3 ।।"(ஸநத்குமாரஸம்ஹிதை) என்று ப2லநியமாப4ாவம் ஸநத்குமாரஸம்ஹிதையிலும் சொல்லப்பட்டதிறே.

24.இவையில்லையாகில் மற்றும் சில நியமங்கள்தானிதுக்குண்டோவென்ன, அருளிச்செய்கிறார் (விஷயநியமமே உள்ளதென்று).

அதாவது - இன்னவிஷயத்திலே செய்யவேணும் என்கிற நியமமே இதுக்குள்ளதென்றபடி. இவையெல்லாம் தாமே மேலே உபபாதி3த்தருளுகிறாரிறே.

25. இதுக்கிவை ஒன்றுமில்லையாகில், பின்னை எதுக்குத்தானிவையெல்லாம் உள்ளதென்ன,

(ஆ.வ்யா.)-தென்கிறார் மேல், (கர்மத்துக்கு) இத்யாதி3யால். "த4ர்மேண பாபமபநுத3தி"( ), "இறுக்குமிறை"(திருவாய்.5-2-8) என்றித்யாதி3ஸித்3த4மாய், விஶிஷ்டவேஷாநுரூபமாய், ப்ரவ்ருத்திரூபமான வைதி3ககர்மத்துக்கு "காஶீ காஞ்சீ" என்கிற புண்யக்ஷேத்ரம், "வஸந்தே வஸந்தே ஜ்யோதிஷா யஜேத" ( ) என்கிற வஸந்தாதி3காலமும், "ஸ்நாத்வா பு4ஞ்ஜீத" இத்யாதி3த4ர்மஶாஸ்த்ரோக்தமான ஸ்நாநாதி3தத்தத்ப்ரகாரவிஶேஷங்கள், [1]அக்3நிவித்3யாங்க3கர்மாதி4காரமுள்ள த்ரைவர்ணிகரென்கிற [2]க்ஷேத்ராதி3யான ஸாப2ல்யயோக்3யதாபாத3நயோக்3யத்வதத்3நுகு3ணஸப்4யத்வரூபமான இவையெல்லாம் தப்பவொண்ணாதபடி வ்யவஸ்தி2தங்களாயிருக்கும்; ஆக, ஸ்வரூபத்தைப்பற்றி வருமதுக்கு விஷயமொழிந்த நியமாபேக்ஷயில்லை, தோல்புரையே போமதுக்கு தத்தந்நியதி தப்பில் விபரீதமாய்த்தலைக்கட்டுகையால், தத3பேக்ஷயுண்டென்றபடி.

26.மேல் ப்ரபத்திக்கு தே3ஶாதி3நியமமில்லையென்ற ப்ரதிஜ்ஞையை உபபாதி3க்கிறார். ("ஸ ஏஷ:") இத்யாதி3யால்.

**26."ஸ ஏஷ தே3ஶ: கால:" (ரா.யு.17-57)என்கையாலே இதுக்கு தே3ஶகால-நியமமில்லை.**

"ஸ ஏஷ தே3ஶ: காலஶ்ச ப4வதீஹ யதா2 ததா2 । புருஷாத்புருஷம் ப்ராப்ய ததா2 தே3ாஷகு3ணாவபி ॥" (ரா.யு.17-46) என்று தே3ாஷது3ஷ்டனான ராவணன் த்யாஜ்யன், கு3ணவானான பெருமாள் உபாதே3யர், என்று ராவணனை விட்டுப்பெருமாளைப்பற்றும் ப4ாவஶுத்3தி4யுள்ள விபீ4ஷணாழ்வான்

---

(ஜீ.வ்யா.)-அருளிச்செய்கிறார் (கர்மத்துக்கென்று துடங்கி).

(கர்ம)மாவது – ஜ்யோதிஷ்டோமாதி3கள். (புண்யக்ஷேத்ர)ங்களாவன – ஶாஸ்த்ரங்களில் பாவநதயா அபி4ஹிதங்களான தே3ஶங்கள். (வஸந்தாதி3) என்கிறவிடத்தில் 'ஆதி3'ஶப்3த3த்தாலே க்3ரீஷ்மஶரச்சு2க்லபக்ஷபூர்வாஹ்நாபராஹ்நாதி3காலங்களைச்சொல்லுகிறது. "வஸந்தே வஸந்தே ஜ்யோதிஷா யஜேத" ( ) இத்யாதி3களாலே காலநியமம் சொல்லப்படாநின்றதிறே. (ஶாஸ்த்ரோக்தங்களான தத்தத்ப்ரகாரங்களாவன) – மௌநசாசமநஸ்நாநவ்ரதஜபாதி3ரூபேண அவ்வவ கர்மங்களுக்கு அநுகு3ணமாக ஶாஸ்த்ரவிஹிதங்களான அவ்வவ ப்ரகாரங்கள். (த்ரைவர்ணிகர்) என்றது – உபநயநஸம்ஸ்காரபூர்வகமாக வேதா3தி4காரிகளானவர்களுக்கே வைதி3ககர்மாதி4காரமுள்ளதாகையாலே; இதுதான் [1]க்3ருஹமேதி4த்வக்ருஷ்ணகேஶித்வ-வேத3வேதா3ங்க3யுக்தத்வாதி3களுக்குமுபலக்ஷணம். (வ்யவஸ்தி2தங்களாயிருக்கும்) என்றது – நியதங்களாயிருக்குமென்றபடி.

26.ப்ரபத்திக்கிவை ஒன்றுமில்லையென்று கீழ்ப்பண்ணின ப்ரதிஜ்ஞையை உபபாதி3க்கையிலே ப்ரவ்ருத்தராய், ப்ரத2மம் தே3ஶகாலநியமராஹித்யத்தை உபபாதி3க்கிறார் ("ஸ ஏஷ:") என்று துடங்கி.

"ப3த்3த4வைராச்ச பாபாச்ச ராக்ஷஸேந்த்3ராத்3விபீ4ஷண: । அதே3ஶகாலே ஸம்ப்ராப்தஸ்ஸர்வதா2 ஶங்க்யதாமயம் ॥"(ரா.யு.17-46) என்று முன்பு ஸ்ரீஜாம்ப3வான், மஹாராஜர் பெருமாளுக்கு விண்ணப்பம்செய்த பக்ஷத்தை தூ3ஷிக்கிற திருவடி "அதே3ஶகாலே ஸம்ப்ராப்த இத்யயம் ஸ விபீ4ஷண: । விவக்ஷா சாத்ர மேऽஸ்தீயம் தாந்நிபோ3த4 யதா2மதி ॥ ஸ ஏஷ தே3ஶ: காலஶ்ச

(ஆ.வ்யா.)-வந்ததுவே தே3ஶகாலங்கள், அதில் குறை பார்க்கக்கடவதல்லவென்று திருவடி ஸ்வமதோ-பந்யாஸம் பண்ணுகையாலே, இப்ப்ரபத்திக்கு இன்ன தே3ஶகாலமாகவேணுமென்னும் நியதியில்லே.

27. இந்நியதிராஹித்யஹேது, அநுஷ்டா2நமந்த்ரஸித்3த4மென்கிறார், (இவ்வர்த்த2ம்) இத்யாதி3யால்.

**27. இவ்வர்த்த2ம் மந்த்ரரத்நத்தில் ப்ரத2மபத3த்திலே ஸுஸ்பஷ்டம்.**

தே3ஶாதி3நியதியில்லையென்கிற இவ்வர்த்த2ம் "த்3வயேந மந்த்ரரத்நேந"(            ) என்று - ஸர்வாதி4காரமாய், அவிளம்ப்3யப2லப்ரத3மந்த்ரரத்நமான த்3வயத்தில், ப்ரபத்திவிஷயப்ரகாஶமான ப்ரத2மபத3த்திலே, "ஸ்ரீமந்" என்று புருஷகாரோபாயங்கள் தே3ஶகாலோபாதி4யற எங்குமெப்போதும் நித்யஸம்யுக்தங்களாய்க்கொண்டு ருசிபிறந்தபோது எல்லாருமாஶ்ரயிக்கும்படி இருக்குமென்கையாலே, அவிஶத3மல்ல, ஸுஸ்பஷ்டம்; ஆக, ப்ரபத்திக்கு தே3ஶகாலாதி3நியதிராஹித்யம் ஆரப்3த4வாக்யா-நுஷ்டா2நஸித்3த4மென்றதாய்த்து.

28. இனி, ப்ரகாரநியதிராஹித்யத்தை ஸூசிக்கிறார், (ப்ரகாரநியதி) இத்யாதி3யால்.

**28. ப்ரகாரநியதியில்லையென்னுமிடமெங்குங்காணலாம்.**

---

(ஜீ.வ்யா.)-ப4வதீஹ யதா2ததா2 । புருஷாத்புருஷம் ப்ராப்ய ததா2 தே3ஶகு3ணவபி ।। தௌ3ராத்ம்யம் ராவணே த்3ருஷ்ட்வா விக்ரமஞ்ச ததா2 த்வயி । யுக்தமாக3மநம் தஸ்ய ஸத்3ருஶம் தஸ்ய பு3த்3தி4த: ।।"(ரா.யு.17-56,57,58) என்று - ராவணனாலே அவமாநிதனும், ஸ்வ-நிகர்ஷத்தை முன்னிட்டுக்கொண்டு ஶரணம் என்று வந்த ஸ்ரீவிபீ4ஷணாழ்வான், அதே3ஶத்திலே அகாலத்திலே வந்தானென்று தேவரீருடைய மந்த்ரிகளாலே யாதொன்று சொல்லப்பட்டது, இந்த பக்ஷத்தில் விஶேஷித்து எனக்கிந்த விவக்ஷை உண்டாகாநின்றது, அவன் வருகிறவளவில் யாதொரு தே3ஶத்திலே யாதொரு காலத்திலே வந்தான், அவன் வரவுக்கு அந்த இதுவே தே3ஶமும் அந்த இதுவே காலமுமாய் யாதொருபடி அப்படிப்பட்ட விவக்ஷையை நானறிந்தவளவு விண்ணப்பம் செய்யக்கேட்டருளவேணும், எங்ஙனேயென்னில், தம:ப்ரக்ருதியாகையாலே பரஹிம்ஸையே யாத்ரையான ராவணனிற்காட்டில், ஸத்த்வோத்தரராகையாலே பரரக்ஷணமே யாத்ரையாயிருக்கிற தேவரீரை ப்ராப்யராக பு3த்3தி4பண்ணி, அப்படியே அவனைவிட்டுப்-போராதொழிந்தால் அவனுடைய அக்ருத்யத்துக்கு ஸஹகாரியாய் அந்த ப்ராதிகூல்யத்தோடே முடிந்துபோகையாகிற தே3ஷத்தையும், த4ார்மிகரான தேவரீருடனே கூடப்பெற்றால் தத்ப2லமான தேவரீர்திருவடிகளில் கைங்கர்யத்தை லபி4த்து வாழுகையாகிற நன்மையையும் பு3த்3தி4பண்ணி, அப்படியே தேவரீர்திருவுள்ளத்திலே புண்படும்படி குற்றத்தைத்தீரக்கழியச்செய்து நிற்கிற ராவணன் தௌ3ராத்ம்யத்தையும், து3ராத்மாக்களை அநாயாஸேந அழிக்கவல்ல தேவராண்பிள்ளைத்-தனத்தையும்கண்டால், விஶேஷஜ்ஞனானவனுக்கு இவ்வரவு ப்ராப்தம், ந்யாயத்திலே ஸஞ்சரிக்குமவனுடைய பு3த்3தி4க்குமிது ஸத்3ருஶம் என்றானிறே. ஆக, இப்படி ப4ாவஶுத்3தி4யையுடையனான ஸ்ரீவிபீ4ஷணாழ்வான் ஶரணம் என்றுவந்த தே3ஶகாலங்களில் குறைபார்க்கக்கடவதல்ல, அவன் வந்ததுவே தே3ஶமும் காலமும் என்று ஶரணாக3திதர்4மஜ்ஞரான திருவடி நிர்ணயிக்கையாலே, ப்ரபத்திக்கு தே3ஶகாலநியமமில்லையென்கை.

(ஆ.வ்யா.)–ஸ்நாநாதி$_3$ப்ரகாரநியதியில்லையென்னுமிடம் ஸ்த்ரீபும்விப$_4$ாகமற எங்குமநுஷ்ட$_2$ாநரோஷ–மாகக்காணலாம்.

**29. த்$_3$ரௌபதி$_3$ ஸ்நாதையாயன்றே ப்ரபத்தி பண்ணிற்று; அர்ஜுநன் நீசர்நடுவேயிறே இவ்வர்த்த$_2$ம் கேட்டது.**

29. அதெங்கே கண்டதென்ன, உத்க்ருஷ்டகுலத்திலே பிறந்து, உத்க்ருஷ்டப$_4$ார்யையான த்$_3$ரௌபதி$_3$, ஆபந்நையாய், ப்ரபத்தி பண்ணுகிறபோது ஶுத்$_3$தி$_4$யையபேக்ஷித்தன்றே தந்நிரபேக்ஷப்ரபத்தி பண்ணிற்று;

---

(ஸ்ரீ.வ்யா.)–27 இதுதான் ப்ரபத்த்யநுஷ்ட$_2$ாநரூபமான த்$_3$வயத்தில் ப்ரத$_2$மபத$_3$த்திலே காணலா–மென்கிறார் (இவ்வர்த்த$_2$மென்று துடங்கி).

ஸகலோபநிஷத்ஸாரமாய், ஸர்வாதி$_4$காரமாய், அவிளம்ப்$_3$யப$_2$லப்ரத$_3$மாய், ஸர்வேஶ்வர–னுக்கத்யந்தாபி$_4$மதமாயிருக்கையாலே ஸர்வமந்த்ராந்தரோத்க்ருஷ்டதயா [1]"த்$_3$வயேந மந்த்ர–ரத்நேந" என்கிறபடியே மந்த்ரரத்நாக்$_2$யமாயிறே த்$_3$வயமிருப்பது; அந்த வைப$_4$வம் தோற்று–கைக்காக, த்$_3$வயமென்னாதே (மந்த்ரரத்நம்) என்கிறார். அதில் ப்ரத$_2$மபத$_3$த்தில் மதுப$_3$ர்த்த$_2$மான புருஷகாரோபாயநித்யயோக$_3$த்துக்கு ப்ரயோஜநம் – ஏதேனுமொரு தே$_3$ஶத்திலே ஏதேனுமொரு காலத்திலே ஒரு ஸம்ஸாரிசேதநனுக்கு ப$_4$க$_3$வத்ஸமாஶ்ரயணருசி விளைந்தால், "சஞ்சலம் ஹி மந: "(கீதை 6-34), "நின்றவாநில்லா நெஞ்சு"(பெரியதிருமொழி 1-1-4) என்கிறபடியே – சூறவளிக்காற்றுப்போலே சுழன்றுவருகிற நெஞ்சு, தளமாக அங்குரித்து, க்ஷணப$_4$ங்கு$_3$ரையான ருசி தீருவதுக்கு முன்னே, தது$_3$த்பத்திக்ஷணத்திலே ஆஶ்ரயிக்கலாயிருக்கையிறே; ஆகையாலே ப்ரபத்தியினுடைய தே$_3$ஶகாலநியமராஹித்யம் அந்த பத$_3$த்திலே நன்றாகத்தோற்றுமென்கிறார்.

28. ப்ரகாரநியமராஹித்யத்தை த$_3$ர்ஶிப்பிக்கிறார் மேல், (ப்ரகாரநியதி) என்று துடங்கி. (எங்கும் காணலாம்) என்றது – இத்தையநுஷ்டிப்பார், ஶ்ரவிப்பார் எல்லார்பக்கலிலும் காணலாம் என்றபடி.

29. அதெங்கே கண்டதென்ன, பூர்வப்ரக்ருதவிஷயங்களிலே த$_3$ர்ஶிப்பிக்கிறார் (த்$_3$ரௌபதி$_3$ இத்யாதி$_3$வாக்யத்$_3$வயத்தாலே).

(ஸ்நாதையாயன்றே ப்ரபத்தி பண்ணிற்று) என்றது – து$_3$ஶ்ஶாஸநாக்ருஷ்டையாய் ஸபை$_4$யில் வருகிறபோது "ரஜஸ்வலைகவஸ்த்ராஹம் ந து மாம் நேதுமர்ஹஸி ! கு$_3$ரூணாஞ்ச புர:ஸ்த$_2$ாதும் ஸப$_4$ாயாம் நாஹமுத்ஸஹே !!"(ப$_4$ார.ஸப$_4$ா.) என்னும்படி அஶுத்$_3$தை$_4$யாயிருக்கிறவள் ஸ்நாநம் பண்ணியன்றே ப்ரபத்தி பண்ணிற்றென்றபடி. இத்தால் – ப்ரபத்திபண்ணுவார் ப்ரயதராய்ப்–பண்ணவேணுமென்னும் நியதியில்லாமை காட்டப்பட்டது.

(நீசர்நடுவேயிறே இவ்வர்த்த$_2$ம் கேட்டது) என்றவிடத்தில் நீசரென்கிறது – "நெடுந்தகையை நினையாதார் நீசர்"(பெரியதிருமொழி 11-6-8) என்றாழ்வாரருளிச்செய்த ஶௌரிசிந்தவிமுக$_2$ரான ஹேயரை. "விஷ்ணுப$_4$க்திவிஹீநஸ்து யதிஶ்ச ஶ்வபசாத$_4$ம:"( ) விப்ராத்$_3$த்$_3$விஷட்$_3$கு$_3$ண–யுதாத$_3$ரவிந்த$_3$நாப$_4$பாத$_3$ாரவிந்த$_3$விமுகா$_2$ாச்ச்$_2$வபசம் வரிஷ்ட$_2$ம்"( ) என்று – ப$_4$க$_3$வத்$_3$விமுக$_2$ரை

(ஆ.வ்யா.)-ஆசாரப்ரத$_4$ானநுள அர்ஜுநன் மோக்ஷார்த்தநும், வேத$_3$ாந்தார்த்தஶ்ரவணம் செய்கிறவிடத்து "நெடுந்தகையை நினையாதார் நீசர்" (பெரியதிருமொழி 11-6-8) என்னும் ப$_4$க$_3$வத்ஸ்மரணமற்ற நீசஸ்தானமத்$_4$யேயிறே, ஏகாந்தத்திற்கேட்குமிந்த சரமார்த்த$_2$த்தைக்கூசாமற்கேட்டதும் என்றிது [1]நியமஸ்த$_2$ாநுஷ்ட$_2$ாநஸித்$_3$த$_4$மென்கிறர்.

3 0. இதில் ப$_2$லிதார்த்த$_2$த்தை அருளிச்செய்கிறர். (ஆகையால்) இத்யாதி$_3$யால்.

**3 0. ஆகையால் ஸாத்$_3$த்$_4$யஸாத்$_3$தி$_4$களிரண்டும் தேடவேண்டா: இருந்தபடியே அதி$_4$காரியாமித்தனை.**

ப்ரகாரநியமாபேக்ஷையில்லாமை இதுக்கு ஸ்வப$_4$ாவமாகையாலே, யோக்$_3$யதாபாத$_3$கஸாத்$_3$தி$_4$யும் அயோக்$_3$யதாபாத$_3$காஸாத்$_3$தி$_4$யுமாகிற ப்ரவ்ருத்திரூபமான இரண்டும், பாவநமுமாய், ப்ரவ்ருத்த்யஸஹமுமான நிவ்ருத்திரூபநிரபேக்ஷப்ரபத்திக்கு, நின்றநிலைக்கு மேற்படத்தேடவேண்டா; ப்ரவ்ருத்திரூபமான உபாயபாத$_3$நமும், [2]ப்ரவ்ருத்திநிவ்ருத்திரூபக்ரியாஸஹமானவிதுக்கு வேண்டாவிறே; ஆனல் வேண்டுவதென் என்ன, ப்ரபத$_3$நகாலத்தில் ஸாத்$_3$த$_4$ுவாயிருந்தானாகில் அப்படியே அதி$_4$காரியாமித்தனை, அன்றியே தநி$_3$தரனாயிருந்தானேயாகில் அப்படியே அதி$_4$காரியாமித்தனை, ஸாத்$_3$த$_4$ுவாகவும் வேண்டா, அஸாத்$_3$த$_4$ுவாகவும் வேண்டா, "அபவித்ர: பவித்ரோ வா ஸர்வாவஸ்த$_2$ாம் க$_3$தோऽபி வா। த்$_3$யாயஸ்மரண-

---

(தீ.வ்யா.)-ஶ்வபசாத$_4$மராகச்சொல்லிற்றிறே; அதுக்குமேல் ஶரணாக$_3$தையைப்பரிப$_4$வித்தும், ஶரணாக$_3$தரான பாண்ட$_3$வர்கள்திறத்திலே தீங்குகளைச்செய்தும் போருகையாலே, "ஸத்$_3$யஶ்சண்ட$_3$ாலதாம் வ்ரஜேத்" (வாராஹே) என்கிற கர்மசண்ட$_3$ாலரிறே கைகலந்துநிற்கிறது. (நீசர்நடுவே) என்கையாலே - நீசஸ்ப்ருஷ்டியாலிவனுக்குண்டான அஸாத்$_3$தி$_4$யும் நீசஸகாஶத்திலே என்னுமிடமும் தோற்றுகிறது. இத்தால் - ப்ரபத்திஶ்ரவணம் பண்ணும்போது நீசமத்$_4$யத்திலாகாதென்னும் நியதியில்லாமை காட்டப்பட்டது.

3 0. இத்தால் ப$_2$லித்தத்தைச்சொல்லாநின்றுகொண்டு இவ்வர்த்த$_2$த்தை நிக$_3$மிக்கிறர் (ஆகையாலென்று துடங்கி).

(ஆகையாலென்றது) - அநுஷ்ட$_2$ாநத$_3$ஶையிலும் ஶ்ரவணத$_3$ஶையிலும் இவர்களிருவருமிப்படிச்செய்கையாலென்றபடி. (ஸாத்$_3$த்$_4$யஸாத்$_3$தி$_4$களிரண்டும் தேடவேண்டாவென்றது) - ப்ரபத்தியிலந்வயிக்குமளவில் அஸாத்$_3$த$_4$ுவாயிருக்குமவனுக்கு ஸாத்$_3$திஸம்பாதிக்கவேண்டா, ஸாத்$_3$த$_4$ுவாயிருக்குமவனுக்கு அஸாத்$_3$தி$_4$ஸம்பாதி$_3$க்கவேண்டாவென்றபடி. அஸாத்$_3$தி$_4$ தேடவேண்டாவென்றது - கீழ்ச்சொன்னவர்களிருவரும் அஸாத்$_3$த$_4$ுரான த$_3$ஶையிலே ப்ரபத்தியிலந்வயித்தமை சொல்லுகையாலே அஸாத்$_3$தி$_4$தானிதுக்கு வேண்டுமோவென்று ஶங்கியாமைக்காக. (இருந்தபடியே அதி$_4$காரியாமித்தனை) என்றது - ப்ரபத$_3$நகாலத்தில் அஸாத்$_3$த$_4$ுவாதல் ஸாத்$_3$த$_4$ுவாதல் யாதொருபடி இருந்தான், இருந்ததொரு ப்ரகாரத்திலே இதுக்கதி$_4$காரியாமித்தனையென்றபடி. த்$_3$ரௌபதி$_3$யும், அர்ஜுநனும் ப்ரபத்த்யநுஷ்ட$_2$ாநதச்ச்$_2$ரவணத$_3$ஶைகளில் தத$_3$ங்கமாக ஸாத்$_3$தி$_4$ ஸம்பாதி$_3$யாதவோபாதி அஸாத்$_3$தி$_4$யும் ஸம்பாதி$_3$த்துக்கொண்டமையில்லையிறே, இருந்தபடியே அதி$_4$காரிகளானவித்தனையிறே.

3 1. இவ்வர்த்த$_2$விஷயமாக ஆப்தவசநத்தை ஸ்மரிப்பிக்கிறர் மேல் (இவ்விடத்திலே) என்று

(ஆ.வ்யா.)-மாத்ரேண ஸ ப3ாஹ்யாப்4யந்தரஶ்ஶுசி: ॥" ( ) என்றித்யாதி3கள் உப4யஸாபேக்ஷதையு-மிவனுக்கில்லை என்னுநின்றதிறே.

3 1 உப4யஸாபேக்ஷதையுமில்லையென்னுமிவ்வர்த்த2த்திலே, அப4யப்ரத3ாநம் கேட்கிற வேல்வெட்டிப்-பிள்ளைக்கு, அதருளிச்செய்கிற நம்பிள்ளை ப்ராஸங்கி3கமாக அருளிச்செய்த வார்த்தையை ஸ்மரித்து விஶ்வஸிப்பதென்கிறார்.

**3 1 .இவ்விடத்திலே வேல்வெட்டிப்பிள்ளைக்குப்பிள்ளையருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது.**

நம்பிள்ளை, வேல்வெட்டி ஸோமயாஜியார்க்கு ' "அஞ்ஜலிம் ப்ராங்முக2: க்ருத்வா" என்று நியமத்துடன் பெருமாள் ஸமுத்3ரராஜனை ப்ரபத்தி பண்ணினார்' என்றருளிச்செய்ய, அவர், 'மற்றை கர்மத்தைப்பற்ற ப்ரபத்திதானரிதாயிருந்ததீ' என்ன, 'பெருமாள் ஸாமாந்யத4ர்மஸம்ஸ்த2ாபகராய் வந்தவராகையால் அப்படிச்செய்தாரித்தனைகாணும், விபீ4ஷணன் ஸமுத்3ரத்தின் மேலே வாராநிற்க, (1)கரடு நனையவாகிலும் வந்து ஶரணம்புக்கிலன் கண்டீரே, நின்றநிலையிலே இதுக்கதி4காரமித்தனைகாணும்' என்றருளிச்-செய்தாரிறே.

3 2 கர்மாதி3கள் போலன்றியே இதுக்கு (அதி4காரிநியமமின்றிக்கேயொழிந்தபடியென் என்னில்) என்று ப்ரஶ்நம் பண்ணி, உத்தரமருளிச்செய்கிறார், (த4ர்மபுத்ராதி3களும்) இத்யாதி3யால்.

**3 2 .அதி4காரிநியமமின்றிக்கேயொழிந்தபடியென்னென்னில் த4ர்மபுத்ராதிகளும், த்3ரௌபதி3யும், காகமும், காளியனும், ஸ்ரீக3ஜேந்த்ராழ்வானும், ஸ்ரீவிபீ4ஷணாழ்-வானும், பெருமாளும், இளையபெருமாளும் துடக்கமானவர்கள் ஶரணம்புகுருகை-யாலே அதி4காரிநியமமில்லை.**

"வர்ணாநாம் ப்3ராஹ்மணோ கு3ரு:"( ) என்று உத்தமவர்ணரான ப்3ராஹ்மணரைப்பற்ற ஒரு படித்தாழநின்ற க்ஷத்ரியரான த4ர்மபுத்ராதி3களும் "த்3ரௌபத்3யா ஸஹிதாஸ்ஸர்வே நமஶ்சக்ருர்-

(ஜி.வ்யா.)-துடங்கி.

அதாவது - வேல்வெட்டிப்பிள்ளை, "பெருமாள் கடலை ஶரணம்புகுகிறவிடத்தில் ப்ராங்முக2த்வா-தி3நியமோபேதராய் ஶரணம்புகுருகையாலே, இதரோபாயங்களோபாதி ப்ரபத்திக்கும் சில நியமங்கள் வேண்டியிருக்கிறதோ" என்று நம்பிள்ளையைக்கேட்க, "பெருமாள்பக்கல் கண்ட நியமம் இவ்வுபாயத்துக்குடன்வந்தியாயிருப்பதொன்றன்று, உபாயபரிக்3ரஹம் பண்ணினவருடைய ஸ்வப4ாவத்தாலே வந்ததித்தனை; பெருமாள் தமக்கு 'ஸமுத்3ரம் ராக4வோ ராஜா ஶரணம் க3ந்துமர்ஹதி '(ரா.யு.1 9-3 1) என்று உபதே3ஶித்தான் ஸ்ரீவிபீ4ஷணாழ்வானிறே, அவன்தான் பெருமாளை ஶரணம் புகுகிறவிடத்தில் கடலிலேயொரு முழுக்கிட்டு வந்தானென்றில்லையே; இத்தால் சொல்லிற்றாய்த்தது - பெருமாள் இக்ஷ்வாகுவம்ஶ்யராய் ஆசாரப்ரத4ாநராயிருக்கையாலே தம்முடைய நியமங்களோடே ஶரணம்புக்கார், இவன் ராக்ஷஸஜாதியனாகையாலே நின்றநிலையிலே ஶரணம்புக்கான், ஆகையாலே யோக்3யனுக்கு அயோக்3யதை ஸம்பாதி3க்கவேண்டா, அயோக்3ய-னுக்கு யோக்3யதை ஸம்பாதி3க்கவேண்டா, நின்றநிலைகளிலே அதி4காரிகளாமித்தனையென்னுமது" என்றருளிச்செய்த வார்த்தை.

(ஆ.வ்யா.)-ஜநார்த்த3நம்" (ப4ாரதம்) என்று விஸ்வஸித்து ஶரணம் புகுருகையாலும்; மந்த்ராதி4காரமற்ற த்3ரௌபதி3யும் "ஶங்க2சக்ரக3தா3பாணே த்3வாரகாநிலயாச்யுத | கோ3விந்த3 புண்ட3ரீகாக்ஷ ரக்ஷ மாம் ஶரணாக3தாம் ||" என்று கூச்சமற்று ஶரணம் புகுருகையாலும்; ஶாஸ்த்ரவஶ்யஜந்மமன்றியே ப்ரதிகூலனான காகாஸுரனும் "ஸ பித்ரா ச பரித்யக்தஸ்ஸுரைஶ்ச ஸமஹர்ஷிபி4: | த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ ஶரணம் க3த: ||" (ரா.ஸு.38-33)என்று போக்கற்று ஶரணம்புகுருகையாலும்; தம:ப்ரசுரஜந்மமான காளியனும் "ஸோऽஹம் தே தே3வதே3வேஶ நார்ச்சநாதௌ3 ஸ்துதௌ ந ச | ஸாமர்த்2யவாந் க்ருபாமாத்ரமநோவ்ருத்தி: ப்ரஸீத3 மே ||" (வி.பு.5-7-10) என்று மிடுக்கற்று ஶரணம் புகுருகையாலும்; திர்யக்3ஜந்மாவாய் அநுகூலனான ஸ்ரீக3ஜேந்த்3ராழ்வானும் "பரமாபத3மாபந்நோ மநஸாऽசிந்தயத்3த4ரிம் | ஸ து நாக3வரஶ்ஸ்ரீமாந் நாராயணபராயண: ||" (வி.த4.69-80) என்று மூச்சற்று ஶரணம் புகுருகையாலும்; ராக்ஷஸஜந்மாவாய் ப்ரதிகூலஸம்ப3ந்த4முமுடைய த4ர்மாத்மாவான ஸ்ரீவிபீ4ஷணாழ்வானும் "ஸோऽஹம் பருஷிதஸ்தேந தா3ஸவச்சாவமாநித: | த்யக்த்வா புத்ராம்ஶ்ச தா3ராம்ஶ்ச ராக4வம் ஶரணம் க3த: ||"(ரா.யு.17-16) என்று அந்யஸம்பந்த4மற்று ஶரணம் புகுருகையாலும்; ஸ்வநிரூபகபாரதந்த்ர்யஸ்வபாவத்தேடிப்பின்செல்லும் ஸ்வதந்த்ராஶரண்யரான பெருமாளும் "ப3ாஹும் பு4ஜக3போ4க3ாப4முபதா4யாரிஸூத3ந: | அஞ்ஜலிம் ப்ராங்முக2: க்ருத்வா ப்ரதிஶிஶ்யே

---

(ஜீ.வ்யா.)-32 அநந்தரம், அதி4காரிநியமாபா4வத்தை உபபாதி3ப்பதாக தஜ்ஜிஜ்ஞாஸாப்ரஶ்நத்தை அநுவதி3க்கிறார் (அதி4காரிநியமமின்றிக்கேயொழிந்தபடியென்னென்னில்) என்று.

அதுக்குத்தரமருளிச்செய்கிறார் (த4ர்மபுத்ராதி3களும்) என்றுதுடங்கி. அதாவது – "த்3ரௌபத்3யா ஸஹிதாஸ்ஸர்வே நமஶ்சக்ருர்ஜநார்த்த3நம்"(ப4ார.) என்று க்ஷத்ரியரான த4ர்மபுத்ராதி3களும், "ஶங்க2சக்ரக3தா3பாணே த்3வாரகாநிலயாச்யுத | கோ3விந்த3 புண்ட3ரீகாக்ஷ ரக்ஷ மாம் ஶரணாக3தாம் ||"(ப4ார.ஸப4ா.66-41) என்று ஸ்த்ரீயான த்3ரௌபதி3யும் "ஸ பித்ரா ச பரித்யக்தஸ்ஸுரைஶ்ச ஸமஹர்ஷிபி4: | த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ ஶரணம் க3த: ||" (ரா.ஸு.38-34) என்று தே3வரூபத்தை மறைத்துவந்து மஹாபராத4த்தைப்பண்ணின காகமும், "ஸோஹந்தே தே3வதே3வேஶ நார்ச்சநாதௌ3 ஸ்துதௌ ந ச | ஸாமர்த்2யவாந் க்ருபாமாத்ரமநோவ்ருத்தி: ப்ரஸீத3 மே ||" (வி.பு.5-7-70) என்று திர்யக்3யோநிஜனும், ப்ரதிகூலனுமான காளியனும், "பரமாபத3மாபந்நோ மநஸாऽசிந்தயத்3த4ரிம் | ஸ து நாக3வரஶ்ஸ்ரீமாந் நாராயணபராயண: ||"(வி.த4.69-47) என்று திர்யக்3ஜந்மாவாய், அநுகூலனுமாயிருக்கிற ஸ்ரீக3ஜேந்த்3ராழ்வானும், "ஸோऽஹம் பருஷிதஸ்தேந தா3ஸவச்சாவமாநித: | த்யக்த்வா புத்ராம்ஶ்ச தா3ராம்ஶ்ச ராக4வம் ஶரணம் க3த: ||"(ரா.யு.17-16) என்று ராக்ஷஸஜாதீயனான ஸ்ரீவிபீ4ஷணாழ்வானும், "ப3ாஹும் பு4ஜக3போ4க3ாப4முபதா4யாரிஸூத3ந: | அஞ்ஜலிம் ப்ராங்முக2: க்ருத்வா ப்ரதிஶிஶ்யே மஹோத3தே4: ||"(ரா.யு.21-1) என்று ஸர்வஶரண்யரான பெருமாளும், "ஸ ப்4ராதுஶ்சரணௌ கா3ட4ம் நிபீட்3ய ரகு4நந்த3ந: | ஸீதாமுவாசாதியஶா ராக4வஞ்ச மஹாவ்ரதம் ||"(ரா.அ.31-2) என்று அக்கரையராய்த்துடர்ந்தடிமைசெய்யவந்த இளையபெருமாளும். (துடக்கமானவர்கள்) என்கையாலே "ஸோऽஹம் த்வாம் ஶரணமபாரமப்ரமேயம் ஸம்ப்ராப்த: பரமபத3ம் யதோ ந கிஞ்சித் | ஸம்ஸாரஶ்ரமபரிதாபதப்தசேதா நிர்வாணேऽபரிணதத4ாம்நி ஸாபி4லாஷ:" (ப4ாகவதம்10-51-57)என்று முசுகுந்தனும், "மூடோ4ऽயமல்பமதிரல்பவிசேஷ்டிதோऽயம் க்லிஷ்டம் மநோऽஸ்ய விஷயைர்ந மயி ப்ரஸங்கி3| இத்த2ம் க்ருபாம் குரு

(ஆ.வ்யா.)–மஹோத3தே4: ॥" (ரா.யு.21-1) என்று ஸ்வபா4வத்தை மறைத்து ஸமுத்3ரராஜனை ஶரணம் புகுருகையாலும்; நிரூபிதஸ்வதந்த்ரவஸ்துவைப்பின்செல்லும் பரதந்த்ரரான இளையபெருமாளும் "ஸ ப்4ராதுஶ்சரணௌ கா3டம் நிபீட்3ய ரகு4நந்த3ந: । ஸீதாமுவாசாதியஶா ராக4வஞ்ச மஹாவ்ரதம் ॥" (ரா.அ.31-2) என்று த4ரிப்பற்று ஶரணம்புகுருகையாலும்; இன்னமும் முசுகுந்த3ப்ரஹ்லாத3வௌப4ரி-ஸுமுக2கே3பஜநாதி3ப்ரப்4ருதிகள், ஸ்வஸ்வாபி4லஷிதஸித்3த்4யர்த்த2மாக ஶரணம் புகுருகையாலும் அதி4காரிநியதியில்லை, ஸர்வாதி4காரமித்தனையென்கிறார். [1]மந்த்ராதி4காரிகளோடும், தந்த்ராதி4காரிகளோடும், ஶாஸ்த்ரவஶ்யரோடும், அஶாஸ்த்ரவஶ்யரோடும், அநுகூலரோடும், ப்ரதிகூலரோடும், ஸ்வதந்த்ரரோடும், பரதந்த்ரரோடும் வாசியற ஸர்வரும் ப்ரபத்தி பண்ணுகையாலே ஸர்வாதி4காரமென்றது ஸித்3த4ம்.

**33. ப2லநியமமின்றிக்கேயொழிந்தபடியென்னென்னில். த4ர்மபுத்ராதி3களுக்கு ப2லம் ராஜ்யம். த்3ரௌபதி3க்கு ப2லம் வஸ்த்ரம். காகத்துக்கும் காளியனுக்கும் ப2லம் ப்ராணம். ஸ்ரீக3ஜேந்த்3ராழ்வானுக்கு ப2லம் கைங்கர்யம். ஸ்ரீவிபீ4ஷணாழ்வானுக்கு ப2லம் ராமப்ராப்தி. பெருமாளுக்கு ப2லம் ஸமுத்3ரதரணம். இளையபெருமாளுக்கு ப2லம் ராமாநுவ்ருத்தி.**

33. இனி ப2லநியதியின்றிக்கேயொழிந்த ப்ரஶ்நத்துக்குத்தரமருளிச்செய்கிறார் மேல். ஐஹிகப2லகாங்க்ஷிகளான த4ர்மபுத்ராதி3களுக்கு ஐஹிகஸுகோ2பயோகி3யான ராஜ்யம் ப2லம்; ஸ்வலஜ்ஜாநாஶகாங்க்ஷியான த்3ரௌபதி3க்கு ஐஹிகந்தன்னில் அத்யற்பமான [2]அக3ளிதவஸ்த்ரம் ப2லம்; ப்ராணகாங்க்ஷிகளான காககாளியர்களுக்கு ஐஹிகாமுஷ்மிகப2லாநுப4வோபகரணமான ப்ராணஸ்தி2தியே ப2லம்; ஸ்வரூபாநுரூபப2லகாங்க்ஷியான ஸ்ரீக3ஜேந்த்3ராழ்வானுக்கு ஸ்வரூபஸ்தி2திஹேதுவான கைங்கர்யம் ப2லம்; ராமப்ராப்த்யாகாங்க்ஷியான ஸ்ரீவிபீ4ஷணாழ்வானுக்கு கைங்கர்யபூர்வபா4வியான தத்ப்ராப்தியே ப2லம்; ஸமுத்3ரோத்திதீர்ஷுவான பெருமாளுக்கு ஸ்வாபி4மதப்ராப்திஸாத4நமான ஸமுத்3ரதரணம்

---

(ஸ்ரீ.வ்யா.)–மயி ப்ரணதேऽகி2லேஶ த்வாம் ஸ்தோதுமம்பு3ஜப4வோऽபி ஹி தே3வ நேஶ: ॥" (          ) என்று க்ஷத்ரப3ந்து4வும், "ப4க3வந்தம் ப்ரபந்நா ஸா ப4க3வந்தமவாப ஹ" (          ) என்று மாத4வியும், "தம் ப்ரபி4ந்நஶிரோக்3ரீவம் ஆஸ்யேப்4ய: ஸ்ருதஶோணிதம் । விலோக்ய ஶரணம் ஜக்3முஸ்தத்பத்ந்யோ மது4ஸூத3நம் ॥" (வி.பு.5-7-47) என்று காளியபத்நிகளும், "ப்ரணமப்ரவண நாத2 தைத்3த்யஸைந்யபராஜிதா: । ஶரணம் த்வாமநுப்ராப்தாஸ்ஸமஸ்தா தே3வதாக3ணா: ॥" (          ) என்று இந்த்3ராதி3தே3வர்களும், "ராக்ஷஸைஶ்வர்யத்4யமாநாநாம் வாநராணாம் மஹாசமூ: । ஶரண்யம் ஶரணம் யாதா ராமம் த3ஶரத2ாத்மஜம் ॥"(ரா.யு.94-17) என்று ஸ்ரீவாநரஸேனையும் முதலாயுள்ளவர்களெல்லாரும் ஶரணம் புகுருகையாலே, ப்ரபத்திக்கின்னாரதி4காரிகளென்றொரு நியதியில்லை; ருசியுடையாரெல்லாரும் அதி4காரிகளென்கை.

33. அநந்தரம், ப2லநியமாபா4வப்ரஶ்நத்தை அநுவதி3க்கிறார், (ப2லநியமமின்றிக்கே ஒழிந்தபடியென்னென்னில்) என்று.
அதுக்குத்தரமருளிச்செய்கிறார் (த4ர்மபுத்ராதி3களுக்கு ப2லம்) என்று துடங்கி. இத்தால் கீழ் அதி4காரிநியமாபா4வத்துக்குடலாகக்காட்டப்பட்ட த4ர்மபுத்ராதி3கள் துடக்கமான ப்ரபத்தாக்களானவர்கள், ராஜ்யார்த்த2மாகவும், வஸ்த்ரார்த்த2மாகவும், ப்ராணார்த்த2மாகவும், கைங்கர்-

(ஆ.வ்யா.)–ப2லம்; ராமாநுஸஞ்சாராபி4லாஷியான இளையபெருமாளுக்கு கைங்கர்யாநுரூபதத்3நுவ்ருத்தி ப2லம்; ஆக அல்பாஸ்தி2ரமாய் ஸ்வரூபவிருத்3த4மான ப2லத்தோடு, அநந்தஸ்தி2ரமாய் ஸ்வரூபா–விருத்3த4மான ப2லத்தோடு, ஸாத்4யரூபப2லத்தோடு, ஸாத4நரூபப2லத்தோடு வாசியற, ஸர்வ–ப2லத்துக்கும் ஏகஸாத4நமான ப்ரபத்திக்கு ப2லநியதியில்லை.

**3 4 .விஷயநியமமாவது – கு3ணபூர்த்தியுள்ளவிடமே விஷயமாகை; பூர்த்தியுள்ளதும் அர்ச்சாவதாரத்திலே.**

3 4 .ஆக, ப்ரபத3நம் நிரபேக்ஷமாய், அங்க3ஸஹமாய், ஸ்வரூபாநுரூபமாய், இதரஸாத4நவ்யாவ்ருத்த–மாயிருக்கையாலே, தே3ஶாதி3நியமஸாபேக்ஷமன்றென்று பண்ணின ப்ரதிஜ்ஞையை உபபாதி3த்து, (விஷயநியமமேயுள்ளது) என்ற ப்ரதிஜ்ஞையை உபபாதி3க்கிறார் மேல், (பே4தக்3ரஹமுமாயிருக்கு)(ஸா–4 0 )ளவாக; ப4க3வதே3கவிஷயையான ப்ரபத்திவிஶேஷத்துக்கு (விஷயநியம)மாவது – ஸௌலப்4யா–தி3கு3ணபூர்த்தியுள்ளவிடமே நியதவிஷயமாகையென்ன, அப்பூர்த்திதானுள்ளதெவ்விடத்தேயென்ன, "பூர்ணஸ்ய பூர்ணமாத3ய பூர்ணமேவாவஶிஷ்யதே । ஸர்வம் பூர்ணம் ஸஹோம்"(கட2வல்லி.) என்று தத்கு3ணபூர்த்தி ப்ரகடமாகவுள்ளதும் ஸுலப4மான (அர்ச்சாவதாரத்திலே) என்கிறார்.

3 5 .இந்த ஸுலப4விஷயமொன்றிலுமே ப்ரபத்தி பண்ணவேணுமென்னும் நிர்ப்ப3ந்த4மென் என்ன, ஶிஷ்டாசாரத்தைப்பற்றவென்கிறார் மேல், (ஆழ்வார்கள்) இத்யாதி3யால்.

**3 5 .ஆழ்வார்கள் பலவிடங்களிலும் ப்ரபத்திபண்ணிற்றும் அர்ச்சாவதாரத்திலே.**

மயர்வற மதிநலமருளப்பெற்று உப4யவிபூ4தியையும் ஸாக்ஷாத்கரித்து பரத்வாதி3களெல்லாம் [1]பாணி–மாணிக்கமாகக்காணவல்ல ஆழ்வார்கள், "திருவேங்கடத்தானே – உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேன்"

---

(ஶ்ரீ.வ்யா.)–யார்த்த2மாகவும், ராமப்ராப்த்யர்த்த2மாகவும், ஸமுத்3ரதரணார்த்த2மாகவும், ராமாநு–வ்ருத்த்யர்த்த2மாகவும் ப்ரபத்தி பண்ணுகையாலே, ப்ரபத்திக்கு ப2லநியமமில்லை என்றதாய்த்து.

3 4 ஆக, ப்ரபத்திக்கு தே3ஶகாலாதி3நியமாபேக்ஷையில்லையென்ற ப்ரதிஜ்ஞையை உபபாதி3த்தார் கீழ்; (விஷயநியமமேயுள்ளது) என்ற ப்ரதிஜ்ஞையை உபபாதி3க்கிறார் மேல், (விஷயநியமமாவது) என்று துடங்கி.

(கு3ணபூர்த்தியுள்ளவிடமே விஷயமாகை) என்றது – பரத்வாதி3களைந்திலும் வைத்துக்கொண்டு ஸௌலப்4யாதி3கு3ணபூர்த்தியுள்ளவிடமே விஷயமாகையென்றபடி. அந்த கு3ணபூர்த்திதா–னுள்ளதெங்கேயென்ன, (பூர்த்தியுள்ளதுமர்ச்சாவதாரத்திலே) என்கிறார். "அர்ச்சாவதாரவிஷயே மயாப்யுத்3தே3ஶதஸ்ததா2 । உக்தா கு3ணா ந ஶக்யந்தே வக்தும் வர்ஷஶதைரபி ।।" (பாத்3ம–ஸம்ஹிதை)என்று ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனை தானே சொல்லப்புக்காலும் சொல்லித்தலைக்கட்ட–வரிதாம்படியிறே அர்ச்சாவதாரகு3ணபூர்த்தியிருப்பது.

3 5 .இக்குணபூர்த்தியுள்ள அர்ச்சாவதாரமே ப்ரபத்திக்கடைத்தவிஷயமென்னுமந்தை, ப்ரபந்நஜந–கூடஸ்த2ருடைய அநுஷ்டா2நத்தாலும் ப்ரகாஶிப்பிக்கிறார் மேல், (ஆழ்வார்களென்றுதுடங்கி). மயர்வறமதிநலமருளப்பெறுகையாலே பரத்வாதி3களையெல்லாம் கரதலாமலகமாகக்கண்டிருக்கிற–

(ஆ.வ்யா.)-(திருவாய்.6-1 0-1 0), "ஆழிவண்ண நின்னடியிணையடைந்தேன்"(பெரியதிருமொழி5-8-1), "நின்னருளே புரிந்திருந்தேன்"(பெரியாழ்வார் திரு.5-4-1), "உனதருளே பார்ப்பன்" (பெருமாள் திரு.5-4), "உன்னபாதமென்ன"(திருச்சந்த.1 1 9), "உன் கடைத்தலையிருந்து வாழும்" (திருமாலை3 8), "அம்மான் திருக்கமலபாதம் வந்து"(அமலனாதி.1), "என்னுள் கெடுமாமிடர்"(முதல் திரு.7 7), "கருக்கோட்டியுட்கிடந்து கைதொழுதேன்"(இரண்டாம் திரு.8 7), "அட்டபுயகரத்தான் ... தாள்முதலே நங்கட்குச்சார்வு(மூன்றாம் திரு.9 9)" என்றித்யாதி$_3$ப்படியே பலவிடங்களிலே ஸ்வரூபாநு-ரூபமான [1]ப்ரபத்த்யுபாயாத்$_4$யவஸாயம் பண்ணிற்றும் ஸர்வஸுலப$_4$மான அர்ச்சாவதாரத்திலே; ஆகையாலிது ஶிஷ்டாநுஷ்ட$_2$ாநஸித்$_3$த$_4$மென்கிறார்.

3 6 .கு$_3$ணபௌஷ்கல்யமுள்ள பரத்வத்திலவர்கள் ப்ரபத்தி பண்ணுதொழிவானென் என்னில், விஶேஷித்து தத்பௌஷ்கல்யமிங்கேயுண்டாகையாலேயென்கிறார் மேல், ("பூர்ணம்") இத்யாதி$_3$யால்.

**3 6 .பூர்ணமென்கையாலே எல்லா கு$_3$ணங்களும் புஷ்கலங்கள்.**

"ஸர்வம் பூர்ணம்" (கட$_2$வல்லீ)என்று ஶ்ருதி சொல்லுகையாலே மோக்ஷித்வோபயோகி$_3$களான ஶ்ரிய:பதித்வாதி$_3$களும், ஆஶ்ரயணோபயோகி$_3$களான வாத்ஸல்யாதி$_3$களும், கார்யோபயோகி$_3$களான ஜ்ஞாந-ஶக்த்யாதி$_3$களும், அநுப$_4$வோபயோகி$_3$களான ஸௌந்த$_3$ர்யாதி$_3$களுமான எல்லா கு$_3$ணங்களும் ப்ரகாஶிக்கையாலே புஷ்கலங்களாயிருக்கும்; "என் திருமகள்சேர் மார்வன்" (திருவாய்.7-2-9), "அலர்மேல் மங்கையுறை மார்பா"(திருவாய்.6-1 0-1 0) என்றும், "கோநிரைகாத்தவன்"(திருவாய்.7-2-8) என்றும், "நிகரில் புகழாய்"(திருவாய்.6-1 0-1 0), "முன்செய்திவ்வுலகமுண்டு"(திருவாய்.7-2-2), "உலகமுண்டபெருவாயா"(திருவாய்.6-1 0-1) என்றும், "கடல்வண்ணு சுடர்நுமொளிமூர்த்தி"

---

(ஶ்ரீ.வ்யா.)-வர்களிறே ஆழ்வார்கள்; இப்படியிருக்கிறவர்கள் ப்ராப்யத்வராதிஶயத்தாலே பலகாலும் ப்ரபத்தி பண்ணுகிறவளவில், பலவிடங்களிலும் அர்ச்சாவதாரத்திலேயிறே ப்ரபத்தி பண்ணிற்று; ஸ்த$_2$லாந்தரத்தில் க்வாசித்கமித்தனையிறே. எங்ஙனேயென்னில், ஆழ்வார்களுக்கெல்லாம் தலைவரான நம்மாழ்வார், "ஆறெனக்கு நின் பாதமே சரணாகத்தந்தொழிந்தாய்"(திருவாய்.5-7-1 0) "கழல்களவையே சரணாகக்கொண்ட"(திருவாய்.5-8-1 1) "நம்பெருமானடிமேல் சேமங்கொள் தென்குருகூர்ச்சடகோபன்"(திருவாய்.5-9-1 1) "உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேன்"(திருவாய்.6-1 0-1 0) என்று இப்படிப்பலவிடங்களிலும் ப்ரபத்தி பண்ணிற்று அர்ச்சாவதாரத்திலேயிறே; "பிறந்த-வாறு"(திருவாய்.5-1 0) ஒன்றிலுமிறே அவதாரத்திலே ஶரணம்புக்கது. திருமங்கையாழ்வாரும் "வந்துன் திருவடியடைந்தேன் நைமிசாரணியத்துளெந்தாய்"(பெரியதிருமொழி 1-6-1), "விரை-யார் திருவேங்கடவா நாயேன் வந்தடைந்தேன்"(பெரியதிருமொழி 1-9-1), "காவளம்பாடிமேய கண்ணனே களைகணீயே"(பெரியதிருமொழி 4-6-1), "ஆழிவண்ண நின்னடியிணையடைந்தேன் அணிபொழில் திருவரங்கத்தம்மானே"(பெரியதிருமொழி 5-8-1) என்று இப்படி அர்ச்சாவதா-ரத்திலேயிறே பல இடங்களிலும் ப்ரபத்தி பண்ணிற்று. மற்றையாழ்வார்களுக்குமிப்படி தத்தத்-ப்ரப$_3$ந்த$_4$ங்களிலே கண்டுகொள்வது.(ப்ரபத்தி பண்ணிற்றும்) என்கிறவிந்த 'ச'ஶப்$_3$த$_3$த்தாலே (பூர்த்தியுள்ளதும்) என்று கீழ்ச்சொன்னத்தை ஸமுச்சயிக்கிறது.

3 6 .இப்படியிவ்வாழ்வார்கள் ப்ரபத்தி பண்ணுமிடங்களில் பரத்வாதி$_3$களெல்லாமிருக்க அர்ச்சாவதாரத்திலே பண்ணுகைக்கடி இதின் கு$_3$ணபூர்த்தியிறே; அந்த கு$_3$ணபூர்த்திதன்னை

(ஆ.வ்யா.)-( ) என்றுமித்யாதி3களிலே உக்தகு3ணங்களெல்லாம் அர்ச்சாவதாரத்துக்குண்டென்னுமிடம் காணலாமிறே.

37.[1]ஒழிந்த கு3ணங்களைப்பற்றவும் ப்ரபத்த்யபேக்ஷிதகு3ணப்ரகாஶமுள்ளது இவ்வர்ச்சாவதாரத்திலே-யென்கிறுர் மேல், (ப்ரபத்திக்கு) இத்யாதி3யால்.

**37.ப்ரபத்திக்கபேக்ஷிதங்களான ஸௌலப்4யாதி3கள் இருட்டறையில் விளக்குப்போலே ப்ரகாஶிப்பதிங்கே.**

ப4க3வத்விஷயத்தை ப்ரத்யக்ஷித்துப்பண்ணவேண்டும் ப்ரபத்திக்கு அநுரூபவிஷயமாகைக்கபேக்ஷிதங்களான மாம்ஸத்3ருஷ்டிவிஷயமாகையாகிற ஸௌலப்4யஸௌலப4ளுயும், பெருமையற்றுக்கலந்து பரிமாறுகையாகிற ஸௌஶீல்யமும், கலந்து ஸம்ப3ந்த4மற்றிராதே உடையவனும் ஸ்வாமித்வம், ஸ்வாமியாய்க்குற்றம் நாடவொட்டாத வாத்ஸல்யமென்கிற இந்த ஸௌலப்4யாதி3கு3ணவிஶேஷங்கள் பத3ார்த்த2த3ர்ஶநம் பண்ணப்போகாத இருட்டறையில் பளபளத்துவிளங்கும் விளக்குப்போலே ஸங்கோசமற ப்ரகாஶிப்பதிந்த அர்ச்சாவதாரத்திலே; ஸங்குசிதமாய், பகல்விளக்குப்பட்டிருக்குமந்த பரத்வத்திலென்கிறுர். ஸௌலப்4யம் முதலாகவெடுத்தது ஸுலப4விஷயமே ப்ரபத்திக்கு வேணுமென்னும் ப்ராத4ாந்யத்தைப்பற்ற.

---

(ஶ்ரீ.வ்யா.)-ஸப்ரமாணமாக அருளிச்செய்கிறுர் மேல், (பூர்ண)மென்று துடங்கி.

(பூர்ணமென்கையாலே) என்றது - "பூர்ணஸ்ய பூர்ணமாத3ாய பூர்ணமேவாவஶிஷ்யதே । ஸர்வம் பூர்ணம் ஸஹோம்"(ப்3ரு.உ.7-1) என்று ஶ்ருதி சொல்லுகையாலே என்றபடி. (எல்லா கு3ணங்களும் புஷ்கலங்கள்) என்றது - ஆஶ்ரயணஸௌகர்யாபாத3கங்களான கு3ணங்களோடு கார்யாபாத3கங்களான கு3ணங்களோடு வாசியற ஸகலகல்யாணகு3ணங்களுமிவ்விஷயத்திலே ஸம்பூர்ணமென்றபடி.

37.ஆனல் "வாஸுதே3வோऽஸி பூர்ண:"( ) என்கிற பரத்வத்திற்காட்டில் இங்குத்தைக்கேற்ற-மென்னென்ன அருளிச்செய்கிறுர் (ப்ரபத்திக்கென்று துடங்கி).

(ப்ரபத்திக்கபேக்ஷிதங்களான) என்றது - உபாயமாகப்பற்றுமிடத்தில் வேண்டுமவையான என்றபடி. (ஸௌலப்4யாதி3களாவன) - கண்டுபற்றுகைக்குறுப்பான ஸௌலப்4யமும், மேன்மைகண்டக-லாமைக்குறுப்பான ஸௌஶீல்யமும், கார்யம் செய்யுமென்று விஶ்வஸிக்கைக்குறுப்பான ஸ்வாமித்வமும், குற்றங்கண்டு வெருவாமைக்குறுப்பான வாத்ஸல்யமும். "நிகரில் புகழாய்"(திருவாய்.6-10-10) இத்யாதி3யாலே இந்நாலுகு3ணத்தையுமிறே ஆழ்வாரருளிச்செய்தது. (இருட்டறையில் விளக்குப்போலே ப்ரகாஶிப்பதிங்கே) என்றது - பரத்வத்தில் இக்குணங்க-ளெல்லாமுண்டாயிருக்கச்செய்தே, பரமஸாம்யாபந்நர்க்கு முகங்கொடுத்திருக்கிறவிடமாகையாலே, பகல்விளக்குப்போலே ப்ரகாஶமற்றிருக்கும்; அர்ச்சாவதாரமானவிடத்தில் தண்மைக்கெல்லை நிலமான ஸம்ஸாரிகளுக்கு முகங்கொடுத்துக்கொண்டிருக்கையாலே, அந்த4காரத்தில் தீ3பம்போலே அத்யுஜ்ஜ்வலமாய்த்தோற்றுமென்றபடி. விஷயமுள்ளவிடத்தேயிறே கு3ணங்கள் ப்ரகாஶிப்பது; அங்குள்ளாரும் ஶீலாதி3கு3ணநுப4வம் பண்ணுகைக்கு வருவதிங்கேயிறே. ஸௌலப்4யம் முன்னாகவருளிச்செய்தது - கண்டுபற்றுகைக்குறுப்பான ஸௌலப்4யமே ப்ரபத்திக்கு ப்ரத4ாநா-பேக்ஷிதமென்று தோற்றுகைக்காக.

(ஆ.வ்யா.)– 3 8 .மேல் பரத்வத்திலர்ச்சாவதாரத்துக்குள்ள தன்னேற்றத்தையருளிச்செய்கிறார். (பூர்த்தியையும்) இத்யாதி3யால்.

**3 8 .பூர்த்தியையும், ஸ்வாதந்த்ர்யத்தையுங்குலைத்துக்கொண்டு, தன்னை அநாத3ரிக்கிற வர்களைத்தானாத3ரித்து நிற்கிறவிடம்.**

அவாப்தஸமஸ்தகாமத்வமாகிற பூர்த்தியை இவனிட்டதுகொண்டு த்ருப்தனாய்க் குலைத்துக்கொண்டு, ஸ்வேச்ச2சாரித்வமாகிற ஸ்வாதந்த்ர்யத்தை இவனிச்ச2தீ4நவ்ருத்தியையுடையனாய்க்குலைத்துக்கொண்டு, அபராத4மே பச்சையாக ஆத3ரிக்கிற தன்னை, அதிஸௌலப்4யமே பற்றாசாக முகம்பாராமல் அநாத3ரிக்கிற ஹீநஸம்ஸாரிகளை அவ்வநாத3ரங்கண்டு விடமாட்டாத ஸ்நேஹமுடைய தான், அநாத3ரக3ந்த4மற ஆத3ரிக்கிறவிடமர்ச்சாவதாரம்; அதுவே ப்ரபத்திக்கு விஷயமென்கிறார்.

---

(ஜீ.வ்யா.)– 3 8 .'இக்குணங்கள் ப்ரகாஶிப்பதிங்கே' என்றத்தை உபபாதி3க்கிறார், (பூர்த்தியையும்) என்று துடங்கி.

(பூர்த்தியாவது) – அவாப்தஸமஸ்தகாமத்வம்; அத்தைக்குலைத்துக்கொள்ளுகையாவது – இவனிட்டதுகொண்டு த்ருப்தனாகவேண்டும்படி ஸாபேக்ஷனாயிருக்கை. (ஸ்வாதந்த்ர்யமாவது) – ஸ்வாதீ4நஸ்வரூபாதி3மத்த்வம்; அத்தைக்குலைத்துக்கொள்ளுகையாவது – ஆஶ்ரிதாதீ4நஸ்வரூப-ஸ்தி2த்யாதி3களையுடையனாகை. "நதி3ச்ச2யா மஹாதேஜா பு4ங்க்தே வை ப4க்தவத்ஸல: । ஸ்நாநம் பாநம் தத2ா யாத்ராம் குருதே வை ஜக3த்பதி: ।। ஸ்வதந்த்ரஸ்ஸ ஜக3ந்நாதே2ாऽப்யஸ்வதந்த்ரோ யத2ாதத2ா । ஸர்வஶக்திர்ஜக3த்த4ாதாப்யஶக்த இவ சேஷ்டதே ।।"(வி.ஸம்.) என்னக்கடவதிறே. "அர்ச்சகபராதீ4நாகி2லாத்மஸ்தி2தி:"(ஶ்ரீர.ஸ்தவே.உ.74) என்றருளிச்செய்தாரிறே ப4ட்டர். தன்னிச்சை2யொழிய இவற்றைக்குலைக்கைக்கு ஹேதுவில்லாமையாலே (குலைத்துக்கொண்டு) என்கிறார். (தன்னையநாத3ரிக்கிறவர்களைத்தானாத3ரித்துநிற்கிறவிடம்) என்றது – தானிப்படி ஸுலப4னாய்வந்துநின்றால், அரியவன் எளியனாய் நிற்கப்பெற்றோம் என்று விரும்பி மேல்விழுகை-யன்றிக்கே, அவ்வெளிமைதானே ஹேதுவாக உபேக்ஷிக்கிற ஸம்ஸாரிகளைத்தான் விடமாட்டாத-வளவன்றிக்கே, அவர்களையொழியச்செல்லாமைதோற்றும்படி நிற்கிற ஸ்த2லம் அர்ச்சாவதார-மென்கை. (பூர்த்தியையும், ஸ்வாதந்த்ர்யத்தையும் குலைத்துக்கொண்டு)நிற்கையாலே – ஸௌலப்4யஸௌஶீல்யங்களும், (தன்னையநாத3ரிக்கிறவர்களைத்தானாத3ரித்து) நிற்கையாலே – ஸ்வாமித்வவாத்ஸல்யங்களும் இங்கே தோற்றுநின்றதிறே. அன்றிக்கே, (பூர்த்தியையும்) என்றுதுடங்கி இவ்வாக்யமெல்லாவற்றாலும் – கு3ணசதுஷ்டயத்திலும் ப்ரத4ாநமான ஸௌலப்4யத்-தையே [1]ஏடவைத்தாராகவுமாம். அப்போது இவ்விஷயத்தினுடைய ஸௌலப்4யாதிஶயத்தை த3ர்ஶிப்பிக்கிறாரென்று வாக்யஸங்க3தியாகக்கடவது. கண்ணுக்கு விஷயமாம்படி நித்யஸந்நிதி4-பண்ணுகிறவளவன்றிக்கே, ஸர்வப்ரகாரபரிபூர்ணனாய் நிரங்குஶஸ்வதந்த்ரனாயிருக்கிற தன்னை ஸாபேக்ஷனும் பரதந்த்ரனுமாக்கிக்கொண்டு, தன்னையநாத3ரிக்கிற ஸம்ஸாரிகளைத்தானாத3ரித்து நிற்கைக்கு மேற்பட்ட ஸௌலப்4யமில்லையிறே; "ஏவம் பஞ்சப்ரகாரோஹமாத்மநாம் பததாமத4:। பூர்வஸ்மாத3பி பூர்வஸ்மாஜ்ஜ்யாயாம்ஶ்சைவோத்தரோத்தர: ।। ஸௌலப்4யதோ ஜக3த்ஸ்வாமீ ஸுலபே4ாஹ்யுத்தரோத்தர: ।"(வி.ஸம்.) என்று பரத்வாதி3களெந்திலும் ஸௌலப்4யமுண்டா-யிருக்கச்செய்தே, பூர்வபூர்வத்திற்காட்டில் உத்தரோத்தரத்துக்கு ஸௌலப்4யமதிஶயித்திருக்கு-மென்று தானே அருளிச்செய்கையாலே, ஸௌலப்4யத்துக்கெல்லைநிலம் அர்ச்சாவதாரமிறே.

(ஆ.வ்யா.)- 3 9 .பரத்வாதி3கள் ப்ரபத்திக்கு விஷயமாகாது, அர்ச்சாவதாரமே விஷயமென்னுமிடத்தை ஸத்3ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார். (பூ4க3தஜலம்) இத்யாதி3யால்.

**3 9 .பூ4க3தஜலம்போலே அந்தர்யாமித்வம்; ஆவரணஜலம் போலே பரத்வம்; பாற்கடல் போலே வ்யூஹம்; பெருக்காறுபோலே விப4வங்கள்; அதிலே தேங்கின மடுக்கள் போலே அர்ச்சாவதாரம்.**

ஸந்நிஹிதமாயும் ப்ரயத்நஸாத்4யமாய்க்கொண்டு து3ர்லப4மான பூ4க3தஜலம்போலே, அந்தராத்மதயா ஸந்நிஹிதமாயும் அஷ்டாங்க3யோக3ஸாத்4யமாய்க்கண்ணுக்கெட்டாத அந்தர்யாமித்வமும், அதிவிப்ரக்ருஷ்டமாயெட்டுப்படாத ஆவரணஜலம்போலே அவ்வருகுபட்டு ஸம்ஸாரவர்த்திகளுக்கு எட்டுப்படாத பரத்வமும், அதுபோலதிவிப்ரக்ருஷ்டமன்றியேயிருந்தும் மநுஷ்யாதி3களுக்குச்செல்லப்போகாத பாற்கடல் போலே அண்ட3த்துக்குட்பட்டும் [1]ஸ்மஸுமுடங்களான மநுஷ்யாதி3களுக்கு அலப்4யமான வ்யூஹமும், முன்பு சொன்னவைபோலன்றியே ஸந்நிஹிதமாயும் தத்காலவர்த்திகளுக்கே உபஜீவ்யமாய்ப்பிற்பட்டார்க்குபஜீவ்யமல்லாத பெருக்காறுபோலே பூ4மியிலே அவதரித்தும் தாத3ாத்விகர்க்கே ஆஸ்ரயணீயமாய்,

---

(ஜீ.வ்யா.)- 3 9 .பரத்வாதி3களுடைய தௌ3ர்லப்4யத்தையும், அர்ச்சாவதாரஸௌலப்4யத்தையும் த்3ருஷ்டாந்தமுகே2ந த3ர்ஸிப்பிக்கிறார் மேல், (பூ4க3தஜலமென்றுதுடங்கி).

த்3ருஷ்ணார்த்தனுக்கு தே3ஸாந்தரத்திற்போகவேண்டாதபடி நிற்கிறவிடந்தன்னிலேயுண்டாயிருக்கச் செய்தேயும், [1]கொட்டும் குந்தாலியுங்கொண்டு கல்லினாலல்லது குடிக்கக்கிடையாத பூ4க3தஜலம்போலேயாய்த்து - கண்டுபற்றவேணுமென்றாசைப்பட்டவனுக்கு ஹ்ருத3யத்திலேயிருக்கச் செய்தேயும், "கட்கிலீ"(திருவாய்.7-2-3) என்கிறபடியே கண்ணுக்கு விஷயமன்றிக்கே, அஷ்டாங்க3யோக3ருபயத்நத்தாலே காணவேண்டும்படியான அந்தர்யாமித்வம். அவனுக்கு, அண்ட3த்துக்குப்புறம்பே பெருகிக்கிடக்கிற ஆவரணஜலம்போலேயாய்த்து - இவனுக்கும் "அப்பால் முதலாய்நின்ற அளப்பரிய ஆரமுது"(திருநெடு.14) என்கிறபடியே லீலாவிபூதிக்கப்பால்பட்டிருக்கிற பரத்வம். அப்படி அதிவிப்ரக்ருஷ்டமன்றியே அண்ட3ாந்தர்பூ4தமாயிருக்கச்செய்தேயும், அவனுக்கு து3ஷ்ப்ராபமான பாற்கடல்போலேயாய்த்து - இவனுக்கும், "பாலாழி நீ கிடக்கும் பண்பை யாம் கேட்டேயும்"(பெரியதிருவ.34) என்கிறபடியே - கேட்டிருக்குமத்தனையல்லது, சென்று காணவரிதாம்படியிருக்கிற வ்யூஹம். ப்ரத்யாஸந்நமாயும் தாத்காலிகர்க்குபஜீவ்யமாய் பாஸ்சாத்யரானவனுக்கு து3ர்லப4மான பெருக்காறுபோலேயாய்த்து - "மண்மீதுழல்வாய்"(திருவாய்.6-9-5) என்கிறபடியே பூ4மியிலே அவதரித்து ஸஞ்சரித்தும், தத்காலவர்த்திகளுக்கு ஆஸ்ரயணீயமாய், பிற்காலத்திலுளனான இவனுக்குக்கிட்டாதபடியான விப4வம். முன்புசொன்னவைபோலன்றிக்கே, அவனுக்கு விடாய்கெடப்பருகலாம்படி பெருக்காற்றிலே தேங்கின மடுக்கள்போலேயாய்த்து - இவனுக்கும், தே3ஸகாலகரணவிப்ரக்ருஷ்டமன்றிக்கே, கோயில்களிலும் க்3ருஹங்களிலும் என்றுமொக்க எல்லார்க்கும் கண்ணுக்கிலக்காம்படி நிற்கிற "பின்னானார் வணங்கும் சோதி"யான(திருநெடு.10) அர்ச்சாவதாரம்.

"பௌ4மநிகேதநேஷ்வபி குமகுஞ்ஜேஷு"(ஸ்ரீர.ஸ்தவே உ.74) என்கிறபடியே பலவிடங்களிலும் ஸந்நிதி4பண்ணிநிற்கும்படியை நினைத்திறே, (மடுக்கள்போலே) என்று ப3ஹுவசநத்தாலே அருளிச்செய்தது. அவதாரகு3ணங்களெல்லாம் அர்ச்சாஸ்த2லங்களிலே பரிபூர்ணமாயிருக்கையாலும், அவதாரவிக்3ரஹங்களை அர்ச்சாரூபேண பலவிடங்களிலும் பரிக்3ரஹித்துக்கொண்டிருக்-

(ஆ.வ்யா.)–பிற்பட்டபாவிகளுக்கெட்டாதேபோன விப$_4$வமும், ப்ரபத்திக்கு நித்யவிஷயமாகமாட்டாது. முன்புசொன்னவைபோலன்றியே அயத்நஸித்$_3$த$_4$மாய் அதிஸந்நிஹிதமாய் எப்போதும் நிலைநிற்கிற பெருக்காற்றில் தேங்கின மடுக்கள்போலே, அஷ்டாங்க$_3$யத்நதூ$_3$ரக$_3$மநநிரபேக்ஷமாய், கோயில் முதலான தி$_3$வ்யஸ்த$_2$லங்களிலும், க்$_3$ருஹங்களிலும் ஸந்நிஹிதமாய், ஸ்த$_2$ாவரப்ரதிஷ்டை$_2$யாக நிலைத்து, தத்தத்$_3$வதாரங்களில் நித்யவிக்$_3$ரஹவிசிஷ்டமாய்க்கண்ணுக்கிலக்கமாய்க்கொண்டு ஸர்வஸமாஶ்ரயணீயமான அர்ச்சாவதாரமே, [1]து$_3$ர்லப$_4$விஷயபராங்முகை$_2$யான ப்ரபத்திக்கு ப்ரியதமவிஷயம். பெருவிடாயன் குளிர்ந்து தெளிந்து நிறைந்த தடாகமருகிருக்க, அத்தை விட்டு, கிணறுகல்லியும், அண்டத்தப்புறத்தெழப்பாய்ந்தும், பாற்கடலிற்பாரிபுகுந்தும், வற்றினவாற்றிலோடிச்சென்று தண்ணீர் குடித்து விடாய் கெடத்தேடுமாப்போலேயாய்த்து, ஸுலப$_4$விஷயமான அர்ச்சாவதாரத்தை விட்டு து$_3$ர்லப$_4$ங்களான அந்தர்யாமித்வாதி$_3$களைக்கிட்டி ப்ரபத்தி பண்ணத்தேடுகை.

40. இப்படி ப்ரபத்திக்கு ஸுலப$_4$விஷயமாமளவேயல்ல, ருசிஜநகத்வாதி$_3$களுமிவ்வர்ச்சாவதாரத்துக்குண்டென்கிறார், (இதுதான்) இத்யாதி$_3$யால்.

**40. இதுதான் ஶாஸ்த்ரங்களால் திருத்தவொண்ணாதே, விஷயாந்தரங்களிலே மண்டி விமுக$_2$ராய்ப்போரும் சேதநர்க்கு வைமுக்$_2$யத்தை மாற்றி ருசியை விளைக்கக்கடவதாய், ருசிபிறந்தாலுபாயமாய், உபாயபரிக்$_3$ரஹம் பண்ணினால் போ$_4$க்$_3$யமுமாயிருக்கும்.**

இப்படி ப்ரபத்திக்கு நேரே விஷயமான இவ்வர்ச்சாவதாரந்தான் [2]"இச்ச$_2$யா விஷயாஸக்தோ நரோநர்த்த$_2$பரம்பராம் । யாத்யத்ராமுத்ர சாத்யர்த்த$_2$ம் விசாரே தத்ர கா ரதி:॥ மூத்ரத்$_3$வாரமித$_3$ம் கு$_3$ஹ்யம் யத்ர முக்$_3$த$_4$ம் ஜக$_3$த்த்ரயம்। அபாநவாயுநா ஜுஷ்டம் ஸர்வதை$_2$வாதிகுத்ஸிதம் ॥"(           ) என்று ஏவமாதி$_3$களால் விஷயநிந்தை$_3$ பண்ணும் ஹிதாநுஶாஸநஶாஸ்த்ரங்களாலே ஶாஸித்துத்திருத்தவொண்ணாதபடி, அப்ராப்தங்களுமாய், அபோ$_4$க்$_3$யங்களுமாய், ஜுகு$_3$ப்ஸிதங்களுமான ஹேயவிஷயங்களிலே மீட்கவொண்ணாதபடி பெருமிடர்செய்து மண்டி, ப$_4$க$_3$வத்$_3$விஷயமென்றால் [3]கற்றங்கண்ட யானைபோலே முகம் மாறிக்கொண்டு, அநாதி$_3$காலமே பிடித்து விமுக$_2$ராயநர்த்த$_2$ப்பட்டு அஸத்கல்பராய்ப்போரும்

---

(ஸ்ரீ.வ்யா.)–கையாலும் (அதிலே தேங்கின மடுக்கள்போலே) என்கிறது.

40. இப்படி ஆஶ்ரயணருசி பிறந்தார்க்கு ஆஶ்ரயணீயத்வே ஸுலப$_4$மாயிருக்குமளவேயன்று, ருசிஜநகத்வாதி$_3$களும் இவ்வர்ச்சாவதாரத்துக்குண்டென்று இதின் வைப$_4$வத்தை அருளிச்செய்கிறார் மேல், (இதுதானென்று துடங்கி).

ப்ரக்ருதமான ஸௌலப்$_4$யாதி$_3$கு$_3$ணயோகத்தையுட்கொண்டு, (இதுதான்) என்று பராமர்ஶிக்கிறார். (ஶாஸ்த்ரங்களால் திருத்தவொண்ணாமையாவது) – ஹிதாநுஶாஸநம் பண்ணுகிற ஶ்ருதிஸ்ம்ருத்யாதி$_3$ஶாஸ்த்ரங்களானவை, அருசி பிறக்கும்படி இதரவிஷயங்களினுடைய தோ$_3$ஷாதி$_4$க்யத்தையும், ருசி பிறக்கும்படி ப$_4$க$_3$வத்$_3$விஷயத்தினுடைய கு$_3$ணாதி$_4$க்யத்தையும் உபதே$_3$ஶித்தாலும், அவற்றாலிதரவிஷயங்களை விட்டு இவ்விஷயத்தைப்பற்றும்படி பண்ணப்போகாமை. து$_3$ர்வாஸநாப$_3$லம் உபதே$_3$ஶத்தை நிரர்த்த$_2$கமாக்கிவிடுமிறே; "ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு யா பு$_3$த்$_3$தி$_4$ர்ப$_4$ாவிதா ந்ருணாம் । தாமேவ ப$_4$ஜதே ஜந்துருபதே$_3$ஶோ நிரர்த்த$_2$க: ॥"(           ) என்னக்கடவதிறே. (விஷயாந்தரங்களிலே மண்டி விமுக$_2$ராய்ப்போருகையாவது) – "சிலம்படி–

(ஆ.வ்யா.)–சேதநர்க்கு, ப$_4$க$_3$வத்$_3$விஷயமென்றால் வேப்பங்குடிநீராய், 'யாதானும் பற்றி நீங்கிப்' போருகிற வைமுக்$_2$யத்தை மறுவலிடாதபடி ருசிவாஸனைகளுடன் மாற்றி, "தன்பாலாதரம் பெருகவைத்த" (திருமாலை 16)என்று (1)தன்னைக்கோகாட்டலாட்டும் விஷயங்களைக்காரித்துமியும்படி, மெய்யான ஸ்வ-ருசியை ப$_2$லபர்யந்தமாக விளைப்பிக்கக்கடவதாய், பற்றற்று விடாதபடியான தன்பக்கலுண்டான ருசி ஸ்வஸௌந்த$_3$ர்யாவிஷ்காரத்தாலே ஒருபடி பிறந்தால் "திவத்தைத்தரும் மெய்" (பெரியதிருமொழி 7-10-2)

---

(ஸ்ரீ.வ்யா.)–புருவிற்கருநெடுங்கண்ணார்திறத்தருயறத்தையே மறந்து புலம்படிந்துண்ணும் போகமே பெருக்கி"(பெரியதிருமொழி 1-6-2) என்றும், "சுரிகுழல் மடந்தையர்திறத்துக்காதலே மிகுத்துக்–கண்டவாதிரிந்த"(பெரியதிருமொழி 1-6-3)என்றும், "மாதரார் கயற்கணென்னும் வலையுள் பட்டழுந்துவேனை"(திருமாலை 16) என்றும் சொல்லுகிறபடியே இதரவிஷயங்களிலே அத்யபி$_4$–நிவிஷ்டராய், "யாதானும் பற்றி நீங்கும் விரதத்தை"(திருவிரு.95)யேறிட்டுக்கொண்டு, ப$_4$க$_3$வத்$_3$–விஷயத்தில் முகம்வைக்கவிசையாதே வர்த்திக்கை; இப்படிப்போரும் சேதநர்க்கு (வைமுக்$_2$யத்தை மாற்றி ருசியை விளைக்கையாவது) – "போதரேயென்று சொல்லிப்புந்தியுள் புகுந்து தன்பாலாதரம் பெருகவைத்த அழகன்"(திருமாலை 16) என்கிறபடியே ஸ்வஸௌந்த$_3$ர்யாதி$_3$களாலே சித்தாப–ஹாரம் பண்ணி, தன்னைக்காணவேண்டாமென்றிருக்குமிருப்பைக்குலைத்து, கண்டகண் மாறவைக்க மாட்டாதபடி பண்ணுகை. (ருசிபிறந்தாலுபாயமாகையாவது) – இப்படித்தன் வைலக்ஷண்ய–த$_3$ர்ஶநத்தாலே தன்னை நித்யாநுப$_4$வம் பண்ணப்பெறவேணுமென்னும் ருசி பிறந்தவநந்தரம், "ஆறெனக்கு நின்பாதமே சரணாகத்தந்தொழிந்தாய்"(திருவாய்.5-7-10) என்கிறபடியே ஸம்ஸாரநிவ்ருத்திபூர்விகையான ஸ்வப்ராப்திக்குத்தானே ஸாத$_4$நமாகை. (உபாயபரிக்$_3$ரஹம் பண்ணினால் போ$_4$க்$_3$யமுமாயிருக்கையாவது) – தன்னை உபாயமாகப்பரிக்$_3$ரஹித்தால், உபேய–ஸித்$_3$தி$_4$க்கொரு தே$_3$ஶவிஶேஷத்திலே போமளவும் பார்த்திருக்க வேண்டாதே, "அணியரங்கன் என்னமுதினைக்கண்ட கண்கள் மற்றொன்றினைக்காணாவே"(அமல.10) என்றும், "எனக்குத்தேனே பாலே கன்னலே அமுதே திருமாலிருஞ்சோலைக்கோனே"(திருவாய்.10-7-2) என்றும் சொல்லுகிற–படியே நிரதிஶயபோ$_4$க்$_3$யமாயிருக்கையாலே, தானே உபேயமுமாயிருக்கை.

ஆக, (ப்ரபத்திக்கு) (வா.23)(கு$_3$ணபூர்த்தியுள்ளவிடமே விஷயமா)கவேணுமென்றும்(வா-34), அதுதான் (உள்ளது அர்ச்சாவதாரத்திலே) (வா-34) என்றும், அத்தைப்பற்ற (ஆழ்வார்க ளெல்லாரும் (ப்ரபத்தி பண்ணிற்றும்) (வா-35)இவ்விஷயத்திலே என்றும், இவ்விஷயத்திலே (எல்லா கு$_3$ணங்களும் புஷ்கலங்கள்) (வா-36)என்றும், விஶேஷித்து (ப்ரபத்திக்கபேக்ஷித குணங்கள் விஶத$_3$மாக (ப்ரகாஶிப்பதிங்கே) (வா-37)என்றும், இதுதான் தன்னுடைய நைரபேக்ஷ்யாதி$_3$களை அழியமாறித்(தன்னையநாத$_3$ரி)ப்பாரை (ஆத$_3$ரித்து)க்கொண்டு (நிற்கிற) ஸ்த$_2$லம் (வா-38) என்றும், (பர)த்வாதி$_3$களோரொரு ப்ரகாரத்தாலே து$_3$ர்லப$_4$ம், இது ஸர்வ–ப்ரகாரஸுலப$_4$ம் (வா-39) என்றும், இவ்வளவேயன்று, இவ்விஷயம் (ருசி)ஜநகமுமாம் (உபாயோபேய)முமாயிருக்கும் (வா-40) என்றும் சொல்லப்பட்டது.

இத்தால் – உபாயோபேயங்களிரண்டும் தானேயாய்(வா-40), ஸ்வேதரவிஷயவிரக்திபூர்வகமாக ஸ்வவிஷயருசியை ஜநிப்பிக்குமதாய்(வா-40), ஸர்வஸுலப$_4$மாய்(வா-39), தன்படிகளை–யழியமாறிக்கொண்டு தன்னையநாத$_3$ரிப்பாரையுமாத$_3$ரிக்குமதாய்(வா-38), ப்ரபத்த்யபேக்ஷித–

(ஆ.வ்யா.)-என்று இஷ்டாநிஷ்டப்ராப்திபரிஹாரம் பண்ணுமயத்ந-ஸித்$_{3}$தே$_{4}$ாபாயமாய், "உன்னடிக்கீ-ழமர்ந்து புகுந்தேனே"(திருவாய்.6-10-10) என்று உபாயாத்$_{4}$யவஸாயிகளாலும் "எனக்குத்தேனே பாலே" (திருவாய். 10-7-2) இத்யாதி$_{3}$ப்படியே நிரதிஶயபோ$_{4}$க்$_{3}$யமான உபேயமாயிருக்குமென்கிறார். ஆக, உபாயோபேயமாய், தது$_{3}$ப$_{4}$யருசிஜநகமாய், இதரவிஷயருசிமோசகமாய், தே$_{3}$ஶாத்$_{3}$யுபாதி$_{4}$யற ஸர்வஸுலப$_{4}$மாய், அநாத$_{3}$ரிப்பாரை ஆத$_{3}$ரிக்குமதாய், ப்ரபத்த்யநுகு$_{3}$ணமாய், ஸர்வகு$_{3}$ணஸம்பூர்ணமாய், ப்ரபந்நஜநகூடஸ்த$_{2}$ர்க்கு ஶரணவரணவிஷயமுமான அர்ச்சாவதாரமே ப்ரபத்திக்கு நியதவிஷயம்; இந்நியதியே ப்ரபத்திக்குள்ளதென்று கீழோடே ஸம்ப$_{3}$ந்த$_{4}$ம்.

41.மேல் (இதில் ப்ரபத்தி பண்ணும்) என்று துடங்கி ("இத$_{3}$ம் ஶரண")(வா-50)மளவாக இவ்வர்ச்சாவதாரத்தில் ப்ரபத்தி பண்ணுமதி$_{4}$காரித்ரைவித்$_{4}$யத்தையும், அதில் முக்$_{2}$யாதி$_{4}$காரிவிஶேஷத்-தையும் அருளிச்செய்கிறார், (இதில்) இத்யாதி$_{3}$யால்.

**41.இதில் ப்ரபத்தி பண்ணுமதி$_{4}$காரிகள் மூவர்.**

ப்ரபத்திக்கு நியதவிஷயமான இந்த அர்ச்சாவதாரத்தில் ப$_{4}$ரஸமர்ப்பணரூபப்ரபத்தி பண்ணும் நிவ்ருத்த்ய-தி$_{4}$காரிகள் ப்ரபத$_{3}$நஹேதுபே$_{4}$த$_{3}$த்தாலே மூவர்.

42.அவர்களாரென்ன, (அஜ்ஞரும், ஜ்ஞாநாதி$_{4}$கரும், ப$_{4}$க்திபரவஶரும்) என்கிறார்.

**<u>42.அஜ்ஞரும், ஜ்ஞாநாதி$_{4}$கரும், ப$_{4}$க்திபரவஶரும்.</u>**

(ஸ்ரீ.வ்யா.)-கு$_{3}$ணோஜ்ஜ்வலமாய்(வா-37), ஸமஸ்தகு$_{3}$ணஸம்பூர்ணமாய்(வா-36), ப்ரபந்நஜந-கூடஸ்த$_{2}$ர்க்கு உபாயவரணவிஷயமாயிருந்துள்ள(வா-35) அர்ச்சாவதாரமே ப்ரபத்திக்கு நியத-விஷயமென்றதாய்த்து(வா-34).

41.(ப்ரபத்திக்கு தே$_{3}$ஶநியமமும்) என்று (வா-23) துடங்கி, இவ்வளவும் - உபாயவரணாத்மிகை-யான ப்ரபத்தியினுடைய தே$_{3}$ஶகாலாதி$_{3}$நியமாப$_{4}$ாவமும், (வா.23)விஷயநியமமும்(வா-24) த$_{3}$ர்ஶிப்பிக்கப்பட்டது; இப்படி விஷயவிஶேஷத்தை த$_{3}$ர்ஶிப்பித்தவநந்தரம் ப$_{4}$க$_{3}$வச்ச$_{2}$ாஸ்த்ரா-தி$_{3}$ஸித்$_{3}$த$_{4}$மான அதி$_{4}$காரிவிஶேஷங்களையும் ப்ரகாஶிப்பிக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றி, அதி$_{4}$காரிவிஶேஷத்தை அருளிச்செய்கிறார், (இதில் ப்ரபத்தி பண்ணும் அதி$_{4}$காரிகள் மூவர்) என்று.

அதாவது ஸௌலப்$_{4}$யாதி$_{3}$கு$_{3}$ணபூர்த்தியாலே ப்ரபத்திக்கு நியதவிஷயமான இவ்வர்ச்சாவதாரத்தில் ப்ரபத்தி பண்ணுமதி$_{4}$காரிகள், ப்ரபத$_{3}$நஹேதுபே$_{4}$த$_{3}$த்தாலே மூன்றுவகைப்பட்டிருப்பர்களென்கை.

42.அவர்களாரென்னுமாகாங்க்ஷையிலே அருளிச்செய்கிறார், (அஜ்ஞரும்) என்றுதுடங்கி. (அஜ்ஞராகிறார்) - ப$_{4}$க$_{3}$வல்லாப$_{4}$த்துக்குறுப்பாக ஸாத$_{4}$நாநுஷ்ட$_{2}$ாநம் பண்ணுகைக்கீடான ஜ்ஞாநமில்லாதவர்கள். அஜ்ஞாநம் அஶக்திக்குமுபலக்ஷணம்; (ப்ராபகாந்தரபரித்யாக$_{3}$த்துக்கு-மஜ்ஞாநாஶக்தி$_{3}$களன்று) (வா-116) என்று மேலே இவர்தாமே அருளிச்செய்கிறாரிறே. (ஜ்ஞாநா-தி$_{4}$கராகிறார்) - ஜ்ஞாநஶக்த்யாதி$_{3}$களுண்டாயிருக்கச்செய்தேயும், ப$_{4}$க$_{3}$வத$_{3}$த்யந்தபரதந்த்ரமான ஸ்வரூபயாதாத்ம்யத$_{3}$ர்ஶநத்தாலே, உபாயாந்தரங்கள் ஸ்வரூபவிருத்$_{3}$த$_{4}$மென்று பரித்யஜிக்கும்-படிக்கீடான ஜ்ஞாநபூர்த்தியுடையவர்கள். (ப$_{4}$க்திபரவஶராகிறார்) - ஒன்றையுமடைவுபட அநுஷ்டி$_{2}$க்க

**(ஆ.வ்யா.)- 4 3 .அஜ்ஞாநத்தாலே ப்ரபந்நர் அஸ்மதாதி$_3$கள்; ஜ்ஞாநாதி$_4$க்யத்தாலே ப்ரபந்நர் பூர்வாசார்யர்கள்; ப$_4$க்திபாரவஶ்யத்தாலே ப்ரபந்நர் ஆழ்வார்கள்.**

4 3 இதரஸாத$_4$நங்களறியவுமநுஷ்டி$_2$க்கவும் [1]அரிதென்னும் (அஜ்ஞாநத்தாலே) ஸாத$_4$நாந்தரங்களைவிட்டு, அவையிரண்டுக்குமெளிதான ப்ரபத்தி பண்ணும் (ப்ரபந்நர்) ஸ்தூ$_2$லத$_3$ர்ஶிகளான (அஸ்மத$_3$ாதி$_3$கள்) என்று துச்சீ$_2$கரிக்கிறார்; இதரஸாத$_4$நம் ஸ்வரூபத்துக்கப்ராப்தம், ப்ரபத$_3$நம் ஸ்வரூபப்ராப்தமென்றறி-யாமையாகிற அஜ்ஞாநத்தாலே ப்ரபந்நரென்றும் யோஜிப்பர்கள்; து$_3$ஷ்கரத்வாதி$_3$ப்ரதிபத்தியால் விடுகை இரண்டுக்குமொக்கும்; அஜ்ஞாநமாஶக்திக்குபலக்ஷணம். ஸாத$_4$நாந்தரம் பரதந்த்ரஸ்வரூபநாஶகம், ப்ரபத$_3$நம் ஸ்வரூபாநுரூபமென்கிற (ஜ்ஞாநாதி$_4$க்யத்தாலே ப்ரபந்நர்) நாத$_2$முநிகள் தொடக்கமான (பூர்வாசார்யர்கள்). ப$_4$க$_3$வத்ப்ரஸாத$_3$லப்$_3$தை$_4$யான [2]ப$_4$க்தியின் பாரதந்த்ர்யஜ்ஞாநகாலுஷ்யத்தாலே (ப்ரபந்நர்) 'மயர்வற மதிநலமருள'ப்பெற்ற (ஆழ்வார்கள்).

4 4 .அஜ்ஞாநாதி$_3$ஹேதுகமான அதி$_4$காரிபே$_4$தே$_3$ாக்திக்கு ஹ்ருத$_3$யமருளிச்செய்கிறார் மேல், (இப்படி) இத்யாதி$_3$யால்.

**4 4 .இப்படிச்சொல்லுகிறதும் [3]ஊற்றத்தைப்பற்ற.**

அஜ்ஞாநாதி$_3$ஹேதுபே$_4$த$_3$த்தாலே ப்ரபத்த்யதி$_4$காரத்தை இப்படிப்பிரித்துச்சொல்லுகிறதும், இவ்வதி$_4$கா-ரிகளுக்குத்தந்தாமதி$_4$கரித்த அஜ்ஞாநாதி$_3$ஹேதுகப்ரபத்திவிஶேஷங்களிலுண்டான ப்ரதிபத்திநியதி-(ஜீ.வ்யா.)-கூடமரல்லாதபடி ப$_4$க$_3$வத்ப்ரேமாதிஶயத்தாலே ஶிதி$_2$லகரணராயிருக்குமவர்கள்.

4 3 இப்படி இவ்வஜ்ஞாநாதி$_3$களடியாக ப்ரபத்தி பண்ணினவர்கள் இன்னாரென்னுமிடம் காணலா-மிடமுண்டோவென்னுமாகாங்க்ஷையிலே அருளிச்செய்கிறார். (அஜ்ஞாநத்தாலே) என்று துடங்கி. (அஜ்ஞாநத்தாலே ப்ரபந்நர்) என்றது – இதரோபாயாநுஷ்ட$_2$ாநத்திலிழிகைக்கீடான ஜ்ஞாநாதி$_3$கள் முதலிலே இல்லாமையாலே, அநந்யகதி$_3$களாய்க்கொண்டு ப$_4$க$_3$வத்$_3$விஷயத்திலே ப$_4$ரந்யாஸம் பண்ணினவர்களென்றபடி. (அஸ்மத$_3$ாதி$_3$கள்) என்று ஸ்வநைச்யாநுஸந்த$_4$ாநத்தாலே மந்த$_3$ாதி$_4$காரிகளோடே தம்மையும் கூட்டியருளிச்செய்கிறார். (ஜ்ஞாநாதி$_4$க்யத்தாலே ப்ரபந்நர்) என்றது – உபாயாந்தரங்கள் ஸ்வரூபநாஶகமென்று நடுங்கும்படியான ஸ்வரூபயாத$_2$ாத்ம்யத$_3$ர்ஶ-நத்தால் வந்த ஜ்ஞாநபூர்த்தியாலே அநந்யக$_3$திகளாய்க்கொண்டு, ஸ்வரூபாநுரூபமாக ப$_4$க$_3$வதி ந்யஸ்தப$_4$ரரானவர்களென்றபடி. (பூர்வாசார்யர்களாகிறார்) – நாத$_2$யாமுநயதிவராதி$_3$கள். (ப$_4$க்திபாரவஶ்யத்தாலே ப்ரபந்நர்) என்றது – ப$_4$க$_3$வத்ப்ரேமபௌஷ்கல்யத்தாலே "காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்"(பெரியதிருவ:34) என்றும், "இட்டகாலிட்டகை"(திருவாய்.7-2-4) என்றும் சொல்லுகிறபடியே ஶிதி$_2$லகரணராயிருக்கையாலே, ஸாத$_4$நாநுஷ்ட$_2$ாநத்துக்காளன்றிக்கே அநந்யக$_3$திகளாய்க்கொண்டு அவன்பக்கலிலே ப$_4$ரஸமர்ப்பணம் பண்ணினவர்களென்றபடி. ப$_4$க்திபரவஶர்க்கு ஸாத$_4$நாநுஷ்ட$_2$ாநம் பண்ணப்போகாதென்னுமிடம் "உன்னைக்காணுமவாவில் வீழ்ந்து நானெங்குற்றேனுமல்லேன்"(திருவாய்.5-7-2) என்றும், "என்கொள்வன்"(திருவாய்.5-1-4) என்கிறபாட்டிலும் ஆழ்வார் ஸ்பஷ்டமாக அருளிச்செய்தாரிறே.

4 4 .இப்படி அஜ்ஞாநாதி$_3$களிலோரொன்றே இவர்களுக்கு ப்ரபத$_3$நஹேதுவாகச்சொல்லுகைக்கு மூலமின்னதென்கிறார், (இப்படி) என்று துடங்கி.

(ஆ.வ்யா.)-விஶேஷத்தைப்பற்ற. ப்ராப்தாப்ராப்தஸ்வரூபஜ்ஞாநமில்லாத முற்பட்டவர்களுக்கு அஜ்ஞாநாதி3ஹேதுகப்ரபத்தியிலும் து3ஷ்கரத்வப்ரதிபத்தி நடக்கிலும், ப்ராப்தாப்ராப்தஜ்ஞாநமுள்ள நடுவிலவர்களுக்கு ஜ்ஞாநாதி4க்யஹேதுகப்ரபத்தியிலும், ஸ்வரூபஜ்ஞாநம் நடையாடிலும் ப4க்திபரவஶரான பிற்பட்டவர்களுக்கு ப4க்திபாரவஶ்யஹேதுகப்ரபத்தியிலும் நிஷ்டை2யாயிருக்குமென்றபடி.

4 5. இந்த ஹேதுத்ரயத்தின் காரணத்ரயத்தை அருளிச்செய்கிறார் மேல்.

**4 5. இம்மூன்றும் மூன்று தத்த்வத்தையும் பற்றிவரும்.**

இந்த அஜ்ஞாநாதி3களில் அஜ்ஞாநாஶக்திகள் அசித்தத்த்வத்தைப்பற்றிவரும். து3ர்ஜ்ஞேயத்வது3ஷ்கரத்வங்கள் ப்ராக்ருதகரணஸங்கோசநிப3ந்த4நமாய் வருகையால்; ஜ்ஞாநாதி4க்யம் ஆத்மஸ்வரூபத்தைப்பற்றிவரும், ப்ராப்யப்ராப்திகள் ஸ்வரூபாநுஸந்த4ாநநிப3ந்த4நமாய் வருகையால்;

---

(ஸ்ரீ.வ்யா.)–அதாவது – அஜ்ஞாநாஶக்திகளும், ஸ்வரூபயாதா2த்ம்யஜ்ஞாநமும், ப4க3வத்3ப4க்தியுமாகிற இவை மூன்றிலும், மூவர்க்குமந்வயமுண்டாயிருக்கச்செய்தே, ஒரொன்றே இவர்களுக்கு ப்ரபத3நஹேதுவாகச்சொல்லுகிறதும் இவற்றிலோரொன்றே [1]இவ்வதி4காரிகள்பக்கலுறைத்திருக்கையாலே என்கை.

இத்தால் – முற்பட்டவர்கள்பக்கல் ஜ்ஞாநப4க்திகளிரண்டும் குறைந்து அஜ்ஞாநமே விஞ்சியிருக்கும்; நடுவிலவர்கள்பக்கல் அஜ்ஞாநம் அல்பமாய், ப4க்தியுமளவுபட்டு, ஜ்ஞாநமே விஞ்சியிருக்கும்; பிற்பட்டவர்கள்பக்கல், அஜ்ஞாநமத்யல்பமாய், ஸ்வரூபஜ்ஞாநமும் குறைவற்றிருக்கச்செய்தே, ப்ரேமமே கரைபுரண்டிருக்கும். ஆகையால், எல்லாமெல்லார்பக்கலிலும் உண்டேயாகிலும் அல்பங்களானவை கிடக்கச்செய்தே அதி4கமானதுவே அவ்வவர்க்கு ப்ரபத3நஹேதுவாம் என்றதாய்த்து. இந்த யோஜனைக்கொரு குறையுண்டு – மயர்வற மதிநலம் பெற்ற ஆழ்வார்களுக்கும் [2]அஜ்ஞாநம் சிறிது கிடக்கிறதுண்டென்று கொள்ளவேண்டிவருகையாலே. ஆனால் என் செய்வதென்னில், (ஊற்றத்தைப்பற்ற) என்கிறவித்தை [3]அநுஸந்த4ாநபரமாக்கி யோஜிக்குமளவில் இவ்விரோத4மில்லை. அப்போது (இப்படி) இத்யாதி3க்கு – அஜ்ஞாநாஶக்திகளும், ஸ்வரூபயாதா2த்ம்யஜ்ஞாநமும், ப4க3வத்ப4க்தியுமாகிற இம்மூன்றினுடையவும் அநுஸந்த4ாநம் மூவர்க்குமேதேனுமொருபடி உண்டாயிருக்கச்செய்தே ஒரொன்றே இவர்களுக்கு ப்ரபத3நஹேதுவாகச்சொல்லுகிறதும் [4]இவற்றிலோரொன்றிலே இவ்வதி4காரிகளுக்கூற்றமாகையாலே என்று பொருளாகக்கடவது. அதாவது – அநந்யக3திகளாய், ப்ரபந்நராகைக்குடலான அஜ்ஞாநாதி3த்ரயாநுஸந்த4ாநமும் மூவர்க்குமுண்டானாலும், மூன்றிலும் வைத்துக்கொண்டு ப்ரசுரமானதே தந்தாமுக்கநந்யக3திகளாய் ப்ரபத்தியிலிழிகைக்கு ஹேதுவாக அநுஸந்தி4த்திருக்கையாலே என்றபடி. இதில் ப்ரத2மாதி4காரிகளுக்கு அஜ்ஞாநாநுஸந்த4ாநம் ஸ்வரஸம்; நடுவுசொன்னவர்களுக்கும், [5]ப்ராமாணிகராகையாலே [6]அஜ்ஞாநத்தினுடைய வாஸநநிவ்ருத்தி கூடாமையால், அஜ்ஞாநாநுஸந்த4ாநம் கூடும்; பிற்பட்டவர்கள் மயர்வற மதிநலம் பெற்றவர்களாகையாலே அஜ்ஞாநாநுஸந்த4ாநம் [7]நைச்யநிப3ந்த4நமாமித்தனை.

4 5. இவ்வஜ்ஞாநாதி3த்ரயத்துக்கும் காரணமின்னதென்கிறார், (இம்மூன்றும்) என்று துடங்கி. (மூன்று தத்த்வத்தையும் பற்றிவரும்) என்றது – ஸாத4நாநுஷ்டா2நத்தில் அஜ்ஞாநாஶக்திகளுக்கு

4.

(ஆ.வ்யா.)–ப$_4$க்திபாரவஶ்யம் ஈஶ்வரதத்த்வத்தைப்பற்றிவரும், பாரவஶ்யம் ப$_4$க$_3$வத்$_3$வைலக்ஷண்ய-ஜ்ஞாநநிப$_3$ந்த$_4$நமாய் வருகையால்.

4 6 .இந்த பே$_4$த$_3$ங்கண்டவிடமுண்டோவென்ன உண்டென்கிறார், ("என்னான்") இத்யாதி$_3$யால்.

**4 6 ."என் நான் செய்கேன்"(திருவாய்.5-8-3) என்கிறவிடத்தில் இம்மூன்றுமுண்டு.**

"என்னான் செய்கேன்" என்கிற ஆழ்வாருடைய ப்ரபந்த$_3$நோக்தியிலே, அஜ்ஞனான நான் என் செய்கேன், அப்ராப்தனான நான் என்செய்கேன், ப$_4$க்திபரவஶனான நான் என் செய்கேன் என்றிம்மூன்று பே$_4$த$_3$மும் உண்டு.

**4 7 .அங்கொன்றைப்பற்றியிருக்கும்.**

4 7 .அந்த ஸூக்தியில் ப$_4$க்திபாரவஶ்யமொன்றையுமே பற்றி ப்ரபத்தி வருமென்றே கொள்ள வேணும், அஜ்ஞாநாப்ராப்திகள் பாரவஶ்யத்தாலே ஜ்ஞாநவிஷயமாகமாட்டாமையால்.

---

(ஜீ.வ்யா.)–மூலம் கர்மநிப$_3$ந்த$_4$நமான அசித்ஸம்ப$_3$ந்த$_4$மாகையாலே, அஜ்ஞாநம் அசித்தத்த்வத்-தைப்பற்றி வரும்; இதரஸாத$_4$நங்கள் ஸ்வரூபவிருத்$_3$த$_4$மென்று பரித்யஜிக்கைக்குடலான ஜ்ஞாந-பூர்த்திக்கடி – மத்$_4$யமபத$_3$த்தில் சொல்லுகிற ஆத்மஸ்வரூபயாத$_2$ாத்ம்யத$_3$ர்ஶநமாகையாலே, ஜ்ஞாநாதி$_4$க்யம் ஆத்மதத்த்வத்தைப்பற்றிவரும்; ஒன்றையுமடைவுபட அநுஷ்டி$_2$க்கமாட்டாதபடி கரணஶைதி$_2$ல்யத்தைப்பண்ணும் ப$_4$க்திவிவ்ருத்$_3$தி$_4$க்குக்காரணம் – "காதல் கடல்புரைய விளைவித்த காரமர் மேனி"(திருவாய்.5-3-4) என்னும் ப$_4$க$_3$வத்விக்$_3$ரஹவைலக்ஷண்யமாகை-யாலே, ப$_4$க்திபாரவஶ்யம் ப$_4$க$_3$வத்தத்த்வத்தைப்பற்றிவருமென்றபடி.

4 6 .அதி$_4$காரித்ரயத்துக்கும் அஜ்ஞாநாதி$_3$த்ரயத்திலுமந்வயமுண்டாயிருக்க, ஓரொன்றை ப்ரபத$_3$நஹேதுவாகச்சொல்லுகிறது – (ஊற்றத்தைப்பற்ற) என்றிரே சொல்லிற்று; இப்படி ஏகாதி$_4$காரிபக்கலிலே இம்மூன்றுமுண்டென்னுமிடம் காணலாமிடமுண்டோவென்ன அருளிச்-செய்கிறார், (என்நான்) என்று துடங்கி.

அதாவது – எம்பெருமான் நம்முடைய ஆர்த்திகண்டிரங்கக்காணாமையாலே, தன்னைப்பெறுமிடத்தில் சில ஸாத$_4$நாநுஷ்ட$_2$ாநம் பண்ணவேணுமென்றிருந்தானாகக்கொண்டு, உபாயாந்தராநுஷ்ட$_2$ா-நத்துக்கு யோக்$_3$யதையில்லாதபடி அஜ்ஞனான நான் என்செய்கேன்; ஜ்ஞாநம் தந்தோமே என்னில், நீ தந்த ஜ்ஞாநத்தாலே ஸ்வரூபபாரதந்த்ர்யத்தையுணர்ந்து ஸாத$_4$நாநுஷ்ட$_2$ாநம் அப்ராப்த-மென்றிருக்கிற நான் என்செய்கேன்; ஸ்வரூபத்துக்குச்சேராதாகிலும் உன்னைப்பெறலாமாகில் அதுதன்னை அநுஷ்டி$_2$க்கலாய்த்திறே ஜ்ஞாநமாத்ரத்தைத்தந்தாயாகில், ப$_4$க்திரூபாபந்ந-ஜ்ஞாநத்தைத்தருகையாலே ஒன்றையுமடைவுபட அநுஷ்டி$_2$க்க க்ஷமனல்லாதபடி ப$_4$க்திபரவஶனான நான் என்செய்கேன் என்று இம்மூன்றும் ஆழ்வார்க்கு விவக்ஷிதமாகையாலே இவ்விடத்திலே இம்மூன்றுமுண்டென்கை. ஆகையாலிவ்விடத்திலே காணலாமென்று கருத்து.

4 7 .ஆனால் இம்மூன்றும் அவ்விடத்தில் ப்ரபத்திகாரணமாகிறதோவென்ன, (அங்கொன்றைப்-பற்றியிருக்கும்) என்கிறார்.

(ஆ.வ்யா.)–4 8 .முக்$_2$யமதுவே.

4 8 .அசித்தையும் ஆத்மாவையும் பற்றிவருமதில், ப$_4$க$_3$வத்$_3$வைலக்ஷண்யத்தைப்பற்றி ப்ரபந்நனும் அதுவே முக்$_2$யம்; மற்றையவையிரண்டும் கௌ$_3$ணமென்கிறார்.

**4 9 ."அவித்$_3$யாத:" என்கிற ஶ்லோகத்திலே இம்மூன்றும் சொல்லிற்று.**

4 9 .உக்தார்த்த$_2$த்துக்கு ப்ரமாணோபாத$_3$நம் பண்ணுகிறார் மேல், "அவித்$_3$யாதோ தே$_3$வே பரிப்$_3$ருட$_4$தயா வா விதி$_3$தயா ஸ்வப$_4$க்தேர்பூ$_4$ம்நா வா ஜக$_3$தி க$_3$திமந்யாமவிது$_3$ஷாம் । க$_3$திர்க$_3$ம்யஶ்சாஸௌ ஹரிரிதி ஜிதந்தாஹ்வயமநோரஹஸ்யம் வ்யாஜஹ்ரே ஸ க$_2$லு ப$_4$க$_3$வாந் ஶௌநகமுநி: ।।"(ப$_4$.த$_3$.) என்கிற ஶ்லோகத்தில் "அவித்$_3$யாத:" என்று அஜ்ஞாநஹேதுகப்ரபத்தியையும், "தே$_3$வே பரிப்$_3$ருட$_4$தயா வா விதி$_3$தயா" என்று ஜ்ஞாநாதி$_4$க்யஹேதுகப்ரபத்தியையும், "ஸ்வப$_4$க்தேர்பூ$_4$ம்நா வா" என்று ப$_4$க்தி-பாரவஶ்யஹேதுகப்ரபத்தியையும் சொல்லிற்று.

---

(ஸ்ரீ.வ்யா.)–அதாவது – அவ்விடத்தில் ப்ரபத்தியானது மூன்றிலும்வைத்துக்கொண்டு ஊன்றியிருக்கிற ப$_4$க்திபாரவஶ்யத்தையே தனக்கு ஹேதுவாகப்பற்றியிருக்குமென்றபடி.

4 8 .இந்த ஹேதுத்ரயமடியாகவரும் ப்ரபத்திகளில் முக்$_2$யமேதென்ன, (முக்$_2$யமதுவே) என்கிறார். அதாவது – ப$_4$க்திபாரவஶ்யமடியாக ப்ரபத்திபண்ணுமிடத்தில் ப்ராப்யருசி கண்ணழிவற உண்டாகையாலே அதுவே முக்$_2$யமென்றபடி.

4 9 .இவ்வதி$_4$காரித்ரயத்துக்கும் ப்ரமாணமுண்டோவென்ன, ப்ரத$_2$மம் ப$_4$ட்டரருளிச்செய்ததொரு ஶ்லோகத்தை உதா$_3$ஹரிக்கிறார், (அவித்$_3$யாத:) என்று துடங்கி.

"அவித்$_3$யாதோ தே$_3$வே பரிப்$_3$ருட$_4$தயா வா விதி$_3$தயா ஸ்வப$_4$க்தேர்பூ$_4$ம்நா வா ஜக$_3$தி க$_3$திமந்யாமவிது$_3$ஷாம் । க$_3$திர்க$_3$ம்யஶ்சாஸௌ ஹரிரிதி ஜிதந்தாஹ்வயமநோ ரஹஸ்யம் வ்யாஜஹ்ரே ஸ க$_2$லு ப$_4$க$_3$வாந் ஶௌநகமுநி: ।।" (ப$_4$ட்டர்) . இஶ்லோகார்த்த$_2$ம் ஜிதந்தாவ்யாக்யாநோபோத்$_3$க$_4$ாதத்திலே " 'ப்ரபத்திக்கதி$_4$காரிகள் அஜ்ஞரும், ஸர்வஜ்ஞரும், ப$_4$க்திபரவஶருமென்று த்ரிவித$_4$மாக ப$_4$ட்டரருளிச்செய்தாரிறே' என்று துடங்கி, 'அஜ்ஞனாகிறான் – ப$_4$க$_3$வல்லாப$_4$த்துக்குத்தன்பக்கலிலே ஜ்ஞாநஶக்திகளில்லாதவன்; ஸர்வஜ்ஞனாகிறான் – தே$_3$ஶகாலவஸ்துக்களால் பரிச்சே$_2$தி$_3$க்கவொண்ணாத வைப$_4$வத்தையுடையவன் ஈஶ்வர-னென்றிருக்கையாலே அநந்யஸாத்$_4$யனென்றிருக்குமவன்; ப$_4$க்திபரவஶனாகிறான் – ஜ்ஞாநஶக்தி-களுண்டாயிருக்கச்செய்தே அடைவுபட அநுஷ்டி$_2$க்கமாட்டாதவன். இவர்கள் மூவரும் ப$_4$க$_3$வத்$_3$-விஷயமொழிய வேறுபாயமுண்டென்றறியாதவர்கள்; இவர்களுக்கு ப்ராபகனுமாய், ப்ராப்யனு-மாயிருக்கும் ஸர்வேஶ்வரன்' என்று ஜிதந்தையென்று பேரையுடைத்தான மந்த்ரரஹஸ்யத்தை ஸர்வஜ்ஞனான ஸ்ரீஶௌநகப$_4$க$_3$வான் வ்யாக்$_2$யாநம் பண்ணப்பெறுவதே! என்கிறார் " என்று ஆச்சான்பிள்ளை அருளிச்செய்தார்.

(ஜ்ஞாநாதி$_4$க்யத்தாலே ப்ரபந்நர்) (வா-4 3 )என்கிறவிடத்தில், ஸ்வரூபயாத$_2$ாத்ம்யஜ்ஞாநம் ப்ரபத$_3$நஹேதுவாகச்சொல்லிற்று; இந்த ஶ்லோகத்தில், ப$_4$க$_3$வத$_3$நந்யஸாத்$_4$யத்வஜ்ஞாநம் ப்ரபத$_3$நஹேதுவாகச்சொல்லிற்று; ஆகையால், இரண்டும் ஜ்ஞாநாதி$_4$கர்க்கு அநந்யக$_3$தித்வ-

(ஆ.வ்யா.)-50."இத$_3$ம் ஶரணமஜ்ஞாநம்".

50."இத$_3$ம் ஶரணமஜ்ஞாநம் இத$_3$மேவ விஜாநதாம் । இத$_3$ம் திதீர்ஷதாம் பாரம் இத$_3$மாநந்த்ய-மிச்ச$_2$தாம்॥" (ல.த.17-100)என்கிற ஶ்லோகத்திலும் அஜ்ஞாநவிஜ்ஞாநதிதீர்ஷைகளாலே இம்மூன்ற-தி$_4$காரமுமுக்தமென்றிவ்வளவாக அர்ச்சாவதாரத்தில் ப்ரபத்தி பண்ணுமதி$_4$காரிவிஶேஷங்களை அருளிச்-செய்து.

---

(ஜீ.வ்யா.)-பூர்வகமான ப்ரபந்த$_3$நத்துக்கு ஹேதுவாமென்று கொள்ளவேணும்; கீழுமிதுதானே அர்த்த$_2$மாகுலோவென்னில், ஒண்ணாது; (இம்மூன்றும் மூன்று தத்த்வத்தையும் பற்றிவரும்) (வ-45) என்றத்தோடு சேராமையால்.

50 அநந்தரம், இவ்வர்த்த$_2$விஷயமாக, அகி$_2$லஜக$_3$ந்மாதாவாய், ஆப்ததமையான பிராட்டி லக்ஷ்மீ-தந்த்ரத்தில் அருளிச்செய்த வசநத்தை உபாத$_3$ாநம் பண்ணுகிறார். (இத$_3$ம் ஶரணமஜ்ஞாநம்) என்று.

"இத$_3$ம் ஶரணமஜ்ஞாநம் இத$_3$மேவ விஜாநதாம் । இதம் திதீர்ஷதாம் பாரம் இத$_3$மாநந்த்ய-மிச்ச$_2$தாம் ॥"(ல.த.17-100). இந்த ஶ்லோகத்தில் "இத$_3$ம்" என்று பராமர்ஶிக்கிறது - கீழ்ச்சொன்ன ஶரணாக$_3$தியை. "அபாயோபாயநிர்முக்தா மத்$_4$யமாம் ஸ்தி$_2$திமாஸ்தி$_2$தா । ஶரணா-க$_3$திரக்$_3$ர்யைஷா ஸம்ஸாரார்ணவதாரிணீ ॥"(ல.த.17-99) என்றிறே கீழ்ச்சொல்லிநின்றது. ('இயம்' என்று ஸ்த்ரீலிங்க$_3$நிர்தே$_3$ஶமன்றிக்கே 'இத$_3$ம்' என்று நபும்ஸக - இது க்வாசித்கம்) லிங்க$_3$வ்யத்யயம் 'ஶரண'ஶப்$_3$த$_3$விவக்ஷையாலே. இதில் அஜ்ஞஸர்வஜ்ஞர்களை ஸ்பு$_2$டமாகச்-சொல்லுகையாலே, மேல் ப$_4$க்திபரவஶரைச்சொல்லுகிறதென்று கொள்ளவேணும். "இத$_3$ம் திதீர்ஷதாம் பாரம்" என்றது - சடக்கென அநிஷ்டநிவ்ருத்தி பிறக்கவேணுமென்னும் த்வரையை-யுடையார்க்கென்றபடி. "ஆநந்த்யமிச்ச$_2$தாம்" என்றது - ஸ்வரூபப்ராப்தபரிபூர்ணப$_4$க$_3$வத$_3$நு-ப$_4$வத்தைப்பெற்றல்லது த$_4$ரிக்கமாட்டாதார்க்கென்றபடி. இவையிரண்டும் ப$_4$க்தியினுடைய பூ$_4$மாவாலே வருமவையிறே. ப$_4$க்திபாரவஶ்யம் உபாயாந்தராநுஷ்ட$_2$ாநத்தில் அஶக்திக்கு-முறுப்பாய், அநிஷ்டநிவ்ருத்தியிலும் இஷ்டப்ராப்தியிலுமுண்டான விளம்ப$_3$ாக்ஷமதைக்கு-முடலாயிறே இருப்பது. அதில் விளம்ப$_3$ாக்ஷமதைக்குடலான ஆகாரத்தை இந்த ஶ்லோகத்தில் சொல்லுகிறது. ஆனால், கீழ் அஶக்திக்குடலாகவன்றோ சொல்லிப்போந்தது, அதுக்கிது ப்ரமாணமாமோவென்னில்; அதி$_4$காரித்ரைவித்$_4$யம் த$_3$ர்ஶிப்பிக்கிறவளவே இவ்விடத்தில் அபேக்ஷிதமாகையாலே இது ப்ரமாணமாகச்சொல்லத்தட்டில்லை; "அவித்$_3$யாத:" என்கிற ஶ்லோகத்தில், ஜ்ஞாநாதி$_4$க்யத்துக்குடலாகச்சொன்னதும் கீழ்ச்சொல்லிவந்ததும் பி$_4$ந்நமா-யிருக்கச்செய்தே, அதி$_4$காரித்ரைவித்$_4$யத்துக்கு ப்ரமாணமாக அத்தைச்சொன்னாப்போலே.

51 ஆக, ப்ரபத்த்யதி$_4$காரித்ரைவித்$_4$யத்துக்கு ப்ரமாணம் காட்டினாராய்நின்றார் கீழ்; இந்த த்ரிவித$_4$ப்ரபத்தியிலும் ப$_4$க்திபாரவஶ்யப்ரபத்தியே முக்$_2$யமென்றிறே கீழ்ச்சொல்லிற்று; ஏவம்பூ$_4$தப்ரபத்திநிஷ்ட$_2$ரானவர்கள் தந்நிஷ்டை$_2$ குலைந்து ப$_4$க$_3$வல்லாபார்த்த$_2$மாக ஸ்வயத்நத்திலே மூளுவது, அவன் வரக்கொள்ள அவனையுபேக்ஷிப்பதாகிற இவற்றுக்கு

(ஆ.வ்யா.)-5 1 .அதில் ப$_4$க்திபரவஶர்க்கு பாரவஶ்யபாகவிஶேஷத்தாலே இப்ப்ரபத்திதான் குலையு-மென்கிறார் மேல், (ப$_4$க்திதன்னிலே) இத்யாதி$_3$யால்.

**5 1 .ப$_4$க்திதன்னிலே அவஸ்த$_2$ாபே$_4$த$_3$ம் பிறந்தவாறே இதுதான் குலையக்கடவதா-யிருக்கும்.**

ப்ரபத்தியிலே மூட்டுமதான [1]ஸத்தாநிப$_3$ந்த$_4$நப$_4$க்திதன்னிலே, க்ருதப்ரபத்த்யத்$_4$யவஸாயப$_4$ஞ்ஜகமான புந:ப்ரபத$_3$நாதி$_3$ப்ரேரகத்வராதிஶயரூபாவஸ்த$_2$ாபே$_4$த$_3$மும் ப$_4$க்த்யுத்பாத$_3$கேச்ச$_2$ாநுகு$_3$ணமாகப்பிறந்த-வாறே, ஸக்ருத்கரணீயமாய், உபாயாந்தரஸ்பர்ஶக$_3$ந்த$_4$ம் பொறுத பூர்வக்ருதமான இப்ப்ரபத$_3$நந்தான், சணற்கயிறுகண்ட ப்$_3$ரஹ்மாஸ்த்ரம் போலே நிலைகுலையக்கடவதாயிருக்கும்.

5 2 .இப்படி ப்ரபத்தியிலே மூட்டுவது குலைப்பதாய்க்கொண்டு, ஒருபடிப்பட்டிராமை ப$_4$க்திக்குள்ள-தொன்றென்கிறார் . (தன்னைப்பேணவும்) இத்யாதி$_3$யால்.

**5 2 .தன்னைப்பேணவும் பண்ணும், தரிக்கவும் பண்ணும்.**

"காறை பூணும் ... தன் கொவ்வைச்செவ்வாய் திருத்தும்"(பெரியாழ்.3-7-8) என்று தன்னைப்பேணவும் பண்ணும்; "அயர்க்கும்" (திருவாய்.4-4-1 0) என்று ஸ்வாலங்காரமநர்த்த$_2$ஹேதுவாய்த்தோவென்று மோஹம் விளைய, "தேறி" (பெரியாழ்.3-7-8)என்றந்த க்ஷணத்திலே அந்திமத$_3$ஶையில்போல் மேல்-மேலன தெளிவு பிறந்து. இந்த த$_3$ஶையில் வாராதொழியாயென்று த$_4$ரிக்கவும் பண்ணும்; இப்படி நாநாஸ்வப$_4$ாவத்தை விளைக்கை ப$_4$க்திக்குள்ளதொன்று.

---

(ஶ்ரீ.வ்யா.)-நித$_3$ாநமேதென்ன, அருளிச்செய்கிறார். (ப$_4$க்திதன்னிலே) என்று துடங்கி.

(ப$_4$க்திதன்னிலே அவஸ்த$_2$ாபே$_4$த$_3$ம் பிறக்கையாவது) - ஶரணாகதி$_2$ல்யத்தாலே ஸ்வயத்நக்ஷம-ரன்றிக்கே அவனே உபாயமாக அத்$_4$யவஸித்து, அவன் வரவுபார்த்திருக்குமவஸ்தை$_2$யன்றிக்கே கண்ணுஞ்சுழலையிட்டு, ஏதேனுமொருபடியாலேயாகிலும் அவனை இப்போதே பெற வேணுமென்னு-மதிமாத்ரத்வராவஸ்தை$_2$ விளைகை. (இது) என்று - ப்ரபத்தியைச்சொல்லுகிறது. தாத்$_3$ருஶா-வஸ்தை$_2$ பிறந்தால் ப்ரபத்தி குலைகையாவது - "என் நான் செய்கேன்" (திருவாய்.5-8-3) என்று ஸ்வப்ரவ்ருத்தியிலந்வயமற்று ப$_4$க$_3$வதி ந்யஸ்தப$_4$ரராயிருக்குமிருப்பு குலைகை.

5 2 .இப்படி ப்ரபத்திநிஷ்டை$_2$ குலையும்படி பிறந்த [1]ப$_4$க்தியும் அவஸ்த$_2$ாபே$_4$த$_3$ம் விளைக்குமத்தை அருளிச்செய்கிறார், (தன்னை) என்று துடங்கி.

(தன்னைப்பேணவும் பண்ணுகையாவது) - "காறைபூணும்"(பெரியாழ்.3-7-8)இத்யாதி$_3$யிற்படியே - அவன் வரவுக்குடலாகத்தன்னை அலங்கரிக்கும்படி பண்ணுகை. அதாவது - ப$_4$க$_3$வல்லாப$_4$ார்த்த$_2$-மாக ஸ்வயத்நத்திலே மூட்டுமென்றபடி. இது மடலெடுக்கை முதலானவற்றிலே மூட்டுமதுக்கு-முபலக்ஷணம். (தரிக்கப்பண்ணுகையாவது) - அரைக்ஷணமவனையொழிய த$_4$ரிக்கமாட்டாமை-யாலே, அவன் வரவுக்குடலாக ஸ்வயத்நத்திலே மூளும்படி பண்ணின அதுதானே, அவன் வரக்-கொள்ள, விளம்ப$_3$ரோஷத்தாலே "போகு நம்பீ"(திருவாய்.6-2-1), "கழகமேறேல் நம்பீ" (திருவாய்.6-2-6)என்று அவனையுபேக்ஷித்துத்தள்ளி த$_4$ரித்திருக்கும்படி பண்ணுகை. ஆக, இவையிரண்டாலும் "என்நான் செய்கேன்"(திருவாய்.5-8-3) என்றும், "தரியேனினி" (திருவாய்.5-8-7) என்றும் இருக்குமிருப்புக்கு ப்ரதிகோடியை விளைக்குமென்றபடி. ஆகையாலே,

(ஆ.வ்யா.)-5 3 .இந்த ஸ்வப$_4$ாவம் ப$_4$க்திவிஷயத்தைப்பற்றிவருமவையெல்லாத்திலுங்காணலாமென்கிறர் மேல், (இந்த ஸ்வப$_4$ாவம்) இத்யாதி$_3$யால்.

**5 3 .[1]இந்த ஸ்வப$_4$ாவவிஶேஷங்கள், கல்யாணகு$_3$ணங்களிலும், திருச்சரங்களிலும், திருநாமங்களிலும், திருக்குழலோசையிலும் காணலாம்.**

பல ஸ்வப$_4$ாவத்தை விளைக்கையாகிற இந்த ஸ்வப$_4$ாவவிஶேஷங்கள், "வல்வினையேனையீர்கின்ற குணங்களையுடையாய்"(திருவாய்.8-1-8), "கோவிந்தன் குணம்பாடி ஆவிகாத்திருப்பேனே" (நாச்சியார். 8-3) என்று ப$_3$ாத$_4$கமாயும், த$_4$ாரகமாயும் போருகிற கல்யாணகு$_3$ணங்களிலும், "கண்ணன் நாமமே குழறிக்கொன்றீர்"(திருவாய்.9-5-8), "மடக்கிளியைக்கைகூப்பி வணங்கினளே" (திருநெடு.1 4) என்று [2]ஸாத்மியாதும் ஸாத்மித்தும் போருகிற திருநாமங்களிலும்,[3]"சி$_2$ந்நம் பி$_4$ந்நம் ஶரைர்த$_3$க்$_3$த$_4$ம்" ( ), "எரிசிதறும் சரத்தால்"(பெரியாழ்வார்.4-3-8), "சரங்களாண்ட" (பெரியதிரு.7-3-4) என்று

---

(ஜீ.வ்யா.)-ப்ரபத்திநிஷ்டை$_2$ குலேந்து ஸ்வப்ரவ்ருத்த்யாதி$_3$களிலிழிகைக்கடி - பக்தியினுடைய அவஸ்த$_2$ாபேத$_3$மென்று கருத்து.

5 3 .(தன்னைப்பேணவும் பண்ணும், தரிக்கவும் பண்ணும்) என்று எப்பெருமான் வருகைக்குடலாக க்ருஷி பண்ணுகையும், அவன் வரக்கொள்ள அவனையுபேக்ஷிக்கையுமாகிற பரஸ்பரவிருத்$_3$த$_4$-ஸ்வப$_4$ாவங்களை விளைக்கும்படியையிறே சொல்லிற்று; இப்படி ப$_4$க்தியானது ஸ்வா-வஸ்த$_2$ாவிஶேஷங்களாலே சேதநர்க்கு விளைக்கும் பரஸ்பரவிருத்$_3$த$_4$ஸ்வப$_4$ாவங்கள் தத்$_3$விஷய-மாத்ரத்திலன்றிக்கே தத்ஸம்ப$_3$ந்தி$_4$வஸ்துக்கள்விஷயமாகவும் காணலாமென்கிறர் மேல், (இந்த) என்று துடங்கி.

(இந்த ஸ்வப$_4$ாவவிஶேஷங்கள்) என்று - கீழ்ச்சொன்னவைதன்னையே சொல்லுகிறதன்று, இப்படிப்பட்ட ஸ்வப$_4$ாவவிஶேஷங்களென்றபடி. அவையாவன - அநுப$_4$ாவ்யவிஷயமொருபடிப்-பட்டிராநிற்கச்செய்தே, அத்தை அநுப$_4$விக்கிறவர்களுக்கு த$_4$ாரகமாய்த்தோற்றுகையும், ப$_3$ாத$_4$கமாய்த்தோற்றுகையும். (கல்யாணகு$_3$ணங்கள்) இத்யாதி$_3$. "கோவிந்தன் குணம்பாடி ... ஆவிகாத்திருப்பேனே"(நாச்.திரு.8-3)என்று த$_4$ாரகமாகவும், "வல்வினையேனையீர்கின்ற குணங்களையுடையாய்"(திருவாய்.8-1-8) என்று ப$_3$ாத$_4$கமாகவும் சொல்லுகையாலே - கல்யாண-கு$_3$ணவிஷயமாகவும்: "சரங்களாண்ட தண்டாமரைக்கண்ணனுக்கன்றி என்மனம் தாழ்ந்து நில்லாதே" (பெரியதிருமொழி 7-3-4) என்று த$_4$ாரகமாகவும், "சரங்களே கொடிதாயடுகின்ற" (பெரியதிருமொழி1 0-2-9) என்று ப$_3$ாத$_4$கமாகவும் சொல்லுகையாலே - திருச்சரவிஷயமாகவும்; "திருமாலைப்பாடக்கேட்டு ... மடக்கிளியைக்கைகூப்பி வணங்கினளே" (திருநெடு.1 4) என்று த$_4$ாரகமாகவும், "கண்ணன் நாமமே குழறிக்கொன்றீர்"(திருவாய்.9-5-8) என்று ப$_3$ாத$_4$கமாகவும் சொல்லுகையாலே - திருநாமவிஷயமாகவும்; "எங்களுக்கே ஒரு நாள் வந்தூத உன் குழலின்-னிசை போதராதே"(பெருமாள்திரு.6-9) என்று த$_4$ாரகமாகவும், "அவனுடைத்தீங்குழலீரு-மாலோ"(திருவாய்.9-9-5) என்று ப$_3$ாத$_4$கமாகவும் சொல்லுகையாலே - திருக்குழலோசைவிஷய-மாகவும் காணலாமென்றபடி.

என்றுமொக்க போ$_4$க்$_3$யங்களாயிருந்துள்ள கல்யாணகு$_3$ணாதி$_3$கள் த$_4$ாரகமாய்த்தோற்றுவது, ப$_3$ாத$_4$கமாய்த்தோற்றுவதாகிறது - அநுபோ$_4$க்தாக்களான இவர்களுடைய ப்ரேமஸ்வப$_4$ாவ-விஶேஷங்களாலேயிறே; அல்லது, கு$_3$ணாதி$_3$களின் ஸ்வரூபபே$_4$த$_3$த்தாலன்றே; ஆகையால்,

(ஆ.வ்யா.)-சே2த3நபே4த3நாதி3முகத்தாலும், அழகாலும் ப்ரதிகூலரை முடித்தும் அநுகூலரை வாழ்வித்தும் போருகிற திருச்சரங்களிலும், "அவனுடைத்தீங்குழலீருமாலோ"(திருவாய்.9-9-5), "எங்களுக்கே ஒருநாள் வந்தூத"(பெருமாள்.6-9) என்று அஸஹ்யமாயும் ஸஹ்யமாயும் போருகிற திருக்குழலோசையிலும் விஶேஷஜ்ஞர்க்குக்காணலாம்; ப4க்திவிஷயப4க3வத்ஸம்ப3ந்த4முடையவைபோல் ப4க்திபாரவஶ்யமும் ப்ரபத்தியிலே மூட்டுவது குலைப்பதாய்க்கொண்டு பல ஸ்வப4ாவத்தை விளைக்கை [1]தத்ஸம்ப3ந்தி4-வஸ்துஸ்வப4ாவமென்றபடி; [2]ஆஶ்ரயதோ3ஷத்தால் குலையிலிறே அதி4காரப்ரச்யுதி வருவது.

54 இந்த ஸ்வக3தப்ரபத்தி [3]உப4யஸ்வருபஸம்ப3ந்த4தூ3ஷகமாய்த்தலைக்கட்டுமென்கிறார், (இது தன்னை) இத்யாதி3யால்.

---

(ஸ்ரீ.வ்யா.)-ப4க்த்யவஸ்த2ாபே4த3ஜநிதங்களான ஸ்வப4ாவவிஶேஷங்கள் இவ்வோ வஸ்துக்கள் விஷயமாகவுங்காணலாமென்கிறது. கு3ணதி3கள் த4ாரகங்களாகவும் ப3ாத4கங்களாகவும் பேசுகிறவிடத்தில் இரண்டுமொருவர் பேச்சன்றிக்கேயிருந்ததேயாகிலும், ஆழ்வார்களெல்லாரும் ஏகப்ரக்ருதிகளாகையாலும், எல்லாருடைய ப4க்தியும் ப4க3வத்ப்ரஸாத3லப்3தை4யான பரப4க்தியாகையாலும், அந்த ப4க்திஸ்வப4ாவவிஶேஷங்கள் காட்டுகிறமாத்ரமே இவ்விடத்தில் அபேக்ஷிதமாகையாலே விரோத4மில்லை. "சரங்களே கொடிதாயடுகின்ற" என்கிறவிது பராஜிதராக்ஷஸர்பாசுரமன்றே, அத்தை "சரங்களாண்ட" என்கைக்கு [1]ப்ரதிகோடியாகச்சொல்ல-லாமோவென்னில், ராமவிஜயம் தமக்கிஷ்டமாகையாலே, அந்த விஜயத்துக்கிலக்காய்த்தோற்ற ராக்ஷஸர்த3ஶை பிறந்து, பிராட்டிமார்த3ஶை பிறந்து பேசுமாப்போலே, தாமான தன்மை தோற்றுதே, தோற்ற ராக்ஷஸர் பாசுரத்தாலே விஜயத்தைப்பேசியநுப4விக்கிறாரென்றிறே இத்திருமொழிக்கு வ்யாக்2யாநம் பண்ணியருளுகிற ஆசார்யர்களருளிச்செய்வது. ஆகையால், தம்முடைய ப்ரேமஸ்வப4ாவத்தாலே தத3வஸ்த2ாபந்நரான பின்பு திருச்சரங்கள் ப3ாத4கமாய்த்த-தும், தமக்கேயாய்த்தோற்றிப்பேசுகையாலே அப்படிச்சொல்லக்குறையில்லை.

[2]அத2வா, (தன்னைப்பேணவும் பண்ணும், தரிக்கவும் பண்ணும்) (வா-52) என்றவிவை-யிரண்டாலும் - அவன் தானே வருமளவும் த4ரியாமல் வரவுக்குடலாக யத்நிக்கப்பண்ணுவது, வரக்கொள்ள, ப்ரணயரோஷத்தாலே தள்ளித்தரித்திருக்கப்பண்ணுவதாம்படியையிறே சொல்லிற்று; இப்படி விருத்3த4ஸ்வப4ாவங்களை ஒன்றுதானே விளைவிக்குமென்னுமிது வேறுசில விஷயங்களிலுங்காணலாமோவென்ன, அருளிச்செய்கிறார், (இந்த) என்று துடங்கி. அதாவது - இப்படிப்பட்ட ஸ்வப4ாவவிஶேஷங்கள் "கோவிந்தன் குணம்பாடி" என்று துடங்கி, கீழ்ச்சொன்ன-படியே ஒரு த3ஶையிலே த4ாரகமாகப்பேசுவது, ஒரு த3ஶையிலே ப3ாத4கமாகப்பேசுவதாம்படி, இவர்களுக்கு த4ரிப்பும், ப3ாதை4யுமாகிற விருத்3த4ஸ்வப4ாவங்களை விளைக்கிற கல்யாண-கு3ணதி3களிலேயுங்காணலாமென்கை.

ஆக, (ப்ரபத்திக்கு) என்று துடங்கி இவ்வளவாக - ப்ரபத்திவைப4வத்தையும்(வா-23-33), தத்3விஷயவைப4வத்தையும்(வா-34-40), தத3தி4காரித்ரைவித்4யத்தையும்(வா-41-47), த்ரிவித4ப்ரபத்தியிலும் ப4க்திபாரவஶ்யஹேதுகப்ரபத்தியினுடைய முக்2யதையையும்(வா-48),

**(ஆ.வ்யா.)-5 4 .இதுதன்னைப்பார்த்தால், பிதாவுக்குப்புத்ரன் எழுத்துவாங்குமாப்-போலேயிருப்பதொன்று.**

ரக்ஷகன் பண்ணும் ரக்ஷணஹேதுவாக ரக்ஷ்யமான இவன்பண்ணும் ப்ரபத்திதன்னை உள்ளபடி நிரூபித்துப்-பார்த்தால், ஹிதைஷியாய் அறியாததஶையிலும் ரக்ஷிக்கையாகிற பெற்ற பிதாவுக்கு, பிதாபுத்ர-ஸம்ப3ந்த4மறிந்த ரக்ஷணீயபுத்ரன் உபநயநாதி3யைப்பண்ணி என்னை ரக்ஷிக்கவேணுமென்று மார்பிலே பொறித்தெழுந்து வாங்கினல், நல்ல பிதாவும் நல்ல புத்ரனுமாய்த்தென்று, நாட்டார் பழிமொழியும் விளைந்து, உப4யஸம்ப3ந்த4க்கொத்தையும் விளையுமாப்போலே, விஶேஷஜ்ஞர் சிரிக்கைக்குமுப4ய-ஸம்ப3ந்தக்கொத்தையும் விளைக்கைக்குமடியாயிருப்பதொன்று.

5 5 .ஆகில் இப்ப்ரபத்திக்கு ஸ்வரூபமாய்த்ததேதென்ன ஸாத4நத்வாகாரமற்ற நிலைநின்ற ஆகாரத்தை அருளிச்செய்கிறர் மேல், (இதுதனக்கு) இத்யாதி3யால்.

**5 5 .இதுதனக்கு ஸ்வரூபம் தன்னைப்பொறுதொழிகை.**

---

(ஜீ.வ்யா.)-அதுதனக்கு ஸ்வஹேதுபூ4தப4க்த்யவஸ்தா2பே4த3த்தால் வரும் கொலைத்தலையும்(ஸ-51), அந்த ப4க்த்யவஸ்தா2பே4த3ம் செய்விக்கும் அம்ஶங்களையும்(ஸ-52,53) அருளிச்செய்தார்.

5 4 .இப்ப்ரபத்திதனக்கு (து4ர்மபுத்ராதி3களும்) என்று துடங்கி கீழுக்தரான அதி4காரிகள்பக்கலிலே ஸாத4நதயாநுஷ்டா2நம் காண்கையாலும், கர்மஜ்ஞாநப4க்திப்ரபத்திகளென்று உபாயங்களோடே ஸஹபடி2தமாய்ப்போருகையாலும், "யத்3யேந காமகாமேந ந ஸாத்4யம் ஸாத4நாந்தரை: । முமுக்ஷுணா யத்ஸாங்க்2யேந யோகே3ந ந ச ப4க்திந: ।। ப்ராப்யதே பரமம் தா4ம யதோ நாவர்த்ததே புந: । தேந தேநாப்யதே தத்தந்ந்யாஸேநைவ மஹாமுநே ।। பரமாத்மா ச தேநைவ ஸாத்4யதே புருஷோத்தம: ।।"(ஸ.த.) என்றும், "இத3ம் ஶரணமஜ்ஞாநாம்"(ஸ.த.17-100) என்றும் இப்படியே ஶாஸ்த்ரங்கள் இத்தை ஸாத4நமாகச்சொல்லுகையாலும், உபாயத்வ-ப்ரதிபத்தியோக்3யதை உண்டாகையாலே, அத்தை வ்யாவர்த்திக்கைக்காக அதுக்குடலான பலவற்றையுமருளிச்செய்கிறர் மேல்; அதில் ப்ரத2மத்திலே, இப்ப்ரபத்தியை உபாயமாகக்-கொண்டால் வருமவத்3யத்தை த3ர்ஶிப்பிக்கிறர், (இதுதன்னை) என்று துடங்கி.

(இதுதன்னைப்பார்த்தால்) என்றது - இச்சேதநன் ஈஶ்வரவிஷயத்தில் பண்ணும் இப்ப்ரபத்திதன்னை உபாயமாகப்பார்த்தால் என்றபடி. ஈஶ்வரன் தன்னை ரக்ஷிக்கைக்கு ஹேதுவாக இச்சேதநன் பண்ணும் ப்ரபத்திதன்னை நிரூபித்தால் என்றிங்ஙனே அநந்4யாஹாரேண யோஜிக்கவுமாம்; அப்போதும் அர்த்த2மொக்குமிறே. (பிதாவுக்குப்புத்ரன் எழுத்துவாங்குமாப்போலேயிருப்பதொன்று) என்றது - உத்பாத3கனுகையாலே ஹிதைஷியாய், தானறியாத த3ஶையிலும் தன்னை ரக்ஷித்துக்கொண்டுபோரும் தமப்பனுக்கு, புத்ரனனவன், தானறிந்த த3ஶையிலே என்னை நீ ரக்ஷிக்கவேணுமென்று எழுத்துவாங்கினல், இரண்டுதலைக்குமுண்டான உறவுக்குக்கொத்தை-யாமாப்போலே, ஸத்தாகாரணபூ4தனும், ஸர்வத3ஶையிலும் ரக்ஷகனுய்க்கொண்டுபோருகிற அகாரவாச்யனுன ஸர்வேஶ்வரனுக்கும், மகாரவாச்யனுன இவனுக்குமுண்டான ஸம்ப3ந்தத்துக்கு அவத்3யகரம் என்றபடி. (எழுத்துவாங்குகையாவது) - ரக்ஷகன்பேரைத்தன் மார்பிலே எழுதிக்-கொள்ளுகை.

(ஆ.வ்யா.)-மரணவரணரூபையான இப்ப்ரபத்திக்கு ஸ்வாஸாதா4ரணரூபம், அதி4காரிவிஶேஷண-மாகையே நிலைநின்ற வேஷமான தன்னை, ப2லஸாத4நமான உபாயமென்ன, [1]ஸ்வஸ்யாவர்த்யாதி4காரம் குலையும்படி பொறுதொழிகை. பரப்ரேரிதமாய் பரதந்த்ரவஸ்துவிஶேஷணமான தன்னை ஆபாதஸ்வப்ரதீதி-மாத்ரமாய்க்கொண்டு உபாயமென்னப்பொறுதிறே; [2]இது வரணபூர்வபா4வியுமாய், வரணாநந்தரபா4வியு-மான ஸ்வரூபமென்னவும், உபேயமென்னவும் பொறுது; (தன்னைப்பொறுது) என்கிற ஸாமாந்யோக்தி, உசிதார்த்த2த்தை இப்படிக்காட்டித்தேயாகிலும், உபாயமென்னப்பொறுது என்னுமிதுவே ப்ரகரணோசிதம். [3]பரக3தமான தன்னை ஸ்வக3தமாக்கப்பொறுதென்னுமருளிச்செய்வர்; [4]ஸ்வக3தமானபோது ஆஶ்ரய-விஷயநா3ஷகமாய்க்கொண்டு தானுமழியும்; [5]பரக3தமானபோது ஆஶ்ரயவிஷயோத்தேஜகமாய்க்கொண்டு தான் விறடிக்கும்.

56. "யத்3யத்ஸாங்க3ம் தத்தத்ஸாத4நம்" என்கையால் உபாயத்வலக்ஷணமான இதரோபாயத்யாக3மாகிற அங்க3ம் இதுக்குண்டேயென்ன, இந்த அங்க3த்திநுகாரவிஶேஷத்தை அருளிச்செய்து, உபாயத்வத்தைத்-துடைக்கிறார் மேல், (அங்க3ம்) இத்யாதி3யால்.

**56. அங்க3ம் தன்னையொழிந்தவற்றைப்பொறுதொழிகை.**

[6]ஸித்3தே4பாயஸ்வீகாரத்தைப்பற்ற ஶ்லோகத்தில் விதே4யமான இதரோபாயத்யாக3மாகிற அங்க3ம், த்யாக3ரூபமான தன்னையொழிந்த ப்ரதியோகி3ஸ்வீகாரரூபமானவற்றை, அதி4காரப4ங்க3ம் வாராதபடி பொறுதொழிகை; ஸ்வரூபோத்பாத3கத்வம், உத்பந்நஸ்வரூபவர்த்த4கத்வம், வர்த்தி4தஸ்வரூபப2ல-ப்ரத3த்வமாகிற அங்க3லக்ஷணமின்றியே, இதரஸ்பர்ஶாஸஹத்வமாத்ரமேயிறே இந்த அங்க3த்துக்குள்ளது; ஸ்வீகாரபூர்வபா4வித்வமாத்ரங்கொண்டு இத்தை அங்க3மென்கிறதித்தனையிறே; இதுக்கங்கி3யாய்த்-தோற்றுகிறது உபாயமாகிலிறே இது அங்க3மாவது; இனி ஸித்3தே4பாயத்துக்கு அங்க3ஸாத்4யத்வமில்லை-யிறே. அன்றியே ப்ரபத்த்யங்க3மானவிது, அங்கி3யான ஸ்வீகாரந்தன்னையொழிந்தவற்றைப்பொறுதொழி-கையென்றும், த்யாக3ரூபமான தன்னையும் ஸ்வீகாரரூபமானவொழிந்தவற்றையும் ப்ரவ்ருத்த்யஸஹத்வேந பொறுதொழிகையென்றுமருளிச்செய்வர். ஆக, அங்க3த்வந்துடையுண்கையால் உபாயமென்னப்பொறு-தென்ற ப்ரதிஜ்ஞை உபபாதி3க்கப்பட்டது.

---

(ஸ்ரீ.வ்யா.)-55. ஆனால் இதுதனக்கு ஸ்வரூபமேதென்ன, அருளிச்செய்கிறார், (இதுதனக்கு) என்று துடங்கி. (இதுதனக்கு ஸ்வரூபம்) என்றது - இப்ப்ரபத்திதனக்கு அஸாதா4ரணாகாரமென்றபடி. (தன்னைப்பொறுதொழிகையாவது) - உபாயவரணாத்மகமான தன்னை உபாயமென்ன ஸஹியாத-படியாயிருக்கை. அதாவது - ஆபாதப்ரதீதியிலொழிய உள்ளபடி நிரூபித்தால் ஸ்வஸ்மிந்-நுபாயத்வப்ரதிபத்திக்கு யோக்3யமாகமாட்டாதபடி இருக்கையென்றபடி. அன்றிக்கே, (தன்னைப்-பொறுதொழிகை) என்கிறவிடத்தில், உபாயத்வேந ப்ரதீதமான தன்னைப்பொறுதொழிகை என்று அநத்4யாஹாரேண யோஜிக்கவுமாம்; இப்படிச்சொன்னாலும், ஸ்வஸ்மிந்நுபாயத்வ-ப்ரதிபத்த்யஸஹத்வமே பொருளாயிறே.

56. சரமஶ்லோகத்திலித்தை ஸாங்க3மாக விதி4க்கையாலே, "யத்3யத்ஸாங்க3ம் தத்தத்ஸாத4நம்" என்கிற ந்யாயமிதுக்கும் வாராதோவென்ன; அங்க3ஸ்வரூபத்தை த3ர்ஶிப்பிக்கவே, அந்த ந்யாயமிங்கு வாராதென்று பார்த்து, அதுதன்னை அருளிச்செய்கிறார், (அங்க3ம்) என்று துடங்கி. (தன்னையொழிந்தவற்றைப்பொறுதொழிகையாவது) - ஸ்வீகாரரூபமான தன்னையொழிந்த சேதந-ப்ரவ்ருத்திகளில் ஒன்றையும் ஸஹியாதபடியிருக்கை. ஸாத4நரூபஸகலப்ரவ்ருத்திகளினுடையவும்

**(ஆ.வ்யா.)-57.உபாயம் தன்னைப்பொறுக்கும்.**

57. ஆகில், பொறுப்பதேதென்ன அருளிச்செய்கிறார் மேல், ஸித்$_3$தே$_4$ாபாயமான ஈச்வரன், உபேயமான தன்னை சேதநன் செயலறுதியைப்பற்ற உபாயமென்னப்பொறுக்கும், ஸித்$_3$தே$_4$ாபாயமென்றிவ்வளவை ஸஹிக்குமித்தனையல்லது, [1]அங்கி$_3$யென்னவும் ஸஹியாது, அங்க$_3$மென்னவும் ஸஹியாது.

**58.உபாயாந்தரம் இரண்டையும் பொறுக்கும்.**

58.இப்பொறுமை எல்லா உபாயத்துக்குமொக்குமோவென்ன, ஸாத்$_4$யமான கர்மாத்$_3$யுபாயங்கள், அங்க$_3$ம் அங்கி$_3$ என்கிறவிரண்டையும் பொறுக்குமென்கிறார். கர்மம் ஆத்மயாதா$_2$த்ம்யஜ்ஞாநபூர்வகமாகையாலே ஜ்ஞாநத்தை அங்க$_3$மாகவுடைத்தாய், ஜ்ஞாநம் விரோதி$_4$பாபநிவர்த்தககர்மபூர்வகமாகையாலே கர்மத்தை அங்க$_3$மாகவுடைத்தாய், ப$_4$க்தி கர்மஜ்ஞாநஸாத்$_4$யமாகையாலே தது$_3$ப$_4$யத்தையுமங்க$_3$மாகவுடைத்தாய், அந்த ஜ்ஞாநகர்மங்கள்தான் ப்ரீதிபூர்வகமாய் வருகையால் ப$_4$க்தியை அங்க$_3$மாக உடைத்தாய், இப்படி உபாயாந்தரங்களுக்கு அந்யோந்யமங்க$_3$ாங்கி$_3$ப$_4$ாவமுண்டாகையால் இரண்டையும் பொறுக்குமிறே.

---

(ஸ்ரீ.வ்யா.)-ஸவாஸநத்யாக$_3$மிறே இதுக்கங்க$_3$ம். "யத்$_3$யத்ஸாங்க$_3$ம்" என்கிறவிடத்தில், ப்ரவ்ருத்திரூபாங்க$_3$ஸஹிதமானவற்றையிறே ஸாத$_4$நமாகச்சொல்லுகிறது; அப்படியன்றிக்கே, இதினுடைய அங்க$_3$ம் நிவ்ருத்திரூபமாகையாலே, இதுதானே இதினுடைய அநுபாயத்வஸூசகமென்று கருத்து.

57.இதினுடைய அநுபாயத்வத்தை த்$_3$ருட$_4$கரிக்கைக்காக ஸித்$_3$த$_4$ஸாத்$_4$யோபாயங்களின் படிகளைச்சொல்லி, அவையிரண்டையும்பற்ற இதுக்குண்டான வ்யாவ்ருத்தியை அருளிச்செய்கிறார். (உபாயம்) (ஸு-57)என்று துடங்கி, (பொறுது) (ஸு-59)என்னுமளவாக.

(உபாயம் தன்னைப்பொறுக்கும்) என்றது - ஸித்$_3$தே$_4$ாபாயமான ஸர்வேச்வரன் இஷ்டாநிஷ்டப்ராப்திபரிஹாரங்களிரண்டுக்கும் ஸ்வயமேவ நிர்வாஹகனாகையாலே, தன்னை உபாயமென்றால் அதுக்குத்தகுதியாயிருக்குமென்றபடி. "உபாயோபேயத்வே ததி$_3$ஹ தவ தத்த்வம் ந து கு$_3$ணௌ" (ஸ்ரீர.ஸ்தவே உ.87) என்று உபேயத்வத்தோபாதி வஸ்துவுக்கு ஸ்வரூபமாயிறே உபாயத்வமுமிருப்பது. "யே ச வேத$_3$விதோ$_3$ விப்ரா யே சாத்$_4$யாத்மவிதோ$_3$ ஜநா: । தே வத$_3$ந்தி மஹாத்மாநம் க்ருஷ்ணம் த$_4$ர்மம் ஸநாதநம் ॥"(ப$_4$ார.ஆர.88-253) "சரண்யம் சரணம் ச த்வாமாஹுர்தி$_3$வ்யா மஹர்ஷய: । அம்ருதம் ஸாத$_4$நம் ஸாத்$_4$யம் ஸம்பச்யந்தி மநீஷிண: ॥" ( ) என்னக்கடவதிறே. (தன்னைப்பொறுக்கும்) என்கிற இவ்வளவே சொல்லிவிடுகையாலே - தன்னையொழிந்தவற்றைப்பொறுமை அர்த்தா$_2$த்ஸித்$_3$த$_4$ம். இந்த ஸித்$_3$தே$_4$ாபாயம் ஸஹாயாந்தரஸம்ஸர்க்க$_3$ாஸஹமாயிறே இருப்பது. இவ்வுபாயவிசேஷம் ஸ்வவ்யதிரிக்தமாயிருப்பதொன்றை ஸஹியாமையாலேயிறே "ஆநுகூல்யஸங்கல்பாதி$_3$களுக்கு உபாயாங்க$_3$த்வமன்றிக்கே, [1]அவகாத$_4$ஸ்வேத$_3$ம் போலே ஸம்ப$_4$ாவிதஸ்வப$_4$ாவத்வமுண்டாகிறது" என்று இவ்வர்த்த$_2$த்தைப்பரந்தபடியிலே இவர்தாமே அருளிச்செய்தாரிறே.

58(உபாயாந்தரம் இரண்டையும் பொறுக்கும்) என்றது - ஸித்$_3$தே$_4$ாபாயேதரமான ஸாத்$_4$யோபாயம், ஸ்வபாரதந்த்ர்யஜ்ஞாநரஹிதராய், ஸ்வயத்நபரராயிருப்பார்க்கு மோக்ஷஸாத$_4$நதயா சாஸ்த்ரவிஹிதமாகையாலே ஸ்வஸ்மிந்நுபாயத்வப்ரதிபத்திஸஹமுமாய், ஸ்வோத்பத்த்யாதி$_3$களில்

**(ஆ.வ்யா.)–5 9 .இதிரண்டையும் பொருது.**

5 9 .ஆகில், ஸித்3தே4ாபாயேதரமாய்க்கொண்டு உபாயாந்தரமென்னலான இவன் பண்ணும் ப்ரபத்தியும் இரண்டையும் பொறுக்குமே, பொருதென்னீரென்ன, ப்ரவ்ருத்த்யஸஹமான நிவ்ருத்திரூபமாகையால் அங்க3மென்னவும் பொருது, நிரபேக்ஷஸித்3த4ரூபமாயிருப்பதொன்றாகையாலே அங்கி3யென்னவும் பொருதென்கிறார்; "ஆநுகூல்யாதி3களுமங்க3மல்ல, இப்ப்ரபத்தியுண்டாகவே (1)அவக4ாதஸ்வேத3ம் போலே தன்னடையே வருமவையாகையால், உபாயமாகாதவித்தை உபாயமாக விதி4த்ததும், ஜ்ஞாநபாகாநுகு3ண-மாக உபாயாந்தரங்களைவிட்டு ஸித்3தே4ாபாயநிஷ்டை2 வருகைக்கு வழியாகவித்தனே. ஆக, அதி4காரி-விசேஷணமானவிதுக்கு உபாயத்வாகாரம் நேராகத்துடையுண்கையால், அங்க3ாங்கி3த்வங்களை ஸஹியா-தென்றதாய்த்து.

6 0. இப்படி இப்ப்ரபத்தி உபாயமல்லவாய்விட்டால் பேற்றுக்கடியாகச்சில இத்தலையில் வேண்டாவோ-வென்ன, அதுக்கு வேண்டுவது இவ்வளவே என்கிறார் மேல், (ப2லத்துக்கு) இத்யாதி3யால்.

**6 0 .ப2லத்துக்கு ஆத்மஜ்ஞாநமும், அப்ரதிஷேத4முமே வேண்டுவது.**

<u>ஸ்வதந்த்ரஸ்வாமி கொடுக்கிற ப2லபா4த்துக்கு, திருமந்த்ரோக்தமான சேஷசேஷிஸம்ப3ந்த4ஜ்ஞாநமும்,</u>

(ஸ்ரீ.வ்யா.)–ப்ரவ்ருத்திரூபாங்க3ஸாபேக்ஷமாகையாலே ஸ்வவ்யதிரிக்தங்களையும் ஸஹிக்கும-தாயிருக்குமென்றபடி. "ப4க்த்யா லப்4யஸ்த்வநந்யயா"(கை.), "உப4யபரிகர்மிதஸ்வாந்தஸ்யை-காந்திகாத்யந்திகப4க்தியோகை3கலப்4ய:" (ஸி.த்ர.), "ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு தபோத்4யாந-ஸமாதி4பி4:। நராணாம் க்ஷீணபாபாநாம் க்ருஷ்ணே ப4க்தி: ப்ரஜாயதே ।।"(வை4வத்ரிஸ்ம்ருதி) என்னக்கடவதிறே.

5 9 .(இதிரண்டையும் பொருது) என்றது – ஸித்3தே4ாபாயவரணரூபமாய், நிவ்ருத்தி-ஸாத்4யரூபமாய், அதி4காரிவிசேஷணமாய், ஸ்வரூபாநதிரேகியாயிருக்கிற இந்த ப்ரபத்தி, உப4யாஸஹமாயிருக்குமென்றபடி. ஆகையால், ஸித்3த4ஸாத்4யோபாயவ்யாவ்ருத்தவேஷையா-யிருக்கிற இந்த ப்ரபத்திக்குபாயத்வம் அஸம்ப4ாவிதமென்றதாய்த்து.

[5 5] அன்றிக்கே, (இதுதனக்கு ஸ்வரூபம்) இத்யாதி3க்கு – ஆறால் ஸாங்க3மாக சாஸ்த்ர-விஹிதமான இந்த ப்ரபத்திக்கு ஸ்வரூபமேது, இதுக்குச்சொல்லுகிற அங்க3ந்தானேதென்ன, அவையிரண்டையுமடைவே அருளிச்செய்கிறார், (இதுதனக்கு) இத்யாதி3வாக்யத்3வயத்தாலே. [5 7] ஆறால் தன்னைப்பொறுப்பதேதென்ன அருளிச்செய்கிறார், (உபாயம்) இத்யாதி3. [5 8] தன்னையும் தன்னையொழிந்தவற்றையும் பொறுக்குமதேதென்ன அருளிச்செய்கிறார், (உபாயாந்தரம்) இத்யாதி. [5 9] இந்த ஸித்3த4ஸாத்4யோபாயங்களிரண்டிலும் இப்ப்ரபத்திக்-குண்டான வ்யாவ்ருத்தியை த3ர்சிப்பியாநின்றுகொண்டு உக்தார்த்த2த்தை நிக3மிக்கிறார், (இதிரண்டையும்) இத்யாதி3 என்றிங்ஙனே ஸங்க3தியாகவுமாம். அத2வா, [5 5] இதின் அநுபாயத்வத்தை ஸாதி4க்கைக்காக இதினுடைய ஸ்வரூபாங்க3ங்களிரண்டையும் தாமே அருளிச்செய்கிறார் (இதுதனக்கு) இத்யாதி3வாக்யத்3வயத்தாலே. [5 7] இதின் அநுபாயத்வத்தை ஸ்பு2டமாக்குகைக்காக ஸித்3த4ஸாத்4யோபாயங்களின்படிகளை த3ர்சிப்பிப்போமென்று திருவுள்ளம் பற்றி, ப்ரத2மம் ஸித்3தே4ாபாயத்தின்படியை அருளிச்செய்கிறார், (உபாயம்) இத்யாதி3யால்.

(ஆ.வ்யா.)–நானுன்னை ரக்ஷிப்பனென்றால் ப்ரதிஷேதி$_4$யாமையுமே, ஶாஸ்த்ரம் [1]சிலுகிடாமைக்கு வேண்டுவது. இஜ்ஞானமடியாக ப$_2$லமுண்டாகையாலும், அதுதான் ஸ்வரூபமாகையாலும், [2]ஸர்வமுக்தி–ப்ரஸங்க$_3$ஸஹேதுகத்வங்கள் வாராதென்றபடி.

6 1 .இந்நிலையில் சிலஸாபேக்ஷனும், ப$_2$லப்ரத$_3$னுமால் வருங்குறையேதென்ன, உப$_4$யர்க்குங்கொத்தை–யாமென்கிறார், (அல்லாதபோது) இத்யாதி$_3$யால்.

**6 1 .அல்லாதபோது ப$_3$ந்த$_4$த்துக்கும் பூர்த்திக்கும் கொத்தையாம்.**

ஆத்மஜ்ஞாநாதி$_3$யொழிய அவன் ஸாபேக்ஷனாக இவன் சிறிது செய்யும்போது, நிருபாதி$_4$கரக்ஷ்யரக்ஷக–ஸம்ப$_3$ந்த$_4$த்துக்கும், ஸாபேக்ஷத்வஸாங்காக$_3$ந்த$_4$மற்ற பூர்த்திக்கும் ஸோபாதி$_4$கத்வாபூர்த்தித்வங்களாகிற கொத்தையாம். ஸார்வபௌ$_4$மன் ஸாபேக்ஷனும், தன் மஹிஷீரக்ஷணம் பண்ணுகையும், அவன் ஸ்வரக்ஷ–ணார்த்த$_2$மாக யத்நம் பண்ணுகையும், ஸம்ப$_3$ந்த$_4$பூர்த்திகளுக்குக்கொத்தையாகாதிராதிறே.

6 2 .ஆகில் அநிஷ்டநிவ்ருத்த்யர்த்த$_2$மாகவாகிலும் சிறிது யத்நிக்க வேண்டாவோவென்ன, அப்படிச் செய்யில் அவ்வநிஷ்டம் அபிவ்ருத்$_3$த$_4$மாய்விடுமென்கிறார், (ஆபத்தை) இத்யாதி$_3$யால்.

**6 2 .ஆபத்தைப்போக்கிக்கொள்ளுகிறேனென்று ப்$_4$ரமித்து [3]அத்தை விளைத்துக்–கொள்ளாதொழிகையே வேண்டுவது.**

---

(ஜீ.வ்யா.)–[5 8] அநந்தரம், ஸாத்$_4$யோபாயத்தின்படியை அருளிச்செய்கிறார், (உபாயாந்தரம்) இத்யாதி$_3$யால். [5 9] இவையிரண்டிலும் ப்ரபத்திக்குண்டான வ்யாவ்ருத்தியை த$_3$ர்ஶிப்பிக்கிறார், (இதிரண்டையும்) இத்யாதி$_3$யால் என்றிங்ஙனே ஸங்க$_3$தியாகவுமாம். இவ்வுப$_4$யஸங்க$_3$திக்கும் வாக்யங்களுக்கர்த்த$_2$ம் பூர்வவத்.

6 0 .இப்படி இப்ப்ரபத்தி உபாயமல்லவாய்விட்டால், ப$_2$லஸித்தி$_4$க்கிவன்பக்கலிலும் சில வேண்டாவோவென்ன அருளிச்செய்கிறார், (ப$_2$லத்துக்கு) என்று துடங்கி.

(ப$_2$லத்துக்கு) என்றது – ப$_2$லஸித்$_3$தி$_4$க்கென்றபடி. (ஆத்மஜ்ஞாநமாவது) – ஸ்வஸ்வரூபஜ்ஞாநம். அதாவது — ததே$_3$கஶேஷத்வததே$_3$கரக்ஷ்யத்வங்களை அறிகை. (அப்ரதிஷேத$_4$மாவது) – நிருபாதி$_4$க–ஶேஷியாய், நிருபாதி$_4$கரக்ஷகனான அவன் பண்ணும் ரக்ஷணத்தை விலக்காமை. அதாவது – ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயநிவ்ருத்தி. அவத$_4$ாரணத்தால் – இவையிரண்டுமொழியப்பின்னை–யொன்றும் வேண்டாவென்றபடி. சரமபத$_3$த்தில் சொல்லுகிற ப$_2$லத்துக்கு ப்ரத$_2$மபத$_3$த்தில் சொல்லுகிற ஆத்மஜ்ஞாநமும், மத்$_4$யமபத$_3$த்தில் சொல்லுகிற அப்ரதிஷேத$_4$முமிறே வேண்டுவது.

6 1 .இப்படியன்றிக்கே, ப$_2$லஸாத$_4$நமாக இவனும் சில செய்யவேணுமென்றால் வரும் தீங்கென் என்ன அருளிச்செய்கிறார், (அல்லாத) என்று துடங்கி.

(அல்லாதபோது) என்றது – இவ்வளவன்றிக்கே ப$_2$லஹேதுகமாக இவன் சில செய்யவேண்டும் போதென்றபடி. (ப$_3$ந்த$_4$த்துக்கும் பூர்த்திக்கும் கொத்தையாவது) – இவனுடைய ரக்ஷணம் தன் பேறும்படியான அவனுடைய நிருபாதி$_4$கஶேஷித்வத்துக்கும், இவனுடைய ப்ரவ்ருத்தியில் ஒன்றையுமபேக்ஷியாத நிரபேக்ஷோபாயத்வத்துக்கும் அவத்$_3$யமாய்த்தலைக்கட்டுகை.

6 2 .ஆனாலும் அநந்தக்லேஶப$_4$ாஜநமான ஸம்ஸாரஸாக$_3$ரத்தில் அழுந்திக்கிடந்தலைகிற தன்

(ஆ.வ்யா.)–[1]ஆமஜ்வரத்தை ஆற்றக்கோலி ஆற்றிலே முழுகத்தேடுவாரைப்போலே, ஸம்ஸாரமாகிற மஹாபத்தை ஸ்வயத்நத்தாலே மறுவலிடாதபடி போக்கிக்கொள்ளுகிறேமென்று விபரீதஜ்ஞாநத்தாலே ப்$_4$ரமித்து, ஸ்வயத்நநிவர்த்த்யமல்லாதவந்தவாபத்தை, ஸ்வயத்நமாகிற அபத்$_2$யஸேவையாலே ஸதராக$_2$–மாக விளைத்துக்கொள்ளாதே, அந்த ப்$_4$ரமத்தை விட்டு ஸ்வயத்நநிவ்ருத்தனாயிருக்கையே தந்நிவ்ருத்திக்கு வேண்டுவது. அநிஷ்டநிவ்ருத்தியில் இவன்கை முடங்கவே தந்நிவர்த்தகன்கை நிமிருமிறே.

6 3. ஆகில் ரக்ஷணத்துக்கு வேண்டுவதேதென்ன, அவன்திருவுள்ளத்தைப்பின்செல்லுகையே வேண்டுவ–தென்கிறார், (ரக்ஷணத்துக்கு) இத்யாதி$_3$யால்.

**6 3. ரக்ஷணத்துக்கபேக்ஷிதம் ரக்ஷ்யத்வாநுமதியே.**

நிருபாதி$_4$கரக்ஷகன்பண்ணும் ரக்ஷணத்துக்கு பக்ஷபாதியாகாமைக்கபேக்ஷிதம், நீ எனக்கு ரக்ஷ்யம் என்றால், ஒக்கும் என்றநுமதி பண்ணுமென்றிவ்வளவே வேண்டுவது. அதில்லாமையிறே அநாதி$_3$காலமிழந்ததும்.

6 4. இவ்வநுமதிதான் ஸாத$_4$நமாகாதோவென்னவொண்ணாதென்கிறார் மேல், (இதுதான்) இத்யாதி$_3$யால்.

**6 4. எல்லாவுபாயத்துக்கும் பொதுவாகையாலும், சைதந்யகார்யமாகையாலும், ப்ராப்தித$_3$சையிலுமநுவர்த்திக்கையாலும், ஸ்வரூபாதிரேகியல்லாமையாலும் அசித்$_3$வ்யாவ்ருத்தவேஷத்தை ஸாத$_4$நமாக்கவொண்ணாது.**

[2]இந்த ரக்ஷ்யத்வாநுமதிதான் ஸாத்$_4$யஸித்$_3$த$_4$ருபமான எல்லா உபாயங்களுக்கும் வித்$_4$யநுஷ்ட$_2$ாந–த்$_3$வாரேண பொதுவாகையாலும், ஸ்வரூபத$_4$ர்மமான சைதந்யத்தின் ஆகாராந்தரமான பரேச்ச$_2$ாநு–வித$_4$ாநருபகார்யமாகையாலும், வரணத$_3$சையளவன்றிக்கே ப்ராப்யப்ராப்தித$_3$சையிலும் "அது நமது

---

(ஜீ.வ்யா.)–ஆபத்தையுணர்ந்தால் ஆபத்ஸக$_2$னான ஈஶ்வரனை ஸ்வப்ரபத்தியாலே வஶீகரித்து, தத்ப்ரஸாத$_3$த்தாலே இத்தைக்கழித்துக்கொள்ளவேண்டாவோவென்ன அருளிச்செய்கிறார், (ஆபத்தை) என்று துடங்கி.

அதாவது – ஸர்வேஶ்வரன்திருவடிகளிலே ப்ரபத்தி பண்ணி (ஸம்ஸாரமாகிற ஆபத்தைப்போக்கிக்–கொள்ளுகிறேமென்று), தான் பண்ணுகிற ப்ரபத்தியாலே தன் (ஆபத்தைப்போக்கிக்கொள்ளுகி)–றாக (ப்$_4$ரமித்து), ததே$_3$கபாரதந்த்ர்யரூபஸ்வரூபஹாநியாகிற ஆபத்தை (விளைத்துக்கொள்ளா–தொழிகையே) தந்நிவ்ருத்திக்கிவன் செய்யவேண்டுவதென்றபடி. ஓராபத்தைப்பரிஹரிக்கப்புக்கு ஓராபத்தை விளைத்துக்கொள்ளாதே, இவன் ஸ்வயத்நத்தில் நிவ்ருத்தனாயிருக்கவே எம்பெருமான் தானே ரக்ஷிக்குமென்று கருத்து. (அத்தை) என்றது – ஆபத்ஸாமாந்யத்தைப்பற்ற; அல்லது, ப்ரக்ருதாபத்துதன்னையே பராமர்ஶித்தபடியன்று.

6 3. ஆனாலும், "ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே"(ல.த.1 7–7 9) என்று – ரக்ஷகனான ஸர்வேஶ்வரன் ரக்ஷ்யபூ$_4$தனான இச்சேதநனுடைய அபேக்ஷையைப்பார்த்திருக்குமென்கையாலே, அவன் பண்ணும் ரக்ஷணத்துக்கு இவனுடைய அபேக்ஷையும் வேண்டியன்றோ இருக்கிறதென்ன அருளிச்செய்கிறார், (ரக்ஷணத்துக்கு) என்று துடங்கி.

அதாவது – நிருபாதி$_4$கரக்ஷகனானவன் பண்ணும் ரக்ஷணத்துக்கு இச்சேதநன்பக்கல் வேண்டுவது, நீ எனக்கு ரக்ஷ்யமென்றால் அல்லேனென்னாதே தன்னுடைய ரக்ஷ்யத்வத்தை இசையுமிவ்வளவே என்கை. "ரக்ஷ்யாபேக்ஷாம்" என்கிறவிடத்தில் சொல்லுகிற அபேக்ஷை ரக்ஷ்யத்வாநுமதித்$_3$யோதக–

(ஆ.வ்யா.)-விதிவகையே"(திருவாய்.10-6-1) என்றநுமதி முன்னாக ப்ராபிக்கவேண்டியநுவர்த்திக்கை-யாலும், ஶேஷமாய் பரதந்த்ரமான ஸ்வரூபத்துக்கு ஶேஷ்யதிஶயகரியாய், தச்சித்தாநுவித$_4$ாநம் பண்ணிக்-கொண்டு ஸ்வரூபத்தை அதிரேகித்திருப்பதொன்றல்லாமையாலும், சைதந்யாத$_4$ாரமல்லாத அசித்$_3$-வ்யாவர்த்தகையான சைதந்யவேஷாநுமதியை, பொதுவன்றியே ஸ்வதந்த்ரமாய், சேதநத$_4$ர்மமல்லாததாய், ஸ்வத$_3$ஶையளவிலே நிற்பதாய், ஸ்வரூபாதிரேகியான ஸாத$_4$நகோடியிலே ஒதுக்கவொண்ணாது. (இதுதான்) என்றது ப்ரபத்தி என்று கொள்ளும்போது, ஸக்ருத்க்ருதையானவித்தை [1]த$_3$ஶாந்தரத்திலநுவர்த்திக்கு-மென்னக்கூடாது.

65. இவன் தன்னுடைய அசித்$_3$வ்யாவ்ருத்திக்கு ப்ரயோஜநம் இன்னதென்கிறார் மேல்.

**65. அசித்$_3$வ்யாவ்ருத்திக்கு ப்ரயோஜநம் உபாயத்திலுபகாரஸ்ம்ருதியும், உபேயத்தி-லுகப்பும்.**

---

(ஜீ.வ்யா.)-மித்தனையென்று கருத்து. "யாச்ஞா ப்ரபத்தி: ப்ரார்த்த$_2$நாமதி:" என்கிற ஸ்வீகாரத்தை அப்ரதிஷேத$_4$த்$_3$யோதகமென்றிறே இவர்தாமருளிச்செய்தது.

64. இப்படி அநுமதிஸாபேக்ஷனும் ரக்ஷிக்குமாகில் இவ்வநுமதிதான் ஸாத$_4$நமாகாதோவென்ன அருளிச்செய்கிறார், (எல்லா) என்று துடங்கி.

(எல்லாவுபாயத்துக்கும் பொதுவாகையாவது) – போ$_4$க$_3$மோக்ஷோபாயங்களிலேதேனுமொன்றிலே அதி$_4$கரிக்குமவனுக்கும், 'நீ இவ்வுபாயத்தை அநுஷ்டி$_2$' என்றால் 'அப்படியே செய்கிறேன்' என்னுமநுமதிபூர்வகமாக அதிலிழியவேண்டுகையாலே ஸகலோபாயஸாத$_4$ாரணமாயிருக்கை. இத்தால் – ஓரிடத்திலும் இவ்வநுமதிக்கு அதி$_4$காரிவிஶேஷணத்வமொழிய ப$_2$லஸாத$_4$நத்வ-மில்லாமை காட்டப்பட்டது. (சைதந்யகார்யமாகையாவது) – ரக்ஷ்யத்வம் சேதநாசேதநஸாத$_4$ாரண-மாயிருக்கச்செய்தே, ஜ்ஞாநஶூந்யமாகையாலே அவ்வாகாரத்தையறிகைக்கு யோக்$_3$யமல்லாத அசேதநம்போலன்றிக்கே, ஜ்ஞாநாஶ்ரயபூ$_4$தனாகையாலே அத்தையறிகைக்கு யோக்$_3$யனாயிருக்கிற இச்சேதநன்பக்கலுண்டான அநுமதி இவனுடைய ஜ்ஞாநகார்யமாய்க்கொண்டு வந்ததாயிருக்கை. இத்தால் – இவ்வநுமதி சேதநனை வாசியைப்பற்ற வந்ததாகையாலே, ஸாத$_4$நகோடியிலந்வயியா-தென்றபடி. (ப்ராப்தித$_3$ஶையிலுமநுவர்த்திக்கையாவது) – உபாயத$_3$ஶையளவிலன்றிக்கே உபேயத$_3$ஶையிலும் அவன் வ்யாமோஹாநுகு$_3$ணமாகக்கொள்ளும் விநியோக$_3$விஶேஷங்களில் திருவுள்ளமானபடி கொண்டருளவேணுமென்னுமநுமதி இவனுக்கு நடந்து செல்லுகை. இத்தால் – ஸாத$_4$நமாகில் ப$_2$லஸித்$_3$தி$_4$யளவிலே மீளவேணுமென்று கருத்து. (ஸ்வரூபாதிரேகியல்லா-மையாவது) – ஶேஷி செய்யுமதுக்குடன்பட்டிருக்கை ஶேஷத்வபாரதந்த்ர்யகார்யமாகையாலே இவ்வநுமதி ஸ்வரூபத்துக்குப்புறம்பன்றிக்கே ஸ்வரூபமாயிருக்கை. இத்தால் – ஸாத$_4$நமாகில் ஸ்வரூபாதிரேகியாயிருக்கவேணுமென்று கருத்து. (அசித்$_3$வ்யாவ்ருத்தவேஷமாவது) – ஜ்ஞாத்ருத்வத்தாலே ஜ்ஞாநஶூந்யமான அசித்தில் வேறுபட்டிருக்கிற ஆத்மாவினுடைய ஆகாரம்; இவ்விடத்தில் அவ்வாகாரமாவது – ஜ்ஞாநகார்யமான அநுமதி; இத்தை (ஸாத$_4$நமாக்க-வொண்ணாது) என்றது – இப்படி இதினுடைய அஸாத$_4$நத்வஹேதுக்கள் அநேகமுண்டாகையால் இத்தை ஸாத$_4$நமாகக்கற்பிக்கப்போகாதென்றபடி. (அசித்$_3$வ்யாவ்ருத்திவேஷம்) என்று பாட$_2$-

(ஆ.வ்யா.)-ப$_{4}$க$_{3}$வச்சே$_{2}$ஷமான ஜ்ஞாநாநந்தை$_{3}$கரூபையான (அசித்$_{3}$வ்யாவ்ருத்திக்கு) அநுரூபமான (ப்ரயோஜநம்), பரமசேதநமான ஸித்$_{3}$தே$_{4}$ாபாயத்தின்பக்கல் "என்னைத்தீமனங்கெடுத்தாய்"(திருவாய்.2-7-8), "மருவித்தொழும் மனமே தந்தாய்"(திருவாய்.2-7-7) என்கிற (உபகாரஸ்ம்ருதியும்), நித்யபோஷி-விஷயநித்யகைங்கர்யமாகிற (உபேயத்தில்) "உகந்து பணிசெய்து"(திருவாய்.10-8-10) என்கிற (உகப்பும்) ஸ்ம்ருதிப்ரீதியோக்$_{3}$யதையற்ற அசித்திற்காட்டில் தது$_{3}$ப$_{4}$யயோக்$_{3}$யதையிறே இவன் சேதநனான-வற்றால் பெற்ற ப$_{2}$லம்.

66.சத்$_{3}$ருசனான இவனுக்கு ப்ராப்த்யுபாயமாயறுவது இன்னதென்கிறார் மேல், ("உன் மனத்தால்" (பெரியதிருமொழி2-7-1)) இத்யாதி$_{3}$யால்.

**66."உன்மனத்தாலென்னினைந்திருந்தாய்"(பெரியதிருமொழி 2-7-1) என்கிறபடியே – ப்ராப்திக்குபாயம் அவன்நினைவு.**

"குவளையங்கண்ணி" (பெரியதிருமொழி 2-7-1) என்கிற ஜ்ஞாநமும், "கொல்லியம்பாவை" (பெரிய-திருமொழி 2-7-1) என்கிற பாரதந்த்ர்யமும், "நின் தாள் நயந்த" (பெரியதிருமொழி 2-7-1) என்கிற ஸ்வரூபாநுரூபப$_{4}$க்தியும், அங்கீ$_{3}$காரஹேதுவன்றியே இவற்றைப்பார்த்துக்கைவிடவோ, உன்னையே பார்த்துக்கைக்கொள்ளவோ, ஏது திருவுள்ளம் என்கிற திருமங்கையாழ்வார் திருவுள்ளக்கருத்தின்படியே, பரதந்த்ரனும், ஸ்வமான இவன் ஸ்வதந்த்ரனும், ஸ்வாமியானவனை ப்ராபிக்கைக்குபாயமாயறுவது, நினைத்தபடி செய்து தலைக்கட்டவல்லனுமாய், ப்ராப்தனுமான அவனுடைய இவனை உஜ்ஜீவிப்பிக்கவேணு-மென்னும் சலநமற்ற (நினைவு).

67. ஆகில், இந்நாள்வரை அவனுக்கிந்நினைவுண்டாய்த்தில்லையோவென்ன அருளிச்செய்கிறார், (அதுதான்) இத்யாதி$_{3}$யால்.

---

(ஜீ.வ்யா.)-மாகில், ஜ்ஞாநஶூந்யமான அசித்திற்காட்டில் ஆத்மாவுக்குண்டான ஜ்ஞாத்ருத்வரூப-வ்யாவ்ருத்தியின் வேஷமான அநுமதியை என்று ஶப்$_{3}$தா$_{3}$ர்த்த$_{2}$ம்.

65.ஆனால் இவ்வசித்$_{3}$வ்யாவ்ருத்திதனக்கொரு ப்ரயோஜநம் வேண்டாவோவென்ன அருளிச்-செய்கிறார், (அசித்$_{3}$வ்யாவ்ருத்திக்கு) என்று துடங்கி.

(உபாயத்திலுபகாரஸ்ம்ருதியாவது) – "என்னைத்தீமனம் கெடுத்தாய்"(திருவாய்.2-7-8), "மருவித்-தொழும் மனமே தந்தாய்"(திருவாய்.2-7-7) என்கிறபடியே – ஸித்$_{3}$தே$_{4}$ாபாயமான எம்பெருமான் தன்திறத்தில் பண்ணின உபகாரங்களை அநுஸந்தி$_{4}$க்கை. (உபேயத்திலுகப்பாவது) – அவன் திருவடிகளில் தான் பண்ணும் கைங்கர்யங்களில் "உகந்து பணிசெய்து"(திருவாய்.10-8-10) என்கிற உகப்பும், அந்தால் அவனுக்கு விளைகிற ப்ரீதியைக்கண்டு தனக்கு விளைகிற ப்ரீதியும்.

66.இப்படி இவன்பக்கலுள்ளதொன்றும் உபாயமன்றாகில் இவனுக்குத்தத்ப்ராப்த்யுபாயந்தான் ஏதென்ன அருளிச்செய்கிறார், ("உன்மனத்தால்") என்று துடங்கி.

அதாவது – இந்நிலையிலுள்ளதொன்றும் பேற்றுக்குபாயமல்லாமையாலே, "உன்மனத்தாலென் நினைந்திருந்தாய்" என்று – கைகழிந்தவற்றுக்குமொரு போக்கடிபார்த்திருக்கக்கடவ உன் திருவுள்ளத்தால் நினைந்திருந்ததென் என்று ஹிதைஷியான அவன்நினைவே உபாயமென்று

**(ஆ.வ்யா.)- 6 7 .அதுதானெப்போதுமுண்டு.**
ப்ராப்த்யுபாயமாயற்றவன்நினைவுதான், இவனவனைப்பிரிந்து திரிகிற அநாதி$_3$காலமே பிடித்து (எப்போதுமுண்டு).

6 8 . ஆகில், இந்நாள்வரை ப$_2$லியாதொழிவானென் என்ன அருளிச்செய்கிறர், (அது ப$_2$லிப்பது) இத்யாதி$_3$.

**6 8 .அது ப$_2$லிப்பது இவன் நினைவு மாறினல்.**
அநாதி$_3$யைப்பிடித்துண்டான அவன் நினைவு இவனுக்கு ப்ராப்திஸாத$_4$நமாய் ப$_2$லிப்பது, தன்னநுமதியை-லாக தத்ப்ராப்திஸாத$_4$நமென்று ப்$_4$ரமிக்கிற இந்த அஜ்ஞசேதநனுடைய ப்ரதிப$_3$ந்த$_4$கமான ஸ்வரக்ஷண-நிமித்தமான நினைவு, அவன் நினைவே தஞ்சமென்னும்படி அவன்தன் நினைவாலே ஸவாஸநமாக-வற்றதாகில்.

6 9 . ப்ராப்தியில் இவன்நினைவு குலையவேணுமென்னுமிதுக்கு ஸிஷ்டவசநம் காட்டுகிறர் (அந்திமகாலம்) இத்யாதி$_3$யால்.

**6 9 ."அந்திமகாலத்துக்குத்தஞ்சம் - இப்போது தஞ்சமென் என்கிற நினைவு குலைகை" என்று 'ஜீயரருளிச்செய்வர்.**

அழகியமணவாளப்பெருமாள்பட்டருடைய அந்திமத$_3$ஸையிலே நஞ்சீயரெழுந்தருளி விளவியருள, அவரும் 'ஜீயா அந்திமகாலத்துக்குத்தஞ்சமேது?' என்ன, 'இப்போது தஞ்சமென் என்கிற நினைவு குலைகையேகாணும் தஞ்சம்; "அஹம் ஸ்மராமி" என்ற த$_3$ஸையில் [1]அவன்வாய்புகுசோறுகாணும்' என்று ஜீயரருளிச்செய்தா-ரென்று இவ்வர்த்த$_2$த்தை ஸ்தி$_2$ரீகரிக்கிறர். ஆக இவன் பேற்றிழவு தன்னதாம்படியான ப$_3$ந்த$_4$விஸேஷ-முள்ள ஸ்வதந்த்ரஸ்வாமியான அவன்நினைவே பேற்றுக்குடலாய், தத்ப்ரதிப$_3$ந்த$_4$கமான இவன்நினைவு இழவுக்குடலாய்விடுமென்றதாய்த்து.

---

(ஜீ.வ்யா.)-ஆழ்வார் அநுஸந்தி$_4$த்தபடியே, அவனை ப்ராபிக்கைக்குபாயம் - ஸர்வஜ்ஞனும், ஸர்வஸக்தியாய், ப்ராப்தனும், பரமத$_3$யாளுவாயிருக்கிறவனுடைய இச்சேதநோஜ்ஜீவநார்த்த$_2$மான நினைவென்றபடி.

6 7 .அந்நினைவுதானவனுக்கெப்போதுண்டாவதென்ன அருளிச்செய்கிறர், (அதுதானெப்போது-முண்டு) என்று.(எப்போதும்) என்றது - இவன் யாதானும் பற்றி நீங்கித்திரிகிற காலத்தோடு இன்றோடு வாசியற ஸர்வகாலத்திலுமென்றபடி.

6 8 ஆனலது இந்நாள்வரை ப$_2$லியாதிருப்பானென் என்ன அருளிச்செய்கிறர், (அது ப$_2$லிப்பது இவன் நினைவு மாறினல்) என்று. அதாவது - அவன்நினைவு இவனுக்குக்கார்யகரமாவது, இவனுடைய ஸ்வரக்ஷணசிந்தை மாறின காலத்திலென்றபடி.

6 9 .இவ்வர்த்த$_2$த்தினுடைய ஆப்த்யர்த்த$_2$மாக நஞ்ஜீயர் வார்த்தையை அருளிச்செய்கிறர், (அந்திமகாலத்துக்கு) என்று தொடங்கி.

(ஆ.வ்யா.)–70. இப்படி ப்ராப்திப்ரதிப$_3$ந்த$_4$கமான நினைவுடைய இவனுக்கு ப்ராப்த்ருத்வமில்லை, ப்ராப்தாவல்லாதவனுக்கு ப்ராபகாபேக்ஷையில்லை, ப்ராபகமில்லாதவனுக்கு ப்ராப்தியால் வரும் ப்ரீதி-ப்ராப்தியுமில்லை, ஆனபின்பு இவ்விடத்திலே ப்ராப்த்ருத்வாதி$_3$களுடையவன் ஆரென்ன, அவையெல்லா-மவனேயென்கிறார், (ப்ராப்தாவும்) இத்யாதி$_3$யால்.

**70. ப்ராப்தாவும், ப்ராபகனும், ப்ராப்திக்குகப்பானுமவனே.**

தன் ஸ்வத்தை ப்ராப்தியுடன் ப்ராபிக்குமவனுந்தான், இவனை ப்ராபிக்குமிடத்து ப்ராபகனும், இவனை ப்ராபித்துகப்பானும், ஸ்வாமியாய், ஸ்வதந்த்ரனாய், சேஷியான அவனே; அவதாரரூபேணவும், ஸ்வஸங்கல்பரூபேணவும், ப்ரத$_4$ாநப$_2$லித்வரூபேணவும் உக்தத்ரயமும் தானேயாகையால், ஈஶ்வரலாப$_4$ம் ஆத்மாவதன்றியே ஆத்மலாப$_4$ம் [1]ஈஶ்வரனதென்னுமுப$_4$யஸம்ப$_3$ந்த$_4$விஶேஷார்த்த$_2$ம் சொல்லப்பட்டது. அன்றியே, [2]பராதீ$_4$நப்ராப்யத்வமடியாக (ப்ராப்தாவும்) அவனேயென்று ஸமாநாதி$_4$கரித்து, இவனுடைய ப்ராப்திகர்த்ருத்வம் மூச்சறுத்தும், ஸ்வதந்த்ரப்ராபகத்வமடியாக (ப்ராபகனும்) அவனேயென்று ஸ்வயத்நத்தில் மூச்சறுத்தும், [3]பராதீ$_4$நப்ரயோஜநபே$_4$ாக்த்ருத்வரூபபே$_4$ாக்$_3$யத்வமடியாக (உகப்பானுமவனே) என்று ஸ்வார்த்த$_2$பே$_4$ாக்த்ருத்வம் மூச்சறுத்தும், இப்படி இவனுடைய [4]பரப்ரேரிதத்வபரைகரக்ஷ்யத்வ-பரைகார்த்த$_2$த்வரூபபாரதந்த்ர்யஶேஷத்வஸித்$_3$தி$_4$யைச் சொல்லுகிறதென்றுமருளிச்செய்வர்.

---

(ஸ்ரீ.வ்யா.)–அதாவது – நஞ்ஜீயர், தம்முடைய ஸ்ரீபாத$_3$த்திலே உள்ளாரொரு [1]ஸ்ரீவைஷ்ணவரை நோவறிகைக்காகச்சென்றெழுந்தருளியிருக்கிறவளவிலே, அந்த ஸ்ரீவைஷ்ணவர், "அடியேனுக்கு அந்திமகாலத்துக்குத்தஞ்சமாயிருப்பதொன்றருளிச்செய்யவேணும்" என்ன, "அந்திமகாலத்துக்குத்-தஞ்சம் – நமக்கிப்போது தஞ்சமென் என்கிற தன்னுடைய ஸ்வரக்ஷணசிந்தை குலைகைகாணும்" என்றருளிச்செய்த வார்த்தை. ஆகையாலே, ஈஶ்வரன் இவ்வாத்மோஜ்ஜீவநத்துக்குறுப்பாகப்-பண்ணும் சிந்தனை ப$_2$லிப்பது இவனுடைய ஸ்வரக்ஷணசிந்தை மாறினாலென்றதாய்த்து.

70. [2]ப்ராபகன் ஈஶ்வரனானாலும் ப்ராப்தாவும் ப்ராப்திக்குகப்பானுமிவனன்றோ, ஆனபின்பு இவன்நினைவை இப்படி நேராகத்துடைக்கலாமோவென்ன, அருளிச்செய்கிறார், (ப்ராப்தாவும்) என்று துடங்கி.

அன்றிக்கே, இச்சேதநன் கையிலுள்ளவற்றில் உபாயத்வக$_3$ந்த$_4$மறத்துடைத்து ஈஶ்வரனே உபாய-மென்று நிஷ்கர்ஷித்தபோதே, ப்ராப்த்ருத்வமும், ப்ராப்தியில் வருமுகப்பும் இவனதன்றிக்கே, உபாயபூ$_4$தனான ஈஶ்வரனதேயாய் ப$_2$லித்துவிடுகை; ஆகையால் (ப்ராப்தாவும், ப்ராபகனும், ப்ராப்திக்குகப்பானுமவனே) என்று நிக$_3$மித்தருளுகிறாராகவுமாம்.

(ப்ராப்தா அவனாகையாவது) – "ஸ்வத்வமாத்மநி ஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்$_3$ரஹ்மணி ஸ்தி$_2$தம்" (வி.த$_4$.) என்கிற ஸ்வதஸ்ஸித்$_3$த$_4$மான ஸ்வஸ்வாமித்வஸம்ப$_3$ந்த$_4$மடியாக, உடைமையைப்ரா-பிக்குமுடையவனைப்போலே இவ்வாத்மாவை ப்ராபிப்பான் தானாயிருக்கை. (ப்ராபகன் அவனாகை-யாவது) – தானிவனை ப்ராபிக்குமிடத்தில் ப்ராப்திக்குமுபாயமும், ஸர்வஜ்ஞத்வஸர்வ-ஶக்தித்வஸத்யஸங்கல்பத்வாதி$_3$கு$_3$ணவிஶிஷ்டனாய், நிரங்குஶஸ்வதந்த்ரனான தானாயிருக்கை. (ப்ராப்திக்குகப்பானவனாகையாவது) – ஸ்வத்தினுடைய லாப$_4$த்திலே தத்$_3$பே$_4$ாக்தாவான ஸ்வாமி ஹ்ருஷ்டனாமாப்போலே, இவனை ப்ராபித்தால், 'ப்ராபிக்கப்பெற்றோமே!' என்றுகப்பானும், இவ்வாத்மாவுக்கு நித்யபே$_4$ாக்தாவான தானாயிருக்கை. இவை மூன்றும் (அவனே) என்கிற

ஆற்றிலே முழுகிக்குளித்தால் அந்த அபத்$_{2}$யஸேவையானது ஜ்வரத்தை வளர்த்துவிடுமே-யொழியப்போக்காது. அவ்வாறே ஸம்ஸாரமாகிற மஹாபத்தை ஸ்வயத்நமாகிற அபத்$_{2}$ய-ஸேவையாலே போக்கநினைத்தால் அது பலகினைகளாக வளர்ந்துவிடும்.

(2) ஸாத்$_{4}$யமான உபாயத்துக்கு விதி$_{4}$யின் வழியாக இந்த அநுமதி உள்ளது. அதாவது 'நீ இந்த உபாயத்தை அநுஷ்டி$_{2}$' என்றால், 'அப்படியே செய்கிறேன்' என்னும் அநுமதி-பூர்வகமாக அதில் இழிய வேண்டுகையாலே ஸாத்$_{4}$யோபாயங்களில் விதி$_{4}$க்கு இசைதல் வழியாக அநுமதி உள்ளது. ஸித்$_{3}$தே$_{4}$ாபாயத்தில் தன்னுடைய ரக்ஷ்யத்வத்தை இச்சேதநன் இசைகையாகிற அநுஷ்ட$_{2}$ாநத்தின் வழியாக அநுமதி உள்ளது.

பக்கம் - 32

(1) த$_{3}$ஶாந்தரத்தில் - ப்ராப்தித$_{3}$ஶையில். ஸக்ருத்க்ருதமான ப்ரபத்தி ப்ராப்தித$_{3}$ஶையில் அநுவர்த்தியாது என்றர்த்த$_{2}$ம்.

பக்கம் - 34

(1) அவன்வாய்புகுசோறுகாணும் - அவனுக்கு போ$_{4}$க்$_{3}$யவஸ்துகாணும் நாம்.

பக்கம் - 35

(1) இருவருக்குமுள்ள ஸ்வஸ்வாமிப$_{4}$ாவஸம்ப$_{3}$ந்த$_{4}$த்தின் விஶேஷார்த்த$_{2}$ம்.

(2) பரனுக்கு அதீ$_{4}$நமான ப்ராப்யத்வம் ஜீவனுக்குள்ளது, ஸ்வாதீ$_{4}$நமான ப்ராப்யத்வ-மில்லை. எனவே ஜீவன் தனக்குத்தானே ப்ராப்யனல்லன்.ப$_{4}$க$_{3}$வானுக்கே ப்ராப்யன். ஆக, ஜீவனுடைய ப்ராப்திகர்த்ருத்வம் மூச்சற்றுப்போகிறது.

(3) பராதீ$_{4}$நபரப்ரயோஜநபோ$_{4}$க்த்ருத்வம் ஜீவனுக்குள்ளது. அதாவது பரனுக்கு அதீ$_{4}$ந-மாயும், அவனுடைய ப்ரயோஜநத்துக்காகவும் உள்ள போ$_{4}$க்த்ருத்வமே ஜீவனிடம் உள்ளது. இது போ$_{4}$க்$_{3}$யத்வமேயாகும். எனவே ஸ்வார்த்த$_{2}$போ$_{4}$க்த்ருத்வம் மூச்சற்றுப்போகிறது.

(4) பரப்ரேரிதத்வபரைகரக்ஷ்யத்வங்கள் - பாரதந்த்ர்யமாகும்.

பரைகார்த்த$_{2}$த்வம் - ஶேஷத்வமாகும்.

பக்கம் - 36

(1) கிட்டம் - அழுக்கு, துரு.

(2) பாளம் - ஒளி

(3) ஸ்வயத்நஸ்வப்ரயோஜநங்களாகிற இரண்டின் நிவ்ருத்தியும் பாரதந்த்ர்யஶேஷத்வங்க-ளாகிற இரண்டின் ப$_{2}$லமாயிருக்கும்.

பக்கம் - 37

(1) தத்$_{3}$விஷயப்ரீதி - ப$_{4}$க$_{3}$வத$_{3}$நுப$_{4}$வத்தால் இவனுக்குண்டாகும் ப்ரீதி, அவனுடையதே-யாயிருக்கை சைதந்யத்தின் ப$_{2}$லம் என்றர்த்த$_{2}$ம். இந்த இரண்டாவது யோஜனையில் 'அவனுடையதேயாயிருக்கை' என்ற பத$_{3}$ம் அத்$_{4}$யாஹரிக்கப்பட்டுள்ளது. ஸூத்ரத்தின் முதல் யோஜனையில் அத்$_{4}$யாஹாரமில்லை. இந்த இரண்டாம் யோஜனையில், ப்ரயத்நப$_{2}$லம் - பரப்ரயோஜநம், சைதந்யப$_{2}$லம் - பரகதப்ரீதி என்றதாயிற்று.

பக்கம் - 38

(1) ஜீவாத்மாவின் நித்யவிஶேஷணத்வத்தால் ஶேஷத்வம் அதற்கு நிரூபகத$_{4}$ர்மமாகிறது. ஆத்மாவின் இந்தச்சார்ந்திருக்கும் தன்மையால் அதனிடம் நிரூபிக்கப்படும் (=நிரூப்ய-மான) த$_{4}$ர்மமும் ஶேஷத்வமாகும்.

ஆய் வ்யாக்2யாநம் - குறிப்புகள்

பக்கம் - 39

(1) ஸ்வாதந்த்ர்யமானது ஶேஷத்வஸாமாந்யத்தின் ஸத்3பா4வத்துக்கு விரோதி4யாகையால் அயதா2ஶேஷத்வப்ரதீதியைக்கூடத்தடை செய்யக்கூடியது. அந்யஶேஷத்வமானது ப4க3வச்சே2ஷத்வத்துக்கு இசையவொட்டாமல் தடுப்பதால் யதா2வஸ்தி2தஶேஷத்வப்ரகாஶத்தை நிரோதி4க்கிறது.

(2) ஆர்ப்பு - தூளி.

ஆய் வ்யாக்2யாநத்தில் உபாயவைப4வப்ரகரணத்தின்
குறிப்புகள் முடிந்தன

பெரியஜீயர் வ்யாக்2யாநம் - குறிப்புகள்

பக்கம் - 3

(1) க்3ருஹமேதி4த்வம் - க்3ருஹஸ்த2ராயிருக்கை.

(2) க்ருஷ்ணகேஶித்வம் - வயோவிஶேஷயுக்தத்வம்

பக்கம் - 4

(1) த்3வயேந மந்த்ரரத்நேந மத்ப்ரியேண ப4ஜேத்ஸதா3 ।
அசிராந்மத்ப்ரஸாதே3ந மல்லோகமதி4க3ச்ச2தி ॥

பக்கம் - 13

(1) ஓடவைத்தாராகவுமாம் - நிஷ்கர்ஷித்தாராகவுமாம்.

பக்கம் - 14

(1) கொட்டு - களைக்கொட்டு, குந்தாலி - கோடரி(கோடாலி)

பக்கம் - 19

(1) உறைத்திருக்கையாலே - அதி4கமாயிருக்கையாலே.

(2) அஜ்ஞாநம் - உபாயாந்தரங்களைப்பற்றின அஜ்ஞாநம்.

(3) அநுஸந்த4ாநபரமாக்கி - அநுஸந்தா4நத்தில் ஊற்றத்தைப்பற்ற என்றுகொண்டு.

(4) ஓரொன்றிலே - ஓரோர் அநுஸந்தா4நத்திலே.

(5) ப்ராமாணிகராகையாலே - கேவலரஹஸ்யத்ரயாதி3ப்ரமாணதீ4நப்ரமேயநிஶ்சயத்தை உடையவர்களாகையாலே.

(6) யோக3ஜந்யமான த3ர்ஶநஸமாநாகாரஜ்ஞாநமில்லாமையால்.

(7) நைச்யநிப3ந்த4நமாமித்தனை - த3ர்ஶநஸமாநாகாரஜ்ஞாநமும் கார்யகரமாகமாட்டாதபடியான ஆத்மாவின் பாரதந்த்ர்யத்தாலே.

பக்கம் - 23

(1) ப4க்தியும் - ப4க்தியின்.

பக்கம் - 25

(1) ஆழ்வாருக்குச்சரங்கள் பா3த4கமல்லவே - என்பது ப்ரஸ்நாபி4ப்ராயம்.

(2) முதல் நிர்வாஹம் - கல்யாணகு3ணாதி3கள்விஷயமான ப4க்தி விருத்3த4ஸ்வ-ப4ாவங்களை விளைவிக்கிறது.

இரண்டாவது நிர்வாஹம் - கல்யாணகு3ணாதி3களே விருத்3த4ஸ்வப4ாவங்களை விளைவிக்கின்றன.

பக்கம் - 28

(1) அவக4ாதஸ்வேத3ம் - நெல்லைக்குத்தினால் ஏற்படும் வியர்வை.

பக்கம் - 35

(1) ஸ்ரீவைஷ்ணவரை - அழகியமணவாளப்பெருமாள்ப4ட்டரை(ஆய்).

(2) முதல் நிர்வாஹம் - ப்ராப்த்ருத்வப்ராப்திப2லாநந்தித்வங்களையுடையவன் சேதநன் என்ற ஆபாதப்ரதீதியை நீக்குகிறார்.

இரண்டாவது நிர்வாஹம் - அவை கீழேயே துடைக்கப்பட்டுவிட்டதால் அவ்வர்த்த3த்தை நிக3மிக்கிறார். இந்த நிர்வாஹம் ஆய் அருளிச்செய்தது.

பக்கம் - 37

(1) 'ஶேஷத்வாதி3' என்பதிலுள்ள 'ஆதி3'ஶப்3த3ம் பாரதந்த்ர்யத்தைக்குறிக்கிறது.

(2) 'ஜ்ஞாத்ருத்வாதி3' என்பதிலுள்ள 'ஆதி3'ஶப்3த3ம் கர்த்ருத்வபோ4க்த்ருத்வங்களைக்-குறிக்கிறது.

(3) ப்ரகாரதயா ஶேஷத்வமாய்க்கொண்டு - அத்3வாரகப்ரகாரதயா ஶேஷமாய்க்கொண்டு (எம்பார் ஜீயர் அரும்பத3விளக்கம்).

பக்கம் - 38

(1) ப்ரகாரத்வப்ரயுக்தமான ஶேஷத்வமே - அத்3வாரகப்ரகாரத்வப்ரயுக்தமான ஶேஷத்வமே

(2) அந்தரங்க3நிரூபகமாயிருக்கும் - அஸாதா4ரணத4ர்மமாய்க்கொண்டு நிரூபகமா-யிருக்கும். அந்த: - ப்ரக்ருதநிரூபணீயவஸ்துமாத்ரே, வித்3யமாநமங்க3ம் அந்தரங்க3ம். அங்க3ம் - விஶிஷ்டவஸ்த்வேகதே3ஶ: தர்ம: (எம்பார்ஜீயர் அரும்பத3விளக்கம்).

(3) அடி - திருவடிஸம்ப3ந்த4மாகிற தா3ஸ்யம், ஏன் - கர்த்ருவாசகமான அஸ்மத்ப்ரத்யயம். அடியேன் - தா3ஸ்யமுடையவன்(எம்பார்ஜீயர் அரும்பத3விளக்கம்).

பக்கம் - 40

(1) மூதலிக்கிறார் - ஒப்புவிக்கிறார்(எம்பார்ஜீயர் அரும்பத3விளக்கம்).

பெரியஜீயர் வ்யாக்2யாநத்தில் உபாயவைப4வப்ரகரணத்தின்
குறிப்புகள் முடிந்தன

அண்ணுவப்பங்கார்ஸ்வாமிவ்யாக்₂யாநம் - குறிப்புகள்

பக்கம் - 44

(1) யோக₃ஸித்₃த்₄யதி₄கரணந்யாயம் - ஜ்யோதிஷ்டோமம், த₃ர்ஶபூர்ணமாஸம் என்பவை ஸர்வப₂லங்களுக்கும் ஸாத₄நமாயிருந்தாலும் குறிப்பிட்ட ப₂லத்துக்காக அநுஷ்டி₂க்கப்படும்போது அதற்கு மட்டுமே ஸாத₄நமாகின்றன. ஒருதடவை அநுஷ்டி₂க்கப்பட்டால் அவை எல்லாப்பலங்களை-யும் கொடுக்கமாட்டா. ஸர்வப₂லஸாத₄நமாக ஓதப்பட்ட கர்மமானது ஸக்ருத்ப்ரயோக₃த்தில் ஸர்வப₂லஸாத₄நமாகாது என்பது இந்த அதி₄கரணந்யாயமாகும்.

(2) 'விதி₄ர்வா த₄ாரணவத்'ந்யாயம் - அநுவாத₃ம் போலுள்ள வாக்யத்தில் வேறு ப்ரமாணங்களால் அறியப்படாத அர்த்த₂ம் சொல்லப்பட்டால் அந்த அர்த்த₂த்துக்கு விதி₄யே(அஜ்ஞாதஜ்ஞாபநமே) கொள்ளப்படவேணும் என்பது ந்யாயம். ப்ரபத்திக்கு தே₃ஶாதி₃நியமங்களில்லை என்னுமர்த்த₂ம் ப்ரஸித்₃தி₄யைக்காட்டும் 'ஹி'ஶப்₃த₃த்தைக்கொண்டுள்ள ப₄ரத்₃வாஜஸம்ஹிதாவசநத்திலிருந்து தெரிகிறது. இந்த ந்யாயத்தால் அந்த அர்த்த₂த்துக்கு விதி₄த்வமே வருகிறது.

பக்கம் - 45

(1) ஸ்வரூபம் அறியப்பட்டால்தான் அதுவிஷயமாக ஓரிடத்தில் ஏதோ ஒரு அம்ஶம் மட்டும் நிஷேதி₄க்கப்பட முடியும்.

(2) இன்னொன்றின் ஸம்ப₄வத்தாலும், லக்ஷ்யேதரத்தின் ஸத்₃ப₄ாவத்தாலும் விஶேஷணம் ப்ரயோஜநமுடையதாகிறது.

பக்கம் - 47

(1) விப₄ாக₃த்தையுடைய நிர்த்த₄ாரணத்துக்கு ஆஶ்ரயமான ப்ராதிபதி₃கத்தின்மேல் பஞ்சமீ-விப₄க்தி வரும். 'மாது₂ரா: பாடலீபுத்ரகேப்₄ய: ஸுகுமாரா ஆட்₄யதராஶ்ச'.

பக்கம் - 48

(1) விஷயாபேக்ஷையுள்ள ஸ்வப₄ாவத்துக்கு அருகிலுள்ள ஸம்ப₃ந்தி₄களே விஷயங்களாக ஆகிறார்கள் என்பதே இந்த ந்யாயம்.

பக்கம் - 49

(1) மஹாப்ரகரணந்யாயம் - முதன்முதலில் தொடங்கப்பட்டதற்கு அநுகு₃ணமாகவே மேல்வரும் விஷயங்களைச்சொல்லவேணும்.

(2) பரமப்ரக்ருதவாசியாமிறே - முதன்முதலில் தொடங்கப்பட்டதைக்குறிக்குமிறே.

பக்கம் - 50

(1) ஸ்த்ரீலிங்க₃புல்லிங்க₃ஶப்₃த₃ங்களின் ஸஹப்ரயோக₃த்தில் புல்லிங்க₃ஶப்₃த₃மே நிற்கிறது; அவ்விரண்டு ஶப்₃த₃ங்களுக்கும் ஸ்த்ரீத்வபுருஷத்வங்களைத்தவிர வேறு வைஷம்யமில்லையாகில்.

பக்கம் - 51

(1) க்ரியையை விஷயமாகக்கொண்ட லக்ஷணம்(அடையாளம்) அல்லது ஹேது என்ற அர்த்த₂த்தையுடைய த₄ாதுவின்மேலுள்ள 'லட்'டுக்கு 'ஶத்ரு', 'ஶாநச்' என்ற ஆதே₃ஶங்கள் வரும்.

(2) பூர்வோக்தந்யாயம் - வித்₄யநுஷ்ட₂ாநயோ: பரஸ்பராபேக்ஷாந்யாய:(விதி₄க்கும் அநுஷ்ட₂ா-நத்துக்கும் பரஸ்பராபேக்ஷையுள்ளது என்பது ந்யாயம் - பக்கம் 50)

(3) ரத்நகரீஷஸமாவேஶந்யாயம் - ரத்நத்தையும், சாணகத்தையும் சேர்த்துவைத்தலாகிற ந்யாயம். ப்படிச்சேர்த்துவைத்தலானது ரத்நத்தின் உத்கர்ஷத்தைக்காட்டுகிறது.

பக்கம் - 52

(1) அங்க₃லக்ஷணம் - நியமேந உபாதே₃யம் ஹி அங்க₃ம்.

பக்கம் - 54

(1) பரஸ்பரவிரஹப்ரயுக்தவ்யதிரேகவ்யபி₄சாரம் - க்ஷத்ரியத்வம், பும்ஸ்த்வம் என்ற இவற்றில் ஏதேனுமொன்று இல்லாமலிருக்குமிடம் வ்யதிரேகஸ்த₂லமாகும். அப்படிப்பட்ட ஸ்த₂லமான ஸ்த்ரீஶூத்ராதி₃களிடத்திலும் ஶரணாக₃தி உள்ளது. அப்படி அவஶ்யபூ₄தர்களான (ப்ரயோஜக-த₄ர்மரஹிதர்களான) இவர்களிடத்தில் ஶரணாக₃தி இருத்தலானது வ்யபி₄சாரமாகும்.

(2) அநுக₃மம் - ஒற்றுமை. ஏதோவொரு விதத்தில் ஒற்றுமையைக்கற்பித்தலானது கௌ₃ரவமாகும் (ஆயாஸஸாத்₄யமாகும்).

(3) இங்கே நியமரஹிதையான ப்ரபத்தி ஸூசிதை.

(4)விருத்₃த₄வசநம் இல்லாமையாலே - 'ருசிக்கு மேற்பட வேறு தகுதிகள் வேணும்' என்று கூறும் விருத்₃த₄வசநம் இல்லாமையாலே.

(5) ப்₃ரஹ்மாஸ்த்ரத்தினுல் பண்ணப்படும் ப₃ந்த₄மானது மற்றொரு ப₃ந்த₄த்தை ஸஹிப்பதில்லை.

இது ப்3ரஹ்மாஸ்த்ரப3ந்த4-அந்யப3ந்த4-அநுவர்த்தநந்யாயமாகும்.
(6) ப்ரபத்தி அநுபாயமாம் - த்3ரௌபதி3 பண்ணின நாமஸங்கீர்த்தநமாகிற உபாயாந்தரத்தை அவள் பண்ணின ப்ரபத்தியானது ஸஹியாதபடியாலே அவளுடைய அந்த ப்ரபத்தி அநுபாயமாம்.
(7) வஸ்த்ரமாகிற ப2லம் ப்ரபத்தியினால் ஸித்3தி4யாதபடியால் வைக2ட்யம் (= பொருந்தாமை) வரும்.
(8) ஆநந்த3மயனிடம் ஜீவனுக்கு ஆநந்த3ஸம்ப3ந்த4த்தைக்கூறுகிறது ஶாஸ்த்ரம். தஸ்மாத் ஆநந்த3-மய: ஜீவாத3ந்ய: என்றர்த்த2ம். 'தஸ்மாத்' என்ற ஹேதுவாசகஶப்3த3ம் ஸூத்ரத்திலில்லை.

பக்கம் - 55

(1) ப்ரபத்தித்வஸாமாந்யத்தாலே - பொதுவிலே இன்னொருவனைப்பற்றினபடியாலே.
(2) விதி4நிஷேத4ங்கள் - ஸம்ப4வ-அஸம்ப4வங்கள்.
ஏகவிஷயத்திலே அநுபபந்நமாகையாலே ...விஷயம் - அது இல்லாதவிடம் ப்ரபத்திக்கு விஷயமன்று என்று ப4க3வானுகிற ஏகவிஷயத்திலே கொள்ளுதல் அநுபபந்நமாகையாலே அவனுடைய பரத்வம், வ்யூஹம்,விப4வம்,அந்தர்யாமித்வம், அர்ச்சை என்ற ப்ரகார-பே4த3ங்களையிட்டே இவ்விரண்டையும் கொள்ளவேணும்.

பக்கம் - 56

(1) கு3ணபூர்த்த்யநாகலநஶங்கையைப்பரிஹரிக்கிறார் - பரத்வவ்யூஹவிப4வாந்தர்யாமித்வங்களில் உள்ள கு3ணபூர்த்தியை அறியாதவர்கள் ஆவார்கள் என்ற ஶங்கையைப்பரிஹரிக்கிறார்
(2) உத்பத்திவாக்யம் - ப்ரபத்தியைச்செய்யும்படி விதி4க்கும் வாக்யம்

பக்கம் - 57

(1) லிங்க3ஸந்நிதி4களாலே ...விஶ்ராந்தை :- லிங்க3ஸந்நிதி4கள் - லிங்க3மும், ஸந்நிதி4யும். லிங்க3ம் - ஸாமர்த்2யம். இது ஒரு ப்ரமாணமாகும். இது ஶப்3த3ஸாமர்த்2யம், அர்த்த2ஸாமர்த்2யம் என இருவகைப்படும். 'பூர்ண'ஶப்3த3த்தின் அஸங்கோசமானது இந்த ஶ்ருதியை அர்ச்சாவதாரம் வரையில் கொண்டு செல்லுகிறது. இதுவே 'பூர்ண'ஶப்3த3த்தின் ஸாமர்த்2யமாகும். ஆக, 'பூர்ண'ஶப்தஸாமர்த்2யம் என்பதே லிங்க3மாகும். இந்த லிங்க3மானது ப்ரக்ருதஶ்ருதி அர்ச்சாவதாரத்தில் விஶ்ராந்தியடைகிறது என்று காட்டும் ப்ரமாணமாகும். வேத3-இதிஹாஸ-புராண-ஸ்ம்ருதிகளின் அர்த்த2ங்களைக்காட்டுவதற்கு ஶ்ருதி, லிங்க3ம், வாக்யம், ப்ரகரணம், ஸ்தா2நம், ஸமாக்2யை என்று ஆறு ப்ரமாணங்கள் உள்ளன.
இந்த உபநிஷத்3வாக்யத்தில் 'பஞ்சப்ரகாரோऽஹம்' (வி.ஸம்) (நான் ஐந்து நிலைகளில் இருக்கிறேன்) என்ற ஸங்க்2யைக்கு ப்ரத்யபி4ஜ்ஞை(அதுவே இது என்ற ஏகத்வஜ்ஞாநம்) வருகிறது. இந்த ப்ரத்யபி4ஜ்ஞையே அர்த்த2ஸாமர்த்2யமாகும். இந்த அர்த்த2ஸாமர்த்2யமாகிற லிங்க3த்தால் இந்த உபநிஷத்3வாக்யத்தில் 'பஞ்சப்ரகாரோऽஹம்' என்று பாஞ்ராத்ரத்தில் சொல்லப்பட்ட ப4க3வானுடைய பரத்வாதி3களான ஐந்து நிலைகளே காட்டப்படுகின்றன என்று தெளிவாகிறது.
ஸந்நிதி4 - அருகாமை. ஸந்நிதி4 என்பது ப்ரமாணம் காட்டும் அர்த்த2த்தை அது யுக்தமே என்று நிர்ணயிக்கும் ஜ்ஞாநமாகும். உத்தரோத்தர-ஆதி4க்யப்ரதிபாத3நம் என்பது இங்குள்ள ஸந்நிதி4யாகும். அது முதல் நிலைகள் நாலையும் காட்டினும் ஐந்தாவது நிலைக்கு ஆதி4க்யத்தைக்காட்டுகிறது. ஶப்3த3ஸாமர்த்2ய-அர்த்த2ஸாமர்த்2யங்களாகிற லிங்க3ங்களால் காட்டப்பட்ட அர்ச்சாவதாரவிஶ்ராந்தியானது யுக்தமே என்று இந்த ஜ்ஞாநம் காட்டுகிறது.
(2) ஸந்த3ர்ப்ப4த்திலே - வாக்யத்திலே.

பக்கம் - 58

(1) ஸ்வீகாராபேக்ஷிதங்கள் - ஸ்வீகாரத்துக்கு அபேக்ஷிதங்கள்
(2) ப்ரகாஶஸாந்த்3ரவிவக்ஷையாலே - ப்ரகாஶாதி4க்யவிவக்ஷையாலே
(3) ப2லோபத4ாநம் - ப்ரயோஜநத்தையடைதல்

பக்கம் - 61

(1) நிஸ்தரங்க3ார்ணவோபம: - அலையற்ற கடலையொத்தவன்
த்4யாயிநாம் தாபஶாந்தயே - த்4யாநிப்பவர்களின் வெப்பத்தை ஆற்றுவதற்காக
(2) ரங்க3சந்த்3ரன் என்ற பெயருடையதாய், (உன் எதிரே) நிற்பதாய், மலர்ந்த தாமரைப்-பூக்களையுடையதான குளத்தை(ப்பருகு).

அண்ணவப்பங்கார்ஸ்வாமிவ்யாக்யானம் - குறிப்புகள்

பக்கம் - 62

(1) 'மீலாத்' என்கிற பஞ்சமீ 'ல்யப்லோபே பஞ்சமீ'. 'பஞ்சமீவிதானே ல்யப்லோபே கர்மண்யுபஸங்க்யாநம்' (மஹாபாஷ்யே 2-3-28ல் உள்ள வார்த்திகம் 1). 'ப்ராஸாதமாருஹ்ய ப்ரேக்ஷதே' என்பது 'ப்ராஸாதாத்ப்ரேக்ஷதே' என்று வ்யவஹரிக்கப்படும். அவ்வாறே இங்கும் 'மீலமநுஸந்தாய ஜடீபூயதே'(மீலத்தை அநுஸந்தித்து ஜடர்களாகிறார்கள்) என்ற அர்த்தத்தில் 'மீலாஜ்ஜடீபூயதே' என்று வந்துள்ளது.

(2) 'அபூததத்பாவே க்ருப்வஸ்தியோகே ஸம்பத்ய கர்த்தரி ச்வி:'(பாணிநி 5-4-50). விகாரரூபமில்லாத காரணமானது(ப்ரக்ருதியானது) விகாரரூபமாக ஆதலே அபூததத்பாவ-மாகும். ஸம்பத்தியாகிற (அடைதலாகிற) க்ரியையின் கர்த்தாவே ஸம்பத்யகர்த்தாவாகும். ஸம்பத்தி என்ற க்ரியையின் கர்த்தா என்ற அர்த்தத்திலுள்ள ப்ராதிபதிகத்தின்மேல் அபூததத்பாவம் அறியப்படும்போது க்ரு, பூ, அஸ் என்ற தாதுக்களின் ஸம்பந்தமிருந்தால் 'ச்வி'ப்ரத்யயம் வரும். இங்கு அஜடா: ஜடா: ஸம்பத்யந்தே, தே பவந்தி, ஜடீபவந்தி. அஜடர்கள் (ஸர்வஜ்ஞர்கள்) ஜடத்வத்தை (மோஹத்தை) அடைகிறார்கள், அவர்கள் அப்படி ஆகிறார்கள், ஜடயாக ஆகிறார்கள்.

(3) ஏகவசநம் ப்ரயுக்தம் - மூலத்தில் (வா-39) ல் 'அர்ச்சாவதாரம்' என்று ஏகவசநம் ப்ரயோகிக்கப்பட்டுள்ளது.

(4) லிங்கவசநங்கள் பிந்நங்களல்ல, தாழ்ந்ததல்லாத(=உயர்ந்த)வஸ்து சொல்லப்படும்போது, எங்கே உத்வேகம் தேவையில்லையோ அங்கே புத்திமான்களுக்கு உபமாநமே தூஷணம் செய்யப்போதுமானது. உபமேயத்தை ப்ரஸ்தாவிக்கவேண்டியதில்லை.

(5) மூலத்தில் (வா-39) 'பெருக்காறுபோலே விபவங்கள், அதிலே தேங்கின மடுக்கள்போலே அர்ச்சாவதாரம்' என்றுள்ளது. பெருக்காறு - நதியானது, அந்த்யாவயவியன்று, மடுவிலுள்ள நீரும் அந்த்யாவயவியன்று, மடுவிருந்து வாய்க்கால் வெட்டினால் இன்னொரு இடத்துக்கு ஜலம் பாயமுடியுமாகையால். எனவே இவற்றில் பெருக்கமும், தேக்கமும் கூடும். தார்ஷ்டாந்தி-கங்களாகக்காட்டப்பட்ட விபவமும், அர்ச்சையும் அந்த்யாவயவிகள். ஏனென்றால் அவை விக்ரஹவ்யக்திகள். எனவே இவற்றில் பெருக்கமும், தேக்கமும் கூடாதே! எனவே த்ருஷ்டாந்தவைஷம்யம் வருகிறதே என்று ஆக்ஷேபம்.

பரிஹாரம் :- அவதாரகுணங்களெல்லாம் அர்ச்சாஸ்தலங்களிலே பரிபூர்ணமாயிருக்கையாலும், அவதாரவிக்ரஹங்களை அர்ச்சாரூபேண பலவிடங்களிலும் பரிக்ரஹித்துக்கொண்டிருக்கை-யாலும் (அதிலே தேங்கின மடுக்கள் போலே) என்கிறது.

இந்த மாமுநிகளின் வ்யாக்யாநஸ்ரீஸூக்தியால் பரிஹாரம் ஸித்திக்கும் வழி :-

தேங்கின மடுவுக்குப்பூர்வகாலவர்த்தியாய்ப்பெருக்காறு உள்ளது. அர்ச்சாவதாரத்துக்குப்பூர்வகால-வர்த்தியாய் விபவாவதாரம் உள்ளது. தத்பூர்வகாலவர்த்தித்வே ஸதி தத்கதவஸ்துவிஶிஷ்டத்வம் என்பது த்ருஷ்டாந்தத்திலும், தார்ஷ்டாந்திகத்திலும் அநுகதமான பெருக்கமாகும். தேங்கின மடுவிலே உள்ள நீரைத்தன்னிடம் பூர்வகாலத்தில் கொண்டிருந்தது பெருக்காறு. இப்படிக்-கொண்டிருக்கையே ஆற்றின் பெருக்கமாகும். அர்ச்சாவதாரத்திலுள்ள குணங்களுக்கும் விக்ரஹத்துக்கும் ஸஜாதீயமான குணங்களையும், விக்ரஹத்தையும் தன்னிடம் கொண்டிருந்தது விபவாவதாரம். இப்படிக்கொண்டிருக்கையே விபவாவதாரத்தின் பெருக்கமாகும். ஆக, பூர்வ-காலத்தில் இருந்துகொண்டு உத்தரகாலத்திலுள்ளதற்கு ஸஜாதீயமானத்தைத்தன்னிடம் கொண்டிருத்தலானது விபவாவதாரத்தின் பெருக்கமாகும். எனவே பூர்வகாலத்தில் இருந்துகொண்டு உத்தரகாலத்திலுள்ள வஸ்துவுடன் கூடியிருத்தல் என்பது த்ருஷ்டாந்தம், தார்ஷ்டாந்திகம் இரண்டிலும் அநுகதமான பெருக்கமாகும். விபவாவதாரம் அந்த்யாவய-வியாயிருந்தாலும் இந்த விதத்தில் அதனிடம் பெருக்கம் கூடும்.

அடுத்து அர்ச்சாவதாரத்தையும் தேங்கின மடுவையும் ஆராய்வோம். த்ருஷ்டாந்தம் - தேங்கின மடு. தார்ஷ்டாந்திகம் - அர்ச்சாவதாரம். பெருக்காற்றுக்கு உத்தரகாலவர்த்தியாய்த்தேங்கின மடு உள்ளது. விபவாவதாரத்துக்கு உத்தரகாலவர்த்தியாய் அர்ச்சாவதாரம் உள்ளது. ததுத்தர-காலவர்த்தித்வே ஸதி ததேகதேஶகதிபயவஸ்துவிஶிஷ்டத்வம் என்பது த்ருஷ்டாந்த-தார்ஷ்டாந்திகங்களிலே அநுகதமான தேங்கினமையாகும்.

விளக்கம் :- பெருக்காற்றிலே உள்ள நீரின் ஒரு பகுதியைத்தன்னிடம் உத்தரகாலத்தில் கொண்டிருக்கிறது மடு. விபவாவதாரத்திலுள்ள குணங்களுக்கும் விக்ரஹத்துக்கும் ஸஜாதீய-

மான கு3ணங்களையும், விக்3ரஹத்தையும் தன்னிடம் கொண்டிருக்கிறது அர்ச்சாவதாரம். இப்படிக்-கொண்டிருக்கையே அர்ச்சாவதாரத்தின் தேக்கமாகும். ஆக, உத்தரகாலத்திலிருந்துகொண்டு பூர்வகாலத்திலுள்ளதன் ஏகதே3ஶத்தை (ஒருபகுதியை)த்தன்னிடம் கொண்டிருத்தல் என்பது த்3ருஷ்டாந்தம், தா3ர்ஷ்டாந்திகம் இரண்டிலும் அநுக3தமான தேக்கமாகும். இந்த வித4த்தில் அந்த்யாவயவியான அர்ச்சாவதாரத்துக்கும் தேக்கம் கூடும்.

(6) அபி4வ்யக்திக்கு(தோற்றத்துக்கு) அவச்சே2த3கங்களாக(வ்யாவர்த்தகங்களாக, நிரூபகங்களாக) இருப்பதால் ஸமக்3ரங்கள்(நிறைந்தவைகள்). அதாவது அர்ச்சாவதாரவ்யக்திதோறும் இந்த ஸௌஶீல்யஸௌலப்4யாதி3கு3ணங்கள் நிலைபெற்றுள்ளன, ஸாஸ்நாதி3மத்த்வமாகிற கோ3த்வ-மானது கோ3வ்யக்திதோறும் நிலைபெற்றிருக்கிறப்போலே.

பக்கம் – 63

(1)விதி4நிஷேத4ங்களினுல் முறையே ப்ரவ்ருத்திநிவ்ருத்திகள் எந்த ப்ரமாணத்தால் உபதே3ஶிக்கப்படுகின்றனவோ, புருஷர்களுக்கு அந்த ப்ரமாணமானது ஶாஸ்த்ரம் என்று சொல்லப்படுகிறது.

(2) அர்த்த2பா3த4த்தாலும் அபி4தா4நஶக்திவைகல்யத்தாலுமன்று – ப்ரமாணாந்தரஸித்3த4ங்களான அர்த்த2ங்களால் ஶாஸ்த்ரஸித்3த4ங்களான அர்த்த2ங்களுக்கு பா3த4ம் வருகையாலும், தெரிவிக்கும் ஶக்தியானது ஶாஸ்த்ரங்களுக்குக்குறைவாக இருக்கையாலுமன்று.

(3) து3ர்வாஸனையாவது – ஶாஸ்த்ரஜந்யமான ஜ்ஞாநத்துக்கு விபரீதமான விஷயத்தைக்கொண்ட ஜ்ஞாநத்தை உண்டாக்கக்கூடிய ஸம்ஸ்காரம்(பதிவு).

(4) அதினுடைய ப2லமாவது – ஶாஸ்த்ரஜந்யஜ்ஞாநத்தை மூலமாகக்கொண்ட ஶாஸ்த்ரார்த்தா2-நுஷ்டா2நத்துக்கு ப்ரதிப3ந்த4கமாயுள்ள விபரீதஜ்ஞாநமாகிற ப2லத்தை உண்டாக்குகை.

(5) உபாயத்வம் – இவனுடைய பரிசர்யையினுல் உண்டான ப்ரீதிக்கு ஆஶ்ரயமாயிருக்கை.

பக்கம் – 65

(1) அபி4நயிக்கிருர் – நன்கு வரவழைத்துக்காட்டுகிருர்.

(2) தே3ஶாதி3நியமங்களின் தனித்தனியான நிஷேத4த்தின் ஜ்ஞாநத்தால் விளக்கப்பட்ட விஶேஷாந்தரத்துக்கு வ்யாவர்த்தகமன்று – ஏவகாரம். அதாவது அஜ்ஞர், ஜ்ஞாநாதி4கர், ப4க்திபரவஶர் என்று அதி4காரிகள் மூன்று வகையினராக உளர் என்ற விஶேஷாந்தரத்துக்கு 'விஷயநியமமே' என்ற ஏவகாரம் வ்யாவர்த்தகமன்று.

பக்கம் – 66

(1) அங்க3மான கர்மத்துக்குக்கீழே(வா-25ல்) சொன்ன வ்யவஸ்தை2 அதன்மூலம் அங்கி3யான ப4க்திக்கும் வருமே.

பக்கம் – 67

(1) 'ஜ்ஞா'தா4த்வர்த்த2-அவைரூப்யமும் வ்யஞ்ஜிதம் :- 'ஜ்ஞா' என்ற தா4துவின் அர்த்த2மானது 'அஜ்ஞர்', 'ஜ்ஞாநாதி4கர்' என்ற இரண்டிடத்திலும் ஒரே வித4மாகக்கொள்ளப்படுகிறது. அதாவது இரண்டிடத்திலும் 'ஶக்தியும்' லக்ஷிதார்த்த2மாகக்கொள்ளப்பட்டுவிடுகிறது. எனவே 'ஜ்ஞா' தா4த்வர்த்த2த்துக்கு வைரூப்யமில்லை என்பது காட்டப்பட்டது.

(2) கைங்கர்யரூபப்ரவ்ருத்த்யநர்ஹத்வத்தின் வ்யுதா3ஸம்(நிவ்ருத்தி) விவக்ஷிக்கப்பட்டது. அதாவது அத்3ருஷ்டத்தை வழியாகக்கொண்ட ஸாத4நரூபமான ப்ரவ்ருத்தியைச்செய்வதற்கு இவன் அநர்ஹனேயொழிய, த்3ருஷ்டமான கைங்கர்யரூபமான ப்ரவ்ருத்தியைச்செய்வதற்கு அர்ஹனே-யாவான். இவனுடைய அத்யந்தபாரதந்த்ர்யமானது இவன் செய்யவேண்டிய கைங்கர்யங்களைத்-தவிர்க்கமாட்டாது.

(3) ஸ்வாபேக்ஷிதப்ரத3ஞன ப4க3வானுடைய அத்யந்த-அபி4மதத்துக்கு அந்யம் ஸ்வீயோபாய-ப்ரவ்ருத்தி. தாத்3ருஶ-உபாயப்ரவ்ருத்திரஹிதஜாதீயத்வம் – யதா2வஸ்தி2த-ஆத்மஸ்வபா4வம். ஸ்வாபேக்ஷிதம் – பரார்த்த2கைங்கர்யம். ஸ்வாபேக்ஷிதப்ரத3ன் – ப4க3வான். ஸ்வாபேக்ஷிதப்ரத3ஞன ப4க3வானுக்கு அத்யந்தாபி4மதம் – ஸ்வப்ரவ்ருத்திநிவ்ருத்தி(விலக்காமை). ஸ்வாபேக்ஷிதப்ரத3-ஞன ப4க3வானுக்கு அத்யந்தாபி4மதமான விலக்காமைக்கு அந்யம் – தன்னுடைய உபாய-ப்ரவ்ருத்தி. ஸ்வாபேக்ஷிதப்ரத3-அத்யந்த-அபி4மதாந்யஸ்வீயோபாயப்ரவ்ருத்திகஜாதீய: – ஸ்வாபே-க்ஷிதப்ரத3ஞன ப4க3வானுடைய அத்யந்தாபி4மதத்துக்கு அந்யமான ஸ்வீயோபாயப்ரவ்ருத்திரஹித-மான ஜாதீயன் – யதா2வஸ்தி2த-ஆத்மா. தஸ்ய பா4வ: – தாத்3ருஶோபாயப்ரவ்ருத்திரஹிதஜாதீயத்வம்

- அப்படிப்பட்ட உபாயப்ரவ்ருத்தியற்ற ஜ்ஞாதியனாயிருக்கை. இதுவே யதாவஸ்தித-ஆத்மஸ்வபாவம். அதாவது, ஸ்வாபேக்ஷிதப்ரதனான பகவானுடைய அத்யந்தாபிமதமான விலக்காமைக்கு அந்யமான ஸ்வீயோபாயப்ரவ்ருத்திரஹிதமான ஜ்ஞாதியனாயிருக்கை யதாவஸ்தித-ஆத்மஸ்வரூபமாகும்.

(4) பராதீநமான தன்னுடைய க்ருதிஸாத்யமான ஸாதநத்தால் ப்ரீதனான பரனுக்கு அதீநமான பலத்தையுடைமை உபாஸகாதிகளின் பாரதந்த்ர்யம். பராதீநமான ஸ்வவ்யாபாரத்துக்கு அநதீநமான ஸாதநத்வத்தை உடைமையுடன் கூடப்பரனுக்கு அதீநமான பலத்தையுடைமை - ஶரணாகதனுடைய பாரதந்த்ர்யம். எனவே ஶரணாகதனுடைய பாரதந்த்ர்யம் விலக்ஷணமானது. ஸ்வவ்யாபாராதீநமான ஸாதநத்தையுடையவன் - உபாஸகன். ஸ்வவ்யாபாரத்துக்கு அநதீநமாயுள்ள எம்பெருமானுடைய நினைவாகிற ஸாதநத்தையுடையவன் ஶரணாகதன். ஶரண்யனான ராமபிரானுடைய நினைவில்லாமற்போனதால்தான் பரதனுடைய ஶரணாகதி பலிக்கவில்லை. பரதனுடைய வ்யாபாரத்துக்கு அதீநமாக எம்பெருமானுடைய நினைவு இருக்கவில்லை. ஸ்வப்ரவ்ருத்தியினால் பகவானை நிர்ப்பந்திப்பவன் உபாஸகன், நிர்ப்பந்தியாதவன் ஶரணாகதன். எனவே ஶரணாகதர்களுக்குள்ளது அத்யந்தபாரதந்த்ர்யமாகும்.

(5) ஸ்வாபேக்ஷிதப்ரதனான பகவானுடைய அத்யந்தாபிமதிக்கு அந்யமானது தன்னுடைய உபாயப்ரவ்ருத்தி. அந்த உபாயப்ரவ்ருத்தியற்றிருக்கை ஆத்மஸ்வரூபமாகும். எனவே ஆத்மஸ்வரூபத்தில் அநுப்ரவிஷ்டம்(உள்ளடங்கிக்கிடப்பது) பகவானுடைய அத்யந்த-அபிமதி(மிகுந்த விருப்பம்). அந்த அத்யந்தாபிமதிக்கு அஜநகங்கள் உபாயாந்தரங்கள். அதாவது பகவானுடைய அத்யந்தாபிமதியை உண்டாக்காதவைகள் உபாயாந்தரங்கள். ததநநுஷ்டாந-ப்ரயோஜகமான - அவைகளை அநுஷ்டியாமல் இருப்பதற்குக்காரணமான. அதாவது உபாயாந்தரங்கள் ஸ்வரூபவிருத்தம் என்று பரித்யஜிக்கைக்கீடான ஜ்ஞாநபூர்த்தியையுடையவர்கள் ஜ்ஞாநாதிகர் என்றால், ஆத்மஸ்வரூபத்தில் அநுப்ரவிஷ்டமான பகவதத்யந்தாபிமதிக்கு அஜநகங்கள் உபாயாந்தரங்கள் என்று அவற்றை அநுஷ்டியாமல் விடுவதற்குக்காரணமான ஜ்ஞாநபூர்த்தியை உடையவர்கள் ஜ்ஞாநாதிகர் என்று பொருள்.

(6) விஷயாந்தரப்ராவண்யமாகிற பகவத்வைமுக்யமானது ஸம்ஸாரிகளுக்குள்ள ஸ்வபாவமாகும். இந்த ஸ்வபாவம் ஸர்வஸம்ஶயங்களைப்போக்கடிப்பவர்களான வ்யாஸாதிரிஷிகளிடத்திலில்லை என்பது பூர்வபக்ஷம், ஸித்தாந்தம் என்ற இரண்டு பக்ஷங்களுக்கும் பொதுவாகும். பூர்வபக்ஷம் - வ்யாஸாதிரிஷிகளை ஆழ்வார்களைக்காட்டிலும் தாழ்ந்தவர்களாகக்கருதவியலாது, அவர்கள் ஜ்ஞாநஶக்தியுடைமையாகிற தங்கள் அதிகாரத்துக்குச்சேர்ந்த பக்தியோகத்தில் இழிதல் தவறன்றாகையால்.

ஸித்தாந்தம் - ஆழ்வார்களைக்காட்டிலும் வ்யாஸாதிரிஷிகள் தாழ்ந்தவர்களேயாவர், ஆழ்வார்களுக்குள்ள பக்திபாரவஶ்யம் அவர்களுக்கில்லாதபடியால்.

ஸம்ஸாரிகளுக்குள்ள விஷயப்ராவண்யமாகிற பகவத்வைமுக்யமானது வ்யாஸாதிகளிடையே இல்லை. அந்தத்தன்மையால் அவர்கள் ஸம்ஸாரிகளைக்காட்டிலும் உயர்ந்தவர்களே. இது பூர்வபக்ஷம், ஸித்தாந்தம் இரண்டுக்கும் பொதுவான அர்த்தமாகும். இந்த உயர்த்தி அவர்களுக்கு இருப்பதால் ஆழ்வார்களுக்குத்துல்யமான உயர்த்தி அவர்களுக்கு இருப்பதாகக்கொள்ள முடியாது. ஶரணவரணத்துக்கு ப்ரதிபந்தகமான ப்ராரப்தாதீநவாஸனை அவர்களிடம் இருக்கிறபடியால். பக்திவிரஹத்துக்கும், விளம்பாக்ஷமத்வத்துக்கும் கூட இந்த வாஸனையே ஹேதுவாகும். இப்படிப்பட்ட ப்ரதிபந்தகமும், தத்கார்யங்களான ஶரணவரணாபாவமும், பக்திவிரஹமும் (பக்திபூமாவிரஹமும்), விளம்பாக்ஷமத்வமும் ஆழ்வார்களிடம் இல்லை. எனவே அவர்களை வ்யாஸாதிரிஷிகளைக்காட்டிலும் உயர்ந்தவர்களாகக்கருதக்குறையில்லை.

பக்கம் - 68

(1) எம்பெருமான் (நம்மைக்கைவிடாமல் ரக்ஷித்தவாகிற) குணமுடையவன் என்ற உறுதியானது மஹாவிஶ்வாஸமாகும். இந்த மஹாவிஶ்வாஸத்தை முன்னாகக்கொண்டதாக உபாயவரணரூபிணையான ப்ரபத்தி உள்ளது. மேலும் பகவானே உபாயம் என்ற அத்யவஸாயரூபமாகவும் அந்த ப்ரபத்தி உள்ளது.

(2) ரக்ஷித்தவாகிற குணமுடையவன் பகவான் என்ற அத்யவஸாயரூபமாக மஹாவிஶ்வாஸம் உள்ளது. அந்த அத்யவஸாயமே 'மஹாவிஶ்வாஸ'ஶப்தத்தால் வ்யவஹரிக்கப்படுகிறது.

(3) ஸ்வப்ரவ்ருத்திநிவ்ருத்தியின் அத்4யவஸாயரூபம் - ஸ்வஸம்ப3ந்த4த்யாக3ம்.தத்பூர்வகமான ப4க3வதே3க-உபாயத்வ-அத்4யவஸாயமன்றோ ப4ரந்யாஸமாகும். அதாவது, தன்னுடைய ஸம்ப3ந்-த4த்தை த்யஜித்தல் முன்னாக ப4க3வான் ஒருவனே உபாயம் என்று ஏற்படும் உறுதியே ப4ர-ந்யாஸமாகும்.

(4) அதிதே3ஶம் - ஓரிடத்திலிருப்பதை இன்னொரு இடத்தில் கொணர்தல். ஸ்ரீவசநபூ4ஷணவ்யாக்2யானத்தின் உபோத்3கா4தத்தில் நாத2முநிகள் தொடக்கமான பூர்வாசார்யர்களுக்கு இருந்த ஶாஸ்த்ரநைபுண்யமானது பிள்ளைலோகாசார்யருக்கும் இருந்ததாகச்சொல்லப்பட்டது. இதுவே அதிதே3ஶமாகும்.

(5) ப4க3வானுக்கு விஶேஷமான விருப்பத்தை உண்டாக்காதவைகளாகையாலே அவனுக்கு விஶேஷமான விருப்பத்தை உண்டாக்கத்தகுந்ததாயுள்ள ஆத்மஸ்வரூபத்தினுடைய அப4ாவத்தை உண்டாக்குமவைகள் உபாயாந்தரங்கள்.

(6) மந்த்3ாதி4காரிப்ரபத்தியில் சொன்னபடி.

பக்கம் - 69

(1) நீட்டுதல், முடக்குதல் முதலியவற்றுக்கு ஶக்தியற்றவைகளான.

பக்கம் - 70

(1) வாஸநாரூபேண - ஸாக்ஷாத்காராப4ாவரூபேண

(2) ஸ்வரூபவிருத்3த4த்வஜ்ஞாநத்துடன் கூடின ஶக்தனை அதி4காரியாகக்கொண்டது ப்ரபத்தி என்று கொண்டால் கு3ருபாயமான ப4க்தியோக3மானது ஸ்வரூபவிருத்3த4த்வஜ்ஞாநரஹிதனான ஶக்தனை அதி4காரியாகக்கொண்டதாக ஆகிறபடியால் அந்த கு3ருபாயவிதி4க்கு ஸார்த்த2க்யம் ஸித்3தி4க்கும்.

(3) ப்ரபத்தி அஶக்தனை அதி4காரியாகக்கொண்டது என்னும்போது ப4க்திக்கு அங்க3மான கர்மயோக3த்தில் ஶக்தனும், ப4க்தியில் அஶக்தனுமானவனுக்கும் ப்ரபத்தியில் அதி4காரம் வருகை-யாலே ப4க்திக்கு அங்க3மான கர்மயோக3த்தை விதி4க்கிற விதி4க்கு வையர்த்2யம் ப்ரஸங்கி3க்-கிறது. அதைப்பரிஹரிப்பதற்காக ஸ்வரூபஜ்ஞாநத்தையுடைய அஶக்தனுக்கு ப்ரபத்தியில் அதி4காரம் என்று கொண்டால் ப4க்திக்கு அங்க3மான கர்மயோக3விதி4க்கு உபாயாந்தரஸ்வரூப-விருத்3த4த்வஜ்ஞாநரஹிதனும், ப4க்திக்கு அங்க3மான கர்மயோக3த்தில் ஶக்தனும், ஆயின் ப4க்தியில் அஶக்தனுமுள்ளவன்விஷயம் என்று கிடைக்கிறபடியால் அந்த விதி4க்கு ஸார்த்த2க்யம் ஸித்3தி4க்கும்.

(4) விதி4க்கு விஷயமான அஜ்ஞாநம் - கொள்ளப்படும் அஜ்ஞாநம் - முக்திநிலையிலுள்ள ஜ்ஞாநத்தின் அப4ாவம். நிஷேத4த்துக்கு விஷயமான அஜ்ஞாநம் - தள்ளப்படும் அஜ்ஞாநம் - உபாயாந்தராநுஷ்டா2நத்துக்கு அபேக்ஷிதமான ஜ்ஞாநத்தின் அப4ாவம்.

பக்கம் - 71

(1) அநுஸந்தா4நத்துக்கு விஷயமான அஜ்ஞாநத்தின் அபா3த4த்தாலே அநுஸந்தா4நரூபமான ஜ்ஞாநத்தினுடைய ஸ்வத:ப்ராமாண்யஸ்வபா4வத்துக்கு அநுரூபம் என்றபடி. ஸ்வத:ப்ராமாண்யம் - இயற்கையில் உண்மையைக்காட்டும் தன்மை. எனவே, தமக்கு உபாயாந்தராநுஷ்டா2நத்துக்கு உபயுக்தமான ஜ்ஞாநஶக்திகளில்லை என்ற அஜ்ஞருடைய அநுஸந்தா4நமானது வாஸ்த-வார்த்த2விஷயகம்.

(2) அத்யந்தவிஷயாபா3த4மும் - அஜ்ஞாந-அநுஸந்தா4நத்தின் விஷயமான அஜ்ஞாநத்தின் அத்யந்த-அபா3த4மும் என்றர்த்த2ம். அதாவது, அஸ்மதா3தி4களுக்கு அஜ்ஞாநத்தின் பா3த4மானது அடியோடு இல்லை, அஜ்ஞாநமே பூர்ணமாக உள்ளது என்று பொருள்.

(3) அத்யந்தவிஷயபா3த4மும் - அஜ்ஞாநாநுஸந்தா4நத்தின் விஷயமான அஜ்ஞாநத்தின் அத்யந்தபா3த4மும் என்றர்த்த2ம். அதாவது, ஆழ்வார்களுக்கு அஜ்ஞாநத்தின் பா3த4மானது பூர்ணமாக உள்ளது, அவர்களிடம் அஜ்ஞாநமானது அடியோடு இல்லை என்று பொருள்.

(4) ஆழ்வார்கள் யாவரும் மயர்வற மதிநலமருளப்பெற்றவர்கள் என்று ப்ரமாணங்கள் கூறுகை-யாலே அவர்களுக்கு அஜ்ஞாநத்தின் வாஸனையும்(பதிவும்) இல்லை. எனவே அவர்களுடைய அஜ்ஞாநாநுஸந்தா4நமானது விஷயமாகிற அஜ்ஞாநத்தின் பா3த4த்தை உடையது. ஆகிலும் ஆகிஞ்சந்யத்தை(கைம்முதலில்லாமையை) த்3ருட4ப்படுத்துவதற்காக இந்த அநுஸந்தா4நம் அவர்களிடம் உள்ளது.

(5) அத்யந்தாகிஞ்சநத்வம் ஆத்மவஸ்துவுக்குள்ளது. அந்த அகிஞ்சநமான வஸ்துவின் நீசத்வத்தை

ஹேதுவாகக்கொண்டது ஆழ்வார்களின் அஜ்ஞாநாநுஸந்த4ாநம்.

விளக்கம் :- எவ்வளவு ஜ்ஞாநபூர்த்தி ஆழ்வார்களுக்கு இருப்பினுங்கூட ஆத்மவஸ்துவானது அகிஞ்சநமாக(கைம்முதலற்று) இருப்பதால் ப2லம் பெறுவதற்கு எம்பெருமானின் கைபார்க்க-வேண்டியிருக்கிறது. இப்படி ப4க3வானைத்தன்னுடைய யத்நம் கொண்டு அடையமுடியாம-லிருத்தலாகிற ஆகிஞ்சந்யமே ஆத்மாவின் நைச்யமாகும். இந்த நைச்யம் காரணமாக ஆழ்வார்களுக்கு அஜ்ஞாநாநுஸந்த4ாநம் வருகிறது. எவ்வளவு ஜ்ஞாநமிருந்தாலும் அது ப4க3வானை அடைய உபாயமாகாது. அவனருளே அவனையடைய உபாயமாகும். எனவே ப4க3வானை அடைவதற்கு உபாயமான ஜ்ஞாநமில்லாமையால் தங்களை அஜ்ஞர் என்று ஆழ்வார்கள் அநுஸந்தி4த்துக்கொள்ளுகிறார்கள். எனவே அவர்களுடைய அநுஸந்த4ாநமும் இந்த விதத்தில் யதார்த்த2ாநுஸந்த4ாநமேயாகும்.

(6) சென்றற்றதுகிடாய் - கைகழிந்துவிட்டது கிடாய்.

(7) மாசறுசோதியையுட்கொண்டு - மடலூர்தல் ஸ்வரூபத்துக்குச்சேராதாப்போலே ஸாத4நா-நுஷ்ட2ாநமும் ஸ்வரூபத்துக்குச்சேராது.

பக்கம் - 72

(1) 'என் நான் செய்கேன்' என்று ஒருதடவையே சொல்லப்பட்டிருந்தாலும் கூட, தனித்தனியே அந்தந்த ஹேதுக்களால் வரும் ஸாத4நாநுஷ்ட2ாநநிஷேத4ங்கள் இந்த நிஷேத4ங்களின் ப்ரதியோகி3கள் ப்ரஸங்கி3ப்பதால் கொள்ளப்படவேண்டியவைகளாகின்றன. அந்த ப்ரஸக்திதான் பூர்வபூர்வப்ரதிஷேத4ங்களிலிருந்து வருகிறது என்பதால் இப்படி மூன்று நிஷேத4ங்களையும் சேர்த்துக்காட்டுகிறார் மாமுநிகள்.

விளக்கம் :- அஜ்ஞாநத்தை ஹேதுவாகக்கொண்ட ஸாத4நாநுஷ்ட2ாநநிஷேத4ம், ஜ்ஞாநா-தி4க்யத்தை ஹேதுவாகக்கொண்ட ஸாத4நாநுஷ்ட2ாநநிஷேத4ம், ப4க்திபாரவஶ்யத்தை ஹேது-வாகக்கொண்ட ஸாத4நாநுஷ்ட2ாநநிஷேத4ம் என்ற மூன்று நிஷேத4ங்களும் ப்ரதியோகி3களான அஜ்ஞாநம், ஜ்ஞாநாதி4க்யம், ப4க்திபாரவஶ்யம் என்பவைகளின் ப்ரஸக்தியை முன்னுகக்-கொண்டவை. அந்த ப்ரஸக்திதான் பூர்வபூர்வப்ரதிஷேத4ங்களிலிருந்து வருகிறது. "சிறிய ஞானத்தன் ... இதனில் மிக்கோரயர்வுண்டே"(திருவாய். 1-5-7) என்ற ப்ரதிஷேத4த்திலிருந்து அஜ்ஞாநத்தின் ப்ரஸக்தி வருகிறது. 'எனதாவி யார் யானார்"(திருவாய். 2-3-4) என்ற ப்ரதி-ஷேத4த்தால் ஸ்வரூபபாரதந்த்ர்யத்தைப்பற்றின ஜ்ஞாநாதி4க்யத்தின் ப்ரஸக்தி வருகிறது. "ஏசறும் ஊரவர் கவ்வை தோழீ என் செய்யுமே"(திருவாய். 5-3-1) என்ற ப்ரதிஷேத4த்தால் ப4க்தி-பாரவஶ்யத்தின் ப்ரஸக்தி தெரிகிறது.

(2) அவரவர்களுடைய ஜ்ஞாநத்துக்கு வ்யதிரிக்தங்களான த்3ரவ்யங்கள் யாவற்றையும் ஶரீரமாகக்கொண்டிருக்கையும், ஸமஸ்தகல்யாணகு3ணத்மகத்வத்தால் வந்த ஒத்தார் மிக்கார் இல்லாத தன்மையும்.

பக்கம் - 73

(1) ஸாத4நாந்தரங்கள் ஸ்வரூபவிருத்3த4ங்கள் என்ற ஜ்ஞாநத்துக்கு ஹேது ஸாத4நப்ரவ்ருத்த்யநர்ஹமாயுள்ள ஆத்மாவின் யாத2ாத்ம்யத3ர்ஶநம்.

(2) ப4க3வத்3விஷயப4க்தியுடன் கூடவே சொல்லப்பட்ட ஸார்வஜ்ஞ்யமும், ப4க3வானை விஷயமாகக்கொண்டது.

(3) உத3ாஹரணவிஶேஷங்களில் இருப்பதாகக்காட்டினவிது.

(4) ஏதேனுமொரு விஶேஷணத்தையுடைய ஸாமாந்யம்.

(5) உத3ாஹரணமும், ப்ரமாணமும் - உத3ாஹரணப்ரமாணங்கள். ஜ்ஞாநாதி4க்யத்துக்கு உத3ா-ஹரணம் காட்டுமளவில் ஸ்வரூபயாத2ாத்ம்யஜ்ஞாநமாகிற விஶேஷத்தையுடைய ஜ்ஞாநா-தி4க்யமாகிற ஸாமாந்யத்துக்கு உத3ாஹரணம் காட்டினார் 'பூர்வாசார்யர்கள்' (வாக்யம் 43) என்று. ஜ்ஞாநாதி4க்யத்துக்கு ப்ரமாணம் காட்டுமளவில் ப4க3வத3நந்யஸாத்4யத்வஜ்ஞாநமாகிற விஶேஷத்தையுடைய ஜ்ஞாநாதி4க்யமாகிற ஸாமாந்யத்துக்கு ப்ரமாணம் காட்டினார் "தே3வே பரிப்3ருட4தயா வா விதி3தயா" என்று(வா-49). இப்படிக்காட்டினவிது ஸ்வரூபயாத2ாத்ம்யஜ்ஞாந-மாகிற விஶேஷமும், ப4க3வத3நந்யஸாத்4யத்வமாகிற விஶேஷமும் விவக்ஷிதங்கள் என்று தோற்றுகைக்காக.

(6) அஜ்ஞாநம் - அசித்தைப்பற்றிக்கிடக்கிறது. ஜ்ஞாநாதி4க்யம் ( ப4க3வத3நந்யஸாத்4யத்வ-

ஜ்ஞாநம்) – ஈஶ்வரனைப்பற்றிக்கிடக்கிறது. ப4க்திபாரவஶ்யம்('மதி3' – ஹர்ஷே, 'மநு' – அவ-பே3ாத4நே) – சித்தைப்பற்றிக்கிடக்கிறது. ப4க்திபாரவஶ்யமானது சித்தைப்பற்றி வரும் என்பதை விளக்குவோம். 'மதி3 – ஹர்ஷே' என்ற த4ாதுவின்மேல் கர்த்தா என்ற அர்த்தத்தில் 'ட3வி'ப்ரத்யயமும், ப்ரத2மைகவசநவிப4க்தியான 'ஸு'வும் சேர்ந்து 'ம்' என்றாகும். இப்போது இந்த மகாரமானது ஹர்ஷத்தையுடையவன் என்ற பொருளைக்காட்டும். ஹர்ஷத்துக்குக்காரணம் ப4க்தியாகும். அஸங்குசிதமான ப4க்தியைக்கொள்ளுமளவில் ப4க்திபாரவஶ்யம் அர்த்த2மாகக்-கிடைக்கும். எனவே 'ம்' என்றால் ப4க்திபாரவஶ்யத்தையுடையவன் என்றர்த்த2ம். ஆக, ப4க்திபாரவஶ்யமானது சித்தைப்பற்றிக்கிடக்கிறது.

இன்னொரு வித4மாகவும் இது ஸித்3தி4க்கும். 'மநு – அவபே3ாத4நே' என்ற த4ாதுவின்மேல் கர்த்தா என்ற அர்த்த2த்தில் 'ட3வி'ப்ரத்யயமும், ப்ரத2மைகவசநவிப4க்தியான 'ஸு'வும் சேர்ந்து 'ம்' என்றாகும். இந்த மகாரமானது அவபே3ாத4நத்தை (ஜ்ஞாநத்தை) உடையவன் என்ற பொருளைக்காட்டும். ஜ்ஞாநவிஶேஷமான ப4க்தியை அர்த்த2மாகக்கொள்ளுமளவில் மகாரமானது ப4க்திரூபாபந்நஜ்ஞாநமுடையவனைக்காட்டும். எனவே ப4க்திபாரவஶ்யமானது சித்தைப்பற்றிக்-கிடக்கிறது.

ஆக, அஜ்ஞாநம், ஜ்ஞாநாதி4க்யம், ப4க்திபாரவஶ்யம் என்ற மூன்றும் அசித்து, ஈஶ்வரன், சித்து என்ற மூன்று தத்த்வத்தையும் பற்றி வருகின்றன. எனவே "இம்மூன்றும் மூன்று தத்த்வத்தையும் பற்றி வரும்"(வா-45) என்றதோடு விரோத4மில்லை என்று ப்ரஶ்நாபி4ப்ராயம்.

பக்கம் – 74

(1) க்ரமமும், ஸங்க்2யையும் அறியப்படாத வஸ்துவுக்கு ப்ரஸித்3த4ஸங்க்2யா-பூர்வகநிர்த்தே3ஶ-ஸ்த2லத்திலே ப்ரஸித்3த4க்ரமப்ரதீதியும் கூடவே வரும். பஞ்சகோஶஶ்ருதி – தைத்திரீயோபநிஷத்தில் ஆநந்த3வல்லியானது ஆநந்த3மயனான பரமாத்மாவுக்கு அந்நமயம்(ஶரீரம்), ப்ராணமயம் (ப்ராணன்), மநோமயம்(மநஸ்ஸு), விஜ்ஞாநமயம்(ஜீவாத்மா), ஆநந்த3மயம்(பரமாத்மா) என்று ஐந்து கோஶங்களை(உறைகளை)க்காட்டுகிறது. எனவே இந்த ஆநந்த3வல்லியானது பஞ்ச-கோஶஶ்ருதியாகும். இதில் அசித்து, சித்து, ஈஶ்வரன் என்ற க்ரமத்தில் தத்த்வங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. "போ4க்தா போ4க்3யம் ப்ரேரிதாரஞ்ச மத்வா" என்ற ஶ்ருதியில் சித்து, அசித்து, ஈஶ்வரன் என்ற க்ரமத்தில் தத்த்வங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

இங்கே அஜ்ஞாநம், ஜ்ஞாநாதி4க்யம், ப4க்திபாரவஶ்யம் என்ற கார்யங்களின் க்ரமத்துக்குச்சேர அசிது3பக்ரமம் ஸித்3த4மாகிறது. எனவே, அஜ்ஞாநம் அசித்தைப்பற்றி வரும், ஜ்ஞாநாதி4க்யம் சித்தைப்பற்றி வரும், ப4க்திபாரவஶ்யம் ஈஶ்வரனைப்பற்றி வரும் என்ற க்ரமத்தைக்கொள்ள வேண்டியதாகிறது. மேலும் ஶ்ருதிஸித்3த4ங்களான இரண்டு க்ரமங்களிலும் ப4க3வத்தத்த்வத்துக்கு மத்4யநிர்த்தே3ஶமில்லை. மேலும், ஜ்ஞாநாதி4க்யமானது ப4க3வத3நந்யஸாத்4யத்வஜ்ஞாநம் என்னும்போது நடுவிலுள்ள ஜ்ஞாநாதி4க்யத்துக்கு "அசித்து, சித்து, ஈஶ்வரன்" என்ற ப்ரஸித்3த4க்ரமத்தில் முடிவிலுள்ள ப4க3வத்தத்த்வம் ஹேதுவென்று கொள்ள வேண்டுகையாலே ஶ்ருதிஸித்3த4க்ரமப்ரதீதிக்கு ப4ங்க3ம் வருகிறது.

இப்படி அசிது3பக்ரமஸித்3தி4, ப4க3வத்தத்த்வத்தினுடைய மத்4யநிர்தே3ஶாபா4வம், ஶ்ருதி-ஸித்3த4க்ரமப்ரதீதிப4ங்க3ப்ரஸங்க3ம் என்ற காரணங்களால் "ஜ்ஞாநாதி4க்யத்தாலே"(வா-43) என்கிறவிடத்தில் ப4க3வத3நந்யஸாத்4யத்வஜ்ஞாநவிவக்ஷை கூடாதென்று உத்தராபி4-ப்ராயமென்று கண்டுகொள்வது.

(2) உத்3தே3ஶ்யம், ப்ரதிநிர்த்தே3ஶ்யம் என்ற இவற்றுக்குள் ஏகத்வத்தைக்கொண்டுவிடுமவை-களான ஸர்வநாமங்கள் அந்தந்த லிங்க3ங்களை அடைகின்றன. எனவே, ப்ரயோகி3ப்பவனின் விருப்பப்படி அடைகின்றன. இங்கே உத்3தே3ஶ்யம் ஶரணாக3தி. ப்ரதிநிர்த்தே3ஶ்யம் ஶரணம். இவற்றுக்குள் ஏகத்வத்தைக்கொண்டுவிடும் ஸர்வநாமம் "இத3ம்".

பக்கம் – 75

(1) பரத்யபி4ஜ்ஞாபகம் – ஏகத்வஜ்ஞாநாபாத3கம்.

(2) அக்3ர்யப்ராயந்யாயம் :- அக்3ரே ப4வா: – அக்3ர்யா:(= முன்னால் இருப்பவை) அவைகளின் ஆதி4க்யம் அக்3ர்யப்ராய: முன்னால் இருப்பவை அதி4கமாக இருந்தால் அவற்றை அநுஸரித்து மற்றவைகளுக்கும் அர்த்த2ம் வர்ணிக்கப்படவேணும் என்பது இந்த ந்யாயம். நிறைய இருப்பவைகளை அநுஸரித்து மற்றவை நயிக்க (நிர்வஹிக்க)ப்படவேண்டும் என்பது இந்த

ந்யாயம். 'அயம் ந்யாய: பா4தகாபா4வே ஜீவதி'(ஶ்ருத.ப்ர.1-1-5).
(3) ப்3ரஹ்மஶப்3தா3ர்த்த2ம் - ஸ்ரீபா4ஷ்யாரம்பத்தில் 'ப்3ருஹத்வம் ச ஸ்வரூபேண கு3ணைஶ்ச' என்றவிடத்து ஶ்ருதப்ரகாஶிகை.
(4) கு3ணோபஸம்ஹாரந்யாயம் :- ஓரிடத்தில் சொல்லப்பட்ட அர்த்த2த்தைப்பொருத்தமான இன்னொரு இடத்தில் ஸ்வீகரித்தல். (ஸ்ரீபா4ஷ்யம் 3-3-1).

பக்கம் - 76

(1) அஜ்ஞாநம் ஸாமாந்யஹேது. உபாயாந்தராஜ்ஞாநம் தத்3விஶேஷம். ஜ்ஞாநாதி4க்யம் ஸாமாந்யஹேது. ஆத்மஸ்வரூபபாரதந்த்ர்யஜ்ஞாநமும், ப4க3வத3நந்யஸாத்4யத்வஜ்ஞாநமும் தத்3விஶேஷங்கள். பாரதந்த்ர்யஜ்ஞாநத்தின் விஶேஷம் அத்3ருஷ்டத்3வாரகஸ்வப்ரவ்ருத்த்ய-நர்ஹத்வஜ்ஞாநம். ப4க3வத3நந்யஸாத்4யத்வஜ்ஞாநத்தின் விஶேஷம் ஈஶ்வரப்ராபகத்வஜ்ஞாநம்.
(2) 'விஜாநதாம்' என்கிறவிடத்தில் அஶக்தியை லக்ஷணையாகக்கொண்டால் 'அஶக்தர்களுக்கும் இதுவே' என்று அர்த்த2ம் கிடைக்கும். அப்போது 'விஜாநதாம்' என்ற ஶப்3த3த்துக்கு ஜஹல்லக்ஷணை வரும். 'அஜ்ஞாநாம்' என்றவிடத்தில் அஶக்தியை லக்ஷணையாகக்கொண்டால் 'அஜ்ஞர்களாயும், அஶக்தர்களாயும் இருப்பவர்களுக்கும் இதுவே' என்று அர்த்த2ம் கிடைக்கும். அப்போது 'அஜ்ஞாநாம்' என்ற பத3த்துக்கு அஜஹல்லக்ஷணை வரும். ஸ்வார்த்த2த்தை த்யஜிக்கக்கூடியது ஜஹல்லக்ஷணை. ஸ்வார்த்த2த்தை த்யஜியாமல் இன்னொரு அர்த்த2த்தையும் கூட்டிக்கொள்ளக்-கூடியது அஜஹல்லக்ஷணை. எனவே ஜஹல்லக்ஷணையைவிட- அஜஹல்லக்ஷணை சிறந்தது.

ஜஹல்லக்ஷணைக்கு உதா3ஹரணம் :- 'க3ங்கா3யாம் கோ4ஷ:' (க3ங்கை3யில் இடைச்சேரி உள்ளது). க3ங்கா3 என்ற பத3த்தின் அர்த்த2ம் ப்ரவாஹம். அதில் இடைச்சேரி இருக்க-முடியாதாகையால் 'க3ங்கை3க்கரையில் இடைச்சேரி உள்ளது' என்பது இதன் பொருளாகும். இதில் க3ங்கா3 என்ற பத3த்தின் அர்த்த2மான ப்ரவாஹமானது த்யஜிக்கப்படுவதால் க3ங்கை3க்-கரை என்ற அர்த்த2ம் ஜஹல்லக்ஷணையாகும்.

அஜஹல்லக்ஷணைக்கு உதா3ஹரணம் :- 'காகேப்4யோ த3தி4 ரக்ஷ்யதாம்'(காக்கைகளிடமிருந்து தயிரைக்காப்பாற்று). காக்கைகளிடமிருந்து தயிரைக்காப்பாற்று என்பது, காக்கை என்ன, தயிரைக்குடிக்கும் மற்ற ப்ராணிகளென்ன - யாவற்றிடமிருந்தும் தயிரைக்காப்பாற்று என்று பொருள். 'காக'ஶப்3த3த்துக்கு மற்ற ப்ராணிகள் என்ற அர்த்த2மானது அஜஹல்லக்ஷணையாகும், காக்கை என்ற ஸ்வார்த்த2மானது த்யஜிக்கப்படாதபடியால்.
(3) ச2ாந்தோ3க்3யோபநிஷத்தில் 'தேஷாம் க2ல்வேஷாம் பூ4தாநாம் த்ரீண்யேவ பீ3ஜாநி ப4வந்தி ஆண்ட3ஜம் ஜீவஜமுத்3பி4ஜ்ஜம்'(6-3-1). ஆண்ட3ஜம் - முட்டையிலிருந்து வரும் குயில், கோழி முதலியவை. ஜீவஜம் - கர்ப்ப4ப்பையிலிருந்து வரும் மநுஷ்யன், பசு முதலியவை. உத்3பி4ஜ்ஜம் - விதையிலிருந்து வருமவைகளான தாவரங்கள். இவற்றில் உத்3பி4ஜ்ஜத்துக்கும், ஸ்வேத3ஜத்துக்கும்(வியர்வையிலிருந்து உண்டாகும் கரப்பு முதலியவை) பஞ்சமாஹுதி இல்லாமலே உத்பத்தியானது உலகில் காணப்படுகிறது. நநு! எடுத்த ஶ்ருதியில் ஸ்வேத3ஜங்கள் சொல்லப்படவில்லையே, 'த்ரீண்யேவ பீ3ஜாநி' என்று அந்த வசநமிருக்கிறபடியால் - என்றால், அதற்கு பதில் பின்வருமாறு :- 'த்ருதீயஶப்3தா3வரோத4ஸ்ஸம்ஶோகஜஸ்ய'(ப்3ர.ஸூ.3-1-21). ஸம்ஶோகஜஸ்ய - ஸ்வேத3ஜத்துக்கும், ஆண்ட3ஜம் ஜீவஜம் உத்3பி4ஜ்ஜம் என்றவிடத்தில் மூன்றாவதான 'உத்3பி4ஜ்ஜ'ஶப்3த3த்தால், அவரோத4: - ஸங்க்3ரஹம் - லக்ஷணையாக வாச்யத்வம் வருகிறது என்றர்த்த2ம்.

உத்3பி4ஜ்ஜத்துக்குப்பஞ்சமாஹுதிநிரபேக்ஷத்வம் உலகில் அறியப்படுகிறது. இது ஸ்வேத3ஜத்-தின் த4ர்மமாகும். பூமியின் வெப்பத்திலிருந்து வெளிவருகை, அயோநிஜத்வம், பாபோத்தரத்வம் இவற்றால் ஸ்வேத3ஜத்துக்கு உத்3பி4ஜ்ஜத்துடன் ஸாம்யம் உள்ளது. எனவே ஸ்வேத3ஜத்துக்கு ஶ்ருதியில் மூன்றாவதாயுள்ள 'உத்3பி4ஜ்ஜ'ஶப்3த3த்தால் ஸங்க்3ரஹம்(லக்ஷணயா வாச்யத்வம்) வருகிறது; முதல் ஶப்3த3த்தாலோ இரண்டாவது ஶப்3த3த்தாலோ அன்று.

இந்த ஸூத்ரத்தால் ஒரு ந்யாயம் சொல்லப்படுகிறது. ஒரு வஸ்துவுக்கு(ஸ்வேத3ஜத்துக்கு) இன்னொரு வஸ்துவுடன்(உத்3பி4ஜ்ஜத்துடன்) ஏரோ வகைகளில் ஸாம்யம் உள்ளது. முதல் வஸ்துவின்(ஸ்வேத3ஜத்தின்) வேறொரு த4ர்மத்தை (பஞ்சமாஹுதிநிரபேக்ஷத்வத்தை) இன்னொரு வஸ்துவும்(உத்3பி4ஜ்ஜமும்) கொண்டுள்ளதாக அறியப்படுகிறது. அப்போது இன்னொரு வஸ்துவை (உத்3பி4ஜ்ஜத்தை)க்குறிக்கும் சொல்லானது முதல் வஸ்துவையும் (ஸ்வேத3ஜத்தையும்)

லக்ஷணையாகக்குறிக்கும். இதுவே "ஸம்யோகஜஸ்ய த்ருதீயஸப்3த3ஸாரோத4"ந்யாயமாகும்

ப்ரக்ருதத்தில் ஒரு வஸ்து - அஸக்தன். இன்னொரு வஸ்து - அஜ்ஞன். அஸக்தி, அஜ்ஞாநம் என்ற இந்த இரண்டில் எது இருந்தாலும் உபாயாந்தரத்தை அநுஷ்டி2க்கவியலாது. எனவே உபாயாந்தராநுஷ்ட2ாநாப3ாவப்ரயோஜகத்வஸாம்யமானது அஸக்தி, அஜ்ஞாநம் என்ற இரண்டுக்கும் உள்ளது. இந்த வித3த்தில் அஸக்தனுக்கும், அஜ்ஞனுக்கும் ஸாம்யமுள்ளது. அஸக்தனிடமுள்ள அஸக்தியானது அஜ்ஞனிடமும் இருப்பதாக லோகத்தில் காணப்படுகிறது. எனவே இந்த ந்யாயத்தால் அஜ்ஞர்களைக்குறிக்கும் சொல்லான 'அஜ்ஞாநாம்' என்பது அஸக்தர்களையும் லக்ஷணையாகக்குறிக்கும். 'விஜாநதாம்' என்ற சொல் அப்படிக்குறிக்காது. ஆக, 'அஜ்ஞாநாம்' என்கிறவிதிலே அஸக்திலக்ஷணை யுக்தை. எனவே 'விஜாநதாம்' என்றவிடத்தில் அஸக்திலக்ஷணை என்னும் பக்ஷம் அநுபபந்நம்.

(4) மந்த3ாதி4காரிநிஷ்ட2த்வஸம்ப்ரதிபத்தியாலும் - மந்த3ாதி4காரியான அஜ்ஞனிடத்தில் அஸக்தி இருத்தலானது உலகில் காணப்படுதலாலும்.

(5) தம் பிள்ளையான ஸுகரைப்பின் தொடருகிறவரான வ்யாஸரைப்பார்த்து நீரில் மூழ்கிக்கிடக்கிறவர்களான ஸ்த்ரீகள் தங்களை மறைத்துக்கொண்டார்கள்; ஆனால் பிள்ளையான ஸுகரின் உருவத்தைக்கண்டு மறைத்துக்கொண்டார்களல்லர். அதைப்பார்த்துவிட்டு வினவிய வ்யாஸமுநிவரிடம் "உமக்கு ஸ்த்ரீபுருஷபே4த3பு3த்3தி4 உள்ளது; வடிகட்டின ஆத்மஸ்வரூபத்தில் நோக்குள்ளவரான உமது பிள்ளைக்கு அந்த பே4த3பு3த்3தி4 இல்லை" என்றார்கள்.

பக்கம் - 78

(1) இம்மநோரத2ஹேதுகமாக - இம்மநோரத2த்தை ஹேதுவாகக்கொண்டதாக

பக்கம் - 79

(1) விஸ்வாஸமாந்த்3யாதி3 என்ற 'ஆதி3'ஸப்3த3க்3ராஹ்யமாவது - ப்ராப்யருசிமாந்த்3யம்.

(2) கு3ருபூ4தந்யாஸம் - அதி4கமான அக்ஷரங்களின் உபயோக3ம்.

(3) ஸத்3ருஸங்களானவற்றுக்கே சேரப்படித்தல் வரும். இது ஒரு ந்யாயமாகும்.

பக்கம் - 80

(1) ஒருவனுக்கு ஏதோவொன்று ப்ரியமாயிற்றென்றால் அவனுக்கு ஸமாநமான பு3த்3தி4யையுடையவர்கள் யாவருக்கும் அது ப்ரியமாயிருக்கும் என்பது ந்யாயமாகும்.

(2) ஒரிடத்தில் சொல்லப்பட்ட அர்த்த2த்தைப்பொருத்தமான இன்னொரு இடத்தில் ஸ்வீகரித்தல். (ஸ்ரீப4ா.3-3-1) இந்த ந்யாயத்தால் ஒரு ஆழ்வாருக்குச்சொல்லப்பட்ட கு3ணாதி3களின் த4ாரகத்வபா3த4கத்வங்கள் மற்றுமுள்ள ஆழ்வார்களுக்கும் வரும்.

பக்கம் - 81

(1) விஷயம் - கல்யாணகு3ணாதி3. ஸவிஷயவஸ்து - ப4க்தி. 'கல்யாணகு3ணங்களின் ப4க்தியிலும்' என்கிற ரீதியில் ஸூத்ரத்தில் ஸப்3த3ங்கள் இல்லை என்றர்த்த2ம். 'ஸ்வப4ாவவிஸேஷ' ஸப்3த3த்தாலே த4ாரகங்களாகவும், பா3த4கங்களாகவும் தோற்றுகை என்று ஸவிஷயவஸ்துவை விவக்ஷித்தாலும் அத்யந்தஸ்வாரஸ்யமில்லை. த4ாரகமாயும், பா3த4கமாயுமுள்ளது - கல்யாணகு3ணாதி3 - விஷயம். த4ாரகமாயும், பா3த4கமாயும் தோற்றுகை - ப4க்தி - விஷயவஸ்து என்று விவக்ஷித்தாலும் அத்யந்தஸ்வாரஸ்யமில்லை. ஏனெனில் த4ாரகமாயும், பா3த4கமாயும் தோற்றுகை கல்யாணகு3ணாதி3களுக்கு ஸ்வரஸம்; அவற்றை விஷயீகரித்த ப4க்திக்கு அஸ்வரஸம். எனவே ஸூத்ரத்திலுள்ள ஸப்தமிகள் விஷயத்வார்த்த2ங்களல்ல, அதி4கரணார்த்த2ங்கள் என்று காட்டுவதற்காக மாமுநிகள் இரண்டாவது யோஜனை பண்ணுகிறார்.

(2) நிறைய இருப்பவைகளை அநுஸரித்து மற்றவை நிர்வஹிக்கப்படவேணும். கீ3தாதி3களில் ப்ரபத்தியுடன் ஸஹபடி2தங்களான கர்மஜ்ஞாநப4க்திகள் உபாயங்கள். எனவே ப்ரபத்தியும் உபாயம்.

அண்ணாவப்பங்கார்ஸ்வாமிவ்யாக்2யாநம் – குறிப்புகள்

பக்கம் – 82

| (1) | உபாயப்ரபத்தி | அநுபாயப்ரபத்தி |
| --- | --- | --- |
| விதி4 | ஓமித்யாத்மாநம் யுஞ்ஜீத | மாமேகம் ஶரணம் வ்ரஜ |
| மந்த்ரம் | திருமந்த்ரம் | த்3வயம் |
| ஸ்வரூபம் | ஆத்மஸமர்ப்பணம் | உபாயவரணம் |
| லக்ஷணம் | அத்4யவஸாயம் | ப்ரார்த்த2னை |
| அதி4காரம் | ஸ்வார்த்த2ப2லேச்ச2ா | பரார்த்த2ப2லேச்ச2ா |
| அங்க3ம் | ஆநுகூல்யஸங்கல்பாதி3கள் | ஸாத4ரூபஸகலப்ரவ்ருத்திகளினுடையவும் ஸவாஸநத்யாக3ம் |

(2) த4ர்மபுத்ராதி3களிடத்தில் ஸாத4நதயா ப்ரபத்தியின் அநுஷ்ட2ாநம் காண்கிறது. ப4க3வத்3-கீ3தாதி3களில் கர்மஜ்ஞாநப4க்திப்ரபத்திகள் என்று உபாயங்களோடே ஸஹபடி2தமாய்ப்-போருகிறது. ந்யாஸேனைவ ஆப்யதே(வ.த.) என்பது ஶ்ருதீயாஸ்ருதி.

(3) 'ஆசாரத3ர்ஶநாத்' – ப்3ரஹ்மவித்துக்களிடம் ப்ரத4ாநமாக கர்மாநுஷ்ட2ாநமாகிற ஆசாரமே காணப்படுவதால் வித்3யையானது கர்மத்துக்கு அங்க3ம்.

'தச்ச்2ருதே:' – 'வித்3யயா கரோதி' என்கிற ஶ்ருதீயாஸ்ருதியினால் வித்3யையானது கர்மத்துக்கு அங்க3ம் என்னுகிறது. ப்ரபத்திக்கு உபாயதயா ப்ரயோக3ம் உண்டு என்பதற்கு த4ர்மபுத்ராதி3களின் ஸாத4நதயா அநுஷ்ட2ாநமும், 'ந்யாஸேனைவாப்யதே' என்ற ஶ்ருதீயாஸ்ருதியும் காரணங்கள்; ப்3ரஹ்மவித்துக்களின் ப்ரத4ாநதயா கர்மாநுஷ்ட2ாநமும் 'வித்3யயா கரோதி' என்ற ஶ்ருதீயா-ஸ்ருதியும் வித்3யையானது கர்மத்துக்கு அங்க3ம் என்பதற்குக்காரணங்களாவதைப்போல.

(4) ஸம்ப3ந்த4த்துக்கு அப4ாவப4ாஸநரூபதே3ாஷஹேதுவாம் – ஸம்ப3ந்த4த்தை இல்லாததாகத்-தோற்றச்செய்யும் தே3ாஷத்துக்கு ஹேதுவாம்.

(5)தத்3வத3ஸம்ப3ந்த4ாப4ாவப4ாஸமாம் –அதைப்போலவே அஸம்ப3ந்த4த்தைக்காட்டக்கூடியதாகும்.

பக்கம் – 83

(1) ப்ரத்யாயயதி – காட்டிக்கொடுக்கிறது.

(2) ஸம்ப4ாவிதப்ராமாண்யையான ப்ரதீதி – ப்ராமாண்யத்தை உடையதான ப்ரதீதி. த3ர்ஶநக்ஷண ஆபாத: ததை2வ ஆகர்ணநக்ஷண: – பார்க்கும் க்ஷணம் ஆபாதம், அப்படியே கேட்கும் க்ஷணமும்.

(3) ஸங்கோசத்தில் ப்ரமாணமில்லாமையாலே – 'ஏக'ஶப்த3–ஏவகாரங்கள் ஸித்3தே4ாபாயாந்தரத்-துக்கும் வரணத்தின் உபாயத்வத்துக்கும் ப்ரதிக்ஷேபகங்களாக இருக்கும்போது ஸித்3தே4ாபா-யாந்தரத்துக்கு மட்டும் ப்ரதிக்ஷேபகங்கள் என்று ஸங்கோசிப்பதில் ப்ரமாணமில்லாமையாலே.

(4) ஸித்3தே4ாபாயமான ப4க3வானுடைய ப்ரவ்ருத்திக்கு ப்ரதிப3ந்த4கம் உபாயாந்தரம். உபாயாந்தராப4ாவமே ப்ரதிப3ந்த4காப4ாவம். அந்த ப்ரதிப3ந்த4காப4ாவமே ப்ரபத்தியாகும்.

(5) ப்ரதிப3ந்த4காப4ாவமிருந்தால் கார்யமுண்டாகிறது, ப்ரதிப3ந்த4கமிருந்தால் கார்ய-முண்டாவதில்லை. இப்படி ப்ரதிப3ந்த4காப4ாவத்துக்கு அந்வயவ்யதிரேகஸாலித்வமுள்ளது. ஆயினும் ஸாமக்3ர்யநுப்ரவேஶமில்லை, ஸாமக்3ரியானது ப4ாவரூபமானதையால். மணியினால் தடுக்கப்பட்ட நெருப்பு த3ஹிப்பதில்லை. மணியை எடுத்துவிட்டால் நெருப்பு த3ஹிக்கிறது. எனவே மண்யப4ாவமாகிற ப்ரதிப3ந்த4காப4ாவந்தானே த3ாஹஹேது என்றால் அன்று, நெருப்பினுடைய ஶக்தியே த3ாஹஹேதுவாகும்.

(6) கு3ரூபாயஸாத்4யமான ப2லத்தைத்தருதல் ப4க3வானுடைய உபாயத்வம் என்னலாகாது.

(7) பன்னிரண்டு வருடங்கள் சாந்த்3ராயணவ்ரதத்தை அநுஷ்டி2க்க இயலாதவனுக்கு.

பக்கம் – 84

(1) ப2லம், தத்காமனை, நிமித்தம் இவைகளிலிருந்து ப்ரபத்தியானது வேறுபட்டிருப்பதாலும், அது அதி4காரிவிஶேஷணமாயிருந்தால் அதற்கு விதி4யின் அந்வயம் வாராமல் போகவேண்டி-வருமாதலாலும் ப்ரபத்திவிதி4யில் விதே4யாந்தரம் இல்லாதபடியாலும் அது அதி4காரி-விஶேஷணமன்று.

(2) தாந் – ப்ரபந்நர்களான அவர்களை. த்வா – ஶரணம்பண்ணின உன்னை. ந: – ப்ரபந்நர்களான நம்மை. இவ்விடங்களில் ப்ரபத்தியானது அதி4காரிக்கு விஶேஷணமாகச்சொல்லப்பட்டுள்ளது.

(3) அந்யத்ர – ஸாத்4யோபாயங்களில்.

(4) அதி4காரத்துக்கு ஸித்3த4த்வமானது வித்4யந்தராதீ4நமான அநுஷ்டா2நத்தாலே வருகிறது, அல்லது ஸ்வத ஏவ வருகிறது. 'அக்3நீந் ஆத3தீ4த' (அக்3நிகளைக்கொண்டுவா) , 'ஸ்வாத்4யாயோ-த்4யேதவ்ய:' (வேத3மானது ஓதப்படவேணும்) என்கிற வேறு விதி4களால் அக்3நியைக்-கொண்டுவருதல், வேத3த்தின் அத்4யயநம் என்ற அநுஷ்டா2நங்கள் ஸித்3தி4க்கின்றன. 'ஜ்யோதிஷ்டோமேந ஸ்வர்க்க3காமோ யஜேத'(ஸ்வர்க்க3த்தில் விருப்பமுடையவன் ஜ்யோதிஷ்-டோமயாக3த்தால் பூஜிக்கக்கடவன்) என்ற க்ரதுவிதி4யால் அந்த அநுஷ்டா2நங்கள் ஸித்3தி4க்க-வில்லை. எனவே அக்3நி, வித்4யை என்ற இரண்டுக்கும் க்ரத்வதி4காரத்வமானது அந்த விதி4க-ளாலேயே ஸித்3தி4க்கிறது; 'யஜேத' என்ற க்ரதுவிதி4யால் ஸித்3தி4க்கவில்லை. அக்3நியும், வித்4யையும் உபாயமாக இல்லாமல் அதி4காரமாக இருப்பதால்தான் அதி4காராத்4யாயத்தில் (பூ.மீ.6) உள்ள ஸூத்ரங்களால் விசாரிக்கப்படுகின்றன. ஆகையிறே அத்4யயநவிதி4க்கு அபஶூத்3ராதி4கரணத்தில் சொல்லப்படும் அதி4காரிநியமமானது அத்4யயநவிதி4யின் அநுக்3ரஹத்தால் கிடைக்கக்கூடிய அதி4காரத்தை ப2லமாக உடையதுஎன்று மீமாம்ஸகராலே சொல்லப்பட்டது.

விளக்கம் :– அத்4யயநவிதி4யானது, அத்4யயநம் க்ரதுவுக்கு அதி4காரம் என்றும், தத்3த்வாரா த்ரைவர்ணிகத்வம் அதி4காரம் என்றும் தெரிவிக்கிறது என்று மீமாம்ஸகரால் சொல்லப்பட்டது. அவ்வாறே உபாயவரணவிதி4யானது உபாயவரணம் உபாயத்துக்கு அதி4காரம் என்று காட்டுகிறது. அதாவது, ப4க3வானுகிற உபாயம் இவனை ஸ்வீகரிப்பதற்கு இவனுடைய வரணம் அதி4காரம் என்று காட்டுகிறது.

வேறொரு விதி4யால் விதி4க்கப்பட்ட ஒன்றுக்கு இன்னொரு விதி4யால் அநுவதி3ப்படுதல் கூடும். எந்த த4ர்மத்தை அல்லது க்ரியையை அல்லது த்3ரவ்யத்தை உடையவர்களுக்கு உபாயமானது விதி4க்கப்படுகிறதோ, அந்த த4ர்மம் அல்லது க்ரியை அல்லது த்3ரவ்யம் அதி4காரமாகும். உபாயத்-திநுடைய விதே4யத்வமும் அறியப்படாமலிருந்துகொண்டு அறிவிப்புக்கு விஷயமாகையாம் சிலவிடங்களில்; இன்னும் சிலவிடங்களில் ப்ரவர்த்தியாமல் இருப்பவனை ப்ரவர்த்திக்கச்செய்யும் கட்டளைக்கு விஷயமாகையாம். இங்கே பூர்வார்த்த4த்திலே 'வ்ரஜ' என்று விதி4க்கப்பட்ட வரணத்தை (ஸ்வீகாரத்தை) உத்தரார்த்த4த்தில் 'த்வா' என்று அநுவதி3த்து, 'அஹம், மோக்ஷயிஷ்யாமி' என்று உபாயத்தை அபேக்ஷியாமல் ரக்ஷிக்கிற ஸித்3தே4ாபாயம் அறியாததை அறிவித்தலாகிற விதி4க்கு விஷயமாக்கப்படுகிறது. பிறந்ததுமுதல் ஏழு வயது ஆகாதவரை ஒருவனுக்கு உபநயந-ஸம்ஸ்காரத்துக்குத்தகுதியில்லை. அவ்வாறே ஒருவனிடம் வரணம் இல்லையெனில் உபாயத்தை அபேக்ஷியாமல் இவனை ப4க3வான் ரக்ஷித்தல் என்பதும் இல்லை என்று காட்டுவதே வரணமாகிற அதி4காரத்தை அநுவதி3த்தலுக்கு ப்ரயோஜநமாகும்.

ஸ்வத ஏவ ஸித்3த4தையையுடைய ப2லகாமனையைப்போல், ஸ்வத ஏவ ஸித்3த4தையையுடையது ஸாந்நாய்யம் (பாலேட்டுடன் கலந்து ஸமர்ப்பிக்கப்படும் பதா3ர்த்த2ம்). அது ஸோமயாக3த்துக்கு அதி4காரமாகிறது. ஸோமயாக3ம் உபாயம், ப்ரயாஜாதி3கள் அங்க3ங்கள், ஸாந்நாய்யம் உபாய-மன்று, அங்க3முமன்று, ஆயினும் ப2லஸாத4நம். அது 'அதி4காரிவிஶேஷணம்' என்ற ஶப்3த3த்தால் வழங்கப்படுகிறது. வித்4யந்தராதீ4நமான அநுஷ்டா2நத்தை மூலமாகக்கொண்ட ஸித்3த4தையை உடையவை அக்3நியும், வித்3யையும். இவையும் உபாயமோ, அங்க3மோ அல்ல; ஆயினும் ப2லஸாத4நங்கள். இவையும் 'அதி4காரிவிஶேஷணம்' என்ற ஶப்3த3வாச்யங்களாகின்றன. பர-வித்3யையை (ஶாஸ்த்ரஜந்யஜ்ஞாநத்தை) அதி4காரமாகக்கொண்டது ஆத்மாவலோகநம் (ஆத்ம-த3ர்ஶநம்). இங்கு ப4க்தியோக3ம் உபாயம், ஆத்மாவலோகநம் அங்க3ம். பரவித்3யையானது உபாயமோ, அங்க3மோ அன்று; ராக3ப்ராப்தமான வேதா3ந்தார்த்த2விசாரரூபமான அநுஷ்டா2-நத்தை மூலமாகக்கொண்ட ஸித்3த4தையை உடையது. இது (பரவித்3யை) ப4க்தியோக3த்துக்கு அதி4காரிவிஶேஷணமாகும். இப்படி உபாயமாகவோ, அங்க3மாகவோ அன்றிக்கே ஸ்வத ஏவ ஸித்3த4தையை உடையதாகவோ வித்4யந்தராதீ4நாநுஷ்டா2நமூலகமான ஸித்3த4தையை உடைய-தாகவோ உள்ள த4ர்மம் அல்லது க்ரியை அல்லது த்3ரவ்யம் அதி4காரிவிஶேஷணமாகும். ப்ரபத்தியானது இந்த வகையில் அதி4காரிவிஶேஷணமாகிறது.

விளக்கம் :– சரமஶ்லோகத்தின் உத்தரார்த்த4மானது ஸித்3தே4ாபாயத்துக்கு விதி4யாகும் (அஜ்ஞாத-ஜ்ஞாபகமாகும்). பூர்வார்த்த4ம் வரணத்துக்கு விதி4யாகும்(அப்ரவ்ருத்தப்ரவர்த்தகமாகும்).

உத்தரார்த்த₄த்தில் 'த்வா' என்பதற்கு ஶரணயுக்தனான உன்னை என்றர்த்த₂ம். இங்கே ஸர்வபாபவிமோசநமாகிற ப₂லத்துக்கு உபாயம் 'அஹம்' என்று சொல்லப்பட்ட ப₄க₃வான். அங்க₃ம் ஸர்வத₄ர்மபரித்யாக₃ம். ஶரணமானது உபாயமன்று, அங்க₃முமன்று; ஆயினும் ப₂லஸாத₄நம். உபாயவிதி₄க்கு பி₄ந்நமான ஶரணவித்₄யதீ₄நமான அநுஷ்ட₂ாநம். ஆக, வித்₄யந்தராதீ₄நமான அநுஷ்ட₂ாநமாக ஶரணம் இருக்கிறபடியால் அது ஸித்₃த₄ம். எனவே ஶரணமானது அதி₄காரிவிஶேஷணம்.

(5) நிஷேத₄விரோத₄த்தாலே - நிஷேத₄ம் சரமஶ்லோகத்திலுள்ள 'ஏக'ஶப்₃த₃ம். இது ஶரணத்துக்கு உபாயப₄ாவத்தைத்தவிர்க்கிறது.

பக்கம் - 85

(1) ப₄க்திக்கும் ப்ரபத்திக்கும் ப்ரமாணங்களில் வேறுபாடு இருப்பதால் ப₄க்தியை ப்ரபத்திக்கு ப்ரதிப₃ந்தி₄யாக்கமுடியாது.

(2) உபாயத்தையும், அங்க₃த்தையும் காட்டிலும் ப்ரபத்தியானது பி₄ந்நமாக இருக்கிறபடியாலும், விதி₄யுடன் அந்வயிக்கிறபடியாலும், விதே₄யாந்தரமானது( உபாயமாக விதி₄க்கப்படுமவனாக வேறொருவன்) இருககிறபடியாலும் அது அதி₄காரிவிஶேஷணம்.

(3) கர்மகக்ஷம் - புண்யபாபங்களாகிற கர்மப்புதரை. யோக₃ாக்₃நி மட்டுமே கொளுத்தும்.

(4)இந்த தேவனானவன் பரத்வத்தையுடையவன், பூ₄தங்களிடம் இரக்கமுடையவன், அநுக்₃ரஹமாகிற பு₃த்₃தி₄யையே நித்யமாக உடையவன். இந்த அநுக்₃ரஹமானது அவனிடமுள்ள மூன்றாவது கு₃ணமாகும். இந்த கு₃ணத்தைப்பற்றின விஶ்வாஸாத்மகமான ஜ்ஞாநத்தையுடையவன் சேதநன். ப₄க₃வான் உபேக்ஷகன், கர்மத்தின்படியே ப₂லத்தைக்கொடுப்பவனாதலால், என்ற மதியானது ப₄க₃வானுடைய மூன்றாவது கு₃ணமான அநுக்₃ரஹத்தை எப்பொழுதும் அழிக்கக்கூடியதாகும்.

(5) இரக்கம், அநுக்₃ரஹைகதீ₄ இவற்றையுடையவன் ப₄க₃வான் என்ற ஜ்ஞாநரூபமான விஶ்வாஸத்துக்கு விரோதி₄ உபேக்ஷகத்வத்துக்கு ஹேதுவான கர்மப₂லதா₃யித்வஜ்ஞாநம் என்று சொல்லுகையாலே ப்ரபத்திக்கு அநுபாயத்வம் ஸித்₃த₄ம். ப்ரபத்தி உபாயமாகில் தத்தத்கர்மங்களுக்கு ஸ்வர்க்க₃நரகங்கள் ப₂லமாகிறப்போலே ப்ரபத்திக்கும் காலவிஶேஷத்தில் ஏற்படும் ப₂லத்துக்கு ஸாத₄நமாகும் தன்மை உண்டாகையாலே யத₂ாகர்மப₂லதா₃யித்வமானது அநுபேக்ஷகத்வஹேதுவாகிவிடும்.

விளக்கம் :- தத்தத்கர்மப₂லதா₃யித்வமானது அநுக்₃ரஹத்தை ஏற்படுத்தாது. தத்தத்கர்மப₂லதா₃யித்வம் மட்டும் இருந்தால் அநுக்₃ரஹத்துக்கு உபயோக₃மில்லையாதலால் அநுக்₃ரஹம் என்ற கு₃ணமே அவனிடம் இல்லையாகிவிடும். அப்போது ஶ்லோகத்தில் தத்தத்கர்மப₂லதா₃யித்வமானது ப₄க₃வானுடைய அநுக்₃ரஹத்தை அழிக்கும் என்று சொன்னது தவறாகிவிடும், அநுக்₃ரஹம் என்பதே அவனிடம் இல்லாதபடியால். இருக்கும் கு₃ணத்தைத்தானே அழிக்கமுடியும்? ஆக, ப்ரபத்தி உபாயமாகில் அவனிடமுள்ள அநுக்₃ரஹம் என்ற கு₃ணத்துக்கு உபயோக₃மில்லாமற்போகையாகிற அநிஷ்டம் வருகிறது. எனவே ப்ரபத்தி உபாயமன்று.

(6) ப₄க₃வானிடம் அபேக்ஷாப்ரதீக்ஷை உள்ளது. இவனிடமுள்ள ப்ரபத்தியானது உபாயமாயிற்றென்றால், ப₂லத்துக்காக இவன் ப₄க₃வானை அபேக்ஷிக்கவேண்டியதில்லை, அநுஷ்டி₂த்த உபாயத்துக்கு ப₂லங்கொடுத்தல் என்பது ப₄க₃வானுக்குக்கர்த்தவ்யமாகிவிடுகிறபடியால். அப்போது ப₄க₃வானிடமும் அபேக்ஷாப்ரதீக்ஷை இராது. அது இருக்கிறபடியால் இவனிடமுள்ள ப்ரபத்தியானது உபாயமன்று என்று தேறுகிறது.

(7) ரக்ஷாப₄ரம் - ரக்ஷணப்பொறுப்பு. ப்ரபத்தி உபாயமாகில் ரக்ஷணப்பொறுப்பு இதுவேயாகையாலே, ப₄ரந்யாஸத்துக்கு(பொறுப்பை வைத்தலுக்கு) ஸ்வரூபநாஶம் வருகிறது. ப்ரபத்தி உபாயமானால் ப₄ராநுஷ்ட₂ாநம்(பொறுப்பைத்தானே வைத்துக்கொண்டிருத்தல்) இவனிடம் உள்ளதாகத்தேறும். ப்ரபத்திஸ்வரூபமாவது ப₄ரந்யாஸமாகும்(பொறுப்பை ப₄க₃வானிடம் வைத்தலாகும்). அதற்கு முரணானது ப₄ராநுஷ்ட₂ாநமாகும்(பொறுப்பைத்தானே வைத்துக்கொண்டிருத்தலாகும்). எனவே ப்ரபத்தி அநுபாயம்.

(8) ப₄க்திஸ்த₂லத்தில் அங்க₃ப்ரபத்தியின் ப₂லம் ப₄க்த்யுத்பத்தி. அது ப₄க₃வந்நிரபேக்ஷமான ப்ரபத்தியினாலேயே ஸாதி₄க்கப்பட்டுவிடுகிறது. அவ்வாறே அதி₄காரிவிஶேஷவிஷயத்தில் ப₄க்திஸ்த₂ாநத்தில் உபதே₃ஶிக்கப்பட்ட ப்ரபத்தியே ப₄க₃வானை எதிர்பாராமல் ப₂லத்தை ஸாதி₄த்துக்-

கொடுக்கிறது. எனவே ஈச்வரனுக்கு உபாயத்வம் இன்றிக்கேயொழியும்.

பக்கம் - 86

(1) கிம் குர்ம:? - என்னசெய்வோம்? நீங்கள் சொல்லும் யுக்தியைப்பார்த்தால் ஈச்வரனுக்கு உபாயத்வம் இன்றிக்கேயொழிகிறது. ப்ரபத்திஸ்வரூபத்தைப்பார்த்தால் ஈச்வரனுக்கு உபாயத்வம் வருகிறது. எனவே என்ன செய்வோம் என்கிறார்கள் பூர்வபக்ஷிகள்.

(2) ப4க3வானே உபாயம் என்ற பு3த்3தி4க்கு அந்யதா2ஜ்ஞாநத்வத்தை நீக்குவதற்காக நீங்கள் யத்நம் பண்ணவேணும் என்பது ஸித்3தா4ந்தியின் பதில். ப4க்திநிரபேக்ஷமாக ப4க3வான் இருக்கையே ப்ரபத்திக்கு விஷயம் என்று பூர்பக்ஷிகள் கூறினால் பதில் கூறுகிறோம், கேண்மின். யாவனொருவனுக்கு ப்ரபத்தி உபாயமோ அந்த உபாயத்தையொழிந்த உபாயத்தை அபேக்ஷியாதே அவனை ரக்ஷிக்கையானது ப4க3வான் அவனுக்கு உபாயம் என்று சொல்லுவதற்குக்காரணமாகாது; எந்த உபாயத்தையும் அபேக்ஷியாமல் ப4க3வான் ஒருவனை ரக்ஷித்தால்தான் ப4க3வானே அவனுக்கு உபாயம் என்று சொல்லமுடியும். இல்லையெனில் கடி2னமான உபாயங்களை அநுஷ்டி2க்க முடியாதவர்கள் சாஸ்த்ரம் சொன்ன ரீதியில் எளிய உபாயங்களை அநுஷ்டி2க்கும்போது அவர்கள் எல்லாருக்குமே ப4க3வான் உபாயமாகிறான் என்ற நிலை ஏற்படும்.

ஆக்ஷேபம்:- இவனுடைய ரக்ஷணப்பொறுப்பை ப4க3வான் ஏற்றுக்கொண்டிருத்தலே ப4க3வானுக்கு உபாயாந்தரஸ்தா2நநிவேசமாகும். அப்படி ப4க3வான் இவனுடைய ரக்ஷாப4ரத்தை ஸ்வீகரிப்பதற்கு இவன் பண்ணும் ப4ரந்யாஸமானது ஹேது. எனவே ப்ரபத்திக்கும் உபாயத்வம் ஸித்3தி4க்கிறது. ப4க3வான் இவனுடைய ரக்ஷைக்குக்காரணமாவதால் அவனுக்கும் உபாயத்வம் ஸித்3தி4க்கிறது.

ஸமாதா4நம்:- ப4ரஸ்வீகாரத்துக்கே ப4ரந்யாஸம் காரணமாவதால்,அது அந்யதா2ஸித்3த4மாகிறது (வேறு வகையில் வாழ்ந்துவிடுகிறது). அதாவது ப2லத்துக்கு ஸாத4நமாகாமல் ப4ரஸ்வீகாரத்தை ப4க3வான் பண்ணுவதற்கு ஸாத4நமாக நின்றுகொண்டு வாழ்ந்துவிடுகிறது. எனவே ப4ரந்யாஸம் ப2லத்துக்கு அநுபாயமாம்.

ஆக்ஷேபம்:- ப4ரந்யாஸமானது வ்யாபாரமாகையால் அந்யதா2ஸித்3தி4யில்லை.

விளக்கம் :- ஜ்ஞாநம், ப்ரமாணம் முதலியவற்றுக்கு அந்யதா2ஸித்3தி4(தன் கார்யமில்லாமல் வாழ்தல்) வருமேயொழிய வ்யாபாரத்துக்கு அந்யதா2ஸித்3தி4 வராது. உதா3ஹரணம் - பக்வாந்நத்தைப்பெறுவதற்காகத்தளிகை என்ற வ்யாபாரத்தை ஒருவன் நடத்துகிறான் என்றால் பக்வாந்நமாகிற ப2லத்தைத்தவிர்ந்த வேறு ப2லத்தை அவன் அடைந்தால் தளிகை என்ற வ்யாபாரம் வாழாது. தளிகையைப்பண்ணுதொழிந்தான் என்றே தேறிநிற்கும். அவ்வாறே ப4ரந்யாஸமானது மோக்ஷப2லத்துக்காகப்பண்ணப்படும் வ்யாபாரம்.அது அந்த ப2லத்தைக்கொடுக்கவில்லையென்றால் அந்த வ்யாபாரமே வாழாது. எனவே ப4ரந்யாஸத்துக்கு அந்யதா2ஸித்3தி4 இல்லை என்பது பூர்வபக்ஷியின் ஆக்ஷேபம்.

ஸமாதா4நம் :- ப4ரந்யாஸம் அநந்யதா2ஸித்3த4மாகில் தானும் ப4ரமாகையாலே ஸ்வஸ்வரூபோச்சே2த3ம் ப்ரஸங்கி3க்கும்.

விளக்கம் :- ப4ரந்யாஸம் தன் கார்யமின்றிக்கே வாழாதெனில், அதாவது மோக்ஷப2லத்துக்கு அது தப்பாத உபாயமென்னில், அதுவே ப4ராநுஷ்டா2நமாகிவிடுகிறது. ப4ராநுஷ்டா2நம் (பொறுப்பைத்தானே வைத்துக்கொள்ளுதல்) சேதநனிடம் வந்துவிட்டால் ப4ரந்யாஸம் அழிந்துவிடுகிறது என்ற நிலை ஏற்படும்.

ஆக்ஷேபம் :- து3ஷ்கரப4ரமாத்ரத்தை ப4க3வான் ஸ்வீகரிக்கிறான்.

விளக்கம்:- ப்ரபத்தி என்பது ஸுகரப4ரம். ப4க்தியோக3ம் என்பது து3ஷ்கரப4ரம். து3ஷ்கரப4ரத்தை மட்டும் ப4க3வான் ஸ்வீகரிக்கிறான், எனவே சேதநனிடம் து3ஷ்கரப4ராநுஷ்டா2நமில்லை. அந்த து3ஷ்கரப4ரத்தை ப4க3வானிடம் வைத்துவிட்டான். எனவே, ப4ரந்யாஸஸ்வரூபத்துக்கு அழிவு வரவில்லை. (இது பூர்வபக்ஷியின் எண்ணம்.)

ஸமாதா4நம்:- அப4க்ஷ்யப4க்ஷணரூபபாபத்தின் ப்ராயச்சித்தத்துக்காக சாந்த்3ராயணவ்ரதத்தைப்பன்னிரண்டு வருஷம் அநுஷ்டி2த்தல் என்பது து3ஷ்கரப4ரம். ஸேதுஸ்நாநம் செய்துவருதல் என்பது அநுகல்பம். ப4க3வான் இங்கே து3ஷ்கரப4ரத்தை ஸ்வீகரியாமல் அநுகல்பத்துக்கே பாபநிவ்ருத்தியாகிற ப2லத்தைக்கொடுக்கிறான். எனவே து3ஷ்கரப4ரஸ்வீகாரம் வ்யர்த்த2ம். ஆகையால் து3ஷ்கரப4ரத்தை ப்ரபந்நன்விஷயத்தில் ப4க3வான் ஸ்வீகரிக்கிறான் என்றால் ஸ்வீகரிப்பவனான ப4க3வானுக்கு மட்டுமே உபாயத்வம் வரும்.எனவே உபாயாந்தரஸ்தா2ந-

நிவேதநரூபமான ப4ரந்யாஸத்துக்கு அநுபாயத்வம் ஸித்3த4ம்.

(3) 'த்3ருட4மாக இல்லாத யஜ்ஞங்களாகிற ஓடங்களால் ப்3ரஹ்மவான் அடையப்படமுடியாதவன்' என்று முண்ட3கோபநிஷத்து ஓதுகிறது. ப்ரபத்தியும் க்ஷணகாலவர்த்தித்வம், விஸ்வாஸ-மாந்த்3யஸம்ப4வம் என்பவைகளால் அத்3ருட4மான யஜ்ஞமாக உள்ளது. எனவே அது அநுபாயமாம்.

(4) 'என்னுடைய ஸ்வீகாரரூபையாயுள்ள ப்ரபத்திக்குங்கூட மனஅடக்கமில்லாதவர்களான சிலர் உபாயத்வம் இருப்பதாகக்கூறுகிறார்கள். அவர்கள் அப்படியிருந்துகொண்டு என்னையே ப2லமாக அடையவிரும்புகிறார்கள்' என்பது விஹகே3ந்த்3ரஸம்ஹிதையிலுள்ள வசநம். மனஅடக்க-மில்லாமை - ஸ்வரக்ஷணத்தில் கிஞ்சித்தும் தனக்கு அந்வயமில்லை என்ற அடக்கத்தைப்பெறாமை. 'ஸ்வீகாரரூபையான ப்ரபத்தியானது உபாயம்' என்பது மனஅடக்கமில்லாதவர்களின் கருத்து என்று கூறப்பட்டிருப்பதால் வஸ்துஸ்தி2தியில் அது அநுபாயம் என்று தேறுகிறது.

(5) ப்ரபத்தி: அநுபாயா, உபாயஸ்வீகாரரூபத்வாத், வ்யதிரேகேண யஜ்ஞாதி3வத், ஈஸ்வரவச்ச. எது உபாயமோ அது உபாயஸ்வீகாரமன்று என்பது வ்யதிரேகவ்யாப்தி. யஜ்ஞாதி3களும், ஈஸ்வரனும் உபாயங்கள், உபாயஸ்வீகாரங்களல்ல. எனவே யஜ்ஞாதி3களும், ஈஸ்வரனும் வ்யதிரேகத்3ருஷ்டாந்தங்கள்.

(6) 'துல்யம் து த3ர்ஶநம்'(ப்3ர.ஸூ.3-4-9). ப்3ரஹ்மவித்துக்களிடம் கர்மாநுஷ்டா2நம் காணப்படு-வதால் வித்3யையானது கர்மத்துக்கு அங்க3ம் என்னவொண்ணாது. வித்3யையானது அங்கி3யாக-விருந்தாலும் கூட கர்மாநுஷ்டா2நமானது துல்யமாகக்காணப்படுகிறது. இது எப்படித்தெரிகிறது என்றால், ப்3ரஹ்மவித்துக்களிடையே கர்மத்தின் அநநுஷ்டா2நமும் காணப்படுவதால். ப2லாபி4-ஸந்தி4ரஹிதங்களான கர்மங்கள் ப்3ரஹ்மவித்3யைக்கு அங்க3மாவதால் அவற்றை அநுஷ்டி2க்-கிறார்கள். ப2லார்த்த2ங்களாயுள்ளவை மோக்ஷத்தை ப2லமாகவுடைய ப்3ரஹ்மவித்3யைக்கு விரோதி4களாகையால் அவற்றை த்யஜித்துவிடுகிறார்கள். கர்மம் அங்கி3யாகவிருந்தால் அதை ஒரு ப்ரகாரத்தாலும் த்யஜிக்க முடியாது. இப்படிக்கர்மத்தின் அநுஷ்டா2நம் அநநுஷ்டா2நம் என்ற இரண்டும் ப்3ரஹ்மவித்துக்களிடம் இருப்பதால் கர்மாநுஷ்டா2நத3ர்ஶநம் அநியதம். எனவே கர்மாநுஷ்டா2நம் காணப்படுவதையிட்டு அவர்கள் அங்கி3யாகத்தான் கர்மத்தை அநுஷ்டி2க்கிறார்-கள் என்று நியமிக்க முடியாது. அவ்வாறே தத்த்வவித்துக்களுக்கு அதி4காரிவிஶேஷணம் ஸித்3தி4ப்பதற்காக அவர்களிடம் ப்ரபத்த்யநுஷ்டா2நம் அபேக்ஷிதமாகையாலே அவர்களிடமுள்ள ப்ரபத்தியின் அநுஷ்டா2நமானது உபாயத்வேந அநுஷ்டா2நமென்று நியமிக்கவொண்ணாது.

(7) 'யதே3வ வித்3யயா கரோதி ... ததே3வ வீர்யவத்தரம் ப4வதி' என்பதில் 'வித்3யயா' என்ற த்ருதீயாஸ்ருதி உள்ளது. 'வித்3யயா கரோதி' என்றுள்ள இந்த த்ருதீயாஶ்ருதியினால் கர்மத்துக்கு வித்3யை அங்க3ம் என்பது பூர்வபக்ஷம். இந்த ஶ்ருதியானது எல்லா வித்3யைகளையும் விஷயமாகக்-கொண்டதன்று. உத்3கீ3த2வித்3யையை மட்டும் விஷயமாகக்கொண்டது என்பது ஸித்3தா4ந்தம். 'வித்3யயா' என்ற பத3ம் 'யச்ச2ப்3த3த்துடன் கூடியிருப்பதால் அநுவாத3ரூபமாக ஆகிவிடுவதால் ப்ரமாணாந்தரஸாபேக்ஷமாக ஆகிவிடுகிறது. எனவே ஸ்வத: அர்த்த2நிஶ்சயஸாமர்த்2யம் அதற்கு இல்லையாகையால் 'வித்3யயா' என்ற பத3மானது ஏகபத3ஸாமர்த்2யரூபமான ஶ்ருதியாக ஆகாது. 'யச்ச2ப்3த3ம் எதைக்குறிக்கிறது என்ற கேள்வி வர, ப்ரகரணவஶத்தால் உத்3கீ3த2த்தை அங்க3மாக-வுடைய கர்மத்தையே குறிக்கிறது என்று விடை கிடைக்கும். எனவே 'வித்3யயா' என்ற பத3ம் ஸர்வவித்3யைகளையும் குறிக்காது, உத்3கீ3த2வித்3யையை மட்டும் குறிக்கும். எனவே உத்3கீ3த2-வித்3யை மட்டும் கர்மத்துக்கு அங்க3மாகுமேயொழிய ஸர்வவித்3யைகளும் கர்மத்துக்கு அங்க3மாகமாட்டா.

அவ்வாறே 'ந்யாஸேநைவாப்யதே' (ந்யாஸத்தாலேயே அடைகிறான்) என்ற த்ருதீயாஶ்ருதியும் உபாயப்ரயோக3த்தையுடைய ப்ரபத்தியானது ஸாத4நம் என்று காட்டுமேயொழிய அநுபாய-ப்ரயோக3த்தையுடைய ப்ரபத்தியும் ஸாத4நம் என்று காட்டாது. ஏனெனில் 'ஸாத4நாந்தரங்களால் கிட்டாத ப2லங்கள் ந்யாஸத்தாலேயே கிட்டுகின்றன' என்று அந்த வாக்யம் உள்ளது. ஸாத4நாந்த-ரத்துக்குத்துல்யமாக ந்யாஸம் சொல்லப்பட்டிருக்கிறபடியால் ஸாத4நப்ரயோக3த்தையுடைய ப்ரபத்தி*மட்டுமே 'ந்யாஸ'ஶப்3த3ார்த்த2மாகிறது; அஸாத4நப்ரயோக3த்தையுடைய ப்ரபத்தியானது அங்கே 'ந்யாஸ'ஶப்3தா3ர்த்த2மாக ஆகாது.

(8) 'தேந தேநாப்யதே தத்தந்ந்யாஸேநைவ மஹாமுநே । பரமாத்மா ச தேநைவ ஸாத்4யதே

புருஷோத்தம: ॥' என்ற வாக்யத்தில் 'ந்யாஸேனைவ', 'தேனைவ' என்றவிடங்களிலுள்ள ஏவ-காரமானது த்ருதீயையின் ஸாமர்த்2யத்தைத்தடுத்துவிடுகிறது. எனவே 'ந்யாஸேந' என்பதிலுள்ள த்ருதீயையானது ஸாமர்த்2யவிஶிஷ்டபத3மாகிற ஶ்ருதியாக ஆகாது. ஶ்ருதியாக இருக்கும் பத3த்துக்குத்தான் விதி4ஶக்தி உண்டு. ஏவகாரவிஶிஷ்டமான த்ருதீயைக்கு ஶ்ருதித்வம் இல்லாதபடியால் விதி4ஶக்தி இல்லை.

'ஶரணம் வ்ரஜ' என்ற வாக்யத்தில் வரணம்(ந்யாஸம்) விதி4க்கப்பட்டுள்ளது. 'அஹம் த்வா' என்று தொடங்கும் வாக்யத்தில் 'த்வா'(வரணயுக்தனான உன்னை) என்று வரணமானது விஶேஷண-மாக அநுவதி3க்கப்பட்டுள்ளது. இத்தால் வரணத்துக்கு அதி4காரத்வம் ஸித்3தி4க்கிறது. அதி4கார-த்வமானது ப2லத்துக்கு ப்ரயோஜகத்வமாகும். அந்தப்ரயோஜகத்வத்தை 'ந்யாஸேனைவ' என்ற வாக்யம் அநுவதி3க்கிறது. எனவே அதற்கு ந்யாஸம் உபாயம் என்று போ3தி4க்கும் ஶக்தியில்லை.

(9) உபாயத்வம் நிஷித்3த4மாகையாலே - ஶரணவரணத்துக்கு உபாயத்வம் நிஷித்3த4மாகையாலே.

பக்கம் - 87

(1) 'உபாயாபாயஸம்யோகே3 நிஷ்ட2யா ஹீயதேऽநயா । அபாயஸம்ப்லவே ஸத்3ய: ப்ராயஶ்சித்தம் ஸமாசரேத் ॥' ...

(1) 'உபாயாபாயஸந்த்யாகீ3 மத்4யமாம் ஶ்ருத்திமாஸ்தி2த: । மாமேவ ஶரணம் ப்ராப்ய மாமே-வாந்தே ஸமஶ்நுதே । மாமேவ ஶரணம் ப்ராப்ய தரேத்ஸம்ஸாரஸாக3ரம் ॥' என்பது ப்ரபத்திக்கு உத்பத்திவாக்யம்(முதலில் அதைப்பற்றி போ3தி4க்கும் வாக்யம்). இந்த வாக்யத்தில் ப்ரபத்திக்கு உபாயத்வமானது நிஷேதி4க்கப்பட்டுள்ளது. 'இத3ம் ஶரணமஜ்ஞாநாம் இத3மேவ விஜாநதாம் । இத3ம் திதீர்ஷதாம் பாரம் இத3மாநந்த்யமிச்ச2தாம் ॥'(ல.த.17-100) என்பது உபஸம்ஹாரத்தி-லுள்ள அதி4காரவிபா4கபரமான வாக்யம். இதில் 'ஶரண'ஶப்3த3ம் உள்ளது. அதற்கு உபாயம் என்று பொருள் தோற்றும். எனவே இந்த வாக்யத்தில் சொல்லப்பட்ட மூன்று வித4மான அதி4காரிகளுக்கும் ப்ரபத்தியானது உபாயம் என்று மேலெழப்பார்க்கில் தோற்றும். ஆனால் உத்பத்திவாக்யத்தில் ப்ரபத்திக்கு உபாயத்வம் நிஷேதி4க்கப்பட்டுள்ளது. அதற்கு அநுகு3ணமாக இந்த உபஸம்ஹாரவாக்யத்திலுள்ள 'ஶரண'ஶப்3த3த்துக்கு அர்த்த2ம் கொள்ளவேணும். எனவே, 'இத3ம் ஶரணம்' என்றால் இந்த ப்ரபத்தியானது அதி4காரத்வப்ரயுக்தப்ரயோஜகம் என்றர்த்த2ம்.

(2) ப்ரபஞ்சம் - ப்ரகரணம்.

(3) ஶப்3த3பே4த3ம் - ஷட்3ங்கயோக3ம், ஶரணாக3தி என்று. கு3ணபே4த3ம் - ஹேதுத்வம், அதி4காரி-விஶேஷணத்வம் என்று. ப்ரகரணபே4த3ம் - ப்ரதிபாதி3க்கப்பட்ட ஸ்த2லபே4த3ம்.

பக்கம் - 88

(1) 'உபாயத்வேந ப்ரதீதமான தன்னைப்பொறுதொழிகை' என்பதிலே அஸஹநத்துக்கு (பொறுமைக்கு)க்கர்த்தாவாகத்'தன்னை' என்று சொல்லப்பட்ட ப்ரபத்தி ஆவஶ்யகம். எனவே அதற்கு அஸஹநகர்மத்வம் அநுபபந்நம் என்பது வஸ்துஸாமர்த்2யம். இந்த வஸ்துஸாமர்த்2யமே அஸஹநத்துக்கு விஶேஷணம்ஶத்தில் (உபாயத்வத்தில்) பர்யவஸாநம் வருகைக்கு ப்ரமாணம். இந்த அபி4ப்ராயத்திலே 'இறே' என்கிறார்.

(2) 'ஸமாநகர்த்ருகயோ: பூர்வகாலே'(பா.ஸூ.3-4-21) (ஏகமான கர்த்தாவையுடைய க்ரியைகள் இருக்கும்போது பூர்வகாலிகமான க்ரியைக்கு வாசகமான தா4துவின்மேல் 'க்த்வா'ப்ரத்யயம் வரும். உதா3ஹரணம் :- ஸ்நாத்வா வ்ரஜதி - குளித்துவிட்டுச்செல்கிறான்.

க்ரியையைச்செய்யப்பயன்படும் ஶக்தியே காரகம் எனப்படும். ஸ்நாநக்ரியையைச்-செய்யப்பயன்படும் ஶக்தியும் க3மநக்ரியையைச்செய்யப்பயன்படும் ஶக்தியும் வெவ்வேறாகை-யாலே இரண்டு க்ரியைகளின் காரகங்களும் வெவ்வேறாக இருக்கும். 'ஸமாநகர்த்ருகயோ:' என்று ஸூத்ரத்தில் நிர்த்தே3ஶித்தது எப்படிப்பொருந்தும் என்றால் இரண்டு ஶக்திகளையும் உடைய புருஷனுடைய ஐக்யத்தால் பொருந்தும். ஶக்திக்கும் ஶக்திமானுக்குமுள்ள பே4த3ம் விவக்ஷிக்கப்-படாதபடியால் ஸமாநகர்த்ருகத்வம் வருகிறது. ஶக்திகளுக்கு பே4த3ம் இருப்பினுங்கூட ஶக்தி-மானுக்கு ஐக்யம் இருப்பதால் ஏககர்த்ருகத்வம் வருகிறது. எனவே ஶக்த்யைக்யம் ஸம்ப4வியாத-போது ஶக்திமதை3க்யமாகிற ஸமாநகர்த்ருகத்வம் 'க்த்வா'ப்ரத்யயபோ3த்4யமாகிறது.

அங்க3ப்ரதா4நபா4வத்தையுடைய க்ரியாஸ்த2லத்திலே அங்க3த்துடன் கூடின ப்ரதா4நமானது செய்ய விரும்பப்படுகையாலே ஶக்த்யைக்யம் ஸம்ப4விக்கும் என்று மீமாம்ஸகர்கள் சொல்கிறார்-கள். 'கா3ம் க்3ருஹீத்வா ப3த்4நாதி' (பசுமாட்டைக்கைக்கொண்டு கட்டுகிறான்) என்ற க்ரியையை எடுத்துக்கொள்வோம். இங்கே க்3ரஹணக்ரியையானது ப3ந்த4நக்ரியைக்கு அங்க3மாகும், ப3ந்த4ந-க்ரியோத்பாத3கமாகையால். ப3ந்த4நமான க்ரியையின் ஶக்தியானது ப3ந்த4நத்துக்குப்பயன்படு-

கிறது. க்₃ரஹணம் இல்லாமல் ப₃ந்த₄நம் பண்ணமுடியாதாகையால் அந்த ஶக்தியே க்₃ரஹணத்-துக்கும் பயன்படுகிறது. இப்படி ஶக்த்யைக்யம் ஸம்ப₄விக்கிறது. எனவே அங்க₃ப்ரத₄ாந-ப₄ாவாபந்நக்ரியாஸ்த₂லத்திலே ஶக்த்யைக்யரூபமான ஸமாநகர்த்ருகத்வமே 'க்த்வா'ப்ரத்யய-பே₄ாத்₄யமாகும். 'பரித்யஜ்ய வ்ரஜ' என்ற ப்ரக்ருதஸ்த₂லத்தில் பரித்யாக₃ம் அங்க₃மாகையால் ஶக்த்யைக்யரூபமான ஸமாநகர்த்ருகத்வமே 'க்த்வா'ப்ரத்யயபே₄ாத்₄யம். எனவே பரித்யாக₃மானது நியமேந கர்த்தவ்யம் என்றாகும்.

(3) சரமஶ்லோகத்தின் பூர்வார்த்த₄த்துக்கு த்யாக₃ாநுவாத₃பக்ஷத்தில் அர்த்த₂ம் 'ஸர்வத₄ர்மங்களை-யும் அஶக்தியினால் விட்டிருக்கும் நீ என்னையே உபாயமாகப்பற்று' என்பது. புருஷனுடன் அந்வயிப்பதற்கு அநுகூலமான வ்யாபாரம் 'விடுகை' என்பது. அதில் ஶக்தமானது 'த்யஜ'த₄ாது. விடுகை வ்யாபாரமாகுமா என்னில், பண்ணிக்கொண்டிருக்கும் வ்யாபாரங்களை விடுகை என்பது ப்ரயத்நஸாத்₄யமாகும். இந்த்₃ரியங்கள் செயல்பட்டுக்கொண்டிருக்கும் தன்மையுடையவைகள். அவைகளைச்செயல்படாமல் தடுக்கையே த்யாக₃மாகும். அது ப்ரயத்நஸாத்₄யமேயாகும். எனவே விடுகையும் வ்யாபாரமாகும். அந்த வ்யாபாரத்தில் ஶக்தமான 'த்யஜ'த₄ாதுவிலிருந்து வந்த 'த்யக்த்வா' என்ற பத₃த்துக்கு 'அஶக்தியினால் விட்டு' என்று அஶக்தியிலே லக்ஷணை கொள்ள-வேண்டிவருகிறது. 'ஸ்தி₂தஸ்த்வம்'(இருக்கும் நீ) என்ற பத₃த்தை வரவழைத்துக்கொள்ள-வேண்டிவருகிறது. த்யாக₃த்துக்கு அநுவாத₃ம் என்ற பக்ஷத்தில் இந்தக்குற்றங்கள் வருகின்றன. எனவே த்யாக₃ம் விதி₄க்கப்படுகிறது என்ற பக்ஷமே உசிதம்.

பக்கம் - 89

(1) ப்ரமாணஸ்பே₂ாரணம் - சரமஶ்லோகமாகிற ப்ரமாணத்தின் விவரணம்.

(2) விதி₄களிலேயே 'த₄ர்ம'ஶப்₃த₃ம் ப்ரயோகி₃க்கப்படுகிறது என்கிறபடியே 'த₄ர்ம'ஶப்₃த₃ம் நிஷித்₃த₄நிவ்ருத்தியைச்சொல்லாது. எனவே 'த₄ர்மங்களை விடு' என்றால் நிஷித்₃த₄ங்களின் நிவ்ருத்தியை விடு(= நிஷித்₃த₄ங்களைப்பற்று) என்று பொருள் கிடைக்காது. எனவே த₄ர்மங்களை விடச்சொன்னால் நிஷித்₃த₄ங்கள் புகுர வழியில்லை. அத₄ர்மநிவ்ருத்தியை விஶேஷணமாகவும், த₄ர்மங்களை விஶேஷ்யமாகவும் கொண்டால் 'அத₄ர்மநிவ்ருத்தியுடன் கூட த₄ர்மங்கள் யாவற்றையும் விடு' என்று விதி₄க்கு அர்த்த₂ம் கிடைக்கும். அப்போது 'அத₄ர்மங்களைச்செய்துகொண்டு த₄ர்மங்-களை விடு' என்று அர்த்த₂ம் தேறும். த₄ர்மங்களைச்செய்வதைப்போலவே அத₄ர்மங்களைச்செய்வதும் கஷ்₂டமாகும். இந்த ப்ரபத்தியாகிற உபாயம் ஸுகரமாகையாலே அதற்கு அத₄ர்மகரணமாகிற கஷ்₂டமான அங்க₃மானது இதனுடைய ஸுகரத்வத்தை அழித்துவிடும். எனவே விஶேஷணமாகக்-கூட அத₄ர்மநிவ்ருத்தியை விவக்ஷிக்கக்கூடாது. த₄ர்மங்களை விடவேணும் என்பது ஶப்₃த₃த்தி-லிருந்து கிடைக்கும் அர்த்த₂ம். அத₄ர்மங்களையும் விடவேணுமென்பது உபாயத்தின் ஸுகரத்வ-மாகிற அர்த்த₂த்தின் ஸாமர்த்₂யத்திலிருந்து கிடைக்கும் அர்த்த₂ம்.

(3) ஸாத₄நத்வ ... (அப்படியன்றிக்கே இதினுடைய) இத்யாதி₃.

ஸாத₄நத்வத்துக்கு ஸாத₄நமாகச்சொல்லப்பட்ட ஸாங்க₃த்வஹேதுவுக்கு ப்ரவ்ருத்த்யங்க₃கத்வத்-தாலே ஸோபாதி₄கத்வம் வருகிறது. 'ப்ரபத்தி: ஸாத₄நம், ஸாங்க₃த்வாத், த₄ர்மபூர்ணமாஸாதி₃வத்' என்பது கீழே சொல்லப்பட்ட அநுமாநம். ப்ரவ்ருத்த்யங்க₃கத்வம் என்பது உபாதி₄. 'யத்₃யத் ஸாத₄நம் தத்ப்ரவ்ருத்த்யங்க₃கம், த₄ர்மபூர்ணமாஸாதி₃வத்' என்று த₄ர்மபூர்ணமாஸாதி₃களில் ஸாத்₄யவ்யாபகத்வம் வருகிறது. 'யத்₃யத் ஸாங்க₃ம் தத்ப்ரவ்ருத்த்யங்க₃கம்' என்று கொள்ள இயலவில்லை. உபாயவரணம் ஸாங்க₃மாகவுள்ளது. ஆனால் ப்ரவ்ருத்த்யங்க₃கமாக இல்லை. எனவே உபாயவரணத்தில் ஸாத₄நாவ்யாபகத்வம் உள்ளது. பக்ஷமான ப்ரபத்தியானது நிவ்ருத்திரூபமான அங்க₃த்தைக்கொண்டிருக்கிறபடியால் ப்ரவ்ருத்த்யங்க₃கமன்று. எனவே பக்ஷத்தில் உபாதி₄-நிவ்ருத்தி உள்ளது.

(4) ஸத்ப்ரதிபக்ஷோத்நாயகத்வத்தை - ஸத்ப்ரதிபக்ஷமாகிற தோ₃ஷத்தைக்காட்டும் தன்மையை. ஸாத்₄யாப₄ாவமானது வேறு ஹேதுவினால் ஸாதி₄க்கலாம்படியிருக்கும் ஹேது ஸத்ப்ரதிபக்ஷமாகும். 'ஶப்₃தோ₃ நித்ய:, ஆகாஶகு₃ணத்வாத்' என்ற அநுமாநத்திலுள்ள ஹேது ஸத்ப்ரதிபக்ஷமாகும்; 'ஶப்₃தோ₃ऽநித்ய: உத்பத்₃யமாநத்வாத்' என்று இன்னொரு ஹேதுவினால் ஸாத்₄யாப₄ாவமானது ஸாதி₄க்கப்படுகிறபடியால்.

(5) 'வரணம் உபாய:, ஸாங்க₃த்வாத், த₄ர்மபூர்ணமாஸாதி₃வத்' என்கிற அநுமாநம் 'வரணம் அநுபாய:, நிவ்ருத்த்யங்க₃கத்வாத், வ்யதிரேகேண பூர்வவதே₃வ' என்கிற அநுமாநத்தாலே

ஸத்ப்ரதிபக்ஷிதம். இரண்டாவது அநுமாநத்திலுள்ள 'பூர்வவதே2வ' என்பது வாக்யம் 55 லுள்ள அநுமாநத்திலுள்ள 'யஜ்ஞாதி3வத்' என்ற வ்யதிரேகத்3ருஷ்டாந்தத்தைக்குறிக்கிறது. எனவே இங்கும் 'வரணம் அநுபாய:, நிவ்ருத்த்யங்க3கத்வாத், வ்யதிரேகேண யஜ்ஞாதி3வத்' என்று அநுமாநத்தைக்கொள்ளவேணும். 'ய: உபாய: ஸ: ப்ரவ்ருத்த்யங்க3க:, யஜ்ஞாதி3வத்' என்ற வ்யதிரேகவ்யாப்தி உள்ளது. இப்படி ஸாத்4யாப4ாவமானது இரண்டாவது அநுமாநத்தால் ஸாதி4க்கப்படுகிறபடியால் முதல் அநுமாநம் ஸத்ப்ரதிபக்ஷம் என்ற தோ3ஷத்தை உடையதாகிறது.

பக்கம் - 90

(1) ப4க்த்யாதி3கள் ஸர்வேஶ்வரப்ரஸாத3மாகிற அத்3ருஷ்டத்தை உண்டாக்குகின்றன. அந்த அத்3ருஷ்டமே ப2லஹேதுவாகிறது. அவ்யவஹிதப2லஹேதுத்வம் ப4க்த்யாதி3களுக்கு இல்லாதபடி-யால் அவற்றில் வரும் உபாயஶப்3த3ப்ரவ்ருத்தி4களுக்கு ஸங்குசிதத்வம் வருகிறது.

(2) ஶ்ருதிவாக்யஸ்யோபே3ாரணய - ஶ்ருதிவாக்யவிவரணத்துக்காக

(3) ரக்ஷணே ஸாது4ம் - ரக்ஷணத்தில் முழுமையானவனே

(4) ப2லப்ரத3த்வாதிரிக்தோபாயத்வம் - ப2லப்ரத3த்வோபயுக்தக்ருபாவிஶிஷ்டத்வம். இதுவே க்ருஷ்ணனுக்குள்ள த4ர்மத்வம்.

(5) கரணே ல்யுட3ந்தப்ரஸித்3தி4 - ஸாத்4யதே அநேநேதி ஸாத4நம், என்று 'ஸாத4ந'ஶப்3த3மானது கரணார்த்த2த்தில் வந்த 'ல்யுட்'ப்ரத்யயாந்தஶப்3த3மாகும்.

பக்கம் - 91

(1) இவற்றிலொன்றை ஸ்வீகரிக்கும்போது மற்றதுக்கு அப்ராமாண்யம் ஸித்3தி4க்கும்.

(2) ஶரணாக3தே: அங்க3ாநி - ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப:, ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம் இத்யாதீ3நி, என்று வைஶதி3ரகண்யநிர்த்தே3ஶம் பண்ணாமல் ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப: ஶரணாக3தி:, ப்ராதி-கூல்யஸ்ய வர்ஜநம் ஶரணாக3தி: என்று ஒவ்வொரு த4ர்மத்தையும் ஶரணாக3தியுடன் ஸமாநாதி4கர-ணமாக நிர்த்தே3ஶம் பண்ணினது ஷஷ்ட்2யர்த்த2ம்(ஆறுமே ஶரணாக3தி) என்று கொள்வதற்காக. அதனால் தான் இவற்றில் ஒன்றை அங்கி3யென்றும் மற்றவைகளை அங்க3மென்றும் கொண்டு அங்க3ாங்கி3ப4ாவத்தை நிர்த்தே3ஶியாதே ஆறுவித4ம் ஶரணாக3தி என்று ஸம்ப்ராத4ாநய-நிர்த்தே3ஶம் பண்ணிற்று. இப்படிக்கொண்டால் அங்க3ாங்கி3களிலே ஷட்3வித4த்வம் சொன்னது உபசாரம் என்று ஆஶ்ரயிக்கவேண்டிய க்லேஶமுமில்லை.

(3) பரத்தை உத்3தே3ஶமாகக்கொண்ட க்ருதியாகிற யாக3ாதி3க்குக்காரகமாக (உத்பாத3கமாக) விதி4க்கப்பட்டது அங்க3ம் - என்று பூர்வமீமாம்ஸையில் 3வது அத்4யாயத்தில் சொல்லப்-பட்டுள்ளது. இந்த அங்க3லக்ஷணம் ப்ரயாஜாதி3களுக்கு வரும். ப்ரபத்திஶாஸ்த்ரத்தில் இந்த லக்ஷணத்தைக்கொள்ளமுடியாது. ஏனெனில் கோ3ப்த்ருத்வ(ரக்ஷிக்கும்)ஶக்தியானது பரோத்3தே3ஶ்யக்ருதிகாரகமன்று. ஆயினும் அது அங்க3ம் என்று வ்யவஹரிக்கப்பட்டுள்ளது. அகர்த்தவ்யங்களான விரோத்4யப4ாவாதி3களுக்கு உபாங்க3த்வம் சொல்லப்பட்டுள்ளது. ஆகையாலே ஆறும் ஸம்ப4ாவிதஸ்வப4ாவங்கள் என்கை உசிதம்.

(4) 'ப்ரபத்திஸ்ஸாத4நம், ஸாங்க3த்வாத், த4ர்மபூர்ணமாஸாதி3வத்' என்ற அநுமாநத்துக்கு ப்ரவ்ருத்த்யங்க3கத்வம் உபாதி4: என்று ஸோபாதி4கத்வதோ3ஷம் சொல்லப்பட்டது. உபாதி4 என்பது பக்ஷத்தில் இருக்கக்கூடாது. ஆநுகூல்யஸங்கல்பாதி3கள் ப்ரவ்ருத்திகள். அவை ப்ரபத்தி-யில் இருக்கின்றன. எனவே உபாதி4க்கு பக்ஷவ்ருத்தித்வமாகிற ஶங்கை வருகிறது. இவை அங்க3ங்களல்ல, ஸம்ப4ாவிதஸ்வப4ாவங்கள். எனவே இந்த ஶங்கை நிரஸிக்கப்பட்டதாகிறது.

பக்கம் - 92

(1) ப்ரஸாதி3தம் - அநுக்3ரஹிக்கப்பட்டது; ஸம்ஸ்க்ருதம் - அலங்கரிக்கப்பட்டது.

(2) உபாயாதீ4நமான ப2லம் - ஸ்வார்த்த2கைங்கர்யம். உபாயாதீ4நப2லவ்யதிரேகம் - பரார்த்த2-கைங்கர்யம். உபாயாதீ4நப2லவ்யதிரேகப்ரயோஜகம் - ப4க3வத்க்ருபை. உபாயாதீ4நப2லவ்யதிரேக-ப்ரயோஜகவ்யதிரேகம் - ப4க3வத்3வைமுக்2யமாகிற வரணப4ாவம். உபாயாதீ4நப2லவ்யதிரேகப்ர-யோஜகவ்யதிரேகப்ரதியோகி3 - வரணம். இத்தால் அப4ாவப்ரதியோகி3யே வரணம் என்று தெரிகிறது. அப4ாவப்ரதியோகி3யானது ஸ்வரூபாதிரேகமன்று. எனவே வரணமானது ஆத்ம-ஸ்வரூபாதிரேகமன்று. எனவே அது உபாயமன்று. அதிகாரிவிஶேஷணலக்ஷணத்தில் 'ஹேது'-ஶப்3த3மிருந்தாலுங்கூட அது ஸ்வரூபாநதிரேகமான த4ர்மத்தையே காட்டுகிறது. அந்த த4ர்மமே வரணமாகும்.

(3) ப$_4$க்திக்கும், ப்ரபத்திக்கும் ப்ரமாணங்கள் பி$_4$ந்நங்களாகையால் ப$_4$க்தியை ப்ரபத்திக்கு ப்ரதிப$_3$ந்தி$_4$யாக்கி ப்ரபத்தியின் அநுபாயத்வத்தை ஆக்ஷேபிக்கமுடியாது.

பக்கம் - 93

(1) அதி$_4$காரிவிஶேஷணத்துக்குச்சொல்லும் லக்ஷணத்துக்கு ப்ரபத்தியானது ஒத்திராமையாலே அது அதி$_4$காரிவிஶேஷணமன்று, உபாயம் என்னுமது அலக்$_3$நகம்(பொருத்தத்தையுடையதன்று).

(2) உபக்ஷேபரூபமாக - எடுத்துச்சொல்லுதல் ரூபமாக.

(3) 'வரணம் அநுபாய: ப்ரவ்ருத்த்யஸஹத்வாத், வ்யதிரேகேண ஸாத்$_4$யோபாயவத்' என்பது அநுமாநம். வரணமானது அத$_4$ர்மநிவ்ருத்தியை ஸஹிக்கிறபடியால் ஸ்வரூபாஸித்$_3$தி$_4$ (ஹேத்வஸித்$_3$தி$_4$) என்கிற தோ$_3$ஷம் வருமே என்றால், வராது; ஏனெனில் ப்ரவ்ருத்திகளை வரணம் ஸஹியாதேயொழிய நிவ்ருத்தியை ஸஹிக்கும். ப$_4$க$_3$வத்ப்ரவ்ருத்தியை ஸஹியாதபடியால் மீண்டும் ஸ்வரூபாஸித்$_3$தி$_4$ வருமேயென்றால், வராது; ஏனெனில், சேதநப்ரவ்ருத்திகளை வரணம் ஸஹியாதேயொழிய, ப$_4$க$_3$வத்ப்ரவ்ருத்திகளை ஸஹிக்கும். விஶேஷ்யமாயுள்ள ஸ்வீகாரமாகிற ப்ரவ்ருத்தியை ஸஹிக்கிறபடியால் மீண்டும் ஸ்வரூபாஸித்$_3$தி$_4$ வருமேயென்றால், வராது; ஏனெனில், ஸ்வீகாரரூபமான தன்னையொழிந்த ப்ரவ்ருத்திகளை ஸஹியாதேயொழிய, ஸ்வீகாரரூபமான தன்னை ஸஹிக்கும்.

பக்கம் - 94

(1) ப$_4$க$_3$வானுகிற ப$_2$லம் இனிமேல் ஸாதி$_4$க்கப்படவேண்டாதது. எனவே அதை ஸாதி$_4$ப்பதற்காக அத்$_3$ருஷ்டத்$_3$வாரகமான ஸாத$_4$நம் வேண்டியதில்லை.

(2) ஸ்வார்த்த$_2$தையற்று ப$_4$க$_3$வானுக்கு மட்டுமே அதிஶயத்தை விளைவிப்பதற்குத்தகுதியாயிருத்தல் தத$_3$கஶேஷத்வமாகும். 'பரக$_3$தாதிஶயாதா$_4$நேச்ச$_2$யா உபாதே$_3$யத்வம் யஸ்ய ஸ்வரூபம் ஸ ஶேஷ:' என்று ஏவகாரரஹிதமாக ஶேஷலக்ஷணத்தைக்கொள்ளும் பக்ஷத்தில் ஸ்வார்த்த$_2$தையைத்-தவிர்ப்பதற்காக தத$_3$கஶேஷத்வம் என்று 'ஏக'ஶப்$_3$த$_3$ம் வருகிறது. ஸ்வார்த்த$_2$தாராஹித்யமானது ப்ரணவத்திலுள்ள லுப்தசதுர்த்தி$_2$, உகாரம் என்பவைகளின் அர்த்த$_2$மாகும். தத$_3$கரக்ஷ்யத்வ-மாவது - அத்$_3$ருஷ்டத்தை த்$_3$வாரமாகக்கொண்ட ஸாத$_4$நாநுஷ்டா$_2$நத்தால் தான் செய்யும் ரக்ஷணகர்மத்துக்கு அநர்ஹமாயிருக்கையுடன் கூட உபாயத்தை அபேக்ஷியாதவனான ப$_4$க$_3$வா-னுக்கு ரக்ஷ்யனாயிருக்கை. இது ப்ரணவத்திலுள்ள அகாரமகாரங்களின் சேர்க்கையினால் கிடைக்கும். அகாரமானது ப$_4$க$_3$வானை ரக்ஷகனென்று காட்டுகிறது; தே$_3$ஶ,கால,அதி$_4$காரி,அவஸ்தா$_2$ என்ற உபாதி$_4$களைக்காட்டவில்லை. மகாரமானது ஜீவாத்மஸாமாந்யத்தைக்காட்டுகிறது. எனவே இந்த இரண்டாலும் ஸகலஜீவாத்மாக்களும் தத$_3$கரக்ஷ்யர்கள் என்று காட்டப்படுகிறார்கள். இப்படிப்பட்ட ஆத்மஜ்ஞாநம் உபாஸகனிடமில்லை.

(3) விலக்காதமாத்ரமானால் - விலக்காமை மட்டும் ப்ரபத்தியானால்.

(4) ப்ரதிப$_3$ந்த$_4$கப$_4$ாவவித$_4$யா - ப்ரதிப$_3$ந்த$_4$காப$_4$ாவரூபமாக

பக்கம் - 95

(1) 'ஶரணம் வ்ரஜ' என்று ஸ்வீகாரத்தை விதி$_4$த்த ப$_4$க$_3$வானை தன்னுடைய வசநத்துக்கே விருத்$_3$த$_4$மாகிவிடும், இஸ்ஸித்$_3$தோ$_3$பாயமானது ஸ்வீகாரத்தையும் அபேக்ஷியாதது என்று பு$_3$த்$_3$தி$_4$ பண்ணினால்.

(2) ஸாவதா$_4$ரணஶேஷத்வப்ரதிஸம்ப$_3$ந்தி$_4$யான - தத$_3$கஶேஷத்வப்ரதிஸம்ப$_3$ந்தி$_4$யான - ஸ்வார்த்த$_2$தாரஹிதஶேஷத்வப்ரதிஸம்ப$_3$ந்தி$_4$யான.

(3) பெரும்பாலும் வாஸனையின் ஸம்ப$_3$ந்த$_4$த்தால் கட்டளைகளிலிருந்து கு$_3$ணஶ்ருதியை வேறொன்றில் நோக்குடையதாக அறிகிறார்கள் ப$_4$ாக்$_3$யாதி$_4$கர்களான நரர்கள். ப$_4$க$_3$வானுடைய கு$_3$ணம், ஸம்ப$_3$ந்த$_4$ம், ஶக்தி முதலியவற்றால் வரும் உறுதியால் அந்த கு$_3$ணஶ்ருதியை 'ப$_4$க$_3$வானே ஸாத$_4$நம் என்று போ$_3$தி$_4$க்கக்கூடியது' என்று கருதுகிறார்கள்.

பக்கம் - 96

(1) ப்ரப$_3$லதரங்களான தத்த்வபரவாக்யங்களின் ஸ்வாரஸ்யத்தில் சாய்தலால்.

(2) ப$_4$க$_3$வானுக்கு அத்யந்தம் அபி$_4$மதமாயுள்ளது அத்$_3$ருஷ்டத்$_3$வாரகஸாத$_4$நப்ரவ்ருத்த்யநர்ஹ-மான ஆத்மஸ்வரூபம். அதில் அநுப்ரவிஷ்டமாயுள்ள விஶிஷ்டாபி$_4$மதியானது ஆத்மஸ்வரூபத்தின் அத்$_3$ருஷ்டத்$_3$வாரகஸாத$_4$நப்ரவ்ருத்த்யநர்ஹத்வாபி$_4$மதி. இந்த அபி$_4$மதிக்கு விஷயமாயிருக்கை தத$_3$கபாரதந்த்ர்யரூபஸ்வரூபம். இந்த அபி$_4$மதிக்கு அவிஷயமாயிருக்கை

ததே3கபாரதந்த்ர்யரூபஸ்வரூபஹாநி.

பக்கம் - 97

(1) ஸ்வஸ்வாதந்த்ர்யத்தின் ஜ்ஞாநம் உபாயாந்தரப்ரவ்ருத்த்யநர்ஹத்வஜ்ஞாநத்துக்கு விரோத4மானது என்று சொல்லப்படுகிறது.
(2) ஸ்வாதந்த்ர்யமாகிற தான் தனக்குரியன் என்ற பு3த்3தி4யானது 'ந மம' என்ற வாக்கைக்கொண்டு வணங்குபவனாலே தன்னிடமிருந்து போக்கடிக்கப்படுகிறது.
(3) ஈத்3ருஶவ்யாஜத்வம் - இப்படிப்பட்ட ஸஹகாரித்வம்.
(4) 'உசிதம் என்று' - இந்த இரண்டு பத3ங்களும் இல்லாமலிருந்தால்தான் வாக்யம் அந்வயிக்கும்.
(5) உபக3தமாகையாலே - அறியப்படுகையாலே. தா4துவின்மேல் வரும் லிங், லோட், தவ்ய என்ற ப்ரத்யயங்களுக்கு 'தா4த்வர்த்த2மான க்ரியையானது ப்ரயத்நஸாத்4யம்' என்பது மட்டும் அர்த்த2மேயொழிய தா4த்வர்த்த2ம் உபாயம் என்பது அர்த்த2மன்று என்று பா4ஷ்யாதி3களிலே அறியப்படுகிறது.
(6) இது ரஹஸ்யத்ரயஸாரம் சரமஶ்லோகாதி4காரத்தில் 'ஏக'ஶப்3தா3ர்த்த2விவரணத்தில் (பக்கம் 668) சொன்ன ஆக்ஷேபத்துக்கு ஸமாதா4நம்.
(7) 'நாத்மா ஶ்ருதே: நித்யத்வாச்ச தாப்4ய:' (ஶா.மீ.2-3-18) என்ற ஸூத்ரத்தில் சொல்லப்பட்ட ஶ்ருதிவ்யக்திகளைக்காட்டிலும் 'ஜ்ஞ: அத ஏவ'(ஶா.மீ.2-3-19) என்ற ஸூத்ரத்தில் சொல்லப்பட்ட ஶ்ருதிவ்யக்திகள் வேறானவை. ஶ்ருதிவ்யக்திபே4த3மிருந்தாலும் 'அத:' என்ற ஶப்3த3மானது அர்த்த2வஶத்தால் தேவையான வாக்யவிஶேஷத்தைக்காட்டுகிறது. அவ்வாறே இங்கும் 'அத்ரை' என்ற ஶப்3த3ம் அபேக்ஷிதமான ஆபத்3விஶேஷத்தைக்காட்டுகிறது.

பக்கம் - 98

(1) அபேக்ஷையானது தனக்கு வ்யாபகமான அநுமதியை அநுமித்துக்கொடுக்கிறது. எனவே ப்ரபத்தியே அநுமதிரூபம் என்று தேறும். 'ப்ரபத்தி: அநுமதி: அபேக்ஷாரூபத்வாத், இதராபேக்ஷாவத்' என்பது அநுமாநம். உபாயத்வப்ரார்த்த2னையும் ப்ரபத்தியானது அநுமதிரூபம் என்று அநுமித்துக்கொடுக்கும். 'ப்ரபத்தி: அநுமதி: உபாயத்வப்ரார்த்த2நாரூபத்வாத், வ்யதிரேகேண த3ர்ஶபூர்ணமாஸாதி3வத்' என்பது அநுமாநம். 'யத்ர அநுமத்யபா4வ: தத்ர உபாயத்வப்ரார்த்த2நாரூபத்வாபா4வ:, த3ர்ஶபூர்ணமாஸாதி3வத்' என்பது வ்யதிரேகவ்யாப்தி.
(2) யாச்ஞா - ப்ரார்த்த2னையாகிற ஜ்ஞாநவிஶேஷம்.
(3) 'யாச்ஞா ப்ரபத்தி:' என்கிறவிடத்தில் 'யாச்ஞா' என்பது லக்ஷணம், 'ப்ரபத்தி:' என்பது லக்ஷ்யம். இங்கே யாச்ஞா = ப்ரார்த்த2நாமதி:. 'ப்ரார்த்த2நாமதி: ஶரணாக3தி:' என்பது இன்னொரு ப்ரமாணவாக்யம். எனவே ப்ரபத்தி:, ப்ரார்த்த2நாமதி:, ஶரணாக3தி: என்ற மூன்றும் ஒன்றே என்று தேறும். 'யாச்ஞா ப்ரபத்தி:' என்பது ப்ரபத்திலக்ஷணவிதி4. 'ப்ரபத்தி: ஶரணாக3தி:' என்பது 'ஶரணாக3தி'ஶப்3த3த்துக்கு 'ப்ரபத்தி'ஶப்3த3பர்யாயத்வவிதி4. இப்படி அர்த்த2த்3வயமானது விதி4க்கு விஷயமானால் வாக்யபே4த3ம் வரும். இது கூடாது. எனவே 'யாச்ஞா ப்ரபத்தி: ஶரணாக3தி:' என்று ஏகவாக்யமாகக்கொள்ளலாம். இதன் பொருள் :- ப்ரபத்தியாகிற ஶரணாக3தியானது ப்ரார்த்த2நாரூபஜ்ஞாநவிஶேஷம். இதில் 'ஶரணாக3தி' என்ற ஶப்3த3மானது ரக்ஷ்யத்வாத்4யவஸாயாத்மகமான ப்ரபத்திவிஶேஷத்தை வ்யாவர்த்திக்கிறது. 'யாச்ஞா'ஶப்3த3மானது லக்ஷணகத2நம்.

பக்கம் - 99

(1) 'உபாஸநம் அநுப்ரதிஷேத்4ய:, உபாயத்வாத், த3ர்ஶபூர்ணமாஸாதி3வத்' என்ற அநுமாநம் கருதப்பட்டுள்ளது.
(2) 'யஜேத', 'த்4யாயீத' என்ற ஸாமாந்யோக்திக்கு 'ஜ்யோதிஷ்டோமேந', 'ஸத்3வித்3யயா' முதலிய விஶேஷங்களில் பர்யவஸாநமிருப்பதை வைத்துச்சொல்கிறார்.
(3) உபக3மரூபமான - ஜ்ஞாநரூபமான.
(4) ரக்ஷணவ்யபி4சாரியாய் - ரக்ஷணத்துக்கு அநியதமாய் - ரக்ஷணத்துடன் சேர்ந்தே இருக்கவேண்டும் என்ற நியதியற்றதாய்.

பக்கம் - 100

(1) 'அநுமதிரியம் ஸாத4நம், ரக்ஷணத்பூர்வம் ரக்ஷ்யவ்ருத்தித்வாத், உபாஸநவத்' என்ற அநுமாநம் ப2லகாமநாயுக்தபுருஷதந்த்ரத்வத்தாலே ஸோபாதி4கம். 'யத்ர ஸாத்4யத்வே ஸதி ஸாத4நத்வம் தத்ர ப2லகாமநாயுக்தபுருஷாதீ4நத்வம், யதா2 உபாஸநே' என்று ஸாத்4யவ்யாபகத்வம் வருகிறது.

ரக்ஷணத்பூர்வம் ரக்ஷ்யவ்ருத்தித்வமாகிற ஸாதநமானது புருஷனிடமுள்ள ப்ரமேயத்வத்தில் இருக்கிறது. ஆனால் பலகாமநாயுக்தபுருஷதந்த்ரத்வமானது அதில் இல்லே. அதாவது புருஷனிட-முள்ள ப்ரமேயத்வமானது புருஷாதீநமன்று. எனவே ப்ரமேயத்வத்தில் ஸாதநாவ்யாபகத்வம் வருகிறது.

இந்த அநுமதி ஜ்ஞாநரூபமாகவுள்ளது. எனவே புருஷாதீநமன்று. பலகாமநாரஹிதனிடமும் இது உள்ளது. எனவே பலகாமநாயுக்தபுருஷதந்த்ரத்வமானது பக்ஷமாகிற அநுமதியில் இல்லே. எனவே பக்ஷத்தில் உபாதிநிவ்ருத்தி உண்டு. ஸ்வீகாரம் வித்யுக்தப்ரயத்நஸாத்யமேயொழிய, அநுமதி வித்யுக்தப்ரயத்நஸாத்யமன்று; ஆத்மஸ்வரூபத்தின் பாரதந்த்ர்யைகவேஷத்தின் ஜ்ஞாநத்தால் வந்தது.

(2) உபகமரூபமான - ஜ்ஞாநரூபமான.

(3) உபாஸநஶாஸ்த்ரம் பாரதந்த்ர்யஜ்ஞாநரஹிதனை ஶக்தனே விஷயமாகக்கொண்டது. உபாயப்ரபத்திஶாஸ்த்ரம் பாரதந்த்ர்யஜ்ஞாநரஹிதனை அஶக்தனே விஷயமாகக்கொண்டது.

(4) அசேதநத்திலே ரக்ஷ்யத்வம் உள்ளது. ஆனால் அநுமதி இல்லே. எனவே அநுமதியானது ரக்ஷ்யத்வத்துடன் கூட அறியதமாக உள்ளது. சேதநன் பக்கலிலே உள்ள அநுமதி யதாவஸ்திதஸ்வபாவஜ்ஞாநத்தால் இயற்கையாகவே வருவதாக இருப்பதால் புருஷாதீநத்வமற்றதாய் உள்ளது. எனவே சைதந்யகார்யமாகை என்றால் அசேதநத்தில் இல்லாமலிருக்கையும், சேதந-னிடத்தில் அபுருஷதந்த்ரமாயிருக்கையுமேயாகும்.

உபாஸநம் புருஷதந்த்ரம். எனவே அது இங்கு விவக்ஷிக்கப்பட்ட சைதந்யக்ருத்யமாகாது. சேதநனிடத்தில் உண்டான மற்ற ப்ரவ்ருத்திகள் யதாவஸ்திதஸ்வபாவஜ்ஞாநத்தால் ஸ்வத ஏவ வருபவையல்ல. எனவே அவையும் இங்கு விவக்ஷிக்கப்பட்ட சைதந்யக்ருத்யமாகா. எனவே 'அநுமதி சைதந்யக்ருத்யம் என்றால் உபாஸநாதிகளும் மற்றுள்ள சேதநப்ரவ்ருத்திகளுமெல்லாம் சைதந்யக்ருத்யமாகையாலே இதுக்கொரு வாசி சொல்லிற்றாகாது' (ர.ஸா.சரம.பக்கம் 668) என்னும் ஶங்கை பரிஹரிக்கப்பட்டதாகிறது.

(5) ததேகரக்ஷ்யத்வாநுமதிக்குப்புருஷதந்த்ரத்வமே வந்ததாயிருக்கை என்கிறவித்தால் விலக்கப்படுமது உபதேஶத்தின் தேவையின்மை, உபதேஶமன்று.

ஆக்ஷேபம் :- ததேகரக்ஷ்யத்வஜ்ஞாநத்தை ஸம்பாதித்த பிறகு தானே அவன் பண்ணும் ரக்ஷணத்துக்கு இசைந்திருக்கையாகிற அநுமதி சேதநனிடம் ஏற்படுகிறது. எனவே ஜ்ஞாநஸம்பாதநத்துக்காக முயற்சி செய்துதானே ஆகவேணும். இப்படி ஜ்ஞாநஸம்பாதநமாகிற முயற்சியினால் அடையப்படும் அநுமதிக்குப்புருஷாதீநத்வமே வந்துவிடுகிறதே.

ஸமாதாநம் :- அநுமதியானது அபுருஷதந்த்ரம் என்றால் உபதேஶத்தைக்கேட்கையாகிற முயற்சி கூட இல்லாமல் இது பெறப்படுகிறது என்று அர்த்தமன்று. எனவே அநுமதி அபுருஷதந்த்ரம் என்ற வார்த்தையால் உபதேஶம் தேவையில்லே என்று கூறப்படவில்லே. ஆயின் ஜ்ஞாநஸம்பாத-நத்துக்கு மேற்பட பலத்தை அடைவதற்கு ஸாதநமாக விதிக்கப்பட்ட ஒரு முயற்சியாக இந்த அநுமதி ஆகாது என்றே கூறப்படுகிறது. அநுமதியானது பலத்துக்கு ஸாதநத்தை விதிக்கும் ஒரு விதியினால் வரவில்லே, ஆத்மஸ்வரூபத்தின் ததேகரக்ஷ்யத்வஜ்ஞாநத்தினாலேயே வந்து விடுகிறது. இப்படி பலஸாதநவிதியினால் வாராமையே அநுமதியின் அபுருஷதந்த்ரத்வமாகும். எனவே ரஹஸ்யத்ரயஸாரத்தில் கூறப்பட்ட 'சேதநனுக்குத்தானே வரும் என்று விவக்ஷிக்கில் உபதேஶிக்க வேண்டாதொழியும்' என்ற ஆக்ஷேபம் ஸமாதாநமுரைக்கப்பட்டதாக ஆகிறது.

### பக்கம் - 101

(1) அசித்வ்யாவ்ருத்தத்வமானது அதிகாரத்துக்காக உள்ளது , ஸாதநத்துக்காக அன்று.

(2) நிருபாதிகரக்ஷகனுக்கு வாசகம் அகாரம், கைங்கர்யத்துக்கு வாசகம் வ்யக்தசதுர்த்தி, விரோதிநிவர்த்தநத்துக்கு வாசகம் நமஸ்ஸு, இவற்றை அறிகைக்கீடான ஜ்ஞாத்ருத்வத்தைக்-காட்டக்கூடியது மகாரம். ஸம்ருத்யநுபவரூபமான இந்த ஜ்ஞாத்ருத்வத்துக்கு ஸ்வவிபாகாநுகுண-முக்யப்ரயோஜநம் உபாயாதிவிஷயகோபகாரஸம்ருத்யாதிகள், உபாயாபேக்ஷிதமான அநுமதி தவிரக்கமுடியாமல் தன்னடையே வரக்கூடியது. உபாஸநாதிகள் ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயபுத்தி-யாகிற உபாதியினால் வரும் ப்ரயோஜநங்கள்.

### பக்கம் - 102

(1) வசநம் வருமாறு - 'ஸர்வஜ்ஞோऽபி ஹி விஶ்வேஶ: ஸதா காருணிகோऽபி ஸந் ;

ஸம்ஸாரதந்த்ரவாஹித்வாத்3ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே ॥' (ல.த.17-79).
(2) ப்ரக்ருதார்த்த2ஸம்வாத3ம் - ப்ரக்ருதார்த்த2த்துக்கு அநுகூலமாயுள்ள ப்ரமாணம்.
(3) என்னவும் கூடாது - 'என்று கூடச்சொல்லக்கூடாது' என்று இச்சேதநனுடைய நினைவுக்கு உபாயத்வத்தை முழுவதுமாக நிஷேதி4க்கலாகாது என்பது மங்கிப்பவரின் அபி4ப்ராயம்.

பக்கம் - 103

(1) 'ந தஸ்ய கார்யம் கரணஞ்ச வித்3யதே'(ஶ்வேதா.5-8) என்று ஈஶ்வரனுக்கு கரணநிஷேத4ம் பண்ணப்பட்டுள்ளது. ஸ்வஸங்கல்பத்துக்கு அதிரிக்தமான லௌகிகோபகரணங்கள் அற்றவன் என்று அந்த நிஷேத4த்துக்கு அர்த்த2மேயொழிய சேதநலாப4த்துக்காக ஸாத4நாநுஷ்டா2நம் பண்ணமுடியாதவன் என்று அர்த்த2மன்று. அவதரித்தல், உபதே3ஶித்தல், த4ர்மங்களைத்தானே அநுஷ்டி2த்துக்காட்டுதல், அர்ச்சாரூபியாக எழுந்தருளியிருத்தல் முதலியவை சேதநனைப்பெறுவதற்காக அவன் பண்ணும் ஸாத4நாநுஷ்டா2நங்களேயாம்.
(2) 'ப்3ரஹ்மவித்3ஆப்நோதி பரம்' (ப்3ரஹ்மத்தை உபாஸிப்பவன் உத்க்ருஷ்டமான அந்த ப்3ரஹ்மத்தை அடைகிறான்) என்று ஜீவன் ப்3ரஹ்மத்தை அநுப4விப்பதாக ஶாஸ்த்ரம் சொல்லுகிறது. ஜீவனுக்கே போ4க்த்ருத்வம் இருப்பதாக இதிலிருந்து தெரிகிறதே என்றால், அன்று; ப4க3வானுக்கு இவன் போ4க்3யனாக ஆவதற்காக போ4க்தாவாக ஆகிறான் என்பது இந்த வாக்யத்தின் பொருளாகும். இவன் போ4க்தாவாக ஆகாதவனாக நின்றால் ப4க3வானுக்கு இவனுடைய அநுப4வமானது அசித3நுப4வத்தைக்காட்டிலும் வேறுபட்டு ரஸமுடையதாக இராது. எனவே அவனுடைய அநுப4வத்தை ரஸவத்தாக ஆக்குவதற்காகவே இவனுடைய போ4க்த்ருத்வம் பயன்படுகிறது. எனவே ப4க3வானே ப்ராப்தாவாகவும், ப்ராப்திக்கு உகப்பவனாகவும் ஆகிறான்.
(3) 'ப்3ரஹ்மவித்3ஆப்நோதி பரம்' என்பதில் 'ஆப்நோதி' என்பதில் பரஸ்மைபத3ப்ரத்யயம் உள்ளது. க்ரியாப4லமானது ஜீவனாகிற கர்த்தாவை அடைவதாக இருந்தால் ஆத்மநேபத3ப்ரத்யயம் வந்திருக்கும். ப2லம் ப4க3வானை அடைவதாயிருப்பதால்தான் பரஸ்மைபத3ப்ரத்யயம் வந்துள்ளது. எனவே சேதநலாப4ம் ஈஶ்வரனுடையது என்று தேறுகிறது. இந்த த4ாது உப4யபதி3யன்றோ என்னலாகாது; ஶ்ருதியாகையால், தேவையானால் ஆத்மநேபத3ம் வந்திருக்கலாம் என்று அபி4ப்ராயம்.
(4) ப்ராபகன் - ப்ராபிப்பிக்கும் உபாயம் - அடைவிக்கும் உபாயம். ப்ராபயதே: கர்த்தா - ப்ராபக : - அடைவித்தலுக்குக்கர்த்தா.ப்ராப் + ண்வுல்=ப்ராப் + அக=ப்ராபக.ப்ராபக+ஸு=ப்ராபக:.
(5) ஸத்யஸங்கல்பத்வம் - அஹேதுத்வே ஸதி அதிப்ரஸங்க3வாரகமான வ்யாஜத்தையிட்டு ரக்ஷிப்பதாக அடியிலே பண்ணிவைத்த அமோக4ஸங்கல்பயுக்தத்வம். இச்சேதநனுடைய வரணமானது அஹேது. ஸர்வமுக்திப்ரஸங்க3த்தை பரிஹரிக்கும் வ்யாஜம்(ஸஹகாரி). இதையிட்டு இச்சேதநனை ரக்ஷிப்பேன் என்று எம்பெருமான் வீணாகாத ஸங்கல்பத்தைப்பண்ணிவைத்தான். அந்த வீணாகாத ஸங்கல்பத்தையுடைமையே அவனுடைய ஸத்யஸங்கல்பத்வமாகும்.
(6) வாக்யம் 70ல் 'ப்ராப்திக்கு உகப்பான்' என்று ப4க3வானுடைய நாமம் நிர்தே3ஶிக்கப்பட்டுள்ளது. ப்ராப்திக்கு உகக்கை என்பது அவனுடைய நிரூபகத4ர்மம். அதையிட்டே அவனுடைய நாமம் நிர்தே3ஶிக்கப்பட்டபடியால் அவன் இவ்வாத்மாவுக்கு நித்யபோ4க்தா என்ற அர்த்த2ம் கிடைக்கும்.

பக்கம் - 104

(1) 'ப்4ராஜிஷ்ணுர்போ4ஜநம் போ4க்தா'(ஸஹஸ்ரநாமம் - 16). ப்4ராஜிஷ்ணு: - உபாஸிதாக்களுக்கு ப்ரகாஶிக்கும் ஸ்வபா4வத்தையுடையவன். தை: பு4ஜ்யதே - ஸுகே2ந அநுபூ4யதே இதி போ4ஜநம். அந்த உபாஸகர்களால் ஸுக2மாக அநுப4விக்கப்படுமவன். எனவே ப4க3வானே அவர்களுக்கு போ4ஜநம். 'ஸ்வயமபி தத3ர்ப்பிதஸ்ய ப்ராபணஹதே3, அம்ருதஸ்யேவ போ4க்தா' - தானும் அவர்கள் அர்ப்பித்ததை அம்ருதத்தை அடைந்தாற்போலே பு4ஜிப்பவன்.
(2) சரமஶ்லோகத்திலுள்ள 'ஏக'ஶப்3த3ம் ப்ராபகன் அவனே என்று காட்டுகிறது. சேதநன் கையிலுள்ள ஒன்றும் ப4க3வானை அடைவதற்கு உபாயமன்று. திருமந்த்ரத்தில் வ்யக்தசதுர்த்2யந்விதநமஸ்ஸு காட்டும் அர்த்த2ம் - 'ஸர்வஶேஷியான நாராயணனுக்கே எல்லா அடிமைகளும் செய்யப்பெறுவேனாகவேணும், என்னுடைய போ4க3த்துக்காக அன்று' என்பது. இத்தால் 'ப்ராப்திக்கு உகப்பானுமவனே' என்று தேறுகிறது.
(3) ஶரணாக3தனிடத்தில் மிகுந்த ப்ரீதியுடன் ப4க3வான் இருக்கிறான். அப்படி இருக்கும்

அவனுடைய அபி4ப்ராயத்தைப்பின் செல்லக்கூடிய ஸ்வரூபாதி3களை உடைமையே பாரதந்த்ர்ய-மாகும். அந்த பாரதந்த்ர்யத்தின் கார்யமே ஸ்வயத்நநிவ்ருத்திபூர்வகமான ஸித்3தோ4பாய-நிஷ்டை2யாகும். ஸித்3தோ4பாயநிஷ்டை2யே ஶரணாக3தி எனப்படுகிறது.

பக்கம் - 105

(1) 'அஹம் ஸர்வம் கரிஷ்யாமி'(ரா.ஆ.31-25) என்பது இளையபெருமாள் வார்த்தை. இதில் 'கரிஷ்யாமி' என்பதில் பரஸ்மைபத3ப்ரத்யயம் வந்துள்ளது. 'ஸ்வரிதஞ்ஞித: கர்த்ரபி4ப்ராயே க்ரியாப2லே'(பா.ஸூ.1-3-72) என்பது ஸூத்ரம். இதன் பொருள் - ஸ்வரிதஸ்வரத்தையுடைய 'இத்'தையுடைய தா4துக்கள் 'ஞித்'தான தா4துக்கள் என்ற இவற்றின் மேல் ஆத்மநேபத3ப்ரத்யயம் வரும். க்ரியாப2லமானது கர்த்தாவை அடைந்ததென்றால். எந்த ப2லத்துக்காக க்ரியையானது ஆரம்பிக்கப்படுகிறதோ அந்த ப2லமே க்ரியாப2லமாகும். அந்த ப2லமானது லகாரவாச்யனான கர்த்தாவை அடைந்தால் தா4துவின் மேல் ஆத்மநேபத3ம் வரும். 'யஜதே' - தனக்காக யாக3ம் செய்கிறான்.இதில் க்ரியாப2லம் கர்த்தாவை அடைவதால் ஆத்மநேபத3ம் வந்துள்ளது. 'அஹம் ஸர்வம் கரிஷ்யாமி' எனபதில் 'க்ருஞ்'தா4துவின் மேல் ஆத்மநேபத3ம் வரவில்லை. எனவே இளையபெருமாள் செய்யும் கைங்கர்யங்களின் ப2லம் ராமபிரானைச்சேர்ந்ததேயொழிய இளையபெருமானைச்சேர்ந்ததல்ல. அதுவே வழுவிலா அடிமையாகும். அதை நம்மாழ்வார் பாசுரத்தைக்கொண்டு ஶப்3த3த்தாலேயே காட்டுகிறார்.

(2) வழு என்பது கவனக்குறைவு, தே3ஹாஸக்3தி4யின்மை முதலிய குற்றங்களையும் கூறுமாகையால் அந்தக்குற்றங்களில்லாமல் கைங்கர்யம் செய்யவேணும் என்ற அர்த்த2ம் கூடக்கிடைத்துவிடும். எனவே ஸ்வார்த்த2த்வாப4ாவத்தைத்தெளிவாகக்காட்டுவதற்காக 'உனக்கே நாமாட்செய்வோம்' என்ற பாட்டை எடுக்கிறார்.

(3) பரனுடைய இச்சை2யைப்பின்செல்லும் ஞானத்தினால் அவனுக்கு இஷ்டமான ப்ரவ்ருத்தியை உண்டாக்குதல். சைதந்யத்துக்கு ஶேஷத்வாநுகு3ணப்ரயோஜநமாவது - பரைகப்ரயோஜநாதிஶயா-தா4யகத்வஞ்ஞாநஹேதுகாதிஶயாதா4நஜநிதபரைகார்த்த2ப்ரீதிரூபத்வம். விளக்கம் :- பரனுக்கே ப்ரயோஜநாதிஶயத்தை உண்டாக்கும் ஞானத்தினால் வந்த அதிஶயாதா4நத்தினால் உண்டான பரனையே விஷயமாகக்கொண்ட ப்ரீதிரூபமாயிருத்தல். இவன் தன்னுடைய ஞானத்தினால் கிங்கர-னாகி ப4க3வானுக்கே அதிஶயத்தை உண்டாக்குகிறான். அந்த அதிஶயத்தைப்பெற்று மகிழ்ந்த ப4க3வானைக்கண்டு இவன் ப்ரீதியடைகிறான். இப்படி இவனுடைய ப்ரீதிக்கு விஷயம் இவனுடைய கைங்கர்யத்தைக்கண்டு ஹ்ருஷ்டனாயுள்ள ப4க3வானாவான். ஆக இவனுடைய சைதந்யத்துக்கு ப்ரயோஜநமாவது தன் கைங்கர்யத்தைக்கண்டு மகிழ்ந்த ப4க3வானைப்பார்த்து மகிழ்தலேயாகும்.

(4) உபஸர்ஜநத்வம் - அப்ராதா4ந்யம்.

பக்கம் - 106

(1) ப2லோபதா4நம் - ப2லத்தையடைதல்.

(2) உபாஸகனுடைய ஆத்மா என்றே ப்3ரஹ்மமானது உபாஸிக்கப்படவேணும். அப்படியேயன்றோ முன்புள்ள உபாஸகர்களும் உபாஸிக்கிறார்கள். அவிருத்3த4மாயுள்ள இவ்வர்த்த2த்தை உபாஸகர்-களைக்குறித்து உபபாதி3க்கின்றன ஶாஸ்த்ரங்கள்.

(3) 'யத்ர ஸத்தாகத்வம் தத்ர ப்ரகாரத்வம்' என்று ஆத்மஸத்தைக்கு ப்ரகாரத்வமானது வ்யாபகமானால் ஞானத்3ரவ்யம் ஆத்மாவிலே நித்யமாக இருக்கையாலே 'யத்ர ஆத்மஸத்தா தத்ர ஞானம்' என்று ஞானமும் ஆத்மஸத்தைக்கு வ்யாபகமாகிவிடும். எனவே ஞாத்ருத்வத்தைக்-காட்டிலும் ஶேஷத்வத்துக்கு ப்ராப2ல்யம் சொல்லமுடியாது என்பது பூர்வபக்ஷம்.

(4) ப்ரகாரதயைவ ஸப்3தா4ஸத்தாகமானது ஆத்மவஸ்து என்பதற்கு ப4க3வத்ப்ரகாரதைக்கு அதீ4ந-மான ஸத்தையை உடையது ஆத்மவஸ்து என்று அர்த்த2மானால் ப4க3வத்ஸ்வரூபாதீ4நமான ஆத்மஸத்தைக்கு ஆத்மாவின் த4ர்மபூ4தமான ப்ரகாரத்வத்துக்கு அதீ4நமாயிருக்கையானது ஸம்ப4வியாது. ஆகையால் ப4க3வச்சே2ஷத்வம் ஆத்மாவுக்கு நிரூபகத4ர்மமன்றிக்கேயொழிகிறது; ஞாத்ருத்வமே நிரூபகதர்மமாக நிற்கிறது. எனவே நிரூபகத4ர்மமான ஞாத்ருத்வத்தின் காரணமாக ஏற்பட்ட கர்த்ருத்வபோ4க்த்ருத்வங்களின் ப2லத்தால் வந்த ஸ்வஶேஷத்வத்துக்கு அநுகு3ணமாகவே ப4க3வச்சே2ஷத்வத்தை யோஜிக்கை உசிதம்.

(5) ஶேஷத்வத்துக்கு நிரூபிதஸ்வரூபவிஶேஷணத்வமானது ஸ்வாபி4மதமாகையால் முதலில் அது சொல்லப்பட்டது என்று ஸாரப்ரகாஶிகையிலே சொல்லிற்று.

(6) ம்ருஷாவாதி3மதநிர்தே3ஶச்சா2யாநுகாரிகள் - உலகமே பொய் என்று கூறும் ஶாங்கராத்3வைத-மதத்திலுள்ள ஶப்3த3ங்களை நிழல்போல் பின்பற்றுபவைகள்.
(7) அஹம்பு3த்3தி4க்கு விஷயமான தத்த்வத்தை அந்த:கரணம்(மநஸ்ஸு) என்கிறார்கள் அத்3வைதிகள். மநஸ்ஸு 'மம' (என்னுடையது) என்ற பு3த்3தி4க்கு விஷயமான தத்த்வமாகும். எனவே அஹம்பு3த்3தி4க்கு விஷயமான தத்த்வமானது 'மம' என்ற பு3த்3தி4க்குவிஷயமான மநஸ்ஸாகிற தத்த்வமன்று என்று காட்டுவதற்காக 'ஆத்மவஸ்து' என்கிறார் மாமுநிகள். ஆத்மவஸ்துவானது 'அஹம்' என்ற பு3த்3தி4க்கு விஷயமாகுமேயொழிய 'மம'என்ற பு3த்3தி4க்கு விஷயமாகாது.
(8) அஹந்தையானது ஆதா4ரமான அஹமர்த்த2மில்லாமல் நில்லாது.

பக்கம் - 107

(1) வெளிப்படுவதற்கு வழியான மநஸ்ஸினுடைய ஸஹகாரமின்மையால் தூக்கத்திலும் ப்ரளயத்திலும் த4ர்மபூ4தங்களான ஜ்ஞாநாநந்த3த்3ரவ்யங்கள் இல்லாமல் ஒழிகின்றன. எனவே அவை காதா3சித்கங்கள்(ஒரு ஸமயம் இருந்து ஒரு ஸமயம் இல்லாமல் ஒழிபவை). அவை தடஸ்த2ம் (ப3ஹிரங்க3ம்) என்னில் ஆத்மஸ்வரூபமாகிற த4ர்மியிலேயே எப்பொழுதும் இருப்பவைகளான ஜ்ஞாநத்வம், ஆநந்த3த்வம் என்ற கு3ணங்கள் அந்தரங்க3ம் என்ற ஶங்கை ஏற்படக்கூடும். அதை நீக்குவதற்காக ஸூத்ரத்திலுள்ள 'ஜ்ஞாநாநந்த3ங்கள்' என்ற சொல் ஜ்ஞாநத்வம், ஆநந்த3த்வம் என்ற பா4வங்களை(தன்மைகளை)க்கருதி வந்துள்ளது என்று காட்டுகிறார் மாமுநிகள் 'ப்ரகாஶத்வாநுகூலத்வங்கள்' என்று. ப்ரகாஶத்வமாவது தனக்குத்தானே ப்ரகாஶிக்கை. எனவே ப்ரகாஶத்வாநுகூலத்வங்கள் முறையே த4ர்மியான ஆத்மாவிலுள்ள ஜ்ஞாநத்வத்தையும், ஆநந்த3த்வத்தையும் குறிக்கின்றன. இவ்விரண்டும் ப3ஹிரங்க3ம். இவையே ப3ஹிரங்க3ம் என்றால் ஆத்மாவின் த4ர்மபூ4தத்3ரவ்யங்களான ஜ்ஞாநமும், ஆநந்த3மும் ப3ஹிரங்க3ம் என்பது தன்னடையே வரும்.

அநுகூலஜ்ஞாநமே ஆநந்த3மாகையால் ஆநந்த3முங்கூட ஜ்ஞாநத்3ரவ்யமாகும். 'மாடுகளையும் காளையையும் ஓட்டிவா' என்ற வழக்கு உலகில் காணப்படுகிறது. காளையும் மாட்டினத்தில் சேர்ந்ததாயிருப்பினும் அதனுடைய சிறப்புக்கருதித்தனியே வழங்கப்படுகிறாப்போல் இங்கும் ஆநந்த3மும் ஜ்ஞாநத்3ரவ்யமாயிருப்பினுங்கூடச்சிறப்புக்கருதித்தனித்து வழங்கப்படுகிறது.
(2) ஸாக்ஷாத்ஸம்ப3ந்த4த்தால் த4ர்மிஸ்வரூபத்திலேயே இருப்பவை ப்ரகாஶத்வாநுகூலத்வங்கள். ம்ருஷாவாதி3க்கு அபி4மதமான தடஸ்த2த்வமோ, ஸித்3தா4ந்திக்கு அபி4மதமான தடஸ்த2த்வமோ அவற்றில் இல்லை. எனவே அவை தடஸ்த2ங்களல்ல. மேலும் ஸூத்ரத்தில் 'அந்தரங்க3'ஶப்3த3த்துக்கு ப்ரதியோகி3யாக 'தடஸ்த2'ஶப்3த3ம் ப்ரயோகி3க்கப்பட்டுள்ளது. எனவே அது 'அந்தரங்க3'ஶப்3த3த்தின் ப்ரதியோகி3க்கு க்3ராஹகமான ப்ரமாணமாகிறது.எனவேஅது ப3ஹிரங்க3த்தை லக்ஷிக்கிறது.
(3) 'ஶேஷத்வே ஸதி ஜ்ஞாத்ருத்வம்' என்பது ஜீவாத்மலக்ஷணமாகும். இந்த வாக்யத்தில் ஶேஷத்வத்தையடுத்து ஜ்ஞாத்ருத்வம் நிர்தே3ஶிக்கப்பட்டுள்ளது. ஜ்ஞாத்ருத்வம் ப3ஹிரங்க3நிரூபகமாக இருப்பதால்தான் ஶேஷத்வத்துக்குப்பிறகு நிர்தே3ஶிக்கப்பட்டுள்ளது.
(4) ஜீவன் ப4க3வானுக்கு ப்ரகாரம்(அப்ருத2க்ஸித்3த4விஶேஷணம்). ப4க3வத்ஸ்வரூபத்தால் நிரூபிக்கப்பட்ட ப்ரகாரதை ஜீவாத்மாவிடம் உள்ளது. அந்த ப்ரகாரதையால் வந்த ஶேஷத்வத்துக்கு (சார்ந்திருக்கும் தன்மைக்கு) அதீ4நமான ஸத்தையை உடையது ஜீவனாகிற வஸ்து. ப4க3வானுக்கு ஶேஷனாக இருப்பதாலேயே இவன் உளனாகிறான். ஸ்வநிஷ்ட2னாக(சாராதவனாக) இருந்தால் உளனாகவே மாட்டான். வஸ்துவை 'இத3ம் ஸத்'(இது இருக்கிறது) என்று நிரூபித்தபிறகே 'இத3ம் இத்த2ம்பூ4தம்'(இது இப்படிப்பட்டது) என்று நிரூபிக்கவேணும். ஜீவாத்மாவின் ஸத்தைக்குக்காரணமான த4ர்மம் ஶேஷத்வம். எனவே அது அந்தரங்க3நிரூபகமாகிறது.
(5) ஆத்மா ஶேஷம் என்று முதலில் அறியவும், சொல்லவும் வேணும். அடுத்து அவன் இதரவ்யாவ்ருத்தன் என்று அறியவேணும். அடுத்து அவனிடமுள்ள ஜ்ஞாநத்வாநந்த3த்வங்களை அறியவும் சொல்லவும் வேணும். அடுத்து அவற்றால் இவன் இதரவ்யாவ்ருத்தன் என்று அறியவேணும்.
(6) ஶேஷத்வத்தால் ஆத்மாவின் ஸத்தை ஆகிறாப்போலே ஜ்ஞாநத்வாநந்த3த்வங்களால்தான் சேதநனான ஆத்மாவின் ஸத்தை ஏற்படுகிறது. எனவே ஶேஷத்வத்துக்கு மட்டும் என்ன ஏற்றம் என்பது ஶங்கை.

பக்கம் - 108

(1) ப4க3வானுக்கு ப்ரகாரமாக இருக்கை என்றால் ப4க3வானைவிட்டுப்பிரியாத த4ர்மமாக இருக்கை என்றர்த்த2ம். அதுவும் ப4க3வானை விட்டுப்பிரியாத ஆதே4யமாயிருக்கையாம். ஆதே4யதை என்பது ஆத4ாரத்துடன் உள்ள ஸம்ப3ந்த4மாகும். எனவே ப4க3வத்ப்ரகாரதையாகிற ஆதே4யதையானது சேதநஸ்வரூபமாகிற ஆஶ்ரிதத்துக்கு ப4க3வத்ஸ்வரூபமாகிற ஆஶ்ரயத்தினுடைய ஸம்ப3ந்த4மாயிருக்கும். ஆஶ்ரயத்துடன்(ஆத4ாரத்துடன்) உள்ள ஸம்ப3ந்த4மானது ஆஶ்ரிதத்தின்(ஆதே4யத்தின்) ஸத்தைக்குக்காரணமாயிருக்கும். ஆகையிறே 'ஸ்வஸம்ப3ந்தி4தயா ஹ்யஸ்யா: ஸத்தா விஜ்ஞப்திதாதி3 ச' (ஶ்ரீப4ா.ம.ஸி.) (அஹமர்த்த2மாகிற ஆஶ்ரயத்தின் ஸம்ப3ந்த4த்தாலன்றோ ஆஶ்ரிதமான த4ர்மபூ4தஜ்ஞாநத்துக்கு ஸத்தை, விஷயப்ரகாஶகத்வம், ஸ்வயம்ப்ரகாஶகத்வம் ஆகியவை வருகின்றன) என்றவிடத்துக்கு 'ஸத்தாயா ஆஶ்ரயஸம்ப3ந்த4ாதீ4நத்வாத், ஸ்வரூபலாபே4 ஸதி ஜ்ஞப்தித்வாதி3ஸம்ப4வாச்ச ஸர்வம் தத3தீ4நமித்யர்த்த2:' என்று ஶ்ருதப்ரகாஶிகை இருக்கிறது. இதன் பொருள் : ஆஶ்ரயத்துடன் உள்ள ஸம்ப3ந்த4த்துக்கு அதீ4நமாக ஆஶ்ரிதத்துக்கு (ஆதே4யத்துக்கு) ஸத்தையானது இருக்கிறது. த4ர்மபூ4தமான ஜ்ஞாநத்தின் ஸ்வரூபம் ஸித்3தி4த்தால் அதற்கு விஷயப்ரகாஶகத்வம் ஸ்வயம்ப்ரகாஶத்வம் ஆகியவை ஸம்ப4விக்கின்றன. த4ர்மபூ4தஜ்ஞாநமோ அஹமர்த்த2த்தை ஆஶ்ரயித்துள்ளது. எனவே, யாவும் ஆஶ்ரயமான அஹமர்த்த2த்துக்கு அதீ4நமாயுள்ளன. ப்ரதியோகி3தாவிஶேஷத்தாலே சேதநஸ்வரூபவ்ருத்தியான ஆஶ்ரயஸம்ப3ந்த4மாயிருக்கிறது இந்த ப4க3வத்ப்ரகாரதை. அதாவது, ஆஶ்ரயம் - ப4க3வான்; ஆஶ்ரிதன் - சேதநன்; ஆஶ்ரயஸம்ப3ந்த4ம் - ப4க3வத்ப்ரகாரதை; ஆஶ்ரயஸம்ப3ந்த4ப்ரதியோகீ3 - ப4க3வத்ப்ரகாரபூ4தசேதநன்; ஆஶ்ரயஸம்ப3ந்த4ப்ரதியோகி3தா - சேதநனிடத்திலுள்ள ப4க3வத்ப்ரகாரதை.

ஆஶ்ரயஸம்ப3ந்த4மானது ஆஶ்ரிதத்தின் ஸத்தைக்கு நிர்வாஹகமாயிருக்கும். எனவே ஆஶ்ரயஸம்ப3ந்த4மாயுள்ள ப4க3வத்ப்ரகாரதையானது சேதநஸ்வரூபத்துக்கு ஸத்தாநிர்வாஹகமாய் இருக்கும். இது ஈஶ்வரனிடத்தில் இல்லாமையாலே ஈஶ்வரவ்யாவர்த்தகமாயிருக்கும். ஜ்ஞாநத்வாநந்த3த்வங்கள் ப4க3வத்ப்ரகாரதையினால் நிர்வஹிக்கப்பட்ட ஸத்தையை உடைத்தாயிருக்கிற சேதநஸ்வரூபமாகிற த4ர்மிக்கு அதீ4நமான ஸத்தையை உடையவை. எனவே நிரூப்யவஸ்துவான சேதநனுடைய ஸத்தைக்கு அவை நிர்வாஹகங்களல்ல. அசித்தில் அவை இல்லாதபடியாலே அசித்திலிருந்து ஜீவாத்மாவை வேறுபடுத்துவனவாக மட்டும் உள்ளன. ஆக, நிரூபகங்களான ஜ்ஞாநத்வாநந்த3த்வங்கள் நிரூப்யனான ஜீவாத்மா என்ற இவற்றினுடைய ஸத்தைக்குக்காரணமாயிருக்கை என்பது நிரூபகாந்தரங்களைப்பற்ற ப4க3வத்ப்ரகாரதையாகிற நிரூபகத்துக்குள்ள வாசி. ஸத்தானதுக்கே லக்ஷணத்தைப்பற்றின அபேக்ஷை எழுமாகையாலே லக்ஷணத்தை அநுஸந்தி4க்குமிடத்தில் லக்ஷணாபேக்ஷையை உண்டாக்கக்கூடிய ஜ்ஞாநத்துக்கு விஷயமானது ஸத்தாநிர்வாஹகமான ப4க3வத்ப்ரகாரதை. அதுவே ப4க3வத்3வ்யாவர்த்தகமாகையாலே முதலில் லக்ஷணத2ளமாக அநுஸந்தி4க்க உசிதை. பிறகு அதனால் நிர்வஹிக்கப்படும் ஸத்தையை உடையவைகளான ஜ்ஞாநத்வாதி3கள் அசித்3வ்யாவர்த்தகத2ளங்களாக அநுஸந்தி4க்க உசிதங்களாகின்றன. 'மநாகுபகாரிதா ச ஸர்வஸ்யாஸ்தி, தத்பரிகரத்வேந ஜ்ஞாயமாநத்வாத்)(ஶ்ருத.) (சிறிது உபகரிக்கும் தன்மை என்பது யாவற்றுக்கும் உள்ளது, அவனைப்பின் தொடரக்கூடியனவாக அவை அறியப்படுகிறபடியால்) என்கிறபடியே இந்த ப4க3வத்ப்ரகாரதையானது வஸ்துக்கள் யாவும் ததீ3யங்களாக அறியப்படுதலாகிற அதிஶயத்தை அடைவதற்கு ஹேதுவாக இருக்கும். எனவே இது ப4க3வானுக்கு லீலாரஸத்தை ஸம்பாதி3த்துக்கொடுத்தல், அவனுடைய ஔதா3ர்யத்தைப்ரகாஶப்படுத்துதல், அவனுக்குக்கைங்கர்யரஸத்தை விளைவித்தல் முதலிய ஶேஷவ்ருத்திகளையிட்டு ஸர்வாத்மாக்களிடமுமுள்ள ஸார்வகாலிகஶேஷதாரூபையாயிருக்கும். இந்த ப4க3வத்ப்ரகாரதை ததீ3யத்வேந ஜ்ஞாயமாநத்வரூபாதிஶயஹேதுதாப்ரயோஜகம்.

ததீ3யத்வேந ஜ்ஞாயமாநம் (அவனுடையதாக அறியப்படுமது) - சித்து. ததீ3யத்வேந ஜ்ஞாயமாநத்வரூபாதிஶயஹேது - ப4க3வத்ப்ரகாரதை. அதிஶயஹேதுதா - ப4க3வத்ப்ரகாரதையில் உள்ளது. அதிஶயஹேதுதாப்ரயோஜகம் - ப4க3வத்ப்ரகாரதை. ஆகையால் ஶேஷத்வஸாமாந்யத்துக்கு அந்தரங்க3த்வமுண்டு என்னுமிவ்வளவே அபேக்ஷிதம்.

ஆஶ்ரயஸம்ப3ந்த4ரூபத்வத்தால் நிரூபிக்கப்படும் வஸ்துவான ஜீவாத்மாவின் ஸத்தையை நிர்வஹிக்கும் தன்மை ஸ்வஸ்மை ஸ்வயம்ப்ரகாஶத்வம், அநுகூலத்வம் என்பவைகளுக்கு இல்லை. சிறிது விஶேஷத்தின் இருத்தலானது ஸாமாந்யத்தின் இருத்தலுக்குக்காரணமாகும். ப்ரகாரத்வம்

என்பது விட்டுப்பிரியாமல் சார்ந்திருக்கையாகும். ஶேஷத்வம் = சார்ந்திருக்கை. ஆக, ப்ரகாரத்வம் இருந்தால் ஶேஷத்வமும் இருக்கும். எனவே 'ப்ரகாரத்வப்ரயுக்தமான ஶேஷத்வம்' என்கிறார் மாமுநிகள்.

(2) ப4க3வத்ஸ்வரூபாதீ4நையான ஸ்வஸத்தையானது ஸ்வஸ்வரூபத்துக்கு த4ர்மபூ4தமாகவுள்ள ப4க3வத்ப்ரகாரத்வத்துக்கு அதீ4நமாகவுள்ளது என்கை அநுபபந்நம் என்ற பூர்வபக்ஷம் தவறு. ஆஶ்ரயாஶ்ரயிபா4வஶப்3த3த்தால் சொல்லப்படும் ஸம்யோகா3த்மகமான ஆதே4யதாரூபாப்ருத2க்-ஸித்3த4த4ர்மதாலக்ஷணப4க3வத்ப்ரகாரதை ஆஶ்ரயஸம்ப3ந்த4ரூபை.

விவரணம் :- 'ஆஶ்ரயாஶ்ரயிபா4வ'ஶப்3த3த்தால் சொல்லப்படுமது ஸம்யோகா3த்மகமான ஆதே4யதை. அதுவே ப4க3வத்ப்ரகாரதை. அந்த ஆதே4யதையானது அப்ருத2க்ஸித்3த4த4ர்மதை-யாகும். அப்ருத2க்ஸித்3த4த4ர்மதை என்றால் என்னவென்று ஆராய்வோம். க4டத்தை இதரத4ர்மிக-ளிலிருந்து வ்யாவர்த்திக்கக்கூடிய த4ர்மம் க4டத்வம். க4டத்வம் என்றால் கம்பு3க்3ரீவாதி3மத்த்வம். இதுவே படத்வம், குட்3யத்வம் முதலிய எல்லா த4ர்மங்களிலிருந்தும் க4டத்வத்தை வ்யாவர்த்தித்து (வேறுபடுத்தி) விடுகிறது. எனவே க4டத்வத்தின் வ்யாவர்த்தகத4ர்மமான (அஸாத4ாரணத4ர்ம-மான) க4டத்வத்வமும் கம்பு3க்3ரீவாதி3மத்த்வமேயாகும். எனவே க4டத்வத்வம் என்பது க4டத்வ-மேயாகிறது. க4டத்வம் - த4ர்மம். க4டத்வத்வம் - த4ர்மதை. எனவே த4ர்மதை என்பது த4ர்மமே-யாகும். அப்ருத2க்ஸித்3த4த4ர்மதை என்பது அப்ருத2க்ஸித்3த4த4ர்மமேயாகும். எனவே அப்ருத2க்-ஸித்3த4த4ர்மமான ப4க3வத்ப்ரகாரதை என்பதே அப்ருத2க்ஸித்3த4த4ர்மதையாகும். அது ஆஶ்ரய-ஸம்ப3ந்த4ரூபையாக உள்ளது. ஆஶ்ரிதத்தின் ஸத்தையானது ஆஶ்ரயஸம்ப3ந்த4த்துக்கு அதீ4நமாக-வுள்ளது. எனவே ஆஶ்ரயஸம்ப3ந்த4ரூபையாகவுள்ள ப4க3வத்ப்ரகாரதை தனக்கு ஆஶ்ரயமாய், ப4க3வத்3ாஶ்ரிதமுமான சேதநஸ்வரூபத்தினுடைய ஸத்தாநிர்வாஹகையென்கை மிகவும் பொருந்தக்கூடியது.

பக்கம் - 109

(1) 'ப்ரகாரத்வம் ஆத்மஸ்வரூபாநிரூபகம், த4ர்மத்வாத்' என்பது பூர்வபக்ஷிகளின் அநுமாநம். இந்த அநுமாநம் ஸோபாதி4கத்வம் என்ற தோ3ஷமுடையது என்பது ஸித்3தா4ந்திகளின் ஸமாதா4நம். ஆஶ்ரயஸம்ப3ந்த4ாபா4வத்வம் உபாதி4:. இது ஸாத்4யவ்யாபகமாயுள்ளது. யத்ர ஆத்மஸ்வரூபாநிரூபகத்வம் தத்ர ஆஶ்ரயஸம்ப3ந்த4ாபா4வத்வம் யதா2 த்3ரவ்யத்வே. இது ஸாத4நாவ்யாபகமாயுள்ளது என்பதைப்பார்ப்போம். த4ர்மத்வம் உள்ளது ப்ரகாரத்வத்தில், ஆனால் ஆஶ்ரயஸம்ப3ந்த4ாபா4வத்வமில்லை, ஆஶ்ரயஸம்ப3ந்த4த்வமே உள்ளது. எனவே ஸாத4நாவ்யாப-கத்வம் உள்ளது. இப்படி ப்ரகாரத்வத்தில் ஆஶ்ரயஸம்ப3ந்த4ாபா4வத்வம் இல்லாதபடியால் பக்ஷத்தில் உபாதி4நிவ்ருத்தியும் உள்ளது. எனவே பூர்வபக்ஷிகளின் அநுமாநம் தவறு. எனவே ப4க3வத்ப்ரகாரதையானது ஆத்மஸ்வரூபத்தின் ஸத்தாநிர்வாஹகையேயாம். ஜீவாத்மாவுக்கு த4ர்மி-க்3ராஹகப்ரமாணம் ப்ரணவத்திலுள்ள மகாரம். ஜ்ஞாத்ருத்வமும், ஜ்ஞாநத்வமும் (ஸ்வஸ்மை ஸ்வயம்ப்ரகாஶத்வமாகிற ப்ரத்யக்த்வமும்) த4ர்மிக்3ராஹகப்ரமாணமான இந்த மகாரத்தினால் ஸித்3தி4ப்பவைகள். ஶேஷத்வம் த4ர்மிக்3ராஹகப்ரமாணஸித்3த4மன்று. எனவே ஶேஷத்வத்தைக்-காட்டிலும் ஜ்ஞாத்ருத்வாதி3களே ப்ரப3லங்கள் என்பது பூர்வபக்ஷம்.

ஸமாதா4நம் :- ப4க3வத்ப்ரகாரதையானது ஜீவாத்மாவாகிற த4ர்மியின் ஸத்தைக்கே காரணமாக இருக்கிறபடியால் அது த4ர்மிக்3ராஹகப்ரமாணஸித்3த4மாக இல்லாமற்போனாலுங்கூட தத்ப்ரயுக்த-ஶேஷத்வமானது ஜ்ஞாத்ருத்வாதி3களைக்காட்டிலும் ப்ரப3லமாகக்குறையில்லை.

(2) உபக்ரமந்யாயம் - ஆரம்ப4த்திலுள்ளது அடுத்து வருமவைகளைக்காட்டிலும் ப்ரப3லம் என்பது.

(3) சேதநஸ்வரூபக3தமான ப4க3வச்சே2ஷத்வத்தில் ஶேஷிமாத்ரப்ரதியோகி3கத்வம் உள்ளது. ஶேஷத்வத்துக்கு ஆஶ்ரயன்(அநுயோகீ3) ஜீவாத்மா, ப்ரதியோகீ3 ப4க3வான். அநுயோகி3யைக்-காட்டிலும் ப்ரதியோகி3க்கு பே4த3மிருப்பதால் ப4க3வச்சே2ஷத்வத்துக்கு ப்ரதியோகி3கத்வம் என்ற த4ர்மம் முக்2யமாக உள்ளது. ஸ்வஶேஷத்வமானது ஶேஷத்வாஶ்ரயனை தன்னையே ப்ரதியோகி3-யாகக்கொண்டுள்ளது. எனவே அதற்கு ப்ரதியோகி3கத்வம் என்ற த4ர்மம் கௌ3ணமாகவுள்ளது. எனவே முக்2யமாகவுள்ள ஶேஷிமாத்ரப்ரதியோகி3கத்வமானது கௌ3ணமாகவுள்ள ஶேஷத்-வாஶ்ரயப்ரதியோகி3கத்வத்தை விட ப்ரப3லம். எனவே த4ர்மியான ப4க3வச்சே2ஷத்வமானது த4ர்மியான ஸ்வஶேஷத்வத்தைவிட ப்ரப3லம். த4ர்மிகளுக்கு ப்ராப3ல்யதௌ3ர்ப3ல்யவிபா4கம் த4ர்மங்களுக்கு ப்ராப3ல்யதௌ3ர்ப3ல்யநிப3ந்த4நம் என்னுமது முக்2யக்ரமந்யாயஸித்3த4ம்.

அதாவது அநுஸரிக்கப்படுமது முக்2யம்; அநுஸரிக்குமது அமுக்2யம்; முக்2யத்தின் க்ரமத்தைப்-பின்பற்றி அமுக்2யத்தின் க்ரமம் உள்ளது. ப்ரக்ருதத்தில் த4ர்மிகள் தங்கள் வ்யாவ்ருத்திக்காக த4ர்மங்களை அபேக்ஷிக்கின்றன. எனவே த4ர்மங்கள் முக்2யம், த4ர்மிகள் அமுக்2யம். இந்த ந்யாயத்தால் த4ர்மங்களின் க்ரமத்தைப்பின்பற்றி த4ர்மிகளின் க்ரமம் உள்ளது. எனவே ஸ்வஶேஷத்வமாகிற த4ர்மியைவிட ப4க3வச்சே2ஷத்வமாகிற த4ர்மி ப்ரப3லம்.

(4)'பித்ரு'பத3ப்ரவ்ருத்திநிமித்தம் - ஜநகபும்ஸ்த்வம். 'புத்ர'பத3ப்ரவ்ருத்திநிமித்தம் - ஜந்ய-பும்ஸ்த்வம். 'தா3ஸ'ஶப்3த3ப்ரவ்ருத்திநிமித்தம் - ஶேஷசேதநத்வம். பும்ஸ்த்வமானது ஸ்த்ரீத்வ-வ்யாவர்த்தகமாய் மட்டும் உள்ளது. பித்ருத்வபுத்ரத்வங்களின் ஸத்தைக்குக்காரணங்கள் ஜநகத்வஜந்யத்வங்களேயாம். எனவே அவை ப்ரத2மநிர்தி3ஷ்டங்களாகின்றன. அவ்வாறே தா3ஸத்வத்தின் ஸத்தைக்குக்காரணம் ஶேஷத்வம். சேதநத்வமானது அசேதநத்வவ்யாவ்ருத்திக்கு மட்டும் காரணமாகிறது. எனவே சேதநத்வத்தைவிட ஶேஷத்வமே ப்ரத2மமென்கை உசிதம்.

(5) பரமாத்மஶேஷத்வஜ்ஞாநம் ஏற்பட்டுவிட்டால் மற்றவை யாவும் (நிரூப்யமும் நிரூபகாந்த-ரங்களும்) ஸித்3தி4த்து விடுகின்றன. அந்த ஜ்ஞாநம் ஏற்படாவிட்டால் மற்றவை யாவும் அஸத்ஸமங்களாகின்றன.

(6) ஶேஷத்வத்துக்கு ப்ராத2ம்யம் வருவதற்கான காரணங்கள் :-

(1) த4ர்மியின் ஸத்தைக்கு நிர்வாஹகமாய்(காரணமாய்) உள்ளது ஶேஷத்வம். இது வஸ்துஸாமர்த்2யம்.
(2) ப்ரணவத்தில் லுப்தசதுர்த்தி2யினால் முதலிலேயே ஶேஷத்வம் சொல்லப்படுகிறது. எனவே உபக்ரமந்யாயத்தால் அது ப்ரப3லம்.
(3) முக்2யக்ரமந்யாயத்தால் ஸ்வஶேஷத்வத்தைக்காட்டிலும் ப4க3வச்சே2ஷத்வம் ப்ரப3லம்.
(4) 'தா3ஸ'ஶப்3த3ப்ரவ்ருத்திநிமித்தத்தில் ஶேஷத்வமே முதலில் இருத்தல் உசிதமாகிறது.
(5) ஶேஷத்வஜ்ஞாநமில்லாவிடில் நிரூப்யத்துக்கும் நிரூபகாந்தரங்களுக்கும் அஸத்தை வருகிறது என்று ப்ரமாணம் கூறுகிறது.
(6) பராஶரஸ்ம்ருதியில் ஆத்மஸ்வரூபத்தை நிர்தே3ஶிக்கும்போது அஹந்த்வத்துக்கு முன்னால் ஶேஷத்வம் நிர்தே3ஶிக்கப்பட்டுள்ளது.

(7) அநியதமான பௌர்வாபர்யத்தையுடை அநுஷ்டா2நம் காரணமாக வரும் க்ரமவிஷயத்தில் ப்ரவர்த்திக்கத்தக்கது 'பூர்வாபா3தே4 ந நோத்பத்திருத்தரஸ்ய ஹி ஸித்3த்4யதி'(ஶ்ருத.மஹாபா.)என்ற ந்யாயம். இதன் பொருள் - பூர்வத்தை பா3தி4யாமல் உத்தரத்துக்கு உத்பத்தியானது ஸித்3தி4யாது. இந்த ந்யாயத்துக்கு அபச்சே2த3ந்யாயம் என்று பெயர். மூலமந்த்ரத்திலுள்ள மூன்று பத3ங்களும் நியதமான க்ரமத்தையுடையவை. எனவே அவற்றால் ப்ரதிபாதி3க்கப்படும் ஶேஷத்வாதி3களின் விஷயத்தில் இந்த ந்யாயம் ப்ரவர்த்தியாது. அத்3வைதமதரீதியைக்கொண்டு ப்ரவர்த்திக்கும் என்று கொண்டால் ப்ரணவத்தில் பூர்வத்தில் லுப்தசதுர்த்தி2யால் சொல்லப்படும் ஶேஷத்வத்தைவிட மகாரத்தால் சொல்லப்படும் ஜ்ஞாத்ருத்வஜ்ஞாநத்வங்கள் ப்ரப3லமாகிவிடும். அப்பொழுது அதேபோல் நிஷேத4த்தை அபேக்ஷிப்பதாயும் நிஷேத்4யத்தை ஸமர்ப்பிப்பதாயும் உள்ள வ்யக்தசதுர்த்தி2யினால் கிடைக்கும் போ4க்த்ருத்வத்தைவிட அதை நிஷேதி4க்கும் நமஶ்ஶப்3த3த்தால் சொல்லப்படும் போ4க்த்ருத்வாபா4வமே ப்ரப3லம் என்று ஸித்3தி4க்கும். போ4க்த்ருத்வாபா4வ-மாவது போ4க்யத்வமாகும். இது ஶேஷத்வத்தின் ப2லமாகும். எனவே ஜ்ஞாத்ருத்வத்தின் கார்யமான போ4க்த்ருத்வத்தைவிட ஶேஷத்வத்தின் கார்யமான போ4க்2யதையே ப்ரப3லம் என்று தேறுகிறது. எனவே ஜ்ஞாத்ருத்வத்தைவிட ஶேஷத்வமே ப்ரப3லம் என்று கிடைக்கிறது. போ4க்த்ரு-த்வத்தை நிஷேதி4க்கும் இந்த நமஶ்ஶப்3த3மானது வ்யக்தசதுர்த்தி2க்குப்பிறகு அநுஷக்தமா-யுள்ளது (கீழிருந்து வரவழைக்கப்பட்டது) என்று அறியவேணும்.

பக்கம் - 110

(1) 'மந - ஜ்ஞாநே' என்ற தா4துவின்மேல் பா4வே 'ட்3வி'ப்ரத்யயம்('உணாத3யோ ப3ஹுளம்' என்ற ஸூத்ரத்தால்) வருகிறது. 'மந ட்3வி' என்பதில் அநுப3ந்த4லோபங்களைச்செய்தபிறகு 'ம் அந் வ்' என்று நிற்கும். 'டே:' என்ற ஸூத்ரத்தால் தா4துவிலுள்ள 'டி'ஸம்ஜ்ஞகமான 'அந்'னுக்கு லோபம் வந்து 'ம் வ்' என்றாகும். 'வேரப்ருக்தஸ்ய' என்ற ஸூத்ரத்தால் வகாரலோபம் வந்து 'ம்' என்ற ரூபம் வருகிறது. இது க்ருத3ந்தமாகும். எனவே ப்ராதிபதி3கமாகும். இதன்மேல் ப்ரத2மைகவசநத்துக்கு 'ஸு' வந்து அநுப3ந்த4லோபத்துக்குப்பிறகு 'ம் ஸ்' என்றாகும்.

ஹல்ஞாப்1ப்4யோ தீ3ர்கக3ாத் ஸுதிஸ்யப்ருக்தம் ஹல்' என்ற ஸூத்ரத்தினால் 'ஸு'வுக்கு லோபம் வந்து 'ம்' என்றாகும். இந்த மகாரத்துக்கு ஜ்ஞாநஸ்வரூபன் என்று பொருள். இந்த ப்ரக்ரியையானது முமுக்ஷுப்படி திருமந்த்ரப்ரகரணம் 66வது சூர்ணிகையின் எம்பாவையங்கார் அரும்பத3விளக்கத்தில் உள்ளது.

'மதி3 - ஹர்ஷே' என்ற த4ாதுவின்மேல் ப4ாவே 'ட3வி'ப்ரத்யயம் வந்து 'ம்' ஆகும். அதற்கு ஆநந்த3ஸ்வரூபன் என்றர்த்த2ம்.

(ஜ்ஞாநாநந்த3லக்ஷணமுமாய்) இதி. 'லக்ஷண'ஶப்3த3ம் த4ர்மிஸ்வரூபவாசியானால் ஜ்ஞாநா-நந்த3ஸ்வரூபனுமாய் என்றர்த்த2ம். அப்போது 'ஜ்ஞாந'ஶப்3த3ம் ஜ்ஞாநத்தையும், 'ஆநந்த3'ஶப்3த3ம் ஆநந்த3த்தையும் காட்டும். 'லக்ஷண'ஶப்3த3ம் அஸாத4ாரணத4ர்மம் என்ற அர்த்த2த்தைக்-கொண்டதானால் 'ஜ்ஞாநாநந்த3லக்ஷணம்' என்பது 'ஜ்ஞாநத்வ'-'ஆநந்த3த்வ'ங்களாகிற அஸாத4ாரணத4ர்மங்களையுடையது என்ற அர்த்த2த்தைக்காட்டும். அப்போது 'ஜ்ஞாந'-'ஆநந்த3'ஶப்3த3ங்கள் ப4ாவப்ரத4ாநநிர்தே3ஶங்களாகும்.

(2) 'மநு - அவபோ3த4நே' என்ற த4ாதுவின்மேல் கர்த்தரி 'ட3வி'ப்ரத்யயம் வந்து 'ம்' என்றாகிறது. இந்த மகாரத்துக்கு ஜ்ஞாநகர்த்தா என்றர்த்த2ம். அதாவது ஜ்ஞாநமாகிற கு3ணத்துக்குக்கர்த்தா அல்லது ஜ்ஞாநகு3ணகன் என்றர்த்த2ம்.

(3) லிங்க3ம் - அர்த்த2ஸாமர்த்2யம். ஜ்ஞாநகு3ணகத்வமாகிற அர்த்த2த்தின் ஸாமர்த்2யத்தால் அசித்3வ்யாவ்ருத்தியையுடையதாக ஜீவஸ்வரூபம் ஆகிறது.

(4) 'நாரா: அயநம் யஸ்ய ஸ:' என்பது ப3ஹுவ்ரீஹிஸமாஸமான 'நாராயண'ஶப்3த3த்தினுடைய விக்3ரஹம். நாரங்களை இருப்பிடமாகக்கொண்டவன் என்றர்த்த2ம். ஸமஸ்தவஸ்துக்களும் நாரங்க-ளாம். தன் கு3ணங்களில் த்3ரவ்யபூ4தனை தான் இருக்கமுடியாதாகையால் 'ஸமஸ்த'ஶப்3த3ம் ப4க3வத்3கு3ணங்களைத்தவிர்ந்த எல்லா த்3ரவ்யங்களையும் கூறுகிறது.

(5) லௌகிகவைதி3கப்ரயோகங்களை ஜந்யஜநகப4ாவஜ்ஞாபகமாய்க்கொண்டு ஸாத்4யத்துடன் சொல்லப்பட்ட ஸித்3த4மானது ஸாத்4யத்துக்கு ஜநகமாக உள்ளது என்பது இந்த ந்யாயம். 'தமேவம் வித்3வாநம்ருத இஹ ப4வதி' என்பதில் 'ஸ:' என்று கூறப்படும் ப்3ரஹ்மம் ஸித்3த4ம், அம்ருதத்வ-மானது ஸாத்4யம். ஸித்3த4மாகவுள்ள ப்3ரஹ்மம் ஜீவனுடைய அம்ருதத்வத்துக்கு ஜநகமாகவுள்ளது. இது வைதி3கப்ரயோக3ம். 'பாத3ஸி பீதே த்ருஷ்ணா ஶாம்யதி' (தண்ணீர் அருந்தப்பட்டால் தாகம் தீரும்) என்பது லௌகிகப்ரயோக3ம். இங்கும் ஸித்3த4மான தண்ணீர் ஸாத்4யமான த்ருஷ்ணா-ஶாந்திக்கு ஜநகமாகவுள்ளது. அவ்வாறே ஶேஷத்வமாகிற ஸித்3த4வஸ்துவானது ஸாத்4யமான ஆத்மஸத்தைக்கும் தந்நிஷ்ட2ஜ்ஞாத்ருத்வாதி3களுக்கும் ஜநகமாகவுள்ளது. எனவே அவற்றுக்கு அது நிர்வாஹகமாக ஆகிறது.

பக்கம் - 111

(1) விஜ்ஞாநமானது யாவத்3ாத்மப4ாவித4ர்மமாக இருப்பதாலும் ஆத்மாவும் விஜ்ஞாநத்தைப்-போல் ஸ்வப்ரகாஶனாக இருப்பதாலும் ஆத்மாவுக்கு விஜ்ஞாநம் என்ற வ்யபதே3ஶத்தில் தோ3ஷ-மில்லை; யாவத்ஸ்வரூபப4ாவியான கே3ாத்வமாகிற நிரூபணத4ர்மத்துக்கு வாசகமான 'கௌ3:' என்ற ஶப்3த3த்தால் ஒரு ப்ராணியானது வ்யபதே3ஶிக்கப்படுதலானது காணப்படுதலால்.

(2) ஜீவன் ப4க3வானுக்கு ப்ரகாரமாக இருக்கையால் தத்பரிகரத்வம் இந்த ஜீவனுக்கு வருகிறது. இவனுடைய பரிகரத்வத்தை(பின்பற்றும் தன்மையை) விஶேஷணமாகக்கொண்ட ஜ்ஞாநத்துக்கு விஷயம் கைங்கர்யம். அதாவது ப4க3வத்பரிகரனான ஜீவனுக்கு தத்கைங்கர்யம் ப2லம் என்ற ஜ்ஞாநத்துக்கு விஷயமானது கைங்கர்யம். ஒரு ஜீவனைக்குறித்த இந்த ஜ்ஞாநம் யாரிடம் வேண்டுமானாலும் இருக்கலாம். இந்த ஜ்ஞாநம் ப4க3வான், பிராட்டிமார்கள், நித்யர்கள் ஆகியோரிடம் நித்யமாக இருக்கிறது. எனவே அதற்கு விஷயமான கைங்கர்யமும் நித்யம். இப்படி ஜ்ஞாநவிஷயமான கைங்கர்யம் ஜீவனிடம் நித்யமாக இருக்கையால் அவனுடைய தா3ஸ்யம் நித்யம். எனவே இதுக்கு ஸ்வரூபநிரூபகத்வம் உபபந்நம்.

(3) காலாத்யயாபதி3ஷ்டம் - பா3தி4தம். ஸாத்4யாப4ாவமானது வேறு ப்ரமாணங்களால் ஸித்3தி4த்துவிட்டால் அந்த ஹேதுவானது காலாத்யயாபதி3ஷ்டம் என்ற தோ3ஷமுடையதாகிறது.

(4) ஜீவித்திருப்பவனை நூறு வருஷம் கழிந்தாவது ஆநந்த3ம் வந்தடையும் என்பது ந்யாயம் இதற்கு ஸத்தாயா: புருஷார்த்த2யோக்3யதாந்யாயம் என்றும் பெயர். லௌகிகஸத்தா - தே3ஶ-காலாதி3ஸம்ப3ந்த4ம். 'ஸந்தமேநம் ததோ விது3:' என்ற ஶாஸ்த்ரைகவேத்3யமான விலக்ஷண-

ப2லவிஶேஷத்தைச் சொல்லுகிறதென்று ஶ்ரிய:பதிப்படியிலும்; உத்தரவாக்யத்தாலே ப்ராப்யம் சொல்லுகிறது, ப்ராப்யாந்தரத்துக்கன்றென்கை இத்யாதி3யாலே முமுக்ஷுப்படியிலுமிவர்தாமே அருளிச்செய்தாரிறே; "திருமாலைக் கைதொழுவர்", "அடியாரைச் சேர்தல் தீர்க்கும்திருமாலை" என்கிறபடியே புருஷகாரம் முன்னாகப்பற்றி ப்ரயோஜநங்களைக் கொண்டகலாதே அவற்றை- யொழிந்து "ஒண்டொடியாள் திருமகளும்" அவனுமான சேர்த்தியிலடிமையைப் பேறென்று கீழ்ச்சொன்ன உபாயப2லத்தைக் காட்டுகிறது பிற்கூறென்றிறே, இவர் திருத்தம்பியாரும் அருளிச்செயல் ரஹஸ்யத்திலருளிச்செய்தது. ஆக, [இவனவனை] என்று துடங்கி, இவ்வளவாக ஸ்வக3தஸ்வீகாரானுபாயத்வமும், பரக3தஸ்வீகாரோபாயத்வமும், தத்ப்ராப3ல்யமும், அவனே ஸ்வீகரிக்குமளவிலும் புருஷகாரம் முன்னாகவே ஸ்வீகரிக்கும்படியையும், இருவரும் இப்புருஷகாரத்தை முன்னிடுகிறதுதனக்கு ப்ரயோஜநமின்னதென்னுமிடமும், ப்ரபத்த்ய- தி4காரிகளெல்லார்க்கும் புருஷகாரமவர்ஜநீயமென்னுமதுவும் சொல்லப்பட்டது. ப்ரத2மப்ரகர- ணத்திலே புருஷகாரவைப4வகத2நமுகே2ந "ஶ்ரீமத்" பத3ார்த்த2த்தையும், உபாயவைப4வகத2ந- முகே2ந "நாராயணசரணௌ ஶரணம்" என்கிற பத3ங்களிலர்த்த2ங்களையும் ப்ரதிபாதி3த்த அநந்தரம், [ப்ரபத்திக்கு தே3ஶநியமமும்] என்று துடங்கி, "ப்ரபத்3யே" என்கிற பத3த்தால் சொல்லப்பட்ட ப்ரபத்தியினுடைய தே3ஶாதி3நியமாப4ாவத்தையும், அதுக்கு விஷயநியமம் சொல்லுகைக்காக [கு3ணபூர்த்தியுள்ளவிடமே விஷயமாகை] என்றுதுடங்கி, முக்தகண்ட2மாக மீளவும் "நாராயண"பத3ார்த்த2த்தையும், [இதில் ப்ரபத்திபண்ணுமதி4காரிகள் மூவர்] என்று உத்தமனாலே ஆக்ஷிப்தனான அதி4காரியையும், ப்ரபத்தியில் ஸாத4நத்வமில்லாமையையும், ப்ரபத்த்யதி4காராபேக்ஷிதமான ஶக்திலஜ்ஜாயத்நநிவ்ருத்திஶமத3மாதிஶயம் முதலானவற்றையும், ப்ரபத்த்யங்க3தயா த்யாஜ்யமான உபாயாந்தரத்தினுடைய தே3ாஷபூ4யஸ்தையையும், தத்ப்ரதி-

---

அளவுகொண்டு புருஷகாரப4ாவம் வாராமையாலும் சேராது என்று த்3விதீயயோஜனையை தூ3ஷித்தது. அந்த தூ3ஷணத்தைப்பரிஹரிக்கிறார் (பூர்வவாக்யத்தில்) இத்யாதி3நா.

அபமாஶய: :- (ஐஶ்வர்யகாமர்க்கும்) இத்யாதி3நா ஐஶ்வர்யகைவல்யப4க3வச்ச2ரணார்த்தி2கள் அஜ்ஞாதி3களைப்பற்ற அத்யந்தஸந்நிஹிதபூர்வப்ரஸ்துதராகையாலே அப்ரஸ்துதத்வதூ3ஷணமில்லை. ப்ரயோஜநாந்தரார்த்த2ம் ஸாதநாந்தரத்தில் அந்வயிக்கும்போது புருஷகாரம் வேண்டாவாகிலும் "யத்3யேந காமகாமேந" இத்யாதி3ப்படியே, தத3ர்த்த2ம் ப்ரபத்தியை ப்ரயோகிக்கும்போது, புருஷகாரம் வேணுமாகையாலே, அநபேக்ஷிதத்வதூ3ஷணமுமில்லை. [நாலாம் அதி4காரிக்கு] இத்யாதி3வாக்யம் உபாயாந்தரநிஷ்ட2விஷயமாகையாலே அவனுக்கு புருஷகாரம் அநபேக்ஷிதமாகையாலே ப்ராயஶ்சித்தவிநாஶ்யத்வோக்திவிரோத4ரூபதூ3ஷணமும் இல்லை. ப்ரத்யுத, பூர்வக2ண்ட3ஸ்த2புருஷ- காரோபாயவரணங்களுடைய ப்ரயோஜநாந்தரஸாத4ாரண்யத்துக்கு ஸ்பஷ்டப்ரதிபாத3கங்களான அபி4ந்நவக்த்ருகப்ரப3ந்தாந்தரஸ்த2பூ4ஹு"வாக்யாநுகு3ண்யமுமுண்டு. பி4ந்நவக்த்ருகஸமாநார்த்த2க- ப்ரப3ந்த4ாந்தராநுகு3ண்யமுமுண்டு. "திருமாலைக் கைதொழுவர்" (மு.தி.52) என்கிறவிது ப்ரயோஜநாந்தரத்துக்கு புருஷகாரபுரஸ்கரணம் ஆவஶ்யகம் இதி ஏதத்பரதயா மூலகாராபி4ப்ராய- ஜ்ஞரான தத3நுஜராலே வ்யாக்2யாதமாகையாலே, ஶ்ரிய:பதியை உபாஸிப்பர் இத்யாத்3யுக்த- தூ3ஷணமுமில்லை. ஆகையால், த்3விதீயயோஜனையுமுபபந்நை என்று கண்டுகொள்வது.

ணூர்த்தி2களைக் கொள்ளுகை அப்ரஸ்துதமாகையாலும், அவர்கள் ஸ்வஸ்வஸாத4நங்களில் அந்வயிக்கு-மிடத்து தத்தத3நுகு3ணப்ராயஶ்சித்தமொழிய புருஷகாராஶ்ரயணம் வேண்டாமையாலும், [நாலாமதி4காரிக்கு ப்ராயஶ்சித்தவிநாஶ்யம்] என்று இவர்தாம் விஶேஷிக்கையாலும், ஶ்ரிய:பதியை உபாஸிப்பர்களென்னு-மளவுகொண்டு புருஷகாரப4ாவம் வாராமையாலும் சேராது. ஆக, ஸ்வாதந்த்ர்யத்தால் அங்கீ3கரிக்கு-மிடத்திலும் ஏவம்வித4புருஷகாரத்தை முன்னிட்டு அங்கீ3கரிக்குமென்று கீழே ஸம்ப3ந்தி4த்திருக்கிறது.(159)

கீழே ஶ்ரீப4ரதாழ்வானுக்கு ஸ்வக3தையான ப்ரபத்தி தீமையானாப்போலே, ஸ்வக3தமான ஸ்வரூபாந்தரங்க3-கு3ணங்களும் தீமையாய்விடுமென்கிறார் [தனக்குத்தான்] இத்யாதி3யால்.

---

கோடிதயா ப்ரபத்தியினுடைய நைர்தோ3ஷ்யாதி3களையும், ப்ரபத்திப்ரஸங்க3த்தாலே முக2பே4தே3ந ஸ்வக3தஸ்வீகாராநுபாயத்வத்தையும், பரக3தஸ்வீகாரோபாயத்வத்தையும், தத்ப்ராப3ல்யத்தையும், அவனே ஸ்வீகரிக்குமளவிலும் புருஷகாரத்தை முன்னிட்டே ஸ்வீகரிக்குமென்னுமிடத்தையும், உப4யரும் புருஷகாரத்தை முன்னிடுமதுக்குண்டான ப்ரயோஜநவிஶேஷங்களையும், அதி4காரித்ரயத்துக்கும் புருஷகாரமவர்ஜநீயமென்னுமத்தையும் ப்ரதிபாதி3க்கையாலே, இவ்வளவும் பூர்வக2ண்ட3ார்த்த2த்தை யருளிச்செய்தாராய்த்து. (159)

160. இப்ப்ரகரணாதி3யிலே [உபாயத்துக்கு] என்று துடங்கி, உபேயாதி4காரமும் சில சொல்லிற்றேயாகிலும் அது ப்ராஸங்கி3கமித்தனை, இனி உபேயாதி4காரபரமான ப்ரகரண-ஶேஷத்தாலும் உத்தரக2ண்ட3ார்த்த2த்தை அருளிச்செய்கிறார். அதுசெய்கிறவிடத்தில், பா4ஷ்ய-காரர் க3த்3யத்ரயத்தில் உத்தரக2ண்டார்த்த2மநுஸந்தி4த்தருளின க்ரமத்திலே, "நமஶ்" ஶப்3த3ார்த்த2ம் முன்னாக அருளிச்செய்கிறார். அதில் இந்த நமஸ்ஸூதான் ப்ராப்யவிரோதி4-

---

அருளிச்செயல் ரஹஸ்யத்திலே (பிற்கூறு) என்றது. உத்தரபா4க3ம் என்றாய், உத்தரக2ண்ட3ம் என்றபடி. அவாந்தரநிக3மநம் (ஆக இவன் அவனை என்று துடங்கி) இத்யாதி3. (அவனே ஸ்வீகரிக்கு-மளவிலும்) இத்யாதி3மாத்ரத்தால், சேதநகர்த்ருகபுருஷகாரபுரஸ்கரணப்ரதிபாத3நம் ப்ராஸங்கி3கம் என்று ஸூசிதம். உத்தரக்3ரந்த2ஸங்க3திகத2நார்த்த2ம் வ்ருத்தாநுவாத3ம் (ப்ரத2ம) இத்யாதி3 - (பூர்வக2ண்ட3ார்த்த2த்தை அருளிச்செய்தாராயிற்று) இத்யந்தம். (159)

160. ஆகில் உத்தரக2ண்ட3ாபி4ப்ரேத-உபேயாதி4காராம்ஶப்ரதிபாத3நம் அநுசிதம் என்கிற ஶங்கையை பரிஹரிக்கிறார் (இப்ப்ரகரணாதி3யிலே) இத்யாதி3நா. (ப்ராஸங்கி3கமித்தனை) என்றது ப்ரஸங்கா3த் ஸங்க3தமொழிய ஸாக்ஷாத் ஸங்க3தமன்று என்றபடி. (இனி உபேயாதி4கார) இத்யாதி3நா வ்யாக்2யேயக2ண்ட3க்ரமாநுரோதே4ந தத்3வ்யாக்2யாநக்ரமமாகையாலே, பூர்வக2ண்ட3வ்யாக்2யாநா-நந்தரம் உத்தரக2ண்ட3வ்யாக்2யாநம் க்ரமப்ராப்தஸ்யாபரித்யாக3ரூபாவஸரஸங்க3த்யா ஸங்க3தம் என்று ஸூசிதம். ஆகில் நமஶ்ஶப்3த3த்துக்கு வ்யாக்2யாநப்ராத2ம்யம் அநுபபந்நம் என்கிற ஶங்கையை பரிஹரிக்கிறார் (அது செய்கிறவிடத்தில்) இத்யாதி3நா. (அது) = உத்தரக2ண்ட3வ்யாக்2யாநம். (க3த்3யத்ரயத்தில்) இத்யாதி3:- அதாவது, "மநோவாக்காயை:" இத்யாதி3நா பா4ஷ்யகாரர் அநுஸந்தி4த்த படியே என்றபடி. பா4ஷ்யகாரருடைய அநுஸந்த4ாநம்தான் ஸங்க3தமானபடி என் என்கிற அபேக்ஷையிலே அருளிச்செய்கிறார் (அதில்) இத்யாதி3. திருமந்த்ரத்தில் நமஶ்ஶப்3த3ம் ப்ராபகவிரோதி4நிவ்ருத்தியையும் ப்ரதிபாதி3க்கையாலே, தத்3வ்யாவ்ருத்த்யர்த்த2ம் (இந்த நமஸ்ஸூ)

**160. தனக்குத்தான் தேடும் நன்மை தீமையோபாதி விலக்காயிருக்கும்.**

இஷ்டவிநியோக3ார்ஹஶேஷத்வமே வடிவான தனக்கு, ஸ்வரூபாநுரூபம் ஶேஷத்வமென்று ப்4ரமிக்கிற தான், ஶேஷியழிந்து விநியோகி3க்குமிடத்து 'நம் ஶேஷத்வம் அழியவொண்ணாது' என்று பிற்காலித்து ஆர்ஜிக்கிற

நிவ்ருத்திப்ரதிபாத3கமாகையாலே, ப்ராப்யவிரோதி4களானவற்றை த3ர்ஶிப்பிப்பதாகத் திருவுள்ளம்பற்றி, ப்ரத2மம் அவற்றிலே யொன்றை அருளிச்செய்கிறார். [தனக்குத்தான்] என்று துடங்கி. கீழே [ஸ்ரீப4ரதாழ்வானுக்கு நன்மைதானே தீமையாய்த்து] என்று ஸ்வகூ3த-ப்ரபத்தி ஶரண்யஹ்ருத3யாநுஸாரியல்லாதபோது தீமையாய்த்தலைக்கட்டும்படி சொன்ன-வித்தாலே, உபாயத3ஶையில் தனக்குத்தான் தேடும் நன்மை தீமையாமென்னுமிடமருளிச்செய்தா-ராய், இப்ப்ரஸங்க3த்திலே உபேயத3ஶையிலும் தான் தனக்குத்தேடும் நன்மை தீமையா-மென்னுமிடம் அருளிச்செய்கிறாரென்று கீழோடு இதுக்கு ஸங்க3தி. [தனக்கு] இத்யாதி3. அதாவது - ஶேஷியானவன் பே4ாக3த3ஶையில் தன் வ்யாமோஹத்தாலே "ஆருயிர் பட்டதெனதுயிர் பட்டது" என்னும்படி தன்திறத்தில் மிகவும் தாழநின்று பரிமாறுமளவில்,

என்றது. (ப்ராப்யவ்ரோதி4நிவ்ருத்தி) இத்யாதி3யால், ப்ரதிப3ந்த4கநிவ்ருத்தியும் காரணமாகையாலே, கார்யகாரணபா4வம் நமஸ்ஸப்3த3ார்த்த2ததி3தராம்ஶார்த்த2ாநுஸந்த4ாநங்களுடைய பௌர்வாபர்ய-நிதா3நம் என்று ஸூசிதம். (ப்ராப்யவிரோதி4களானவற்றை) என்றது - கேவலஶேஷத்வ-கேவலபாரதந்த்ர்யஶேஷ்யநபி4மததோ3ஷநிவ்ருத்திவிஷயாஹங்காராத3ரப்ரப்4ருதிகளை என்றபடி. (ஒன்றை) என்றது - கேவலஶேஷத்வத்தை என்றபடி. இப்படி பேடிகாஸங்க3தி அருளிச்செய்து அநந்தராதி4கரணஸங்க3தஸ்த2ாநீயமான அநந்தரஸந்த3ர்ப4ஸங்க3தியை அருளிச்செய்கிறார் (கீழே ப4ரதாழ்வானுக்கு) இத்யாதி3நா.

இத்தால் (1) ஈஶ்வரஹ்ருத3யாநுகு3ணஸ்வபு3த்3த்4யதீ4நகு3ணத்தினுடைய தோ3ஷரூபதாப்ரதிபாத3க-த்வாத், அநந்தரவாக்யஸங்க3தி ப்ரஸங்க3ஸங்க3தி என்றும்,

(2) அதில், உபாயாதி4காராநுப்ரவிஷ்டமாய், ஈஶ்வரஹ்ருத3யாநுகு3ணமாய், ஸ்வபு3த்3த்4யதீ4நமு-மான கு3ணத்துக்கு தோ3ஷத்வப்ரதிபாத3நாநந்தரம் உபேயாதி4காராநுப்ரவிஷ்டமான தத்3விதக4-கு3ணத்துக்கு தோ3ஷரூபத்வத்தை ப்ரதிபாதி3க்கிறதாகையாலே பௌர்வாபர்யம் என்றும் ஸூசிதம். [அழகுக்கிட்ட சட்டை](வா.161) இத்யாதி3த்3ருஷ்டாந்தப3லத்தாலே [தனக்குத்தான்] இத்யாதி3-தா3ர்ஷ்டாந்திகத்தில் [நன்மை] பத3ம், ஶேஷிபோ4க3விரோதி4ஸ்வபு3த்3த்4யதீ4நகு3ணபரம். அதிலும், [புண்யம்போலே பாரதந்த்ர்யம்] என்று மேலே சொல்லுகையாலே, ப்ராயஶ: ஶேஷ்யவதி3க-நிஷ்கர்ஷஸமாநாதி4கரணஶேஷத்வபரம். [தீமை]பத3ம், [நன்மை]ப்ரதியோகி3நிர்தே3ஶமாகை-யாலே, தத்3விவக்ஷிதஶேஷத்வவிபரீதஸ்வாதந்த்ர்யபரம். [அணைக்கைக்கு] என்கிறவிதுக்குச்சேர 'போ4க3த்துக்கு' என்று அத்4யாஹார்யம்; அத்4யாஹ்ருதமான அதுக்கு [விலக்கு] ஶப்3தி3தப்ரதிப3ந்த4-கத்திலே அந்வயம். இத்தைத்திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் (ஶேஷியானவன்) இத்யாதி3. (தன்வ்யாமோஹத்தாலே) என்றது - ஶேஷிரூபத4ர்மிக்3ராஹக-மாநஸித்3த4மான ஶேஷவஸ்துவிஷயக-போ4க்3யதாபு3த்3த்4யதீ4நவிஶ்ருங்க2லவிநியோக3விஷயக-உத்கடேச்சை2யாலே என்றபடி. (எனதுயிர் பட்டது) = என்னுடைய ஆத்மவஸ்துவுக்கு வந்த ஹாநியை. (ஆருயிர்பட்டது) = ஆருடைய ஆத்மவஸ்து அடைந்தது என்றபடி. இத்தால், "ஆட்கொள்வானொத்து" இத்யாதி3பூர்வோத்தர-ஸூக்திகண்டோ2க்தஶேஷஶேஷிப4ாவவிபர்யயத்தைச்சொல்லுகிறது. இத்தைப்பற்ற அருளிச்-

ஸ்வார்ஹமோக்ஷித்வமாகிற நன்மை, அநாதி3காலார்ஜிதாऽக்ருத்யகரணாதி3களான தீமைகளோபாதி, மோக்ஷியின் பே4க3ாநுரூபவிநியோக3த்துக்கு விலக்காயிருக்கும். (160)

**161. அழுக்கிட்ட சட்டை அணைக்கைக்கு விரோதி4யாமாப்போலே.**

அதெனபோலே என்ன, நாயகனுக்குமழுக்கிட்ட சட்டை, பே4க3த3சையில் அவனணைக்கைக்கு விரோதி4யாய், கழற்றிவைக்கவேண்டினாப்போலே, மோக்ஷியுக்கும் ஆத்மாலங்காரமான மோக்ஷத்வம், பே4க3ாநுரூபமல்லாவிடில் விரோதி4யாய்க் கழற்றி வைக்கவேண்டிவருமிறே. (161)

---

நாம் மோக்ஷபூ4தரன்றோ நம் மோக்ஷத்வத்தை நோக்கவேண்டாவோவென்று ஸ்வநைச்யாநு-ஸந்த4ாநத்தாலே பிற்காலித்து, தனக்குத்தான் தேடுகிற மோக்ஷத்வமாகிற நன்மை, அநாதி3காலம் "ஸ்வதந்த்ரோऽஹம்" என்றிருந்த தீமையோபாதி அவன்பே4க3த்துக்கு ப்ரதிப3ந்த4கமா-யிருக்குமென்கை. [தீமை] என்று அக்ருத்யகரணாதி3களைச் சொல்லவுமாம். (160)

161. மோக்ஷியினுடைய விருப்பத்துக்குடலாய் ஆத்மாவுக்கலங்காரமாயிருக்கிற மோக்ஷத்வம், பே4க3விரோதி4யாகிறபடி எங்ஙனேயென்ன அருளிச்செய்கிறார், [அழுக்கிட்ட சட்டை] என்று துடங்கி. அதாவது - ஸ்த்ரீக்கு அழுக்கிட்டசட்டை நாயகனுகப்புக்கு விஷயமுமாய், அவளுக்கு அலங்காரமாயிருந்ததேயாகிலும், பே4க3த3சையில் ஆலிங்க3நவிரோதி4யாமாப்போலே, இதுவும் பே4க3விரோதி4யாமென்றபடி. (161)

---

செய்கிறார் (மிகவும் தாழநின்று) இத்யாதி3. மோக்ஷத்வம் ப்ராயிகமாக நைச்யஸஹ-சரிதமாகக்காண்கையாலே, தத்ஸம்ப4ாவிதமான அம்சத்தை அருளிச்செய்கிறார் (நாம்) இத்யாதி3நா. (பிற்காலிக்கை) = நிவர்த்திக்கை. இதுவும் ஸ்வாதந்த்ர்யவிசேஷரூபமானாலும், ஒருவகை மோக்ஷத்வஜ்ஞாநயுக்தமானவிதுக்கு ப4க3வச்சே2ஷத்வஜ்ஞாநகந்த4விது4ரமான ப்ராசீநஸ்வாதந்த்ர்யம் த்3ருஷ்டாந்தமாகலாம் என்னுமபி4ப்ராயத்தாலே அருளிச்செய்கிறார் (அநாதி3காலம்) இத்யாதி3. (அநாதி3காலம்) இதி அத்யந்தஸம்யோகே3 த்3விதீயா. ஸப்தம்யர்த்த2த்திலே த்ரமிட3ப்ரத2மையாதல். [தீமை]சப்3த3ம் லோகப்ரஸித்3த4ார்த்த2பரமாகலாம் என்கிறார் (தீமை என்று அக்ருத்யகரணாதி3களை) இத்யாதி3. (160)

161. உத்தரவாக்யாவதாரிகை (மோக்ஷி) இத்யாதி3. "ஈசாஸ்ஸர்வஸ்ய ஜக3த:" என்று சேதநாசேத-நங்களுக்கு மோக்ஷித்வத்தைச்சொல்லி, "ப்ரபு4: ப்ரீணாதி" என்கையாலே மோக்ஷத்வம் ஆத3ரஹேது என்று லபி4க்கிறது என்னுமபி4ப்ராயத்தாலே அருளிச்செய்கிறார் (மோக்ஷியினுடைய விருப்பத்துக்கு) இத்யாதி3. கௌஸ்துப4த்துக்கு ப்ரபை4போலே, ஆத்மாவுக்கு ப4க3வச்சே2ஷத்வம் விச்சி2த்திவிசேஷ-ஸம்பாதி3தரஸாவஹதாப்ரயோஜகத்வேந அலங்காரவ்யபதே3சார்ஹம் என்னுமபி4ப்ராயத்தாலே அருளிச்செய்கிறார் (ஆத்மாவுக்கு) இத்யாதி3. இவையிரண்டுவிஷயமும் கஞ்சுகத்3ருஷ்டாந்த-ப3லலப்3த4ம். (அழுக்கு) இத்யாதி3யில், கஞ்சுகார்ப்பணாதி3களுக்கு கர்த்ராகாங்க்ஷையில் கஞ்சுகார்ப்பணரூபக்ரியாஸாமர்த்2யத்தாலே ஸ்த்ரீகர்த்ருகாரகம் என்னுமிடம் ஸித்3த4ம். அணைக்கையில் நாயகனுக்கு கர்த்ருத்வம் ஔத்ஸர்கி3கம் என்னுமபி4ப்ராயத்தாலே அருளிச்செய்கிறார் (ஸ்த்ரீக்கு) இத்யாதி3. (சட்டை) = கஞ்சுலி. இது ஸ்த்ரீயினுடைய அநந்யார்ஹதாப்ரகாசகமாகையாலே நாயக-ப்ரீதிவிஷயமாயிருக்கும் என்னுமபி4ப்ராயத்தாலே அருளிச்செய்கிறார் (நாயகனுகப்புக்கு) இத்யாதி3.

1 6 2. "ஹாரோऽபி".

அபி$_4$மதாப$_4$ரணமும் த$_3$ஶாவிஶேஷத்தில் அநபி$_4$மதமாமென்னுமிடத்துக்கு அநுஷ்ட$_2$ாநப்ரமாணம் காட்டுகிறார் மேல்; "ஹாரோபி நார்ப்பித: கண்டே$_2$ ஸ்பர்ஶஸம்ரோத$_4$பீ$_4$ருணா । ஆவயோரந்தரே ஜாதா: பர்வதாஸ்ஸரிதோ த்$_3$ருமா:" என்று ஸ்பர்ஶவிரோதி$_4$யாமென்று நாயகி திருக்கழுத்திலொரு முத்துத்தாவடமுட்படப் பூண்பதில்லை என்றாரே பரமபே$_4$ரகி$_3$யான பெருமாள். (162)

---

1 6 2. அழகுக்குடலானது அநுப$_4$வவிரோதி$_4$யாமென்னுமிடம், ஶேஷிவசநத்தாலே த$_3$ர்ஶிப்பிக்கிறார் மேல், ["ஹாரோऽபி"] என்று துடங்கி. "ஹாரோऽபி நார்ப்பித: கண்டே$_2$ ஸ்பர்ஶஸம்ரோத$_4$பீ$_4$ருணா । ஆவயோரந்தரே ஜாதா: பர்வதாஸ்ஸரிதோ த்$_3$ருமா:" என்று ஸம்ஶ்லேஷத$_3$ஶையில் ஸ்பர்ஶவிரோதி$_4$யாமென்னுமச்சத்தாலே பிராட்டி திருக்கழுத்திலொரு முத்து வடமுட்படப் பூண்பதில்லை என்றாரிறே பெருமாள்; "பீ$_4$ருணா" என்கிற லிங்க$_3$வ்யத்யயம் ஆர்ஷம். அன்றிக்கே, அழகுக்கிட்டது அணைக்கைக்கு விரோதி$_4$யாமென்னுமிடம் அறிவிக்கையே ப்ரயோஜநமாக்கி, லிங்க$_3$ாநுகு$_3$ணமாகப் பெருமாள் தம்மளவிலே யோஜிக்கவுமாம். (162)

---

கஞ்சுகம் ஸ்தநத்துக்கு ஆவரணமானாலும் அவயவிக்கு ஆப$_4$ரணம்போலே அலங்காரமாயிருக்குமே. இத்தை அருளிச்செய்கிறார் (அவளுக்கு அலங்காரமாய்) இத்யாதி$_3$. (161)

1 6 2. உக்தார்த்த$_2$த்தில் ப்ரமாணோபாத$_3$ாநம் ([ஹாரோபி] என்று) என்கிறார் (அழகுக்குடலானது) இத்யாதி$_3$. (அணைக்கை) என்கிறவிது ஆலிங்க$_3$நஜந்யஸுக$_2$பரம் என்னுமபி$_4$ப்ராயத்தாலே (அநுப$_4$வ-விரோதி$_4$யாம்) என்றது. "வபுரந்வலிப்தபரிரம்ப$_4$ஸுக$_2$வ்யவதா$_4$நபீ$_4$ருகதயா ந வதூ$_4$:" (மாகே$_4$ 9-51) என்கிறவிது கவிவசநமாகையாலே இத்தைப்பற்ற அநுப$_4$வரஸிகனான ஶேஷியினுடைய வசநத்தையே உதா$_3$ஹரிக்கை உசிதம் என்னுமபி$_4$ப்ராயத்தாலே (ஶேஷி-வசநத்தாலே) என்றது. உபாத்தப்ரமாணப்ரதீகத்தினுடைய அவயவ்யுபாதா$_3$நபூர்வகம் தத$_3$ர்த்த$_2$ம் (ஹாரோபி நார்ப்பித:) இத்யாதி$_3$. "ஆவயோரந்தரே ஜாதா: பர்வதாஸ்ஸரிதோ த்$_3$ருமா:" என்றும் "ஸரித்ஸாக$_3$ரபர்வதா:" என்றும் பாட$_2$த்$_3$வயமுமுண்டு. இந்த வசநத்தில் விவக்ஷிதாம்ஶத்துக்கு அர்த்த$_2$ம் (ஆஶ்லேஷ) இத்யாதி$_3$. ஹாரத்தினுடைய வஸ்துஸாமர்த்$_2$யத்தாலே (ஸ்பர்ஶ)பத$_3$ம் ஆலிங்க$_3$நகாலிகஸ்பர்ஶபரம் என்னுமபி$_4$ப்ராயத்தாலே (ஆஶ்லேஷத$_3$ஶையில்) என்றது. (ஸம்ரோத$_4$) ஶப்$_3$தா$_3$ர்த்த$_2$ம் (விரோதி$_4$யாம்) என்றது. (பீ$_4$ரு)ஶப்$_3$த$_3$ப$_2$லிதம் (அச்சத்தாலே) என்றது. "வபுரந்வலிப்த-பரிரம்ப$_4$ஸுக$_2$வ்யவதா$_4$நபீ$_4$ருகதயா ந வதூ$_4$:" என்று ஸ்த்ரீக்கு கர்த்ருத்வம் த்$_3$ருஷ்டமாகையாலே இங்கும் ஸாமர்த்$_2$யாத் பிராட்டிக்கு கர்த்ருத்வம் ஸித்$_3$தி$_4$க்கிறது என்னுமபி$_4$ப்ராயத்தாலே (பீ$_4$ருணா) என்கிறவிதுக்கு அர்த்த$_2$ம் (பிராட்டி) என்றது. (ஹார:) என்கிற ஏகவசநார்த்த$_2$ம் (ஒரு முத்துவடம்) இதி. [அபி]ஶப்$_3$தா$_3$ர்த்த$_2$ம் உம்மை. லோகத்திலே ஹாரம் வ்யவதா$_4$யகமானாலும், இங்குத்தை ஹாரம் "சிந்மயைஸ்ஸ்வப்ரகாஶைஶ்ச" என்று சிந்மயமாய், ப்ரதிக$_4$ாதாநர்ஹமாகையாலே வ்யவதா$_4$நப்ரஸங்க$_3$மில்லை. இப்படியிருந்தாலும், பீ$_4$த்யதிஶயத்தாலே, அதுவும் பூண்பதில்லை என்று [அபி] ஶப்$_3$த$_3$த்துக்கு தாத்பர்யம். "நார்ப்பித:" என்கிறவிதுக்கு அர்த்த$_2$ம் (பூண்பதில்லை) என்று. [பீ$_4$ரு]ஶப்$_3$த$_3$ம் பிராட்டியைச்சொல்லிற்றாகில், 'பீ$_4$ர்வா' என்று இருக்கவேணுமே என்ன (பீ$_4$ருணா என்கிற லிங்க$_3$வ்யத்யயம்) இதி. அதாவது புல்லிங்க$_3$ம் இதிஹாஸபுராணங்களிலும் வேத$_3$வத் வ்யத்யயாநுஶாஸநத்தாலே லிங்க$_3$வ்யத்யயாதி$_3$கள் வருமாகையாலே வரும் என்றபடி. (ஆர்ஷம்) = ரிஷி: வேத$_3$:. வைதி$_3$கப்ரக்ரியையாலே ஸாது$_4$ என்றபடி. "மநஶ்ஶிலாபா: திலகோ க$_3$ண்ட$_3$-

**163. புண்யம்போலே பாரதந்த்ர்யமும் பராநுப4வத்துக்கு விலக்கு.**

இப்படி போ4கா3நுரூபமல்லாத ஶேஷத்வம் விரோதி4யாமாப்போலே, போ4கா3நுரூபமல்லாத பாரதந்த்ர்ய-மும் ஸ்வதந்த்ரஸ்வாமியான பரனுடைய அநுப4வத்துக்குத் தூராலான விலக்காயிருக்கும், அநாதி3-காலார்ஜிதபுண்யம் மோக்ஷத்துக்கு விலக்கடியாமாப்போலேயென்கிறார். ஆக, ஸ்வாதீ4நஶேஷத்வ-பாரதந்த்ர்யங்கள் புண்யபாபவத் பரித்யாஜ்யங்கள், போ4கா3தீ4நமானவை போ4கோ3பகரணவத் உபா-

---

163. ஆனால் பின்னை பாரதந்த்ர்யமேயோ நல்லதென்ன அருளிச்செய்கிறார்மேல், [புண்யம் போலே] என்று துடங்கி. [புண்யம்] என்கிறது - கீழ் [நன்மை] என்கிற சொல்லாலே சொன்ன ஶேஷத்வத்தை; அது கீழ்ச்சொன்னபடியே ஸ்வநைச்யாநுஸந்தா4நத்தாலே இருக்கைக்கு உறுப்பாய்க் கொண்டு யாதொருபடி போ4க3விரோதி4யாகாநிற்கும், அப்படியே, போ4க3த3ஶை-யில் அவனுக்கெதிர்விழிகொடாதே அசித்துப்போலே கிடக்கைக்குறுப்பான கேவலபாரதந்த்ர்ய-மும், எதிர்விழிஸாபேக்ஷனான ஈஶ்வரனுடைய போ4க3த்துக்கு மிடறுபிடியாமென்றபடி.

---

பார்ஶ்வே நிவேஶித:" (ரா.ஸு.40-5) என்று ப்ரணயித்வாதிஶயத்தாலே பெருமாளுக்குப் பிராட்டிவிஷயத்தில் அலங்கர்த்ருத்வம் சொல்லுகையாலே இங்கும் ஹாரார்ப்பணகர்த்ருத்வம் பெருமாளுக்குக் கூடுமாகையாலே லிங்க3பா3த4மன்றிக்கே யோஜிக்கவுமாம் என்கிறார் (அன்றிக்கே) இத்யாதி3. அழகுக்குடலாகத்தான் தனக்கிட்டது அணைக்கைக்கு விரோதி4யாம் என்று இவ்வளவும் அறிவிக்கையே ப்ரயோஜநமாக்காதே (அழகுக்கிட்டது அணைக்கைக்கு விரோதி4யாம்) என்னுமிடம் அறிவிக்கைமாத்ரத்தையே ப்ரயோஜநமாக்கினால், ப்ரக்ருதார்த்த2த்துக்கு ப்ரமாணதயா உதா3ஹரணமாகலாம் என்னுமபி4ப்ராயத்தாலே அருளிச்செய்கிறார் (அழகுக்கிட்டது) இத்யாதி3. (லிங்கா3நுகு3ணமாக) என்றது - புல்லிங்க3த்துக்கு ஆர்ஷத்வாஶ்ரயணமின்றிக்கே என்றபடி. (பெருமான் தம்மளவிலே) என்றது - வக்தாவான தம்மை (பீ4ருணை) என்று நிர்தே3ஶித்தார் என்று அநுஸந்தி4க்கலாம் என்றபடி. (பீ4ரு)ஶப்3தா3பேக்ஷிதமான விஶேஷ்யம், ஸா ச அஹம் ச = ஆவாம், தயோ: ஆவயோ: என்று பிராட்டி ஸந்நிஹிதையாகையாலும், பூர்வோக்தஸாமர்த்2யத்தாலும் பிராட்டியுமாகலாம். இந்த ஸந்நிதி4யாலும், பூர்வோக்தஸாமர்த்2யத்தாலும், புல்லிங்க3ஶ்ருதியாலும் பெருமாளுமாதல், ஸ்ரீ பெருமாளேயாதல் ஆகலாம் என்று கருத்து. (162)

163, உத்தரவாக்யவாதாரிகை (ஆனால் பின்னை) இத்யாதி3. 'ஶேஷத்வம் பிற்காலிக்கையைப்பற்ற அம்ஶதோ தோ3ஷமாகிறது. பாரதந்த்ர்யம் பின்னை கார்த்ஸ்ந்யேந கு3ணமாயிருக்குமோ என்ன' என்றபடி. [புண்ய]ஶப்3த3விவக்ஷிதத்தை அருளிச்செய்கிறார் (புண்யமென்கிறது) இத்யாதி3நா. ஸித்3த4ாம்ஶத்தை த்3ருஷ்டாந்தீகரித்துக்கொண்டு ஸாத்4யாம்ஶத்தை ஸாதி4க்கை உசிதமாகையாலே [புண்யம்]ஶப்3த3ம் ஶேஷத்வபரம். அதுக்கு [புண்யம்]ஶப்3த3த்தாலே நிர்தே3ஶமும். பூர்வ-வாக்யத்திலே [நன்மை]ஶப்3த3த்தாலே நிர்தி3ஷ்டமாகையாலே. அதுதானும் "யத் த்வத்ப்ரியம் ததி3ஹ புண்யம்" என்று ஸித்3த4ஸாத்4யபுண்யஸாதா4ரண'புண்ய'பத3ப்ரவ்ருத்திநிமித்தம்; ப4க3வத்-ப்ரியத்வமாகையாலும், தாத்3ருஶப்ரியத்வம் ஶேஷத்வத்துக்கு உண்டாகையாலும் என்னும-பி4ப்ராயத்தாலே அருளிச்செய்கிறார் (கீழ் நன்மை என்கிற சொல்லாலே சொன்ன ஶேஷத்வத்தை) என்று. (எதிர்விழி)யாவது, போ4க3த3ஶையில் ஶேஷ்யபி4ப்ராயாநுகு3ணமாகத் தானும் சிறிது வ்யாபரிக்கை. (மிடறுபிடி) என்றது போ4ஜநஸமயத்தில் க3லநிரோத4ம்போலே என்றபடி. இத்தால் தாழநின்று பரிமாறுகிறவனுக்கு நைச்யஹேதுஶேஷத்வம் போ4க3விரோதி4யாகிறாப்போலே, போ4க3த3ஶையில் இவனுடைய ப்ரதிப்ரவ்ருத்திஸாபேக்ஷனான அவனுக்கு ப்ரதிப்ரவ்ருத்திவிரோதி4-

தே3யங்கள், தத்3பே4ாக3ானுரூபமான ஶேஷித்வஸ்வாதந்த்ர்யங்களும் பராதிஶயத்வேந ஶேஷத்வபாரதந்த்ர்யபராகாஷ்டை2யாய்விடும்; ஆகையால் பே4ாக3ானுரூபமாகையே ஓடவைத்த ஸ்வரூபமென்றபடி.(163)

ஸ்வக3தமானவிவை ஸ்வரூபவிருத்3த4ப்ரவ்ருத்திபோலே விருத்3த4மாய்விடுமென்கிறுர் மேல், [கு3ணம் போலே தே3ாஷநிவ்ருத்தி] என்று.

---

அன்றிக்கே, [புண்யம்] என்கிறது - ஸத்கர்மத்தையாய், அது யாதொருபடி பாபத்திற்காட்டில் வ்யாவ்ருத்தமாயிருக்கச்செய்தே ப4க3வத்ப்ராப்திப்ரதிப3ந்த4கமாகாநிற்கும், அப்படியே இருய்க்கைக்குறுப்பான ஶேஷத்வத்திற்காட்டில், அசித்துப்போலே எதிர்த்தலேயிட்டது வழக்காயிருக்கைக்குறுப்பாகையாலே வ்யாவ்ருத்தமான பாரதந்த்ர்யமும், எதிர்விழி கொடுக்கைக்குறுப்பல்லாமையாலே பரனுடைய அநுப4வத்துக்கு ப்ரதிப3ந்த4கமாமென்னவுமாம். இத்தால் கேவலஶேஷத்வமும் கேவலபாரத்ந்த்ர்யமும் ஓரோராகாரங்களாலே பே4ாக3விரோதி4யாகாநிற்கும்: பாரதந்த்ர்யத்தோடேகூடின ஶேஷத்வமே உத்3தே3ஶ்யமென்கை. (163)

---

யான பாரதந்த்ர்யவிஶேஷம் பே4ாக3விரோதி4யாயிருக்கும் என்றபடி. "புண-ஶுப4கர்மணி" என்கிற தா4துவின்மேலே பு3ாஹுலகமாய் ப4ாவே 'த்ய'ப்ரத்யயமாதல், ப4ாவார்த்த2க'ஷ்யத்'ப்ரத்யயம் வந்து ப3ஹுலமாக கு3ணபா4வமாதல் வந்து (புண்ய)ஶப்3த3ம் நிஷ்பந்நமென்கிற வ்யுத்பத்திபக்ஷத்தை அவலம்பி3த்து யோஜநாந்தரம் அருளிச்செய்கிறுர் (அன்றிக்கே புண்யமென்கிறது ஸத்கர்மத்தையாய்) இத்யாதி3நா. (பாபத்திற்காட்டில் வ்யாவ்ருத்தமாயிருக்கச்செய்தே) என்றது, ஶாஸ்த்ரபே3ாதி4தப2லஹேதுத்வேந ஸ்வஸஜாதீயமாய், து3:க2ஹேதுவான பாவத்திற்காட்டில் ஸுக2ஹேதுதயா விலக்ஷணமாயிருக்கச்செய்தே என்றபடி. "புண்யபாபே விதூ4ய" (மு.உ..3-1-3) என்கிறவித்தை உட்கொண்டு அருளிச்செய்கிறுர் (ப4க3வத்ப்ராப்தி) இத்யாதி3. (இருய்க்கைக்குறுப்பான) இத்யாதி3:- அதாவது, தாழநின்று பரிமாறுகைக்கு ப்ரதிப3ந்த4கமான நைச்யாநுஸந்தா4நஹேதுஶேஷித்வாபேக்ஷயா பராபி4ப்ராயவிபரீதப்ரவ்ருத்த்யபா4வப்ரயோஜகத்வேந விலக்ஷணமான பாரதந்த்ர்யமும், ஶேஷிக்கு இத்தலையில் ப்ரதிப்ரவ்ருத்த்யபேக்ஷாத3ஶையில் தாத்3ருஶப்ரதிப்ரவ்ருத்திப்ரதிப3ந்த4கமாகையாலே, ஶேஷிபே4ாக3ப்ரதிப3ந்த4கமாம் என்றபடி. மூலத்திலே [பராநுப4வ]ஶப்3த3ம் ஷஷ்டீதத்புருஷன் என்னுமபி4ப்ராயத்தாலே (பரனுடைய அநுப4வத்துக்கு) என்றது. த்3ருஷ்டாந்தத்தில் புண்யத்துக்கு (1) ஶாஸ்த்ரபே3ாதி4தப2லஹேதுத்வேந பாபத்தோடே ஸாஜாத்யமும், (2) ஸுக2ஹேதுத்வேந தத்3வைஜாத்யமும், (3) ப4க3வத்ப்ராப்திப்ரதிப3ந்த4கத்வேந அதி4காரிவிஶேஷத்தைப் பற்ற ஸாம்யமும் ஆனுப்போலே, தா3ர்ஷ்டாந்திகத்திலும் பாரதந்த்ர்யத்துக்கு (1) ஶேஷிப்ரியத்வேந ஶேஷத்வத்தோடே ஸாஜாத்யமும், (2) நைச்யாநுஸந்தா4நப்ரதிப3ந்த4கத்வேந தத்3வைஜாத்யமும், (3) ஶேஷ்யபி4ப்ரேதபே4ாக3விரோதி4த்வேந தத்ஸாம்யமும் உண்டாகையாலே, ஸ்வஸஜாதீயப்ரதியோகி3கவ்யாவ்ருத்திமத்த்வே ஸதி, த4ர்மாந்தரப்ரயுக்ததத்ப்ரதியோகி3கஸாம்யவத்த்வம், புண்யபாரதந்த்ர்யரூப-உபமாநோபமேயங்களுக்கு ஸாதா4ரணத4ர்மம் என்று கண்டு கொள்வது. ப2லிதார்த்த2த்தை த3ர்ஶிப்பிக்கிறுர் (இத்தால்) இத்யாதி3நா. கேவலத்வம் அந்யோந்யாஸஹக்ருதத்வம். (ஓரோர் ஆகாரங்களாலே) என்றது யதா2க்ரமம் ஶேஷ்யநபி4மதநைச்யாநுஸந்தா4நஹேதுத்வேநவும் தத3பி4மதப்ரதிப்ரவ்ருத்திப்ரதிப3ந்த4ஹேதுத்வேநவும் என்றபடி. (பாரதந்த்ர்யத்தோடே கூடின) இத்யாதி3:- அதாவது பராபி4ப்ரேதப்ரவ்ருத்திநிமித்தகஸ்வரூபபாரதந்த்ர்யஸஹக்ருதபராதிஶயாதா4யகஸ்வரூப-ஶேஷத்வமே ஆத3ரணீயம் என்றபடி. (163)

**164. கு3ணம்போலே தே3ாஷநிவ்ருத்தி.**

அநாதி3காலம் ஆர்ஜிதமான தே3ாஷத்தின் ஸ்வாதீ4நநிவ்ருத்தி தத்ப்ரவ்ருத்தியைப்பற்றவும், பாரதந்த்ரஸ்வரூபவிரோதி4யாமாப்போலே, ஸ்வக3தாந்தரங்க3கு3ணங்களும் விரோதி4களாய்விடும் என்கிருரென்று [தே3ாஷநிவ்ருத்தி போலே கு3ணம்] என்றந்வயித்தருளிச்செய்வர். அன்றியே ஸ்வக3தகு3ணம்போலே, ஸ்வதே3ாஷநிவ்ருத்திப்ரவ்ருத்தியும் ஸ்வரூபவிரோதி4யென்று, மேலிவ் ப்ராஸங்கி3காநுகு3ணமாக யதா2ந்வயமாகவுமருளிச்செய்வர். ஆக, அவனுக்கநபி4மதமாமது இவனுக்கு

---

164. இப்படி உபேயத3ஶையில் ஶேஷத்வபாரதந்த்ர்யங்கள் பராநுப4வத்துக்கு விலக்காம்படியை அருளிச்செய்த அநந்தரம், ப்ராப்தித3ஶையில் இவனுடைய நிர்ப்ப3ந்த4மூலமாக உண்டான தே3ாஷநிவ்ருத்தி, பராநுப4வத்துக்கு விலக்காம்படியை அருளிச்செய்கிருர், [கு3ணம்போலே தே3ாஷநிவ்ருத்தி] என்று. [கு3ணம்] என்கிறது கீழ் விரோதி4யாகச்சொன்ன ஶேஷத்வபாரதந்த்ர்யங்களிரண்டையும். இவைதான் ஆத்மாவுக்கு அந்தரங்க3கு3ணமா-யிறேயிருப்பது. இதுபோலே [தே3ாஷநிவ்ருத்தி] என்றது - இவ்வாத்மகு3ணத்3வயமும் கீழ்ச்-

---

164. உத்தரவாக்யஸங்க3தி (இப்படி உபேயத3ஶையில்) இத்யாதி3. உபாயாதி4காராநுப்ரவிஷ்ட-ஸ்வக3தஸ்வீகாரதே3ாஷத்வசிந்தாப்ரஸங்க3த்தாலே உபேயாதி4காராநுப்ரவிஷ்ட-ஶேஷத்வபாரதந்த்ர்யவிஶேஷங்களினுடைய தே3ாஷத்வம் சிந்திதம். தத்ப்ரஸங்கா3த் தது3பா4ய-த3ஶாந்தராலபூ4தப்ராப்தித3ஶாநுப்ரவிஷ்டத்தினுடைய பராநுப4வப்ரதிப3ந்த4கஸ்வரூபதே3ாஷத்வம் சிந்த்யதே என்று ஸங்க3திஸூசநம் கண்டுகொள்வது. கிஞ்ச, ஶேஷத்வபாரதந்த்ர்யரூபகு3ணத்துக்கு பராநுப4வப்ரதிப3ந்த4கத்வப்ரதிபாத3நப்ரஸங்கத்தாலே தே3ாஷநிவ்ருத்திக்கும் பராநுப4வப்ரதி-ப3ந்த4கத்வம் சொல்லுகிறது என்றும் ஸங்க3திஸூசநம் கண்டுகொள்வது. இவையிரண்டும் (உபேயத3ஶையில்), (ப்ராப்தித3ஶையில்) என்கிற பத3ங்களாலும், (ஶேஷத்வபாரதந்த்ரயங்கள்), (தே3ாஷநிவ்ருத்தி) என்கிற பத3ங்களாலும் ஸூசிதங்களிறே. [கு3ண]ஶப்3த3விவக்ஷிதத்தை அருளிச்செய்கிருர் (கு3ணம் என்கிறது) இத்யாதி3நா. (கீழ்விரோதி4யாகச்சொன்ன) என்றது கேவலஶேஷத்வமும், கேவலபாரதந்த்ர்யமும் பே4த3விரோதி4யாகச்சொல்லிற்றிறே; அப்படிப்பட் - என்றபடி. விரோதி4க்கு கு3ணத்வம் வ்யாஹதம். த்வயோ: ஏகத்வமும் அநுபபந்நம் என்கிற ஶங்கையிலே அருளிச்செய்கிருர் (இவைதான்) இத்யாதி3. அதாவது, ஶேஷ்யபி4ப்ராயத3ஶையில் ஸ்வாஶ்ரயோத்கர்ஷாவஹத்வரூபகு3ணத்வம் இவற்றுக்கு உண்டாகையாலே கு3ணத்வம் வ்யாஹத-மன்று. இவை ஸ்வரூபேண இரண்டாயிருந்தாலும் ஈஶ்வரவ்யாவ்ருத்திரூபஸ்வாஶ்ரயோத்கர்ஷா-வஹத்வமும், ஜ்ஞாநாநந்த3த்வாபேக்ஷயா ப்ராத4ம்யமும், ஒன்ருயிருக்கையாலே, இவற்றுக்கு அந்தரங்க3கு3ணத்வம் ஏகமாகையாலே "ஜாத்யாக்ருதிவ்யக்தய: பதா3ர்த்த2:" "வேதா3: ப்ரமாணம்" இத்யாதி3களிவ்போலே ஏகத்வமும் உபபந்நம். ஆகையிறே, முமுக்ஷுப்படியிலே "ஸ்வரூபமும் ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யமும்" என்று ப்ரணவநம:ப்ரதிபாத்3யங்களான ஶேஷத்வபாரதந்த்ர்யங்-களுக்கு 'ஸ்வரூபமும்' என்று ஏகவசநாந்த'ஸ்வரூப'ஶப்3த3த்தாலே அபி4தா4நம் என்றபடி. பதா3ர்த்த2த்தைச் சொல்லி, வாக்யார்த்த2த்தை அருளிச்செய்கிருர் (இதுபோலே) இத்யாதி3நா. ப்ரத்யேககு3ணத்வாபி4ப்ராயத்தாலே (இவ்வாத்மகு3ணத்3வயமும்) என்றது. ஆத்மகு3ணயோ: த்3வயம் என்றபடி. அன்றிக்கே, இவ்வாத்மகு3ணமான இத்3வயமும் என்றுய், பூர்வவத்3கு3ணத்வமொன்று என்றபடியாகவுமாம். [மங்கவொட்டு] (வா.167) இத்யாதி3ப்ரமாணோதா3ஹரணப3லத்தாலும், [வேர்ச்சுடுமவர்] (வா.168) இத்யாதி3த்3ருஷ்டாந்தப3லத்தாலும், [தே3ாஷநிவ்ருத்தி]ஶப்3த3ம் அநுத3யஸம்ஶயவிபர்யயாதி3ரூபஸ்வாஶ்ரயாபகர்ஷாவஹத்வப்ரயுக்த'தே3ாஷ'ஶப்3த3வாச்யதாகப்ரக்ருதி-

சொன்னபடியே யாதொருபடி பராநுப4வத்துக்கு விலக்காகிறது, அப்படியே, இவன் நிர்ப்ப3ந்தி4த்துப் பண்ணுவித்துக் கொள்ளுகிற ப்ரக்ருதிஸம்ப3ந்த4மாகிற தே3ாஷத்திஞுடைய நிவ்ருத்தியும், சரமஶரீரமாகையாலே இத்தோடே சிறிதுநாள் வைத்து அநுப4விக்க இச்சி2க்கிற அவனுடைய அநுப4வத்துக்கு விலக்காமென்கை. [கு3ணம்போலே] என்று பாரத்ந்த்ர்ய-

---

ஸம்ப3ந்த4த்திஞுடைய நிவ்ருத்திபரம். அத ஏவ அந்த தே3ாஷநிவ்ருத்தியிலே மோக்ஷநிஷ்ட-ப்ரார்த்த2நௌத்கட்யரூபநிர்ப3ந்த4மூலகத்வமும் ஶப்3த3ம் என்னுமபி4ப்ராயத்தாலே அருளிச்செய்கிறூர் (அப்படியே இவன் நிர்ப3ந்தி4த்துப் பண்ணுவித்துக்கொள்ளுகிற) இத்யாதி3. ஶேஷத்வம் தாழநின்று பரிமாறுகையிலும், பாரதந்த்ர்யம் எதிர்விழி கொடுக்கையிலும் விலக்காஞப்போலே, நிர்ப3ந்த4மூலக-ப்ரதிப3ந்த4கநிவ்ருத்தி எவ்வழியாலே விலக்கு என்ன? அருளிச்செய்கிறூர் (சரமஶரீரமாகையாலே) இத்யாதி3. சரமஶரீரத்துக்கு இவனபி4ப்ராயத்தாலே தே3ாஷத்வமும், அவனபி4ப்ராயத்தாலே அநுப4ாவ்யத்வமும் என்று கருத்து. [தீமையோபாதி நன்மை] (வா.160), [புண்யம்போலே பாரதந்த்ர்யம், கு3ணம்போலே தே3ாஷநிவ்ருத்தி] (வா.163) என்று ஶாநோபமாவ்யஞ்ஜந-ஸ்வாரஸ்யத்தாலும், [கு3ணம்] இதி ஏகவசநஸ்வாரஸ்யத்தாலும், [கு3ண]ஶப்3த3ம் பாரதந்த்ர்ய-மாத்ரபரம் என்னுமபி4ப்ராயத்தாலே [கு3ணம்போலே] என்கிறவிதுக்கு யோஜநாந்தரம் அருளிச்-செய்கிறூர் (கு3ணம்போலே என்று பாரதந்த்ர்யமொன்றையும்) இத்யாதி3. பூர்வபூர்வவாக்யத்தில் உபமாநதயா நிர்தி3ஷ்டத்துக்கு உத்தரோத்தரவாக்யத்தில் வஸ்த்வந்தரங்களைப்பற்ற உபமேயதயா நிர்தே3ஶம் ஶாநோபமை என்று ஆலங்காரிகர் சொல்லுவர்கள். (164)

---

164. (சரமஶரீரமாகையாலே இததோடே சிலநாளவைத்து அநுப4விக்க இச்சி2க்கிற) என்றது:- I "ஸந்த4ாம் ச யாம் ஸந்த3தே4", "ப்3ரஹ்மணேஷ:", "ரமதே தஸ்மிந் உத ஜீர்ணேஶயாநே" என்று இந்த சேதநஞானவன் யாதொரு தநுவைக்கொண்டு ப4க3வத்ஸம்ப3ந்த4த்தைப் பண்ணிஞனே அந்த ஶரீரம் ஜீர்ணமாய்க்கிடந்தாலும் அத்தை விடமாட்டாதே எம்பெருமான் அதில் ரமித்திருப்-பான் என்னும் ஶ்ருத்யர்த்த2த்தைத் திருவுள்ளம்பற்றி "வஞ்சக்கள்வன்" இத்யாதி3 ஸ்வரூபஜ்ஞ-ரில் தலைவரான ஆழ்வார் ஈஶ்வரனுக்கு அநபி4மதமான ஸ்வதே3ஹநிவ்ருத்தியை நிர்ப3ந்-தி4த்துப் பண்ணிவைத்துக் கொண்டபடியைச் சொல்லுகிற பாட்டுகளை இப்ரகரணத்தில் உதா3ஹரிக்கை விவக்ஷிதவிபரீதமாக பர்யவஸியாதோ என்னில்;
அவனுக்கே அருசி பிறக்கும்படி நன்றாக அந்த தே3ஹத்திஞுடைய ஹேயதையை அறிவித்து, அவனைக்கொண்டே விடுவித்துக்கொள்ளுகையாலே, அவனுடைய போ4கவிரோத4மில்லாமை-யாலே வைபரீத்யமில்லை என்று கண்டுகொள்வது.

II அன்றிக்கே 'ஸார்வபௌமன் உண்ணப்புக்கால், அருகிருந்து கறிக்காட்டுமவன, இது பொரித்தகறி இது புளிப்பட்டது என்று அவன்தொடுமத்தையெல்லாம் கையிட்டுச்சொல்லிக் கொண்டிருக்கையாகிற தன் தொழிலை ஒருக்கால் மறந்திருக்கை மஹாபராத4மோபாதி, "அறியாதார்க்கு உய்யப்புகுமாறும்" இத்யாதி3ப்படியே ஸர்வவிஷயத்திலும் அஜ்ஞாதஜ்ஞாபநமே தொழிலாகவுடையவரான ஆழ்வாரும் தம்முடைய திருமேனியில் எம்பெருமான் மேல்விழுந்து அநுப4விக்கத் தேடுகிறபடியைக் கண்டு இதின் கு3ணத்தை நாம் இப்போது அறிவியாவிட்டால், மஹாபராத4மாம் என்று பார்த்து அத்தை அவனுக்கு நன்றாக அறிவித்து, ஹேயமானவித்தை விடுவிக்க வேணும் என்று விண்ணப்பம் செய்ய, அவனுக்கு அந்தத் திருமேனியை அசலறியாத படி பெற்றவிடத்திலேயே ஶ{?ச}மித்து{=வஶத்தில்}வைத்துக்கொண்டு அநுப4விக்கவேணும் என்று திருவுள்ளமாய் விடுகையாலே, ஆழ்வார் அர்த்தி2த்தபடியே ஆழ்வாரைத்தன் திருமேனி-யில்நின்றும் விடுவித்துக் கொண்டு திருமேனியைப் பொலிந்துநின்றமரரான {?பொலிந்து நின்ற பிராஞனை} தன் ஸந்நிதி4க்குள்ளேயே ஶமித்துக்கொண்டு {= வஶத்தில் கொண்டு} அநுப4வியாநின்றூனிறே. ஆகையால் விவக்ஷிதவிபரீதமில்லை என்றுகவுமாம். (164)

விரோதி4யென்றதாய்த்து. (164)

ஆகில், தோ3ஷமபி4மதமாய் ஸ்வதோ3ஷத்தைப்போக்குகையுமநபி4மதமாமோவென்ன, அபி4மதவிஷயமானால் அப்படியாமிறே என்கிறார் [ஆப4ரணம்] இத்யாதி3யால்.

**165. ஆப4ரணம் அநபி4மதமாய், அழுக்கு அபி4மதமாயிராநின்றதிறே.**

அஶோகவநிகையினின்றும் எழுந்தருளுகிறபோது நாச்சியார் சாத்தின ஆப4ரணம் அப்போது பெருமாளுக்கு அநபி4மதமாய், அங்கே பத்துமாஸமெழுந்தருளியிருந்தபடியே உடைமுடிபேணாதிருந்த திருமேனியிலழுக்கும், அவ்விருப்பும் காணவாசைப்பட்ட அவர்க்கு அத்தசையிலழுக்கே அபி4மதமாயிராநின்றதிறே. அப்படியே இவனுடைய ஸ்வயத்நக்ருதநிர்தோ3ஷத்வம் அங்கீ3காரத3ஶையில் அநபி4மதமாய், ஸதோ3ஷத்வமே வத்ஸலனான ஸ்வாமிக்கு அபி4மதமாமென்றபடி. (165)

**166. "ஸ்நாநம் ரோஷஜநகம்" என்கிற வார்த்தையை ஸ்மரிப்பது.**

இந்த ஸ்வதோ3ஷநிவ்ருத்த்யந்வயம் அவனுக்கு அநபி4மதமாமளவேயல்ல, ரோஷஜநகமுமாய் இருக்குமென்னுமதுக்கு, ஸ்ரீ வீபீ4ஷணப்பெருமாள் நிர்ப்ப3ந்தி4க்க, பெருமாளுகப்பரென்று நாச்சியார்

---

மொன்றையும் த்3ருஷ்டாந்திக்கிறதாகவுமாம். (164)

165. தோ3ஷநிவ்ருத்தியில் ஆத்மஸ்வரூபம் அத்யந்தபரிஶுத்3த4மாய், போ4க்3யமாயிருக்குமத்தனையன்றோ, ஆனபின்பு தோ3ஷநிவ்ருத்தி அநபி4மதமாய், தோ3ஷம் அபி4மதமாயிருக்கக் கூடுமோவென்ன அருளிச்செய்கிறார் [ஆப4ரணம்] என்றுதுடங்கி. அதாவது – லோகத்தில் விஷயப்ரவணராயிருப்பார்க்கு அபி4மதவிஷயத்தினுடைய ஔஜ்ஜ்வல்யஹேதுவான ஆப4ரணம் அநபி4மதமாய், அநௌஜ்ஜ்வல்யஹேதுவான அழுக்கு அபி4மதமாயிராநின்றதிறே என்கை. (165)

166. இதுதான் லௌகிகத்திலன்றிக்கே பிராட்டிதிறத்தில் அவன்றனக்கும் இப்படி இருந்தமைக்கு ஸூசகமான வார்த்தையை ஸ்மரிப்பிக்கிறார் மேல் [ஸ்நாநம்] என்றுதுடங்கி.

---

165. உத்தரவாக்யாவதாரிகை (தோ3ஷநிவ்ருத்தியில்) இத்யாதி3. ஆத்மஸ்வரூபம் அத்யந்தம் நிர்மலம் என்கிறவித்தையுட்கொண்டு அருளிச்செய்கிறார் (ஆத்மஸ்வரூபம்) இத்யாதி3. (அபி4மதவிஷயத்தினுடைய) என்றது நாயிகையினுடைய என்றபடி. இங்கே "நேத்ரோபாந்தவதம்ஸிதே ஶ்ருதிபுடே நீலோத்பலம் நிஷ்ப2லம் ஹாரஸ்ஸ்ரீபரிகர்மிதே ஸ்தநதடே ஹாரோ ந பா4ர: கத2ம் । பிண்டா3லக்தக-பாதநம் சரணயோ: பீடா3ப2லம் தாம்ரயோ: வாமாக்ஷ்யா வபுஷி ஸ்வபா4வஸுரபௌ4 வ்யர்த்தா2நு-லேபக்ரியா", "யதி3த3ம் அக3ணயித்வா து3ர்வஹம் ஶ்ரோணிபா4ரம் மத3பி4ஸரணலோபா4த் ப்ரஸ்தி2தம் பத்3மதாம்ரம் । அயமஹமபி4வாஞ்சா2ம்யப்ரம்ருஜ்யைவ பாம்ஸூம் ஸுமுகி2! பத3தலம் தே தாடி3தும் சும்பி3தும் ச " என்கிறவித்தையும் கண்டுகொள்வது. (165)

166. உத்தரவாக்யாவதாரிகை (இதுதான்) இத்யாதி3. (இப்படியிருந்தமைக்கு) என்றது ஆப4ரணம் அநபி4மதமாய், அழுக்கு அபி4மதமாயிருந்தமைக்கு என்றபடி. மூலத்திலே [ஸ்நாநம் ரோஷஜநகம் என்கிற வார்த்தையை] என்றது "ஸ்நாநம் ரோஷஜநகம்" என்கிற அர்த்த2த்தை வ்யஞ்ஜிப்பிக்கிற வார்த்தையை என்று விவக்ஷிதம் என்னுமபி4ப்ராயத்தாலே அருளிச்செய்கிறார் (ஸூசகமான) என்று. மூலத்திலே வார்த்தையை விஶேஷ்ய உபாதா3நம் பண்ணாதொழிந்தது "தீ3போ நேத்ராதுரஸ்யேவ

பண்ணின ஸ்நாநம், அழுக்குடன் காணவாசைப்பட்ட பெருமாளுக்கு, "தீ₃போ நேத்ராதுரஸ்யேவ ப்ரதிகூலாஸி மே த்₃ருட₄ம்" என்று நேத்ரரோகி₃க்கு தீ₃பம் பெறுவதலைப் பிறப்பிக்குமாப்போலே ரோஷஜநகமு–

அதாவது – பிராட்டி திருமஞ்சனம் செய்து வந்தது பெருமாளுக்கு ரோஷஜநகமென்னுமத்தை ப்ரகாஶிப்பிக்கிற "தீ₃போ நேத்ராதுரஸ்யேவ ப்ரதிகூலாஸி மே த்₄ருவம்" என்கிற வார்த்தையை இவ்வர்த்த₂த்துக்குடலாக ஸ்மரிப்பதென்கை. "ஸபங்காமநலங்காராம்" இத்யாதி₃ப்படியே – பத்துமாஸம் திருமஞ்சனம் பண்ணுமல் அழுக்கடைந்திருந்த வடிவைக் காண ஆசைப்பட்டிருந்த–வர்க்கு, இவள் திருமஞ்சனம் பண்ணிவந்தவிது ரோஷஜநகமாகச் சொல்லவேண்டாவிறே. ஆனல், "தீர்க்க₄முஷ்ணம் விநிஶ்வஸ்ய மேதி₃நீமவலோகயந் । உவாச மேக₄ஸங்காஶம் விபீ₄ஷணமுபஸ்தி₂தம் ।। தி₃வ்யாங்க₃ராக₃ாம் வைதே₃ஹீம் திவ்யாப₄ரணபூ₄ஷிதாம் । இஹ ஸீதாம் சிரஸ்ஸ்நாதாம் உபஸ்த₂ாபய மாசிரம்" என்று இவர்தாமேயன்றே திருமஞ்சனம்பண்ணி அலங்கரித்துக்கொண்டு வரும்படி ஸ்ரீவிபீ₄ஷணுழ்வானைப் பார்த்தருளிச்செய்தவர்; இப்படி இருக்கச்செய்தே பின்னை ரோஷம் ஜநிப்பானென்? என்னில்; நாம் நல்லவார்த்தை சொல்லி

ப்ரதிகூலாஸி மே த்₄ருவம்", "அஸ்நாதா த்₃ரஷ்டுமிச்ச₂ாமி ப₄ர்த்தாரம் ராக்ஷஸாதி₄ப" என்று த₃ம்பதிகளுடைய வாக்யத்₃வயவிவக்ஷயாலே என்னுமபி₄ப்ராயத்தாலே ப்ரத₂மம் பெருமாள் வார்த்தையாக வ்யாக்₂யாநம். (ப்ரகாஶிப்பிக்கிற "தீ₃போ நேத்ராதுரஸ்யேவ") இத்யாதி₃. (நேத்ராதுரஸ்ய) என்றது நேத்ரரோகி₃ண: என்றபடி. இத்தால் ஸ்வதஶ்ஶைத்₃த₄மாய், ஸ்வஸம்ப₃ந்த₄த்தாலே வஸ்த்வந்தரத்துக்கும் ப்ரகாஶத்தி₄களைப்பண்ணக்கடவ தீ₃பத்தினுடைய ஔஜ்ஜ்வல்யம், கண் நொந்தவனுக்கு ப்ரதிகூலமாய், அப்ரகாஶஹேதுமாலிந்யம் அநுகூலமா–யிருக்குமாப்போலே, ஸ்வதஶ்ஶுத்₃தை₄யாய், ஸ்வஸம்ப₃ந்த₄த்தாலே பிறக்கும் ப்ரகாஶத்தி₄களைப் பண்ணக்கடவளாய், ஸ்நாநோஜ்ஜ்வலையான பிராட்டியினுடைய ஸ்நாநப்ரயுக்தமான ஔஜ்ஜ்வல்யம் பரமரஸிகராகையாலே ஸ்வவிரஹப்ரயுக்தமான பிராட்டியினுடைய விரஹவேஷத்தைக் காண்கையால் உண்டான ஆசையாலே பிணிப்புண்டு கிடக்கிற பெருமாள் திருவுள்ளத்துக்கு ப்ரதிகூலமாயிருந்தது என்றபடி. தீ₃பத்₃ருஷ்டாந்தத்தாலே ராவணப₄வநவாஸப்ரயுக்த–அதிஶங்காமூலகம் இந்த ப்ராதிகூல்யம் என்னுமிடம் வ்யாவ்ருத்தம். ஸ்வவிரஹப்ரயுக்தவிக்ருதிவிஶேஷம் காண்கை ப்ராணிகளுக்கு அத்யந்தாபி₄மதம் என்னுமிடம், "வஸநே பரிதூ₄ஸரே வஸாநா நியமக்ஷாமமுகீ₂ த்₄ருதைகவேணி। அபி நிஷ்கருணஸ்ய ஶுத்₃த₄ஶீலா மம தீ₃ர்க்க₄ம் விரஹவ்ரதம் பி₃ப₄ர்த்தி" (ஶாகுந்தலம் 5) என்றும், "ப₄ாஷ்பேண ப்ரதிஷித்₃தே₄பி ஜயஶப்₃தே₃ ஜிதம்மயா । யத்தே த்₃ருஷ்டம் அஸம்ஸ்கார–பாடலோஷ்ட₂புடம் முக₂ம்" என்றும் கவிகளாலும் சொல்லப்பட்டது. இத்தைத் திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறுர் (ஸபங்காம்) இத்யாதி₃. (அநலங்காராம்) என்கிற ஆப₄ரணப₄ாவத்தைப்பற்ற அழுக்கு அபி₄மதம் என்று தோற்ற (ஸபங்காம்) என்று ப்ரத₂மம் அழுக்கைச்சொல்லிற்று என்னுமபி₄ப்ராயத்தாலே அதற்குமாத்ரம் அர்த்த₂ம் அருளிச்செய்துகொண்டு ரோஷத்தை உபபாதி₃க்கிறுர் (பத்துமாஸம்) இத்யாதி₃நா. ரோஷம் ஸ்நாநஹேதுகமன்று, தாமே ஸ்நாநம் பண்ணுவித்துக்கொண்டு வரச்சொல்லுகையாலே; கிந்து அந்யஹேதுகம் என்கிற ஶங்கையை அநுவதி₃க்கிறுர் (ஆனல்) இத்யாதி₃நா. அத்தை பரிஹரிக்கிறுர் (நாம்) இத்யாதி₃நா. அதாவது, பூ₄ர்வகாலம் ஸ்நாநாதி₃களுக்கு அவகாஶமில்லாமையாலே விதி₄வஶத்தாலே கர்ஶிதையானவள் இனிமேலும் கர்ஶிக்கப்படவேண்டா; ஸ்நாநம் பண்ணி வரக்கடவள் என்று ஆந்ருஶம்ஸ்யத்தாலே சொல்லக்கடவோம். அவள்தானே நம்முடைய திறத்தில் தான் இருக்கக்கடவ ப்ரகாரத்தை

விடக்கடவோம், தானே அறியாளோவென்று சொல்லிவிட்டாரித்தனைபோக்கி, அது ஸஹ்ருத$_3$யமாகச் சொன்ன வார்த்தையல்ல, அல்லாதபோது ருஷ்டராகக்கூடாதிறே. அவள்தான், "அஸ்நாதா த்$_3$ரஷ்டுமிச்ச$_2$ாமி ப$_4$ர்த்தாரம் ராக்ஷஸாதி$_4$ப" என்றிருக்கச்செய்தே, "யத$_2$ாஹ ராமோ ப$_4$ர்த்தா தே தத$_2$ா தத் கர்த்துமர்ஹஸி" என்று ஸ்ரீவிபீ$_4$ஷணுழ்வான் நிர்ப்ப$_3$ந்தி$_4$த்துச் சொன்ன பின்பன்றே திருமஞ்சனம் பண்ணிற்றென்னில்; அவன், பெருமாள் திருவுள்ளக் கருத்தறியாதே, அருளிச்செய்த வார்த்தையைக்கொண்டு சொன்னுனித்தனையிறே; எல்லாம் செய்தாலும் பத்துமாஸம் ராவணப$_4$வநத்திலே இருந்தவிவள் சிறையிருந்த வேஷத்தோடே சென்று காணுமித்தனையல்லது, திருமஞ்சனம் பண்ணேன் என்றிருக்கவேணுமிறே; அது செய்யாதே, சடக்கெனத் திருமஞ்சனம் பண்ணிவந்தாளிறே. அது, அவ்விருப்புக்காண ஆசைப்பட்டவர்க்கு ரோஷஹேதுவாய்த்து. ஆகையாலே [ஸ்நாநம் ரோஷஜநகம்] என்னக்

---

அபி$_4$ப்ராயஜ்ஞையாய், உ.சிதஜ்ஞையுமானவளாகையாலே, அறிந்துசெய்யக்கடவள் என்று சொல்லிவிட்டார் என்றபடி. இப்படிக் கொள்ளாவிடில் பா$_3$த$_4$கத்தை தூ$_3$ஶயிப்பிக்கிறார் (அல்லாதபோது) இத்யாதி$_3$நா. ரோஷாந்யதா$_2$நுபபத்தியே ஸ்நாநாத்$_3$யுக்தியினுடைய அஹ்ருத$_3$யத்வகல்பகம் என்றபடி. தை$_3$வவஶாபந்நராவணக்$_3$ருஹவாஸம் ரோஷஹேதுவாகமாட்டாதே. தாமே ஸ்நாநத்தை விதி$_4$த்துப் பின்பு இதுக்காகக் கோபிக்கக்கூடாதே. இப்படிக் கோபிக்கைக்காகவென்றே ஏற்கவே ஸ்நாநத்தை விதி$_4$க்கவும் கூடாதே. இத்தால் அலங்க்ருதாயா: ஆநயநாதே$_3$ஶ:, உ.த்தரத்ர பருஷபா$_4$ஷணுர்ஹதா-ப்ரதிபாத$_3$நாய என்று சிலர் வ்யாக்$_2$யாநம் அநுசிதம் என்று கருத்து. ஶங்காந்தரம் (அவள்தான்) இத்யாதி$_3$. அதுக்கு பரிஹாரம் (அவன் பெருமாள்திருவுள்ளக்கருத்தை) இத்யாதி$_3$. அதாவது, "தாம் தேவீம் ஶோகஸந்தப்தாம் மைதி$_2$லீம் த்$_3$ரஷ்டுமர்ஹஸி । ஸா ஹி ஶோகஸமாவிஷ்டா பா$_3$ஷ்பபர்யாகுலேக்ஷணு" (ரா.யு.17-2,3) என்று கருத்து அறிந்த திருவடி வார்த்தையைக்கேட்டு, "அக$_3$ச்ச$_2$த் ஸஹஸா த்$_4$யாநம் ஈஷத்$_3$பா$_3$ஷ்பபரிப்லுத: । தீ$_3$ர்க்க$_4$முஷ்ணம் ச நிஶ்வஸ்ய மேதி$_3$நீம் அவலோகயந்" (ரா.யு 17-6) என்று பெருமாளுக்கு உண்டான ஹார்த்த$_3$பா$_4$வவ்யஞ்ஜகாவஸ்த$_2$ாவிஶேஷங்களை நிரூபியாதே, "த்வரமாணோ விபீ$_4$ஷண:" (ரா.யு.17-8) என்று த்வராவிஶேஷத்தாலே பா$_4$வாநபி$_4$ஜ்ஞனுய், வாச்யார்த்த$_2$மாத்ரத்திலே நின்று நிர்ப$_3$ந்தி$_4$த்தானுகிலும். "ராமஸ்ய வ்யவஸாயஜ்ஞா" (ரா.ஸு 16-4) என்று கருத்தறிந்து பழகிப்போந்த இவள் அப்படிச் செய்யவொண்ணுது என்றபடி. (எல்லாம் செய்தாலும்) என்றது,

(1) பெருமாள்சொல்லிவிட்டாலும்,

(2) "ஸ்வாபி$_4$ஸ்ஸ்த்ரீபி$_4$ரசோத$_3$யத்" என்று விபீ$_4$ஷணுழ்வான் ஸ்த்ரீகளையிட்டு ப்ரேரித்தாலும்,

(3) "யத$_2$ாஹ ராமோ ப$_4$ர்த்தா தே" என்று ஸாக்ஷாதே$_3$வ நிர்ப$_3$ந்தி$_4$த்தாலும் என்றபடி.

(பத்துமாஸம்) இத்யாதி$_3$ :- அதாவது, சிறையிருந்த வேஷத்தோடே சென்று கண்டால் அவ்விருப்பைக்-காண ஆசைப்பட்ட பெருமாள்திருவுள்ளமும் உகக்கும். புறம்புள்ளார்க்கும் அதிஶங்கைக்கு இடம் அறும். லோகத்தில் ப்ரோஷிதைகள் இருக்கக்கடவ இருப்பு இப்படியன்றே என்று ஸமுதா$_3$சாரஶிக்ஷணமும் ஸித்$_3$தி$_4$க்கும் என்றுபார்த்து அவ்வேஷத்தோடே வாராமல் திருமஞ்ஜநம் செய்து வந்தது ரோஷஹேதுவாய்த்து என்றபடி. இப்படி இந்த யோஜனையிலே பெருமாளுடைய வசநதாத்பர்யங்களுக்கு வைரூப்யம் கொள்ளவேண்டுகையாலும், விபீ$_4$ஷணுழ்வானுக்கு அபி$_4$ப்ராயாநபி$_4$ஜ்ஞத்வம் கொள்ளவேண்டுகையாலும் இதில் அருமையுண்டு. கிஞ்ச ஸ்நாநம் ரோஷஜநகமாய்விட்டமையை நினைப்பது என்னுதே, வார்த்தைபர்யந்தகத$_2$நத்துக்கு ப்ரயோஜநம்

மாயிற்றென்கிற ஶ்ரீராமாயணவார்த்தையை ஸ்மரிப்பதென்கிறர். (166)

ஆஶ்ரிதரழுக்குகக்கும் அவனென்னுமித்தை அநுஷ்ட$_2$ாநஶேஷமாகக் காட்டுகிறர் மேல் ["வஞ்சக்கள்வன்"] இத்யாதி$_3$யால்.

## 167. "வஞ்சக்கள்வன்", "மங்கவொட்டு".

குறையில்லே. அன்றிக்கே, [ஸ்நாநம் ரோஷஜநகம் என்கிற வார்த்தை]யாவது - ஶ்ரீவிபீ$_4$ஷ-ணாழ்வான் திருமஞ்சனம் செய்தருளச்சொன்னபோது, பெருமாள்திருவுள்ளத்தை அறியுமவ-ளாகையாலே, அவர்க்கிது அநபி$_4$மதமாகையாலே ரோஷஜநகமாய்வந்து முடியுமென்று நினைத்து, "அஸ்நாதா த்$_3$ரஷ்டுமிச்ச$_2$ாமி ப$_4$ர்த்தாரம் ராக்ஷஸாதி$_4$ப" என்று பிராட்டி அருளிச்செய்த வார்த்தையாகவுமாம். ரோஷஜநகமென்னுமத்தை ப்ரகாஶிப்பிக்கிற வார்த்தை என்று கீழ்ச்சொன்ன ந்யாயமிங்குமொக்கும். (166)

167. இப்படி அபி$_4$மதவிஷயத்திலழுக்குகக்குமாப்போலே, ஆத்மஜ்ஞாநம் பிறந்தவிவன் "அழுக்குடம்பு" என்று கழிக்கிற இத்தேஹத்தை, ஈஶ்வரன் விரும்ப எங்கே கண்டதென்ன

ஸ்நாநத்துக்கு ரோஷஜநகத்வஜ்ஞாபநமாத்ரமல்லது ரோஷம் உத்பந்நமானமையைச் சொல்லுகையு-மன்று. இத்தைத் திருவுள்ளம்பற்றி யோஜநாந்தரம் அருளிச்செய்கிறர் (அன்றிக்கே, ஸ்நாநம்) இத்யாதி$_3$. அஸ்நாதையாயிருக்குமிருப்பைப் பெருமாள் கண்டால், ப்ரயோஜநமுண்டல்லது அஸ்நாதையாய்த்தான் பெருமாளைக்காண்கையில் ப்ரயோஜநமில்லாமையாலே, "த்$_3$ரஷ்டும்" என்றது அந்தர்ப$_4$ாவிதண்யர்த்த$_2$மாய் த$_3$ர்ஶயிதும் என்றபடி. அதாவது, மாம் ப$_4$ர்த்தாரம் த$_3$ர்ஶயிதும் என்றபடி. யத்$_3$வா, ப்ரதிஶப்$_3$த$_3$ாத்$_4$யாஹாராத், ப$_4$ர்த்தாரம்ப்ரதி ப$_4$ர்த்து: ப்ரேரணம்ஶத்யாக$_3$ாத், த்$_3$ரஷ்டும் = த்$_3$ருஶிவிஷயீப$_4$விதும், இச்ச$_2$ாமி = இச்ச$_2$ாமி இத்யர்த்த$_2$:. அத$_2$வா, பி$_3$ந்நகர்த்ருகத்வேபி 'துமுந்'ப்ரத்யயம், அநுஶாஸநஸ்வரஸஸித்$_3$த$_4$ம். ப$_4$ர்த்தா மாம் த்$_3$ரஷ்டுமரம் அலம் இச்ச$_2$ாமி. இப்படி பிராட்டி சொல்லுகையாலே, வஸ்துக$_3$த்யா ஸ்நாநத்துக்கு ரோஷஜநகத்வமுண்டு என்று ஸூசிதம். இப்படி ஸ்நாநத்துக்கு ரோஷஜநகத்வம் ஸித்$_3$த$_4$மாகையாலே (அழுக்கு அபி$_4$மதம்) என்னுமிடம் ஸித்$_3$தி$_4$த்தது. "ஹர்ஷோ தைந்யம் ச ரோஷஶ்ச" (ரா.யு.17-16) என்கிற ரோஷம் ஸ்நாநஹேதுகமல்லாவிட்டாலும் ஹாநியில்லே. பெருமாளுடைய வ்ருத்த்யபி$_4$ப்ராயங்களுக்கு வைரூப்யமுமில்லே. விபீ$_4$ஷணாழ்வானுக்கு அபி$_4$ப்ராயாநபி$_4$ஜ்ஞத்வமும் வேண்டா. (ஸ்நாநம் ரோஷஜநகம் என்கிற வார்த்தையை)என்கிற நிர்தே$_3$ஶஸ்வாரஸ்யமும் ஸித்$_3$தி$_4$க்கிறது என்று கருத்து. "ஸ்நாநம் ரோஷஜநகம்" இத்யாகாரகாநுபூர்வீயுக்தவாக்யமில்லாமையாலும், தத$_3$ர்த்த$_2$ாபி$_4$த$_4$ாயக-வாக்யாந்தரமில்லாமையாலும், பாரிஶேஷ்யாத் தத$_3$ர்த்த$_2$வ்யஞ்ஜகவாக்யமே விவக்ஷிதம் என்று பாரிஶேஷ்யந்யாயமூலகமான பூர்வயோஜநாஸ்த$_2$வ்யஞ்ஜகவாக்யபரத்வம் இந்த யோஜநையிலும் துல்யம் என்னுமபி$_4$ப்ராயத்தாலே அருளிச்செய்கிறர் (ரோஷஜநகம் என்னுமத்தை) இத்யாதி$_3$.

(166)

167. உத்தரவாக்யாவதாரிகை (இப்படி அபி$_4$மத) இத்யாதி$_3$. "பொல்லாவொழுக்கும் அழுக்குடம்பும் (திருவிரு.1), "அழுக்குடம்பு எச்சில்வாயால்" (திருக்குறு.12) என்கிறவித்தையுட்கொண்டு அருளிச்செய்கிறர் (அழுக்குடம்பு என்று கழிக்கிற) இத்யாதி$_3$. மூலத்திலே [வஞ்சக்கள்வன்,

இவர் தே$_3$ாஷமென்று கழிக்கிற திருமேனியுடன், பூவோடேறின நாறுபோலே தத்ஸம்ப$_3$ந்த$_4$ம் கொண்டு விரும்பப்படும் ஸ்வரூபத்துடன் வாசியற ஒருநீராகக்கலந்து, தலைநீர்ப்பாட்டிலே அநுப$_4$விக்கிற பிராட்டி முதலானோருமறியாதபடி இவற்றை பூ$_4$ஜித்து, தானே பே$_4$ாக்தாவும் பரிபூர்ணனுமானானென்றும்; அன்னலும் துன்னலுமான இந்த ப்ரக்ருதி இசையவேணும் என்றும்; இப்படி இவன் தே$_3$ாஷமாக நினைக்குமத்தையே, அவன் பே$_4$ாக்$_3$யமாக மேல்விழுந்து இவர் விடுவிக்கச் சொல்லியிருக்கச்செய்தேயும், விட இசையாமல் விரும்பினானிறே. (167)

**168. வேர்ச்சூடுமவர்கள் மண்பற்றுக்கழற்றாதாப்போலே ஜ்ஞாநியை விக்$_3$ரஹத்-**

---

அருளிச்செய்கிறார் ["வஞ்சகள்வன்"] இத்யாதி$_3$யால். அதாவது - ["வஞ்சக்கள்வன்"], ["மங்கவொட்டு"] என்னுமளவாகத் தம்முடைய திருமேனியிலே அத்யாத$_3$ரத்தைப்பண்ணி அவனநுப$_4$வித்த படிகளையும், அவ்வளவன்றிக்கே, அதிசாபல்யத்தாலே இத்திருமேனியோடே தம்மைத் திருநாட்டிலே கொண்டுபோவதாக அவன் அபி$_4$நிவிஷ்டனாய் இருக்கிறபடியைக்கண்டு, பிரானே இப்படிச் செய்தருளவொண்ணாது என்று நிர்ப்ப$_3$ந்தி$_4$த்து, இதினுடையதே$_3$ாஷத்தை அவனுக்குணர்த்தி, இப்படி ஹேயமானவிது மங்கும்படி இசையவேணுமென்று கால்கட்டி, அவனித்தை விடுவித்துக் கொண்டுபோம்படி வருந்தி இசைவித்துக்கொண்டபடியையும் அருளிச்செய்தாரிறே ஆழ்வார். (167)

168. அபி$_4$மதவிஷயத்தில் அழுக்குப்போலே ஆத$_3$ரிக்கிற மாத்ரமன்றிக்கே, இவனுடைய ஜ்ஞாநபரிமளம் இத்தேஹத்திலே ப்ரகாசிக்கையாலும் இத்தை ஆத$_3$ரிக்குமென்னுமிடத்தை

---

மங்கவொட்டு] என்கிறவிது ஆத்$_3$யந்தாவயவத்$_3$வாரா ஸமுதா$_3$யாநுஸரணம் என்னுமபி$_4$ப்ராயத்தாலே அருளிச்செய்கிறார் (வஞ்சக்கள்வன் என்று துடங்கி, மங்கவொட்டு என்னுமளவாக) இத்யாதி$_3$. "என்னெஞ்சுமுயிருமவையுண்டு", "என்னைமுற்றுமுயிருண்டு என் மாயையாக்கை இதனுள் புக்கு", "நன்கு என்னுடலம் கைவிடான்" இத்யாதி$_3$களையுட்கொண்டு அருளிச்செய்கிறார் (தம்முடைய திருமேனியிலே) இத்யாதி$_3$. "நங்கள் குன்றம் கைவிடான்" என்று தம்மோடு பரிமாறலாம் நிலமான திருமலையில் பண்ணின வ்யாமோஹத்தையும், "திருமால் என்னை ஆளுமால்" என்று தம்மை ஆளுகையில் உண்டான வ்யாமோஹத்தையும், "தென்னாவென்னும்" என்று தான் திருவாய்மொழி பாடுகிறத்துக்குத்தாளு ப$_4$க்திவையாநின்றான் என்றும், "ஒருமாநொடியும் பிரியான்" என்று அவன் அரைக்ஷணமும் பிரியாமையையும் அருளிச்செய்தத்தையுட்கொண்டு (படிகளையும்) என்றது. "ஊழிமுதல்வன்" என்கிறபாட்டில் "மங்கவொட்டு"க்கு அர்த்த$_2$ம் (அவ்வளவன்றிக்கே) இத்யாதி$_3$. (பிரானே) என்றது உபகாரகனே என்றபடி. பத்தாம்பாட்டில் "பொங்கைம்புலன்" இத்யாதி$_3$க்கு அர்த்த$_2$ம் (இதினுடைய தே$_3$ாஷத்தை) இத்யாதி$_3$. இரண்டாம் "மங்கவொட்டு"க்கு அர்த்த$_2$ம் (இப்படி ஹேயமான) இத்யாதி$_3$. "மானாங்காரமனம்கெட" இத்யாதி$_3$யில் ஸித்$_3$த$_4$மான "மங்கவொட்டு"-வினுடைய அர்த்த$_2$ம் (அவன் இத்தை) இத்யாதி$_3$. (ஆழ்வார்) என்கிறவிதுக்கு அநந்தரத்திலே 'அங்கே கண்டது என்றபடி' என்று அத்$_4$யாஹரித்துக்கொள்வது. (167)

168. உத்தரவாக்யாவதாரிகை (அபி$_4$மதவிஷயத்தில்) இத்யாதி$_3$. "விமர்தே$_3$ாத்தே$_2$ பரிமள:" என்று அநேகஸுரபி$_4$க$_3$ந்த$_4$ங்களுடைய பசும்கூட்டு பரிமளமாகையாலே, இங்கே உபசாராத் (ஜ்ஞாந-

தோடே ஆத3ரிக்கும்.

மணத்தின் வாசியறிந்து வேர்ச்சூடும் போ4கி3கள், மண்ணையுதறில் மணம் குன்றுமென்று மண்பற்றுக் கழற்றாதே சூடுமாப்போலே, பரமபோ4கி3யான எம்பெருமானும் விமலசரமதே3ஹியான ஜ்ஞாநியை விக்3ரஹத்தை விடுவிக்கில் ஜ்ஞாநச்செவ்வி குலையுமென்று, ஜ்ஞாநம்பிறந்த விக்3ரஹத்துடன் ஆத3ரிக்கு-மென்கிறார். (168)

அவ்வாத3ரமிறே முமுக்ஷுத்வம் முற்றின பின்புமிவனை வைக்கைக்கு அடியென்கிறார் [பரமார்த்தன்] இத்யாதி3யால்.

**169. பரமார்த்தனானவிவனுடைய ஶரீரஸ்தி2திக்கு ஹேது, கேவலப4க3வதி3ச்சை2யிறே.**

"இனி யாமுறாமை" என்னும்படி ஸம்ஸாரமடிக்கொதித்து "உடன்கூடுவதென்றுகொலோ" என்று ப்ராப்ய-

---

ஸத்3ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார் [வேர்] இத்யாதி3யாலே. அதாவது - மணத்தின்வாசி அறிந்து வேர்ச்சூடும் போ4கி3களானவர்கள், மண்ணை உதறில் மணங்குன்றும் என்று மண்பற்றுக் கழற்றாதே சூடுமாப்போலே, பரமபோ4கி3யான ஸர்வேஶ்வரன் ஜ்ஞாநியான இவனை விரும்பி அநுப4விக்குமிடத்தில், "ஆஹ்லாத3ஶீதநேத்ராம்பு3:" இத்யாதி3ப்படியே ஜ்ஞாநகார்யமான விக்ருதிகளுக்கெல்லாம் ஆஶ்ரயமாய்க்கொண்டு இவனுடைய ஜ்ஞாநபரிமளமெல்லாம் தோற்றும்படி இருக்கிற விக்3ரஹத்தோடே கூடவிரும்புமென்றபடி. (168)

169. இன்னமும் முக2ாந்தரத்தாலே இவன் தே3ஹத்தில் அவன் விருப்பத்தை த3ர்ஶிப்பிக்கிறார், [பரமார்த்தன்] என்றுதுடங்கி. [பரமார்த்தன்] ஆகிறான் "இந்நின்ற நீர்மையினியாமுறாமை", "எந்நாள் யானுன்னை இனிவந்து கூடுவன்", "எங்கினித்தலைப்பெய்வன்", "நாளேலறியேன்",

---

பரிமள)ஶப்3த3த்தாலே, ஜ்ஞாநகார்யவிக்ருதிஸமஷ்டியைச்சொல்லுகிறது. அவிஶேஷஜ்ஞவ்யவஹார-வ்யாவர்த்தநார்த்த2ம், உபமேயாநுகு3ண்யலப்3த4த்தை அருளிச்செய்கிறார் (மணத்தில்வாசி) இத்யாதி3. [மண்பற்று] என்றது ம்ருது3பஷ்டம்ப4ம் என்றபடி. இத்தைக்கழற்றாமைக்கு ப்ரயோஜநம், (மண்ணையுதறில்) இத்யாதி3. "ஆஹ்லாத3ஶீதநேத்ராம்பு3: புலகீக்ருதகா3த்ரவாந் । ஸதா3 பரகு3ண-விஷ்டோ த்3ரஷ்டவ்யஸ்ஸர்வதே3ஹிபி4:" என்கிறவிதில் சொல்லும் ப்ரகாரத்தாலே என்றபடி. (ஆதி3) பத3த்தாலே "ஸ்வரநேத்ராங்க3விக்ரியா" இத்யாதி3களையும் ஸங்க்3ரஹிக்கிறது. (ஜ்ஞாநபரிமள) ஶப்3தா3பி4ப்ரேதத்தை விஶதீ3கரிக்கிறார் (ஜ்ஞாநகார்யம்) இத்யாதி3நா. [வேர்] என்கிற த்3ருஷ்டாந்தாநுகு3ண்யத்தாலே பரிமளத்வரூபணம். (168)

169. உத்தரவாக்யாவதாரிகை (இன்னமும்) இத்யாதி3. (முக2ாந்தரத்தாலே) என்றது, தத்வத3ர்ஶி-ஸூக்திரூபஶப்3த3ப்ரமாணத்தாலேயன்றிக்கே ப்ரபத்திஸ்வபா4வப்ரதிபாத3கஶாஸ்த்ரஸஹக்ருத-ஶரீரஸ்தி2திமூலக-அர்த்தா2பத்திரூபஹேத்வந்தரத்தாலே என்றபடி. "யஸ்து ப்ராரப்3த4தே3ஹேபி ஶோசத்யார்த்தஸ்ஸ உச்யதே" என்கிற 'ஆர்த்த'ஶப்3தா3ர்த்த2த்தை உட்கொண்டு [பரமார்த்த] ஶப்3தா3ர்த்த2த்தை அருளிச்செய்கிறார் (பரமார்த்தனாகிறான்) இத்யாதி3நா. (இன்னின்றநீர்மை) = மித்2யாஜ்ஞாந-தந்மூலகவிபரீதாசார-தத்3தே4துஹேயஶரீராத்மக-ஏவம்வித4-அநாதி3ஸ்வபா4வத்தை. (யாமுறாமை) = நான் ஸஹியாமை என்றபடி. (என்னாள் யான் உன்னை இனிவந்து கூடுவன்) = என்றைக்கு நான் உன்னைக் கூடுவன் என்றபடி. (எங்கு இனித்தலைப்பெய்வன்) = இனி எங்கே

ப்ராப்தியிலே த்ருஷ்ணையதிஶயித்து பரமார்த்தனான ப்ரபந்நமுமுக்ஷுவான இவனுடைய நிர்மூலகர்மமுடைய ஶரீரத்தில் து$_3$ஸ்ஸஹமான ஸ்தி$_2$திக்கு ஹேது, ஜ்ஞாநம் பிறந்த இவன் ஶரீரத்தை இன்னும் சில நாளிங்கே வைத்து பு$_4$ஜிப்போமென்னும் வஸ்துவாசியறியும் ப$_4$க$_3$வானுடைய கேவலேச்சை$_2$யிறே என்கிறார். முமுக்ஷுத்வபரிபாகமுண்டாயும் இருக்கைக்கடி கர்மமல்ல. ஸ்நிக்$_3$த$_4$பே$_4$ாக்தாவின் இச்சை$_2$யே அத்தனை என்றபடி. முன்புண்டான ஶரீரஸ்தி$_2$திஹேது லீலாநுகு$_3$ணகர்மநிப$_3$ந்த$_4$நேச்சை$_2$; பின்புண்டான தத்ஸ்தி$_2$திஹேது பே$_4$ாக$_3$ாநுகு$_3$ணகேவலஸ்வேச்சை$_2$. (169)

---

"தரியேனினி", "கூவிக்கொள்ளுங்காலமின்னங்குறுகாதோ" என்று ஸம்ஸாரத்தில் அடிக்கொதிப்பாலும், ப$_4$க$_3$வத$_3$நுப$_4$வத்தில் பெருவிடாயாலும், இதுக்குமேலில்லை என்னும்படி ஆர்த்தி விளைந்தவன்; ஏவம்பூ$_4$தனானவனுடைய ஶரீரஸ்தி$_2$திக்கு ஹேது ப்ராரப்$_3$த$_4$கர்மமென்ன ஒண்ணாதிறே, "ஸர்வபாபேப்$_4$யோ மோக்ஷயிஷ்யாமி" என்றதோடு விரோதி$_4$க்கையாலே. "ஆர்த்தாநாமாஶு ப$_2$லத$_3$ா ஸக்ருதே$_3$வ க்ருதா ஹ்யஸௌ । த்$_3$ருப்தாநாமபி ஜந்தூநாம் தே$_3$ஹாந்தரநிவாரிணீ" என்றிறே ப்ரபத்திஸ்வப$_4$ாவந்தானிருப்பது. ஆகையால் இவனுடைய ஶரீரஸ்தி$_2$திக்கு ஹேது, இன்னம் சிலநாளிவனை இஶ்ஶரீரத்தோடே வைத்து அநுப$_4$விக்கவேணும் என்கிற ஈஶ்வரேச்சை$_2$யொழிய வேறொன்றில்லாமையாலே [கேவலப$_4$க$_3$வதி$_3$ச்சை$_2$யிறே] என்கிறார். ப்ராரப்$_3$த$_4$கர்மமடியாக இருக்கிற த்$_3$ருப்தவிஷயத்திலும் ப$_4$க$_3$வதி$_3$ச்சை$_2$ உண்டாகையாலே அத்தை வ்யாவர்த்திக்கிறது [கேவல] ஶப்$_3$த$_3$த்தாலே. (169)

170. இப்படித்தன்விருப்பத்துக்கு விஷயமான இவன் ஶரீரத்தை அவன் விரும்பும் ப்ரகாரம்

---

நான் உன்னை ப்ராபிப்பன் என்றபடி. (நாளேலறியேன்) = ப்ராபிக்கும் நாள் அறியேன் என்றபடி. (ஏல்) அவ்யயம். (தரியேன் இனி) = இனித்தரிக்கமாட்டேன் என்றபடி. (கூவிக்கொள்ளும் காலம்) = எம்பெருமானே என்னை அழைத்து அடிமைகொள்ளும் காலம். (இன்னம் குறுகாதோ) = இன்னம் கிட்டாதோ என்றபடி. (இன்னின்ற நீர்மை) இத்யாதி$_3$லப்$_3$த$_4$ார்த்த$_2$ம் (ஸம்ஸாரத்தில்) இத்யாதி$_3$. (அடிக்கொதிப்பு) = பத$_3$த$_3$ாஹம். இத்தால், து$_3$ஸ்ஸஹஸ்தி$_2$தியைச்சொல்லுகிறது. "என்றான்" இத்யாதி$_3$லப்$_3$த$_4$ார்த்த$_2$ம் (ப$_4$க$_3$வத்) இத்யாதி$_3$. [பரம]ஶப்$_3$த$_3$ார்த்த$_2$ம் (இதுக்குமேல்) இத்யாதி$_3$. [ஆர்த்த]ஶப்$_3$த$_3$ார்த்த$_2$ம் (ஆர்த்தி விளைந்தவன்) என்று. ஆர்த்தி = து$_3$:க$_2$ம். "ஆர்த்தி: பீட$_3$ாத$_4$நுஷ்கோட்யோ:" என்னக்கடவதிறே. (ஏவம்பூ$_4$தனானவனுடைய) இத்யாதி$_3$. (விரோதி$_4$க்கையாலே ப்ராரப்$_3$த$_4$கர்மம் என்னவொண்ணாதிறே) என்று அந்வயம். ஶோகஜநகபாபநிவர்த்தகத்வம் ஸித்$_3$தோ$_4$பாயஸ்வீகாரத்துக்கு சரமஶ்லோகத்திலே "ஸர்வபாப"ஶப்$_3$த$_3$ாஸங்கோசஸித்$_3$த$_4$மாகையாலே தத்$_3$ப$_4$ங்க$_3$ம் ப்ரஸங்கி$_3$க்கும் என்றபடி. "ஸர்வ"ஶப்$_3$த$_3$ம் ப்ராயிகபரம் என்னவொண்ணாது என்கைக்காக ப்ரமாணாந்தரம் (ஆர்த்தாநாம்) இத்யாதி$_3$. ப்ரபத்திஸ்வரூபத்தையும், ஆர்த்திப்ரகர்ஷஸத்$_3$பா$_4$வத்தையும், உபபாதி$_3$த்து, தத்ஸஹகாரேண இவனுடைய ஶரீரஸ்தி$_2$திஹேதுப$_4$க$_3$வதிச்சை$_2$யில் அர்த்த$_2$ாபத்தியை த$_3$ர்ஶிப்பிக்கிறார் (ஆகையால் இவனுடைய) இத்யாதி$_3$நா. [கேவல]ஶப்$_3$த$_3$ப்ரயோஜநம் (ப்ராரப்$_3$த$_4$கர்மமடியாக) இத்யாதி$_3$. (ப்ராரப்$_3$த$_4$கர்மம்) என்றது ஏதத்$_3$தே$_3$ஹாநுப$_4$ாவ்யத்வேந அப்$_4$யுபக$_3$தப்ராரப்$_3$த$_4$கர்மம் என்றபடி. ப்ராரப்$_3$த$_4$ம், ப$_2$லப்ரத$_3$ாநப்ரவ்ருத்தம். அதில் தே$_3$ஹாந்தராநுப$_4$ாவ்யாம்ஶம் "ஸர்வபாப"ஶப்$_3$த$_3$ார்த்த$_2$ாந்தர்பூ$_4$தமிறே. (169)

170. உத்தரவாக்யஸங்க$_3$தி (இப்படி) இத்யாதி$_3$. அதாவது, பூர்வோக்தப்ரமாணோபபத்திகளாலே

கேவலஸ்வேச்ச2ாஸ்தி2தமான இவன் சரமதே3ஹைகதே3ஶத்தில், ஸ்வாபி4மதஸ்த2லமெல்லாவற்றிலும் பண்ணும் ஆத3ரத்தைப் பண்ணுமென்கிறார் மேல் [திருமாலிருஞ்சோலை] இத்யாதி3யால்.

**170. "திருமாலிருஞ்சோலைமலையே" என்கிறபடியே உகந்தருளின நிலங்களெல்லாவற்றிலும் பண்ணும் விருப்பத்தை இவனுடைய ஶரீரைகதே3ஶத்திலே பண்ணும்.**

தெற்கில் திருமலையிலும் திருப்பாற்கடலிலும் பண்ணும் விருப்பத்தை என் உத்தமாங்க3த்தில் பண்ணினானென்றும்; பரமபத3த்திலும் வடக்கில் திருமலையிலும் பண்ணும் விருப்பத்தைத் தம் திருமேனியிலே பண்ணினான் என்றும் சொல்லுகிறபடியே, ஆழ்வாருகந்தருளின நிலமான பரமபத3ாதி3களெல்லாவற்றிலும் இருப்பது, கிடப்பது, நிற்பதாய்க்கொண்டு ஸ்நேஹம் பண்ணும் விருப்பமெல்லாவற்றையும் ஒருமடை கொண்டு தானுகந்தருளின நிலமாய், அக்கூநடனே இவர்திருமேனியில் ஓரோரவயவைகதே3ஶத்திலே பண்ணுமென்கிறார். (170)

இரண்டிடத்துக்குமுண்டான ஊசி அருளிச்செய்கிறார்மேல் [கூந்தத்தைவாஸம்] இத்யாதி3யால்.

---

அருளிச்செய்கிறார் மேல் ["திருமாலிருஞ்சோலைமலை"] என்று துடங்கி. அதாவது - தெற்குத் திருமலையையும், திருப்பாற்கடலையும், என் உத்தமாங்க3த்தையும் ஒக்க விரும்பாநின்றான், ஸ்ரீவைகுண்ட2த்தையும், வடக்குத்திருமலையையும், என்னுடைய ஶரீரத்தையும் ஒக்க விரும்பாநின்றான் என்றாரிறே ஆழ்வார். இப்படி ஓரோரவயவங்களிலே இரண்டிரண்டு திருப்பதியில் பண்ணும் விருப்பத்தைப் பண்ணினானென்றவிது எல்லாத்திருப்பதிகளிலும் பண்ணின விருப்பத்தை ஓரோரவயவங்களிலே பண்ணிநின்றான் என்னுமதுக்கு உபலக்ஷணம். ஆகையாலே, அப்பாட்டிற்சொல்லுகிறபடியே தனக்கு அபி4மதமான தி3வ்யதே3ஶங்களெல்லாவற்றிலும் பண்ணும் விருப்பத்தை, ஜ்ஞாநியான இவனுடைய ஶரீரைகதே3ஶத்திலே பண்ணும் என்கிறார். (170)

171. உகந்தருளின நிலங்களிலெல்லாவற்றிலும் பண்ணும் விருப்பத்தை இவ்விஷய-

---

ஸித்3தி4த்த விருப்பத்தினுடைய ஸர்வேதரவிஷயாத்3ரஸாம்யதத3ாதி4க்யாதி3ரூபத4ர்மங்களை அருளிச்செய்கிறார் என்றபடி. "திருமாலிருஞ்சோலைமலையே திருப்பாற்கடலே என்தலையே" என்கிறவிதுக்கு அர்த்த2ம் (தெற்குத்திருமலை) இத்யாதி3. "ஶத்3ருஶயோரேவ ஸஹசரணம்" என்கிற ஸஹநிர்தே3ஶரூபஸாஹசர்யத்தாலே ஸாத்3ருஶ்யம் வ்யஞ்ஜிதம் என்னுமபி4ப்ராயத்தாலே (ஒக்க) இதி. "ஒருமாநொடியும்" இத்யாதி3யைப்பற்ற (விரும்பாநின்றான்) என்றது. "திருமால் வைகுந்தமே" இத்யாதி3க்கர்த்த2ம் (வடக்கு) இத்யாதி3. பூர்வவத் ஸாஹசர்யவ்யஞ்ஜிதம் (ஒக்க) இதி. உபாத்தப்ரமாணத்திலே த்ரிசதுரதி3வ்யதே3ஶாத்3ரவிஷயாத்3ரஸாம்யம் சொல்லியிருக்க (எல்லாவற்றிலும்) இத்யாத்3யுக்திக்கு மூலம் என் என்கிற ஶங்கையிலே அருளிச்செய்கிறார் (இப்படி ஓரோர்) இத்யாதி3. விபூ4த்பத்4யாயத்திற்படியே ப்ரத4ாநக்3ரஹணம், அப்ரத4ாநோபலக்ஷணார்த்த2மாகையாலே (எல்லாவற்றிலும்) என்றது என்றபடி. ப்ரமாணத்துக்கு அர்த்த2ம் அருளிச்செய்து, மூலவாக்யத்துக்கு அர்த்த2ம் அருளிச்செய்கிறார் (ஆகையாலே இப்பாட்டில்) இத்யாதி3. (170)

171. உத்தரவாக்யஸங்கத்யர்த்தம் வ்ருத்தாநுவாதம் (உகந்தருளின) இத்யாதி3 - உத்தரவாக்யஸங்கதி

மண்யமாத்ரத்தைச்சொல்லுகிறது என்று ஒதுக்கிச்சொல்லுகை அநுபபந்நமிறே.

[ப்4ரம்மஸம்ப4ாவனேயாலே "மரீரே ச" என்கிறபடியே ப4யஜநகம்] (வா.212) என்கிறது. ஸ்ரீப4ாஷ்யப்ரக்ரியையாலே கர்மஜ்ஞாநாங்க3பக்தி4க்கே மோக்ஷஸாத4நத்வமுள்ளதாகையாலே, ஸர்வாதி4காரமானதொரு ஸாத4நாந்தரமில்லாமையாலே, அந்த ஸாத4நாந்தராந்வயயோக்3யதை ப்3ராஹ்மணயாத்3ய.த்க்ருஷ்டஜந்மாக்களுக்கே உள்ளதாகையாலே, உபாயாந்தரங்களில் அந்வயத்தாலே அநந்யோபாயத்வமாகிற அதி4காரத்தில் {?நின்றும்} நழுவுதல் வருகைக்கு யோக்3யமாயிருக்கையாலே, அந்த ப4க3வத்ஸம்ப3ந்த4த்தோடே கூடின ப்3ராஹ்மணஜந்மம், அவர்களுக்கு 'இது இருக்க இருக்க எந்த உபாயாந்தரத்தில் அந்வயிப்பித்து நம்முடைய அதி4காரத்தை நழுவப்பண்ணுமோ' என்னும் ப4யத்தை விளைக்குமதாயிருக்கும் என்று சொல்லி பா4க3வதப்3ராஹ்மணஜந்மமாத்ரதூ3ஷணபரமாகக்கொண்டார்கள்; அதுவும் அநுப-பந்நம். அது எங்ஙனே என்னில்:-

(1) ப4ாஷ்யப்ரக்ரியையைப் பார்க்கில், நிரபேக்ஷஸித்3தோ4பாயபரக3தஸ்வீகாரத்தாலும் ஆசார்யாபி4மாநத்தாலும் மோக்ஷஸித்3தி4யை ப4ாஷ்யத்தில் சொல்லாமையாலேயும்; (2) "அதஸ்ஸாக்ஷாத்-காரரூபா ஸ்ம்ருதி: ஸ்மர்யமாணாத்யர்த்த2ப்ரியத்வேந ஸ்வயமபி அத்யர்த்த2ப்ரியா யஸ்ய, ஸ ஏவ பரேண ஆத்மநா வரணீயோ ப4வதீதி தேநைவ லப்4யதே பர ஆத்மா இத்யுக்தம்ப4வதி" என்று சேதநக்ருதப்ரீதிரூபாபந்நபக்தி4ஹேதுகப4க3வத்ஸ்வீகாரத்தாலேயே மோக்ஷலாப4ம் என்னும் அர்த்த2த்தை "நாயமாத்மா" என்கிற ஶ்ருதி சொல்லுகிறதாக அருளிச்செய்கையாலும்; (3) ஸித்3தோ4பாயம் என்று பக்தி4வ்யதிரேகேண இந்த ஶ்ருதிஸித்3த4மாக ஒரு உபாயம் உள்ளதாகவும், அதுக்கு அநந்யோபாயத்வம் அதி4காரம் என்றும், அந்த அதி4காரத்துக்கு ப4க்தியில் இழிகை ப4ஞ்ஜகம் என்றும் சொல்லுமதெல்லாம் ஸூதராம் கூ3டியாதாகையாலேயும்; (4) "நாநாஶப்3தா3தி3பே4தா3த் ப்ரபத்3நபஜநே ஸூசிதே ஸூத்ரகாரை:" என்று அபி4யுக்தர் சொன்னபடியே, "நாநாஶப்3தா3தி3பே4தா3த்" என்கிற ஸூத்ரத்திலே ப்ரபத்தியைச் சொல்லி-யிருக்கையாலே, அந்த ப்ரபத்திதானும் ஸர்வாதி4காரமாயிருக்கையாலேயும்;
(5) மூலகாரர்தாமே முமுக்ஷுப்படியிலே அவதாரரஹஸ்யஜ்ஞாநம் தொடங்கி எல்லாவற்றையும் மோக்ஷோபாயமாக அருளிச்செய்கையாலேயும்;
(6) ஸித்3தோ4பாயாதி4காரிவிஶேஷணமான ப்ரபத்திதானும் ஸக்ருத்கர்த்தவ்யமாயிருக்கையாலே, பேற்றுக்குப் பலகாலும் வேணும் என்று நினைக்கில் உபாயம் நழுவுகையாலேயும்;
(7) ஸர்வஜாதிகளுக்கும் ப4ாஷ்யப்ரக்ரியையாலே ப்ரபத்திரூபப4க்திதுல்யஸாத4நாந்தராந்வ-யத்தாலேயும்;
(8) மூலகாரர்க்கு அத்யந்தாபி4மதமான ரஹஸ்யஶாஸ்த்ரப்ரக்ரியையாலே அவதாரரஹஸ்யஜ்ஞாநா-தி3களான ஸர்வாதி4கார-உபாயாந்தரங்களில் அந்வயத்தாலேயும்;
(9) ப்ரபத்தியிலே தானே புநரந்வயத்தாலேயும்;
(10) ப்3ரம்மஸம்ப4ாவனே உண்டாயிருக்கையாலே ப4க3வத்ஸம்ப3ந்த4த்தோடே கூடின ஶ்வபச-ஜந்மம், அவர்களுக்கு 'இது இருக்க இருக்க நமக்கு விடவொண்ணாததான தே3ஶவாஸ-த்3வய-ஸங்கீர்த்தநாதி3களிலே எதிலே ஸாத4நத்வபு3த்3தி4யை விளைத்து அநந்யஸாத4நத்வமாகிற அதி4காரத்தை நழுவப்பண்ணத் தேடுகிறதோ' என்னும் அவிப்ரப4ாக3வதஸாத4ாரணப4யத்தை-யும், 'முன்பு ஜந்மப்ரப்4ருதி அப4க்ஷ்யப4க்ஷண-அபேயபாந-அஸேவ்யஸேவாதி3களிலேயே வளர்ந்திருக்கிறவிது இன்னமும் எந்த அக்ருத்யங்களில் மூட்டி ஸ்வரூபநாஶத்தைப் பண்ணத்தேடுகிறதோ' என்னும் விப்ரஸாத4ாரணப4யத்தையும் ஜநிப்பிக்குமதாயிருக்கை-யாலேயும்;

(11) ப4யஜநகத்வப்ரத3ர்ஶநார்த்த2ம் உதா3ஹ்ருதப்ரமாணத்திலும் "ஶரீரே ச" என்று ஸாமாந்ய-ஶப்3த3மே ப்ரயுக்தமாயிருக்கையாலேயும்;
(12) கீழ் ப்ரஶ்நோத்தராதி3களெல்லாம் பொதுவாயிருக்கையாலேயும்;
[ப்4ரம்மஸம்ப4ாவனேயாலே "ஶரீரேச" என்கிறபடியே ப4யஜநகம்] என்கிறவிது கர்மாதீ4நகு3ண-விகாரவத்3தே3ஹோபாதி4கப4ாக3வதஜந்மங்களெல்லாவற்றினுடையவும் ப4யஜநகத்வத்தைச்

சொல்லுகிறதாகக் கொள்ளுகையே உசிதமாகையாலே, தத்3தேசு1விஷயமாக ஒதுக்கிச் சொல்லுகை அநுபபந்நமிறே.

இன்னமும், ப4க்தியையொழிய வேறே ப4க3வத்ப்ராப்திக்கு உபாயமில்லை என்றும், "ஶரீரே ச" என்கிற "ஶரீர"ஶப்3த3ம் உத்க்ருஷ்ட ஜந்மாக்களுடைய ஶரீரத்தையே சொல்லுகிறது என்றும் சொல்லுகை ஆச்சான்பிள்ளை அருளிச்செய்த ஜிதந்தாவ்யாக்2யாநத்தில் இஶ்ஶ்லோகவ்யாக்2யாநத்திற்கு விருத்3த4ம். எங்ஙனே என்னில் :-
"காலேஷ்வபி ச ஸர்வேஷு தி3க்ஷு ஸர்வாஸு சாச்யுத । ஶரீரே ச க3தௌ சாபி வர்த்ததே மே மஹத்3ப4யம்". "காலேஷ்வபி ச" இத்யாதி3 :- "ந ஜாநே ஶரணம் பரம்" என்னலாமோ? ஆத்மாவுக்கு உஜ்ஜீவநஹேதுவான உபாயங்களை ஶாஸ்த்ரமுக3த்தாலே உண்டாக்கிவைத்து அதுக்குமேல் அல்பவ்யாபாரத்திலேயே ஸகலது3ரிதங்களும் நசிக்கும்படியாக புண்யகாலம் புண்யக்ஷேத்ரம் முதலானவற்றையும் உண்டாக்கிவைத்திலோமோ? வேறு உபாயாந்தரங்களும் உண்டாக அறிகிறிலேன் என்னலாமோ என்னில்:- அவற்றினுடைய ஸத்3பா4வத்தை இல்லை என்கிறேனல்லேன், அவற்றிலே இழிந்த நான் நித்யஸம்ஸாரியான நாஶுகையாலே முன்பு நின்ற நிலையும் கெடும் என்று சொன்னேன் என்கிறான். இத்தால் உபாயாந்தரத்யாக3பூர்வகமாய் இருக்கும் ஸித்3தோ4பாயபரிக்3ரஹம் என்னும் அர்த்த2த்தைச்சொல்லுகிறது. இப்படி நிரபேக்ஷோபாயபூ4தனிறே ஶரண்யனுமான்.

"காலேஷ்வபி ச" – புண்யமான அயநவிஷுவாதி3களிலும், அவற்றை விஶேஷிக்கிற அர்த்தோ4த3யாதி3காலங்களிலும். அதாகிறது இவ்விலக்ஷணகாலங்களிலே ஸேதுத3ர்ஶநஸங்க3மங்களிலே பண்ணும் தீர்த்த2தா3நாதி3களுக்கு ஸகலபாபவிமோசநாதி3களைச்சொல்லக்கடவதிறே. "க்ருதக்4நோऽபி விஶுத்3த்4யதி" என்று {கோ3க்4நே சைவ ஸுராபே ச சோரே ப4க்3நவ்ரதே தத2 । நிஷ்க்ருதிர்விஹிதா ஸத்3பி4: க்ருதக்4நேநாஸ்தி நிஷ்க்ருதி:} என்று ப்ராயஶ்சித்தமில்லை என்கிற க்ருதக்4நனுடைய பாபமுட்படப்போம் என்றது. "ஸர்வேஷ்வபி" – அபர்வணி கடல் தீண்டலாகாது என்னும் நியமமின்றிக்கே ஸர்வகாலமும் ஸேவிக்கலாயிருக்கும் க3ங்கா3தி3தீர்த்த2ங்களை ஸமுச்சயிக்கிறது. "தி3க்ஷு" – ஸகலபாவநங்களாகச்செய்துவைத்த இவையொழிய "தே3ஶோயம் ஸர்வகாமது4க்" என்கிறபடியே ப்ரத2மத்திலே பாவநமாய், பின்பு ப4க3வத்ப்ராப்திக்கு ஸாத4கமுமாய் பின்பு போ4க்3யமுமாயிருக்கும் புண்யதே3ஶம் முதலான தே3ஶங்களை ஸமுச்சயிக்கிறது. "மது2ரா நாம நக3ரீ புண்யபாபஹரீ ஶுபா4" என்னக்கடவதிறே. "ஸர்வாஸு ச" – இத்தால் அவதரித்து அருளின தே3ஶங்களையொழிய ப4க3வத்ஸந்நிதி4 மாறாத ஸாலக்3ராமமண்ட3லம் முதலான தே3ஶங்களை ஸமுச்சயிக்கிறது. "ஶரீரே ச" – கீழ்ச்சொன்ன தே3ஶங்களில் பண்ணும் உபாயாநுஷ்டா2நத்துக்காக "ஶரீரமாத்3யம் க2லு த4ர்மஸாத4நம்" என்றும், "விசித்ரா தே3ஹஸம்பத்திரீஶ்வராய நிவேதி3தும்" என்றும் சொல்லப்படுகிற இந்த ஶரீரம் எனக்கு வ்யர்த்த2மாகாநின்றதாகை. "க3தௌ ச" – "ஸ்வத4ர்மே நித4நம் ஶ்ரேய: பரத4ர்மோ ப4யாவஹ:" என்கிறபடியே ஸாத4நாநுஷ்டா2நமத்4யே மரணமுண்டானாலும் ஶரீராந்தரத்திலே தலைக்கட்டும்படியான ஶரீராந்தரக3தியும் எனக்கு வ்யர்த்த2ம். "க3தௌ" – ஶரீராந்தரக3தௌ. "அபி"ஶப்3த3த்தாலே அநுஷ்டே2யமான கர்மஜ்ஞாநப4க்த்யாதி3களைச் சொல்லுகிறது என்னுதல்; முன்புபோன ஶரீரங்களை ஸமுச்சயிக்கிறது என்னுதல்; முன்பு பரிக்3ரஹித்துப்பொகட்ட ஶரீரங்கள் வ்யர்த்த2மானவோபாதி வர்த்தமாநஶரீரமும் வ்யர்த்த2ம் என்று கருத்து. "மே மஹத்3ப4யம்" :- இவை வ்யர்த்த2மானவளவேயல்ல, தே3ஶகாலஶரீரங்களிலும் இவற்றைப்பற்றி நின்று அநுஷ்டி2க்கும் கர்மயோக3ாத்3யுபாயப4யம் வர்த்தியாநின்றது. ப4யம் வர்த்திப்பானென் என்னில்?:- முன்பு தேவர்திருவடிகளை உபாயமாகப்பற்றி வர்த்திக்கையாலே தேவருடைய இரக்கமும் கெடும் என்று இவை ப4யாவஹமாகாநின்றன. அநுகூலமானவை ப4யஸ்தா2நமாவான் என்? என்னில் ஸ்வீகரித்த உபாயம் வேறொன்றை ஸஹியாமையாலே; முதலிலே "த்வாமேவ ஶரணம் ப்ராப்ய" என்றவனிறே. "தமேவ" (கீ.15-2)என்றிறே ஶாஸ்த்ரவிதா4நமும். "மாமேகம்" என்றிறே ஶரண்யனுடைய வாக்யமும். மஹத்3ப4யம் வர்த்ததே – "ப4யாவஹோ" என்கிற ஸம்ஸாரப4யத்தளவன்று இந்த ப4யம். விஷயாந்தரப்ராவண்யத்தால் வந்த ப4யத்தளவன்றிறே ஸாத4நாந்தராநுஷ்டா2நத்தால் வந்த ப4யம் என்கை. விஷயாந்தரப்ராவண்யத்தால்

வந்த ப4யத்துக்கு ஈஶ்வரன் கருணையைப் பற்றலாம். அதனையும் நழுவும்படி பண்ணுகிறதிறே ஸாத4நாந்தரபரிக்3ரஹம். "அச்யுத" – இப்படி ஶரவேபாயஶூந்யராயிருப்பாரையும் நழுவ விடாத ஸ்வபா4வத்தாலேயிறே தேவருக்கு அச்யுதன் என்று திருநாமம் உண்டாய்த்து. "யஸ்மாத் ப்ராப்தா ந ச்யவந்தே ஸோச்யுத:" என்றிறே திருநாமத்துக்கு நிர்வாஹம். "த்3வாரகாநிலயாச்யுத" என்று தேவரை விஶ்வஸித்துக் கையைவிட்டவளை அத்த3ஶையில் விடாதவரிறே தேவர். "த்வத்ப்ரஸாதா3ந்மயாச்யுத" என்று சொல்லக்கடவதிறே. ஶரவஸங்க்3ரஹபக்ஷத்தில் "நமஸ்தே" என்கிற பதத்துக்கு ஶேஷமாகக்கடவது. அந்த ப்ரபத3நமும் உபாயாந்தரநிவ்ருத்திபூர்வக-மாகையாலே என்றிறே ஆச்சான்பிள்ளை இஶ்லோகத்துக்கு வ்யாக்2யாநம் இட்டருளினது.

இதில தே3ஶவாஸாதி3களே ப4க3வத்ப்ராப்த்யுபாயமாகவும், அந்த தே3ஶவாஸாதி3த4ர்மங்களுக் கெல்லாம் ப்ரதா4நஸாத4நமாக கர்மேந்த்3ரியாதி3 ஸம்டத்தையுடைய ஶரீரஸாமாந்யத்தை "ஶரீர" ஶப்3த3ம் சொல்லுகிறதாகவுமிறே அருளிச்செய்தது. [அதுக்கு ஸ்வரூபப்ராப்தமான நைச்யம் பா4விக்க வேணும்] என்கிற இது, பா4க3வதப்3ராஹ்மணஜந்மத்துக்கு "ஸர்வேஷாம் ஏவ வர்ணாநாம் ப்3ராஹ்மணா: பரமோ கு3ரு:" என்கிறபடியே அவரவர்ணாதி3பா4க3வதாநுவர்த்தந-விரோதி4யான ஶேஷித்வம் ஜந்மஸித்3த4மாகையாலே, அந்த பா4க3வதாநுவர்த்தநத்துக்கு அநுகூலமான நைச்யத்தை, ஜந்மஸித்3த4நைச்யத்தையுடையரான பா4க3வதஶ்வபசாதி3கள் செய்கிறது கண்டு அவர்களை அநுகரித்துக் கற்றுக்கொள்ள வேண்டுகையாகிற தோ3ஷத்தைச் சொல்லுகிறதாகக் கொண்டார்கள்; அதுவும் அநுபபந்நம். எங்ஙனே என்னில்:-
மூலத்தில் [ஸ்வரூபப்ராப்தமான நைச்யம்] என்கிறதற்கு (ஶேஷத்வமாகிற ஸ்வரூபத்துக்குத் தகுதியான தாழ்ச்சி) என்று அர்த்த2மருளிச்செய்கையாலே, அந்த ஶேஷத்வம் பாரதந்த்ர்யயுக்த-மாகில அது ஶேஷிகளினுடைய போ4க3த்தை அழிக்கைக்கு ஹேதுவாகையாலே, ஶேஷிகளா-யிருக்குமவர்கள் தன்னை ஶேஷபூ4தனாக்கி அடிமைகொள்ளும்போதோடு, ஶேஷியாக வைத்து அநுவர்த்திக்கும் போதோடு வாசியற அவர்களுக்கு போ4க3த்தைவிளைக்கைக்கே ஹேதுவான பாரதந்தர்யத்தோடே கூடின ஶேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபமாகையாலே,
ப்3ராஹ்மணபா4க3வதனுடைய ஜந்மம் அவனை ஶேஷியாய்வைத்து அநுவர்த்திக்கும்போதுமாத்ரம் அநுவர்த்திக்குமவர்களிடும் பூஜையெல்லாம் இடுவித்துக்கொண்டு 'நான் ஸ்வதந்த்ரனல்லேன், ஆசார்யபரதந்த்ரனாகையால் என்னால் செய்யலாவதில்லை' என்று பாரதந்தர்யம் கொண்டாடி இசைந்திருக்கைக்கு யோக்3யமாய் ஶேஷபூ4தராய்நின்று அநுவர்த்திக்கைக்கு ஸ்வஜாதிஜ்ஞாநத்-தாலே ப்ரதிரோதி4யாயிருக்கையாலேயும்;
ஶ்வபசாதி3பா4க3வதஜந்மம், தன்னை ஶேஷபூ4தனாய்வைத்து அடிமைகொள்ளும்போதுமாத்ரம் 'நான் தா3ஸனன்றோ' என்று இசைந்தும், ஶேஷியாய்வைத்து அநுவர்த்திக்கப்புக்கால் 'நான் ஹீநவர்ணஜாதனன்றோ' என்று ஸ்வஜாதிஸ்மரணத்தாலே பாரதந்த்ர்யத்தில் கண் வையாதே இறாய்த்து ஓடும்படியாயிருக்கையாலேயும்;
இரண்டு ஜந்மத்துக்கும் ஶேஷத்வாநுரூபநைச்யம் இல்லாமையாலேயும்;
ஶ்வபசாதி3பா4க3வதர்களுடைய தே3ஹஸம்ப3ந்தௌ4பாதி4கநைச்யம் பூர்வவர்ணபா4க3வத-கர்த்ருக-அநுவர்த்தநத்துக்கு இசைந்திருக்கையாகிற பா4க3வதபாரதந்த்ர்யவிரோதி4யாய், பூர்வ-வர்ணபா4க3வதாநுவர்த்தநத்துக்கு உறுப்பாகையாலே அநந்யார்ஹத்வவிரோதி4யாய், பா4க3வதர்களான ஸ்வபா4ர்யாபுத்ராதி3களுடைய அநுவர்த்தநத்துக்கும் கோஸலகோ3குலசரா-சராதி3கள் போன்ற திர்யக்ஸ்தா2வரபா4க3வதாநுவர்த்தநத்துக்கும் உடலல்லாமையாலே ஶேஷத்வாநநுரூபமாயிருக்கையாலேயும்;
ஸமஸ்தபா4க3வதாநிரூபிதமாய், தே3வதிர்யங்மநுஷ்யஸ்தா2வராத்மகதயா அவதீர்ணஸமஸ்த-பா4க3வதநிரூபிதமாய், பா4க3வதகர்த்ருகாநுவர்த்தநாதி3களும், பா4க3வதகர்மகாநுவர்த்தநா-தி3களும் ஆகிற ஸமஸ்தபா4க3வதாநுவர்த்தநாதி3களுக்கும் அநுகூலமாய், யாவதா3த்மபா4வியா-யிருக்கும் நைச்யம் நிக்ருஷ்டோத்க்ருஷ்ட ஜந்மபா4க3வதர்கள் இருவர்க்குமில்லாமையாலே, அவர்கள் அந்த நைச்யத்தை ஜந்மஸித்3த4மாக உடையராயிருக்கிற விலக்ஷணஜந்மாக்கள் செய்கிறது கண்டு அத்தை அநுகரித்தே கற்றுக்கொள்ள வேண்டியிருக்கையாலே, இப்படி பா4க3வதப்3ராஹ்மணஶ்வபசஜந்மங்கள் இரண்டுக்கும் ஸாதா4ரணமான நைச்யம் பா4விக்கவேண்டுகையாகிற தோ3ஷத்தை, [அதுக்கு ஸ்வரூபப்ராப்தமான நைச்யம் பா4விக்க

வேணும்] என்கிறதாகக் கொள்ளுகையே உசிதமாகையாலே, வ்யாக்2யாநத்தில் [பா4க3வத] ஶப்3த3த்தை நிக்ருஷ்டஜந்மபா4க3வதமாத்ரபரமாகவும், [அநுவர்த்தந]ஶப்3த3த்தை தத்கர்மகஅநுவர்த்தநமாத்ரபரமாகவும், மூலத்தில் [ஸ்வரூப]ஶப்3த3த்தை கேவலஶேஷத்வமாத்ரபரமாகவும், [நைச்ய]ஶப்3த3த்தை கர்மாதீ4நதே3ஹோபாதி4கஸ்வரூபாப்ராப்தநைச்யபரமாகவும் கொண்டு யோஜிக்கை அத்யந்தம் அநுபபந்நமிறே.

பா4க3வதகர்மகஸ்வகர்த்ருகாநுவர்த்தநத்துக்கு இசைகைக்கன்றோ தாழ்ச்சிவேண்டுவது- பா4க3வதகர்த்ருகஸ்வகர்மகாநுவர்த்தநத்துக்கு இசைகைக்கு மேன்மையேயன்றோ தேட்டமாவது என்னில்:-

மேன்மையாலே இசைவதாகில் அது ஸ்வரூபநாஶகமாமாகையாலே, அத்யந்தபாரதந்த்ர்யரூபநைச்யாநுஸந்தா4நத்தால் இசைந்திருக்கிலிறே அந்த இசைவு ஸ்வரூபாநுரூபமாகையாலது. ஆகையாலே பா4க3வதகர்த்ருக-அநுவர்த்தநத்துக்கு கர்மீபூ4விக்குமவனுக்கும் நைச்யம் அவஶ்யாபேக்ஷிதமிறே. [அபக்ருஷ்டமாக ப்4ரமித்த உத்க்ருஷ்டஜந்மத்துக்கு] என்கிறது. ஶிஷ்டஸம்ப்ரதா3யநிஷ்டு2ரரான ப்ரஷ்டராலேயே அபக்ருஷ்டமாக ப்4ரமிக்கப்பட்டதாய், ப்3ராஹ்மண்யாதி3களால் வரும் அஹங்காரயோக்3யதையின்றிக்கே ஶ்வபசத்வாதி3ஜாதிப்ரயுக்தநைச்யத்தாலேயும் உபாயாந்தராநதி4காரத்தாலேயும் ஶேஷத்வாநுகூலமாயிருக்கையாலே, வஸ்துத உத்க்ருஷ்டமாயிருக்கிற நிக்ருஷ்டபா4க3வதஜந்மத்தைச்சொல்லுகிறதாகக் கொண்டார்கள்.

இதுவும் அநுபபந்நம். இதினுடைய வ்யாக்2யாநத்தில் (ஆபி4ஜாத்யாதி3களால் வரும் அஹங்காரயோக்3யதையன்றிக்கே ஶேஷத்வாநுகூலமாயிருக்கையாலே) என்று 'ஆதி3'ஶப்3த3கூடிதமாயருளிச்செய்கையாலே, இந்த 'ஆதி3'ஶப்3த3ம் வேதா3த்4யயநாதி3முகத்தாலே ப4க3வத்ஸாபே4ஹேதுவாகையாலே, "ப்3ராஹ்மணக்ஷத்ரியவைஶ்யஶூத்3ராஸ்தேஷாம் பூர்வபூர்வோ ஜந்மத: ஶ்ரேயாந்" என்றும், "ஸர்வேஷாமேவ வர்ணாநாம் ப்3ராஹ்மண: பரமோ கு3ரு:" என்றும் இத்யாதி3களாலே விரும்புகிற ஶாஸ்த்ரங்களின் கருத்தறியாதோர்க்கு ப்3ராஹ்மண்யம் அஹங்காரஹேதுவாகிறாப்போலே, "விஷ்ணுப4க்திவிஹீநஸ்து யதிஶ்ச ஶ்வபசாத4ம:", "விப்ராத்3விஷட்3கு3ணயுதாத3ரவிந்த3நாப4பாதா3ரவிந்த3விமுகா2த் ஶ்வபசம் வரிஷ்ட2ம் மந்யே" என்றும், "சண்டா3ளோऽபி பு3தை4ஶ்ஶ்லாக்4யோ ந வேதா3ட்4யோऽபி நாஸ்திக:", "ஊனமாயினகள்செய்யும் ஊனகாரகர்களேலும்", "இழிகுலத்தவர்களேலும்", "சண்டாளசண்டாளர்களாகிலும்" இத்யாதி3யாலே, விஷ்ணுப4க்திவிஹீநப்3ராஹ்மண்யாதி3களை நிந்தி3த்தும் தத்3யுக்தஶ்வபசாதி3களை ஶ்லாகி4க்கும் விஶேஷஶாஸ்த்ரங்களில் விஷ்ணுப4க்தியின் வைப4வத்தை அறிவிக்கைக்காக விஷ்ணுப4க்தனான ஶ்வபசனையும் ஸர்வோத்க்ருஷ்டனாகவும், தத்3விஹீநனான த்3விஜனையும் கூட ஸர்வாத4மனாகவும் சொல்லுகிற விஶேஷவசநங்களின் கருத்தறியாதார்க்கு ஶ்வபசாதி3நிக்ருஷ்டஜந்மமாகிற அநாபி4ஜாத்யமும் அஹங்காரஹேதுவாகக் குறையில்லாமையாலே அதுமுதலான மற்றும் அஹங்காரஹேதுக்கள் எல்லாவற்றையும் சொல்லுகையாலேயும்;

ஆபி4ஜாத்யம் தானும் உத்தமகுலோத்3ப4வத்வமாகையாலே உத்தமத்வம்தான் ப4க3வத்ஸம்ப3ந்த4ாநுகூலத்வரூபமாகையாலே குத்3ருஷ்டிகள் தங்களுடைய த3ர்ஶநரீத்யா ஶ்வபசாதி3நிக்ருஷ்டஜந்மமெல்லாம் ப4க3வத்ஸம்ப3ந்தா4நுகூலமாகையாலே நிக்ருஷ்டோத்க்ருஷ்டஜந்மங்கள் இரண்டும் 'ஆபி4ஜாத்ய'ஶப்3தா3ர்த்த2மாகக் குறையில்லாமையாலேயும்;

கர்மாதீ4நகு3ணவிகாரவத்3தே3ஹஸம்ப3ந்தோ4பாதி4கத்வமே அஹங்காரயோக்3யதையாகையாலேயும்; ப4க3வத்ஸம்ப3ந்த4த்தோடே கூடின ஶ்வபசாதி3நிக்ருஷ்டஜந்மம் கர்மோபாதி4கவர்ணசதுஷ்டயநிரூபிதநைச்யத்தாலே அபா4க3வதஶூத்3ராத்3யநுவர்த்தநஹேதுவாகையாலேயும்;

அகிஞ்சநாதி4காரமாய், ஸுகரமுமாய், க்ஷணமாத்ரஸாத்4யமுமாயிருந்துள்ள ஸ்வகீயஸ்வீகாரமாகிற ப்ரபத்திரூபகர்மாதி3ஸாத4நாந்தராதி4க்ருதத்ரைவர்ணிகாஸுலப4ஸாத4நாந்தரத்திலும், தே3ஶவாஸாதி3ஸாத4நாந்தரத்திலும் அப4க்ஷ்யப4க்ஷணாதி3களிலும் மூட்டி அநந்யோபாயோபேயத்வங்களைக் குலைக்குமதாயிருக்கையாலேயும்;

கர்மோபாதி4கமாகையாலே கர்மநிவ்ருத்தி உண்டாம்போது நிவ்ருத்தமாய்விடுமதாகையாலே, முமுக்ஷுக்களுக்கு த்யாஜ்யமுமாயிருக்கையாலே அது ஶேஷத்வாநுகூலமல்லாமையாலேயும்;

அந்த நிக்ருஷ்டோத்க்ருஷ்டஜந்மங்களாகிற ஆபி4ஜாத்யாதி3களும், தத3வலம்பி3யாக உண்டாம் அஹங்காரத்துக்கு யோக்3யதையாகிற கர்மாதீ4நகு3ணவிகாரவத்3தே3ஹஸம்ப3ந்தோ4பாதி4க-

த்வமும் இல்லாதது, கர்மாதீ4நநிகி2லவர்ணாஶ்ரமாத்4யுபமர்திமாய், ப4க3வந்நிர்ஹேதுகக்ருபா-வர்த்தி4தஸ்வரூபஜ்ஞாநோபாதி4கமாய், நிகி2லகர்மபாஶவிநிர்மோகஹேதுவாய், ப4க3வத3பி4மதி-விஶேஷவிஷயதாரூப-ஆத்மஸத்தாலாப4ாத்மகமாய், "தச்ச்2ரேஷ்ட2ம் ஜந்ம" என்றும், "அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்" என்றும், "செற்றத்தின் வயிற்றில் சிறுகுட்டி பிறந்தால்" என்றும், "திருமந்த்ரத்திலே பிறந்து" என்றும், "தாயினுமாயின செய்யுமத்தாலும் பிறக்குமது" என்றும், "வித்3யை தாயாகப்பெற்று" என்றும், "குலப்ரதீ3பஸ்வாஸீத் ஸ யாமுநமுநே: வம்ஶ்ய: பராங்குஶமுநேஸ்ஸ ச" என்றும், "நான் ஜ்ஞாநச்செருக்கிலே பிறந்தேன்" என்றும் பூர்வர்களால் அநுஸந்தி4க்கப்பட்ட ஜ்ஞாநஜந்மத்துக்கேயாகையாலே, அதுதானே, ரஹஸ்யகுத்3ருஷ்டிகளுக்கும் மிஶ்ரஸம்ப்ரதா3யநிஷ்ட2ளுக்கும் பொதுவாகப்ரஶ்நம் பண்ணு-மவன் தே3ஹோபாதி4கஜந்மோத்கர்ஷாப4ாவத்தவேந ரூபேண அபக்ருஷ்டமாக நினைத்த மோஷத்வாநுகூலதயா வஸ்துத உத்க்ருஷ்டமாயிருக்கும் ஜந்மமாகையாலே, கீழ் வாக்யங்க-ளொல்லாவற்றுக்கும் அநுரூபமாக, [அபக்ருஷ்டமாக ப்4ரமித்த உத்க்ருஷ்டஜந்மத்துக்கு] என்கிறவித்தையும் அந்த ஜ்ஞாநஜந்மத்தையே சொல்லுகிறதாகக் கொள்ளுகையே உசிதமாகையாலே ப4க3வத்ஸம்ப3ந்த4த்தோடே கூடின நிக்ருஷ்டஜந்மத்தைச் சொல்லுகிறதாகக் கொள்ளுகை அத்யந்தம் அநுபபந்நமிறே.

[இரண்டு தோ3ஷமுமில்லே] என்கிறவிது ஸாத4நாந்தராந்வயப்ரயுக்தப்4ரம்ஶஸம்பா4வனையால் வரும் ப4யஜநகத்வமும் ஸ்வரூபப்ராப்தநைச்யம் பா4விக்கவேண்டுகையும் ஆகிற தோ3ஷங்கள் இரண்டும் ப4க3வத்ஸம்ப3ந்த4த்தோடே கூடின ஶ்வபசாதி3நிக்ருஷ்டஜந்மத்துக்கில்லே என்னு-மர்த்த2த்தைச் சொல்லுகிறதாகக்கொண்டார்கள். அதுவும் அநுபபந்நம்;-

அநந்யோபாயத்வப்4ரம்ஶம் வருகைக்கு த்ரைவர்ணிகாதி4காரமான ஸாத4நாந்தராந்வயமே வேணும் என்கிற நிர்ப3ந்த4மில்லாமையாலே ஸர்வாதி4காரஸாத4நாந்தராந்வயப்ரயுக்தப்4ரம்ஶ-ஸம்பா4வனையால்வரும் ப4யஜநகத்வம நிக்ருஷ்டஜந்மத்துக்கும் உண்டாகையாலேயும்;
ஸ்வபா4ர்யாபுத்ரதிர்யக்ஸ்தா2வரபா4கவதாபேக்ஷயா நைச்யம் அஜ்ஜந்மத்துக்கும் பா4வித்துக் கொள்ள வேண்டுகையாலே பூர்வவர்ண்யபேக்ஷயா உண்டான நைச்யம் கர்மாதீ4நமாய்க் கொண்டு அபா4க3வதநிரூபிதமாயிருக்கையாலே, ஸ்வரூபத்துக்கு அப்ராப்தமாயிருக்கை-யாலேயும்;
ஜ்ஞாநஜந்மத்துக்கே அநுஷ்டா2நபர்யந்தகாஷ்டா2பந்ந-ஆகாரத்ரயஜ்ஞாநோபாதி4கமாயிருக்-கையாலே, உபாயாந்தராந்வயத்தால் வரும் ப்4ரம்ஶஸம்பா4வனையும், நைச்யம் பா4விக்கவேண்டு-கையும் ஆகிற தோ3ஷமில்லாததாகையாலே, அந்த ஜ்ஞாநஜந்மத்தினுடைய அந்த தோ3ஷமில்லா-மையையே [இவ்விரண்டு தோ3ஷமுமில்லே] என்கிற வாக்யம் சொல்லுகிறது என்கையே உசிதமாகையாலே, ப4க3வத்ஸம்ப3ந்த4த்தோடே கூடின நிக்ருஷ்டஜந்மத்துக்கு இவ்விரண்டு தோ3ஷமுமில்லே என்னுமர்த்த2த்தைச்சொல்லுகிறது என்கையாகையாலே{?என்கை} அநுபபந்நமிறே. [நைச்யம் ஜந்மஸித்3த4ம்] என்கிறவிது ஸ்வரூபப்ராப்தமான நைச்யம் நிக்ருஷ்டஜந்மவான்-களான பா4க3வதர்க்கு ஜந்மஸித்3த4ம் என்னுமர்த்த2த்தைச் சொல்லுகிறதாகக் கொண்டார்கள். அதுவும் அநுபபந்நம். எங்ஙனே என்னில்:-
திர்யக்ஸ்தா2வராதி3பா4க3வதாபேக்ஷயா நைச்யம் அவர்களுக்கு ஜந்மஸித்3த4மாகக் காணாமை-யாலேயும்,
அவர்க்கு உண்டான நைச்யமும் மாதாபிதாக்கள் செய்கிறதுகண்டு பா4வித்துக் கற்றுக் கொண்டதேயாகையாலே, ஜந்மஸித்3த4மல்லாமையாலேயும்;
அதுதானும் அபா4க3வதாநுவர்த்தநத்துக்கும் உடலாகையாலேயும்;
ஸ்வரூபப்ராப்தமான நைச்யம் ஜ்ஞாநஜந்மாவுக்கே ஜந்மஸித்3த4மாகையாலே, அந்த ஜ்ஞாந-ஜந்மத்துக்கு அந்த நைச்யம் ஜந்மஸித்3த4ம் என்னுமர்த்த2த்தைச் சொல்லுகிறது என்று கொள்ளுகையே உசிதமாகையாலே, ப4க3வத்ஸம்ப3ந்த4த்தோடே கூடின நிக்ருஷ்டஜந்மத்துக்கு அது ஜந்மஸித்3த4ம் என்கையைச் சொல்லுகிறது அவ்வாக்யம் என்கை அநுபபந்நமிறே.

[உத்க்ருஷ்டஜந்மமே ஶ்ரேஷ்ட2ம்] என்கிற வாக்யம் ப4க3வத்ஸம்ப3ந்த4த்தோடே கூடின

நிக்ருஷ்டஜந்மம் அந்த ப4க3வத்ஸம்ப3ந்த4த்தோடே கூடின உத்க்ருஷ்டஜந்மத்தைப்பற்ற ஶ்ரேஷ்ட2ம் என்று சொல்லுகிறதாகக் கொண்டார்கள்; அதுவும் அநுபபந்நம்.
கீழ்ச்சொன்னபடியே ப4க3வத்ஸம்ப3ந்த4த்தோடேகூடின உத்க்ருஷ்டாபக்ருஷ்ட ஜந்மங்களிரண்டும் ஸதோ3ஷங்களுமாய், அந்த உத்கர்ஷாபகர்ஷங்களொன்றுமின்றிக்கேயிருக்கிற ஜ்ஞாநஜந்மமே நிர்தோ3ஷமுமாயிருக்கையாலே, ப4க3வத்ஸம்ப3ந்த4ம் காஷ்ட2ாபந்நப4க்திரூபமாகப் பெருமை-யாலே, கர்மாதீ4நதே3ஹஸம்ப3ந்தோ4பாதி4கஜந்மோத்கர்ஷாபகர்ஷங்கள் குறியழியாதிருக்கிற (?அ)விலக்ஷணஜந்மத்தைப்பற்ற விலக்ஷணஜந்மமே ஶ்ரேஷ்ட2ம் என்னுமர்த்த2த்தைச் சொல்-லுகிறதாகக் கொள்ளுகையே உசிதமாகையாலே, இவ்வாக்யம் விலக்ஷணஜந்மங்களில் ஒன்றுக்கு ஶ்ரைஷ்ட்2யம் சொல்லுகிறதாகக் கொள்ளுகை அநுபபந்நமிறே.

"ஶ்வபசோऽபி" என்கிற ஶ்லோகத்தை வைஷ்ணவத்வவிஷயாபேக்ஷயா வைஷ்ணவஶ்வபசனுக்கு ஆதி4க்யம் சொல்லுகிறதாகக் கொண்டார்கள்; அதுவும் அநுபபந்நம்.
வர்ணாஶ்ரமங்களில் சரக்கறுத்து ப4க்திரூபாபந்நப4க3வத்ஸம்ப3ந்த4த்தை ஜந்மோத்கர்ஷாப-கர்ஷாதி3நிரபேக்ஷயேண உத்கர்ஷஹேதுவாகச் சொல்லுகிற இஶ்ஶ்லோகம் ஆர்த்த2மாக வந்த ப4க3வத்ஸம்ப3ந்த4ாநுரூபஜந்மத்தினுடைய ஶ்ரைஷ்ட்2யத்தையும் தத்3விரோதி4ஜந்மத்தினுடைய அபக்ருஷ்டத்வத்தையும் சொல்கிறதாக வ்யாக்2யாநத்தில் அருளிச்செய்கையாலே, கீழ்ச்சொன்ன படியே உத்க்ருஷ்டாபக்ருஷ்டஜந்மங்களிரண்டும் ப4க3வத்ஸம்ப3ந்த4விரோதி4யாய், ஜ்ஞாந-ஜந்மமே ப4க3வத்ஸம்ப3ந்த4ாநுரூபமாயிருக்கையாலே, அவிலக்ஷணஜந்மங்களைப்பற்ற விலக்ஷணஜந்மம் ஶ்ரேஷ்ட2ம் என்னுமர்த்த2த்தைச் சொல்லுகிறதாகக் கொள்ளுகை உசிதமா-கையாலே, அவிலக்ஷணஜந்மங்களில் ஒன்றை ப4க3வத்ஸம்ப3ந்த4ாநுகூலமாகவும், ஒன்றை தத்ப்ரதிகூலமாகவும் கொண்டு அதுகளுக்கு உத்கர்ஷாபகர்ஷங்களைச் சொல்லுகிறதாகக் கொள்ளுகை அநுபபந்நமிறே.

இஶ்ஶ்லோகத்துக்கு அஸ்மதா3சார்யர் விஸ்தரேண அருளிச்செய்திருக்கும் வ்யாக்2யாநத்திலே இவ்வர்த்த2த்தை விஸ்தரேண கண்டுகொள்வது. அதில் ப்ரதிபக்ஷப்ரதிக்ஷேபஸமயத்தில் அருளிச்செய்த ப்ரதா4நதோ3ஷங்களுக்கு ஸங்க்3ரஹமான ஶ்லோகம்:-
"ஹேதுர்ப4க்தாதி4வ்ருத்தேரதிஶயஜநநே ஜாதிஸாபேக்ஷதாயா: ப4க்தேரம்ஹஸ்ஸஹத்வே பதநப4ய-ப4விப்ரேஷ்யதாஹங்க்ருதீநாம் ॥ பூர்வவ்யாக்2யாவிருத்3த்4யப்யநுபத3விஹிதஸ்வார்ய-தௌலீஸமாதோ3ராதி3ர்நைஷ்டாஷ்டதோ3ஷாமஹத இஹ மதாநைஹிகோத்கர்ஷஸித்3தி4:" என்று. இதுக்கர்த்த2ம்:-
மஹதோ நைஹிகோத்கர்ஷஸித்3தி4: = மஹாப4ாக3வதனுக்கு தே3ஹாபாதி4கமாய்வரும் உத்கர்ஷமானது, ப4க்தாதி4வ்ருத்தேர்ஹேது: = ப4ாக3வதவிஷயத்தில் பண்ணும் ஜந்மநிரூப-ணாத்3யபசாரத்துக்கு ஹேதுவாயும், அதிஶயஜநநே ப4க்தேர்ஜாதிஸாபேக்ஷதாயா ஹேது: = ப4க3வத்3ப4க்தியானது ஸ்வாஶ்ரயத்துக்கு ஸர்வோத்கர்ஷத்தை உண்டாக்குமளவில் அது ஸஹகாரிதயா ஜந்மஸாபேக்ஷமாகையாகிற தோ3ஷத்துக்கு ஹேதுவாயும், ப4க்தேரம்ஹஸ்ஸஹ-த்வே ஹேது: = அந்த ப4க்தியினுடைய து3ர்ஜாதிதோ3ஷஸஹத்வமாகிற தோ3ஷத்துக்கு ஹேது-வாயும், பதநப4யப4விப்ரேஷ்யதாஹங்க்ருதீநாம் ஹேது: = ஸாத்4யாந்தரஸாத4நாந்தரங்களில் அந்வயத்தால் வரும் பதநப4யத்துக்கு ஹேதுவாயும், ஸம்ஸாரிஶேஷத்வத்துக்கு ஹேதுவாயும், ஆபி4ஜாத்யாதி3களால் வரும் அஹங்காரத்துக்கு ஹேதுவாயும், பூர்வவ்யாக்2யாவிருத்3த4ாபி = இஶ்ஶ்லோகத்துக்கு வ்யாக்2யாநத்தில் (ப4க3வத்ஸம்ப3ந்த4மே உத்கர்ஷஹேதுவாகச் சொல்லுகையாலே) என்று ப4க3வத்ஸம்ப3ந்த4த்தை நிரபேக்ஷோத்கர்ஷஹேதுவாகச் சொல்லுகிறதாக அருளிச்செய்திருக்கையாலே அந்த ப4க3வத்ப4க்த்யுத்கர்ஷோபாத3கமாமளவில் நிக்ருஷ்டஜாதிஸாபேக்ஷம் என்று சொல்லுகை அந்த வ்யாக்2யாநத்துக்கு விருத்3த4மாகையாலே-யும்; அநுபத3விஹிதஸ்வார்யதௌலீஸமாதோ3ராதி3: = இஶ்ஶ்லோகத்தைக்கீழ் அருளிச்செய்த அர்த்த2த்துக்கு மூலத்தில் ப்ரமாணமாகக்காட்டி உடனேயே சில வாக்யத்துக்குப் பின்பு [இவர்கள் பக்கல் ஸாம்யபு3த்3தி4யும் ஆதி4க்யபு3த்3தி4யும் நடக்கவேணும்] (வா.222) என்று கீழெல்லாம் ஸர்வோத்க்ருஷ்டமாக ப்ரதிபாதி3க்கப்பட்ட ஜந்மத்தையுடையவர்களை, த்ரைவர்ணிகனான ஆசார்யனுக்கு அவர்கள் வஸ்துதஸ்துல்யரன்றேயாகிலும், ஆசார்யவசநமடியாக அவர்களுக்கு

துல்யராக எண்ணக்கடவன் என்று அருளிச்செய்கையாலே, அந்த த்ரைவர்ணிகனை ஆசார்யனோடே ஸாம்யபாத்4யவஸாயத்துக்கு அவர்களுடைய நிக்ருஷ்டஜந்மப்ரயுக்த-உத்கர்ஷாவிஷ்கூடகமாயுமிருந்து கொண்டு, அஷ்டதோ3ஷா = அஷ்டவித4ப்ரதா4நதோ3ஷங்களையுடைய-தாகாநிற்கிறது; ஆகையாலே, ஏஷா — இந்த பா4க3வதனுடைய தே3ஹோபாதி4கோத்கர்ஷ-மானது; இஹ = மூலத்தில் விலக்ஷணஜந்மஶ்ரைஷ்ட்2யத்துக்கு ப்ரமாணமாகக் காட்டப்பட்ட இஸ்ஸ்லோகத்திலே; ந மதா = ஆசார்யாபி4மதமாகக்கடவதன்று என்று.

இதில் பா4க3வதனுக்கு தே3ஹோபாதி4கோத்கர்ஷாபகர்ஷங்கள் உண்டு என்னில் அது ஜந்ம-நிரூபணாதி3பா4க3வதாபசாரஹேதுவாம்படி எங்ஙனே என்னில் – ஜந்மநிரூபணமாவது, பா4க3வதர்களுடைய ஜந்மத்தை நிகர்ஷபு3த்3த்4யா சிந்திக்கையேயிறே; அது பா4க3வதர்களு-டைய ப்3ராஹ்மண்யாதி3களை ஶ்ரேஷ்ட2மாகவும், ஶ்வபசத்வாதி3களை அபக்ருஷ்டமாகவும் கொண்டு, ப்3ராஹ்மணபா4க3வதன் உத்க்ருஷ்டன் என்றும், பா4கவதஶ்வபசன் அபக்ருஷ்டன் என்றும் நிரூபிக்குமளவில் ஸித்3தி4க்கிறப்போலே, பா4க3வதர்களுடைய ஶ்வபசத்வாதி3களை உத்க்ருஷ்டமாகவும், ப்3ராஹ்மண்யாதி3களை அபக்ருஷ்டமாகவும் கொண்டு, ஶ்வபசபா4க3வதன் உத்க்ருஷ்டன் என்றும், ப்3ராஹ்மணபா4க3வதன் அபக்ருஷ்டன் என்றும் நிரூபிக்குமளவிலும், அந்த ஜந்மநிரூபணம் பண்ணினதாய்விடும். இவ்வளவே விஶேஷம் – ஒருபடியில் ஶ்வபசாதி3பா4க3வதவிஷயத்தில் ஜந்மநிரூபணமும், மற்றபடியில் ப்3ராஹ்மணாதி3பா4க3வத-விஷயத்தில் ஜந்மநிரூபணமும். நநு, ஶ்வபசாதி3பா4க3வதவிஷயத்தில் நிகர்ஷசிந்தை பண்ணில்மாத்ரமன்றோ ஜந்மநிரூபணரூபபா4க3வதாபசாரம் வருவது; ப்3ராஹ்மணாதி3-பா4க3வதவிஷயத்தில் நிகர்ஷசிந்தை வஸ்துயாதா2த்ம்யஜ்ஞாநரூபமாகையாலே அது அபசாரத்தில் அந்தர்பூ4வியாது என்னில்: –
(1) ஶாஸ்த்ரங்களில் அங்ஙன் ஒருவிஶேஷம் காணுகைமையாலேயும்;
(2) "யத்3யப்யத்ராபி4ஜாயந்தே யோகி3நஸ்ஸர்வயோநிஷு । ப்ரத்யக்ஷிதாத்மநாத2நாம் நைஷாம் சிந்த்யம் குலாதி3கம்" என்று வைஷ்ணவர்களெல்லாருடையவும் ஜந்மாதி3கள் நிரூபிக்கலாகாது என்று ஶாஸ்த்ரம் சொல்லுகையாலேயும்;
(3) எம்பெருமானுடைய தி3வ்யமங்க3ளவிக்3ரஹங்களில், ஸ்வர்ணவிக்3ரஹம் ஶ்ரேஷ்ட2ம் என்றும், தாம்ரவிக்3ரஹம் அபக்ருஷ்டம் என்றும் கொள்ளிலும் தத்3விபரீதமாகக்கொள்ளிலும், உபாதா3நநிரூபணம் அவிஶிஷ்டமாக உண்டாகிறப்போலே, பா4க3வதர்களுடைய நிக்ருஷ்ட-ஜந்மத்தை உத்க்ருஷ்டம் என்றும், உத்க்ருஷ்டஜந்மத்தை நிக்ருஷ்டம் என்றும் கொள்ளிலும் ஜந்மநிரூபணம் பண்ணினதாகக்கடவதிறே.

நநு, தன்னிற்காட்டில் ஜந்மாதி3களாலே சில பா4க3வதரை அபக்ருஷ்டராக நினைத்தாலன்றோ அபசாரமாவது, பா4க3வதர்களெல்லாரையும் தன்னில் அதி4கராகவும், அவர்க்குள்ளே ஒருவர்க்-கொருவர் ஜந்மாதி3களாலே ந்யூநாதி4க்யங்களையுடையராகவும் நிரூபிக்கில், அது அபி4மாந-மூலகமன்றிக்கே அவ்வவர்களுடைய அதி4காராநுகு3ணமாக அவர்கள்விஷயத்தில் அநுவர்த்தநாதி3களைப் பண்ணுகைக்காகப் பண்ணும் பரீக்ஷாரூபமாகையாலே அது அபசாரமாமோ என்னில்:–
[ இவர்கள்பக்கல் ஆசார்யஸாம்யபு3த்3தி4 நடக்கவேணும்; இப்படி நினையாதொழிகையும் அபசாரம்] (வா.222, 224, 225) என்று அருளிச்செய்கையாலே ஸ்ரீவைஷ்ணவர்களையெல்லாம் ஆசார்யனோடே ஒரு கோவையாக்கி தத்ஸமராக நினைக்கவேணும்; அப்படிச்செய்யாதே அவர்களில் சிலரைக்குறைய நினைக்கை அபசாரம் என்று அருளிச்செய்கையாலே அதுவும் அபசாரமாகக் கடவது.

அங்கு நிக்ருஷ்டஜந்மபா4க3வதர்களையே அன்றோ ஆசார்யதுல்யராக நினைக்கவேணும் என்று சொல்லிற்று என்னில்:– அப்போது [அதாவது ஆசார்யதுல்யரென்றும், ஸம்ஸாரிகளிலும் தன்னிலும் ஈஶ்வரனிலும் அதி4கர் என்றும் நினைக்கை] (வா.223) என்று தத்3விவரண-வாக்யத்தில், ஸம்ஸாரிகளிலும் உத்க்ருஷ்டவர்ணபா4க3வதர்களிலும் தன்னிலும் ஈஶ்வரனிலும் அதி4கர் என்று நினைக்கை என்று அருளிச்செய்யவேணுமிறே. உத்க்ருஷ்ட ஜந்மாக்களிலும்

பரமபா4க3வதர் உளராயிருக்க, உத்க்ருஷ்டவர்ணபா4க3வதர்களெல்லாம் ஸம்ஸாரிகளில் அந்தர்பூ4தர் என்கை ஆக்3ரஹக்ருதமாமிறே.

நநு, யுஷ்மத்பக்ஷத்தில், ஸம்ஸாரிகளிலும் தன்னிலும் ஈஶ்வரனிலும் அவிலக்ஷணஶ்ரீ-வைஷ்ணவர்களிலும் அதி4கர் என்று நினைக்கை என்று வாக்யப்ரயோக3ம் இல்லாமை விரோதி4யாதோ என்னில் :- அவிலக்ஷணரெல்லாம் பா4க3வதஜந்மநிரூபணபரராய்த்திரியு-மவர்களாகையாலே, அந்த அவிலக்ஷணத்வாவஸ்தை2 ஸம்ஸாராந்தர்பூ4தமாகையாலே, விரோதி4யாதாகையாலே, யதா2ஶ்ருதம் உபபந்நமாம். அப்படி யுஷ்மந்மதத்தில் யதா2ஶ்ருதம் உபபந்நமாகாமையாலே பூர்வோக்தப்ரகாரத்தாலேயே வாக்யஶைலீ ஆவஶ்யகமிறே. அப்படி அருளிச்செய்யாமையாலே, [இவர்கள் பக்கல்] (வா.222) என்கிற ஶப்3த3ம் பா4க3வதர்க-ளெல்லாரையும் சொல்லுகிறது என்னுமிடம் ஸித்3த4மிறே.

நநு, கீழ் உத்க்ருஷ்டவர்ணபா4க3வதாபேக்ஷயா நிக்ருஷ்டஜந்மபா4க3வதனுக்கு ஶ்ரைஷ்ட்2யம் ஸமர்த்தி2தமாகையாலே, நிக்ருஷ்டஜந்மபா4க3வதரை உத்க்ருஷ்டஜந்மபா4க3வதராபேக்ஷயா அதி4கர் என்று நினைக்கவேணும் என்று தனியே விதி4க்கவேண்டாவாகையாலே அத்தையுங்கூட அவ்வாக்யத்தில் அருளிச்செய்யாதொழிந்ததாகையாலே, அதுவும் அவ்விடத்தில் ஸித்3த4ம் என்னில்:- அதுவும் அநுபபந்நம்.
ஆசார்யனோடு ஒரு விஷயத்தையும் ஸமபு3த்3தி4பண்ணுகை அயுக்தமாயிருக்க, ஆசார்யஸாம்ய-பு3த்3தி4க்கு அடியேது என்னும் ஆகாங்க்ஷையில் அருளிச்செய்த [ஆசார்யஸாம்யத்துக்கு அடி ஆசார்யவசநம்] (வா.224) என்கிறவாக்யத்தில் வ்யாக்2யாநத்தில் (ஶ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால், நம்மைக்கண்டாப்போலே காண் என்று உபதே3ஶஸமயத்தில் ஆசார்யன் அருளிச்செய்த வசநம்) என்று ஆசார்யவசநப்ரகாரத்தை அருளிச்செய்யுமிடத்தில், நிக்ருஷ்ட-ஜந்மபா4க3வதர்களைக்கண்டால் என்னாதே (ஶ்ரீவைஷ்ணவர்களைக்கண்டால்) என்று பொதுவாக அருளிச்செய்கையாலே, பா4க3வதர்களெல்லாரையும் ஆசார்யதுல்யராகவே நினைக்கவேணுமா-கையாலே, அப்படி நினையாதே ஒருவரைக் குறையநினைக்கை அபசாரமாகத்தட்டில்லையிறே. (ஶ்ரீவைஷ்ணவர்)ஶப்3த3மும் பா4க3வதர்களான நிக்ருஷ்டஜந்மாக்களையே சொல்லுகிறது என்னில், அதுவும் ஆக்3ரஹக்ருதமாமித்தனை. “ஏகாந்தீ வ்யபதே3ஷ்டவ்யோ நைவ க்3ராம-குலாதி3பி4: । விஷ்ணுநா வ்யபதே3ஷ்டவ்யஸ்தஸ்ய ஸர்வம் ஸ ஏவ ஹி” என்றும், “நத்3யாஸ்-தஸ்யைவ நாமாநி ப்ரவிஷ்டாயா யதா2ர்ணவம் । ஸர்வாத்மநா ப்ரபந்நஸ்ய விஷ்ணு-மேகாந்திநஸ்ததா2” என்றும் சொல்லுகிறபடியே ஸார்வாத்மநா ப4க3வத்ப்ரபந்நனாய், அத்தால் க்3ராமகுலாதி3களால் வரும் வ்யபதே3ஶயோக்3யதை நஶித்து விஷ்ணுஸம்ப3ந்த4த்தையே நிரூபகமாக உடையராயிருப்பாரெல்லாரையும் (ஶ்ரீவைஷ்ணவர்)ஶப்3த3ம் சொல்லக்கடவதிறே.

ஆகையாலே, பரமைகாந்திகளில் ஜந்மமடியாகச் சிலரை உத்க்ருஷ்டராகவும், சிலரை அபக்ருஷ்டராகவும் நினைக்கை அபசாரமாகக்கடவது. ஆகையால், தன்னைக்காட்டில் குறைய நினைத்தாலே அபசாரமாவது; பிறரைக்காட்டில் குறையநினைக்கில் அபசாரமில்லை, என்கிற நியமமில்லை. ஶ்ரீவைஷ்ணவர்களெல்லாரையும் ஆசார்யனோடு சேர்த்து ஒரு கோவையாக்கி எல்லாரையும் துல்யராக நினையாதொழிகை அபசாரம் என்னுமிடம் ஸுஸ்தி2தமிறே.

நநு, நிந்தா3ர்த்த2ம் அபகர்ஷசிந்தைபண்ணில் அன்றோ அபசாரமாவது, ஒரு பா4க3வதருடைய உத்கர்ஷசிந்தை பண்ணுகைக்காக உதகர்ஷமெல்லாம் அபகர்ஷாவதி4கமின்றிக்கே இராமை-யாலே, மற்றொரு பா4க3வதனுடைய அபகர்ஷத்தை அந்த உதகர்ஷாவதி4யாக நினைக்குமளவில் அது, பா4க3வதவைப4வஜ்ஞாநோபயோகி3யாய்க்கொண்டு உபாதே3யமாயிருக்கையாலே அபசாரமாகமாட்டாது. என்போல என்னில், அர்ச்சாவதாரோபாதா3நசிந்தை, “அர்ச்சா-விஷ்ணௌ ஶிலாதீ4ர்கு3ருஷு நரமதிர்வைஷ்ணவே ஜாதிபு3த்3தி4: விஷ்ணோர்வா வைஷ்ண-வாநாம் கலிமலமத2நே பாத3தீர்த்தே2ம்பு3பு3த்3தி4: । ஸித்3தே4 தந்நாமமந்த்ரே ஸகலகலுஷஹே ஶப்3த3ஸாமாந்யபு3த்3தி4: ஶ்ரீஶே ஸர்வேஶ்வரேஶே தத3தரஸமதீ4ர்யஸ்யவா நாரகீ ஸ:” என்றும், “விஷ்ணோரர்ச்சாவதாரேஷு லோஹபா4வம் கரோதி ய: । யோ கு3ரௌ மாநுஷம் பா4வம்

உபெ4ள நரகபாதிநௌ" என்றும் அத்யந்தஶாஸ்த்ரநிஷித்3த4மாயிருக்கச்செய்தேயும், "ந ஹ்யம்மயாநி தீர்த்த2ாநி ந தே3வா ம்ருச்சி2லாமயா: । தே புநந்த்யுருகாலேந த3ர்ஶநாதே3வ ஸாத4வ:" என்று இதிஹாஸஸமுச்சயத்தில் சொல்லுகிறபடியே ப4ாக3வதரைப4வாநு-ஸந்த4ாநார்த்த2மாகப் பண்ணின உபாத3ாநசிந்தை உபாதே3யமாகக் காண்கிறதிறே. அதுபோலே இதுவும் இப்படியாகக் குறையில்லை என்னில், இதுவும் அநுபபந்நம்.

உத்கர்ஷமெல்லாம் அபகர்ஷாவதி4கமாயிருந்ததேயாகிலும், ப4ாக3வதர்களுடைய உத்கர்ஷத்-துக்கும், தன்னுடையவும், ஈஶ்வரனுடையவும், ஸம்ஸாரிகளுடையவும் அபகர்ஷம் அவதி4யா-யித்தனையல்லது, ப4ாக3வதர்களுக்கு ஓர் அபகர்ஷம் உண்டாகக்கொண்டு அத்தைச் சில ப4ாக3வதர்களுடைய உத்கர்ஷத்துக்கு அவதி4யாக நினைக்கை அவர்கள்பக்கல் செய்யவேண்டும் ஸாம்யாநுஸந்த4ாநத்துக்கு விருத்3த4மாகையாலே அநுபந்நமாகையாலேயும்;
"நஹ்யம்மயாநி" என்கிற ஶ்லோகமும், ப4ாக3வதர்களை அபேக்ஷித்து சேதநோஜ்ஜீவநமே ப்ரயோஜநமாக அர்ச்சாவதாரரூபியாய் எழுந்தருளியிருக்கும் ஈஶ்வரனைக்குறைய நினைக்கைக்-கும், அவனை அபேக்ஷித்து ப4ாக3வதர்களை அதி4கராக நினைக்கைக்கும் ஹேது ஆஶ்ரிதர்க்கு வேண்டின படி முகங்கொடுத்துக் கலந்து பரிமாறுகையும் அவிலம்பே3ந பவித்ரீகரணமுமாகிற கு3ணவிஶேஷங்களுடைய ஸத்3ப4ாவாஸத்3ப4ாவங்கள் என்று காட்டத்தொடங்கி,
"ந தே3வா ம்ருச்சி2லாமயா:" என்று நிரங்குஶஸ்வதந்த்ரனான ஈஶ்வரன் ஸர்வஸுலப4னாய், தன்னைத்தாழவிட்டு வருமளவில், நிவாரகரில்லாமையாலே ம்ருச்சி2லாஸஜாதீயனாய், அவதரித்தானேயாகிலும், ஆஶ்ரிதராயிருப்பார்க்கு வேண்டினபடி முகங்கொடாதே அந்த நிரங்குஶஸ்வாதந்த்ர்யத்தாலே அவதாரத்தில் மெய்ப்பாட்டுக்காக, 'இதென்! இல்லையோ?' என்னும்படி தூஷ்ணீம்பா4வத்தோடேயிருந்துவிடும்படி அவனை அபக்ருஷ்டனாக நினைக்கைக்கு அடியாகச்சொல்லி, அப்படியிருக்கையன்றிக்கே, வாய்திறந்து த்யாஜ்யோபாதே3யங்களையும் உபதே3ஶித்து கலந்துபரிமாறுமவர்களான ப4ாக3வதர்கள் அந்த ஈஶ்வரனைப்பற்ற விஶிஷ்டர் என்னுமர்த்த2த்தை ஸ்தி2ரீகரிக்கிறதித்தனையொழிய, 'விக்3ரஹோபாத3ாநத்3ரவ்யம் இன்னதன்றோ' என்று நிகர்ஷபு3த்3தி4யாலே அத்தை சிந்திக்கையாகிற உபாத3ாநநிரூபணத்தை அந்த ஶ்லோகம் பண்ணாமையாலேயும்;
அந்த ஶ்லோகத்தை உத3ாஹரணமாக்கிக்கொண்டு, ப4ாக3வதர்களுடைய உத்கர்ஷசிந்தநார்த்த2-மாக மற்றொரு ப4ாக3வதனுடைய அபகர்ஷசிந்தநம் உபாதே3யம் என்கை அநுசிதமிறே.
அப்படிக்கொள்ளில் துல்யந்யாயத்தாலே உத்க்ருஷ்டவர்ணிகளான ப4ாக3வதர்களுடைய அதிஶய-சிந்தநார்த்த2மாக அபக்ருஷ்டஜந்மப4ாக3வதர்களுடைய அபகர்ஷசிந்தநமும் உபாதே3யமாக ப்ரஸங்கி3க்குமிறே.

நநு, தே3ஹாத்மாபி4மானிக்கும், ஆத்மஸ்வரூபம் கைபுகுந்திருக்கும் ருஷிகளுக்கும் பர்வத-பரமாணுவோட்டைவாசிபோரும்; ருஷிகளுக்கும் ஆழ்வார்களுக்கும் அத்தனைவாசிபோரும்; ஆழ்வார்களுக்கும் பெரியாழ்வாருக்கும் அத்தனை வாசிபோரும்; பெரியாழ்வார்க்கும் ஆண்டாளுக்கும் அத்தனை வாசிபோரும்; [இவர்கள் நம்முடைய கோஷ்டியிலே என்னும்படி-யாய்த்து ஆழ்வார்கள்நிலே. ஆழ்வார்கள் எல்லாரையும் போலல்லர் பெரியாழ்வார்] என்றும், [உண்டபோது ஒருவார்த்தையும், உண்ணாதபோது ஒருவார்த்தையும் சொல்லுவார் பத்துப்பேர் உண்டிறே; அவர்களைச் சிரித்திருப்பார் ஒருவர் உண்டிறே] என்றும் ஜ்ஞாநத்தினுடைய ந்யூநாதி4கபா4வத்தாலே ப4ாக3வதர்களில் தாரதம்யநிரூபணம் பண்ணிலும் ஜ்ஞாநநிரூபண-மாகிற ப4ாக3வதாபசாரமின்றிக்கே ஒழிகிறாப்போலே, ஜந்மோத்கர்ஷாபகர்ஷங்களாலே ப4ாக3வதர்களில் தாரதம்யநிரூபணம் பண்ணிலும், ஜந்மநிரூபணமாகிற அபசாரம் வாராது என்னக்குறை என்? என்னில், இதுவும் அநுபபந்நம். கீழ்ச்சொன்னவிடங்களில் தாரதம்ய-நிரூபணமெல்லாம் ஜ்ஞாநோத்கர்ஷாபகர்ஷப்ரயுக்தமன்றிறே. அப்படி ஜ்ஞாநோத்கர்ஷாப-கர்ஷங்கள் உண்டாகில், "ஆண்டாளுக்கு உண்டாகில் ஒப்பு" என்று ஆண்டாளை ஒப்பற்றவளாக அருளிச்செய்தாப்போலே, "உண்டோ பெரியாழ்வார்க்கு ஒப்பொருவர்"என்று பெரியாழ்வாரை-யும், அப்படியே "உண்டோ சடகோபர்க்கு ஒப்பொருவர்" என்று ஆழ்வாரையும் ஒப்பற்றவர்களாக அருளிச்செய்யக்கூடாதிறே.

பின்னை தாரதம்யநிருபணம் என்கொண்டு என்னில்:-

I. ஸமஸ்தகல்யாணகு3ணாத்மகனுன ஸர்வேஶ்வரன் தன்னுடைய நிர்ஹேதுகக்ருபையாலே சில சேதநரைத் தன்னுடைய புருஷோத்தமத்வகு3ணத்திலே ஆழங்கால்படுத்தித் தனக்கு தி3வ்யமஹிஷிகளாக்கிக்கொள்ளும்;

II. சிலரை வாத்ஸல்யஸௌஶீல்யஸௌலப்4யாத்3யாத்மகு3ணங்களிலே ஆழங்கால்படுத்தித் தனக்கே அற்றுத்தீரும்படி பண்ணிக்கொண்டு யாவதா3த்மப4ாவியாக ஸ்வவிஷயகு3ணாநுப4வகைங்கர்யைகநிஷ்ட2ராக்கும்;

III. சிலரை ஸௌந்த3ர்யஸௌகுமார்யாதி3விக்3ரஹகு3ணங்களிலே ஆழங்கால்படுத்தி அஸ்த2ாநே ப4யஶங்கிகளாம்படி பண்ணி யாவாதா3த்மபா4வி மங்க3ளாஶாஸநபரராக்கும்;

IV. சிலரைத் தன்னுடைய ஆஶ்ரிதபாரதந்த்ர்யமாகிற கு3ணத்தில் ஆழங்கால்படுத்தி சரமபர்வநிஷ்ட2ராக்கி யாவதா3த்மப4ாவியாகத் தன்னடியார்க்கு ஆட்படுத்தும்.

அதில்,

I. புருஷோத்தமத்வத்திலே தோற்றவர்கள் தி3வ்யமஹிஷிகள்,

II. ஆத்மகு3ணங்களில் தோற்றவர்கள் மற்ற ஆழ்வார்கள்,

III. திருமேனியினுடைய கு3ணங்களில் தோற்றவர் பெரியாழ்வார்,

IV. ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்தில் தோற்றவர்கள் மது4ரகவிப்ரப்4ருதிகள். இதுவும் ஊற்றத்தைப்பற்ற. ஆக இப்படி அவ்வவர்கள் அகப்பட்ட துறைக்கீடாக அவ்வவர்களுக்கு வ்ருத்திதாரதம்யம் உண்டாகிறது. அத்தால் அவர்களுக்கு உண்டாம் தாரதம்யமூலகம் அவர்களுடைய தாரதம்யநிருபணம். அந்த தாரதம்யம்தான் ஆஶ்ரயதோ3ஷப்ரயுக்தமன்றிக்கே, ப4க3வத்3விஷயீகாரவைஷம்யப்ரயுக்தமாகையாலேயும்,

அந்த வைஷம்யம்தான் நிரங்குஶஸ்வாதந்த்ர்யப்ரகாஶகமாய்க்கொண்டு ஈஶ்வரனுக்கும் கு3ணரூபமாயிருக்கையாலேயும்,

நிகர்ஷபு3த்3த்4யா ஜ்ஞாநாதி3களை சிந்திக்கையாகிற அபசாராந்தர்க3தமாகமாட்டாது. தே3ஹோபாதி4காபகர்ஷத்தாலே ஒரு ப4ாக3வதனுக்கு உத்கர்ஷமும், அது இல்லாமையாலே அபகர்ஷமும் சொல்லில், அந்த உத்கர்ஷாபகர்ஷங்கள் ஆஶ்ரயதோ3ஷமூலகமாகையாலே அது அபசாரமாமிறே. யத்3ாகதா3ஞ்சித் ஜந்மாபகர்ஷத்தாலே ஒரு ப4ாக3வதனை உத்க்ருஷ்டனாகவும், மற்றையவனை அபக்ருஷ்டனாகவும் கேவலாக்3ரஹத்தாலே ஸ்தா2பிக்கப்பார்க்கில் மற்றபடியும் அப்படியே ஆகலாமாகையாலே இனி விராமமே ஶரணமாகக்கடவதிறே.

நநு, இப்படி ப4ாக3வதர்களுக்குள்ளே தாரதம்யநிருபணம் அபசாரமாகில், விலக்ஷணப4ாக3வதரை உத்க்ருஷ்டராகவும், அவிலக்ஷணப4ாக3வதரை அபக்ருஷ்டராகவும் சொல்லுகிற யுஷ்மத்பக்ஷத்தில் இவ்வபசாரப்ரஸங்க3ம் வாராதோ என்னில்:-

விலக்ஷணவிஷயத்தில் தாரதம்யநிருபணம் பண்ணுகையே அபசாரமாகையாலே வாராது. அவிலக்ஷணர்க்கு ஜாதிபோகாமையாலே, வஸ்துத: ஜந்மோத்கர்ஷாபகர்ஷங்கள் அவர்களுக்கு உண்டிறே. அவர்களுக்கு ஜாதிபோகவில்லை என்கைக்கு ப்ரமாணமென் என்னில்:-

உத்க்ருஷ்டஜந்மவாநஹம், நிக்ருஷ்டஜந்மவாநஹம் என்று அவர்களுக்கு உண்டாம் ப்ரத்யக்ஷமே ப்ரமாணமிறே. அந்த ஜ்ஞாநமில்லாவிடில், ப4ாக3வதவிஷயத்தில் அவர்கள் பண்ணும் தாரதம்யநிருபணம் ஸம்ப4வியாதிறே. நநு, விலக்ஷணராயிருப்பார்க்கும், 'அஹம் ப்3ராஹ்மண:, அஹம் ஸந்யாஸீ' என்கிற ப்ரத்யயம் அவிஶிஷ்டமன்றோ. அதில்லாவிடில் அவ்வவர்களுடைய தனியன்களிலே கோ3த்ராதி3கள் க4டகமாவானென் என்னில்:- வ்யாஸபுத்ரராயிருக்கிற ஶுகர், "விஷ்ணுதா3ஸா வயம் யூயம் ப்3ராஹ்மணா வர்ணத4ர்மிண:" என்றும், "நாஹம் விப்ரோ ந ச நரபதிர்நாபி வைஶ்யோ ந ஶூத்3ரோ நோ வா வர்ணீ ந ச க்3ருஹபதிர் நோ வநஸ்தோ2 யதிர்வா । கிந்து ஶ்ரீமத்3பு4வநப4வநஸ்தி2த்யபாயைகஹேதோர்லக்ஷ்மீப4ர்த்துர் நரஹரிதநோ: தா3ஸதா3ஸஸ்ய தா3ஸ:" என்றும் சொல்லுகையாலேயும்;

ப்3ருகு3வம்ஶத்திலே அவதீர்ணராய், ப4க3வந்நிர்ஹேதுககடாக்ஷத்தாலே ஸகலார்த்த2ங்களையும

விஶத3தரவிஶத3தமமாக அறிந்து, "க்ருஷ்ணம் நாம் வ்ரீஹீணாம்" என்கிற வாக்யத்தை ஓத்துச் சொல்லுவார்க்கும் எடுத்துக்கொடுக்கும்படி ஸகலவேத3ங்களையும் அறிந்திருக்கிற திருமழிசை ஆழ்வாரும், "குலங்களாய ஈரிரண்டில் ஒன்றிலும் பிறந்திலேன், நலங்களாய நற்கலைகள் நாலிலும் நவின்றிலேன்" என்று ப்3ராஹ்மணாதி3வர்ணசதுஷ்டயத்தில் எனக்கு அந்வய-மில்லாமையாலே, த்ரைவர்ணிகர்க்கே விஹிதமான வேத3ங்களை அத்4யயநம் பண்ணப் பெற்றிலேன் என்று அருளிச்செய்கையாலேயும்; விலக்ஷணராயிருப்பார்க்குத் தங்களிடத்தில் வர்ணாஶ்ரமாதி3ப்ரத்யயமில்லை, கேவலம் "விஷ்ணுதா3ஸா:" என்றும், "நரஹரிதநோர்தா3ஸ-தா3ஸஸ்ய தா3ஸ:" என்றும், சரமபா4கவததா3ஸ்யபர்யந்தப4க3வத்3தா3ஸ்யமே 'அடியேன்' என்றவர்களுடைய அஹம்ப்ரத்யயவிஷயம் என்னுமிடம் ஸித்3த4மிறே.

தனியன்களிலே கோ3த்ராதி3கத2நம் லோகஸங்க்3ரஹார்த்த2மாகவும், மர்யாதா3பாலநார்த்த2-மாகவும், ஶிஷ்யபரம்பரைகளுக்கு பே4ாக்3யதயா அநுஸந்தா4நார்த்த2மாகவுமிறே. பா4க3வதர்க-ளுடைய பூர்வவ்ருத்தமெல்லாம் அநுஸந்தே4யமாகக்கடவதிறே. ஆகையிறே தொண்டரடிப்பொடி ஆழ்வாருடைய பூர்வவ்ருத்தங்களை அஸங்கோசேந குருபரம்பரையில் அருளிச்செய்தது. விலக்ஷணராயிருப்பார் தங்களுக்கு வர்ணாஶ்ரமங்களின்றிக்கே ஒழிகையாலே தங்களுக்கு வர்ணாஶ்ரயப்ரத்யயமின்றிக்கே ஒழிந்தாலும், நாட்டார்க்கு விலக்ஷணரிடத்தில் வர்ணாஶ்ரம-ப்4ரமம் நடக்கையாலே, "ந பு3த்3தி4பே4த3ம் ஜநயேத்" என்கிறபடியே அவர்களுடைய ப்ரதிபத்த்யநுகு3ணமாக இவர்களும் வர்ணாஶ்ரமங்களை ஆசரியாவிடில், சிலர் நிந்தி3த்தும், வர்ணாஶ்ரமாதிக்ரமமாத்ரத்துக்குச் சிலர் இவர்களுடைய அநுஷ்டா2நத்தை ப்ரமாணமாக பரிக்3ரஹித்தும் நஶித்துவிடுவர்களிறே. அது வாராமைக்காகவிறே விலக்ஷணர் வர்ணாஶ்ரமாதி3-களை ஆசரிப்பது. நநு, [பா4க3வதாபசாரம் தான் அநேகவித4ம்; அதிலே ஒன்று அவர்கள் பக்கல் ஜந்மநிரூபணம்] என்று [பா4க3வத]ஶப்3த3வாச்யரான ப4க3வத3நந்யார்ஹஶேஷத்வ-ஜ்ஞாநமாகிற ப4க3வத்ஸம்ப3ந்த4முடையாரிடத்தில் ஜந்மநிரூபணம் பண்ணுகையே அபசாரமாக அருளிச்செய்கையாலே, அவிலக்ஷணரும் ப4க3வத்ஸம்ப3ந்த4முடையராய்க்கொண்டு [பா4க3வத]ஶப்3த3வாச்யராயிருக்க, 'அவர்கள்விஷயத்தில் ஜந்மநிரூபணம் அபசாரமன்று' என்கை உபபந்நமோ என்னில்:- அங்கு [பா4க3வத]ஶப்3த3ம் ப4க3வதே3கநிரூபணீயரைச் சொல்லுகிறதாகையால், ப4க3வத்ஸம்ப3ந்த4த்தோடே வர்ணாஶ்ரமாதி3களையும் உடையராயப் போரும் அவிலக்ஷணரை அந்த [பா4க3வத]ஶப்3த3ம் சொல்லாமையாலே விரோத4மில்லை என்று கண்டுகொள்வது.

"யதா2 ப்ருத2க்3விதா4 வர்ணா யதா2 தத்ரைவ சாஶ்ரமா: । விவிக்தமதயஸ்தத்ர ததா2 பா4க3வதா அபி" என்று, வர்ணாஶ்ரமங்கள் ஸ்வேதரவர்ணாஶ்ரயவிருத்3த4ங்களாய்க்கொண்டு பரஸ்பர-விலக்ஷணங்களாயிருக்குமாபோலே, அந்த வர்ணாஶ்ரமங்களையுடையானொரு புருஷனிடத்தில் ஜ்ஞாநவிஶேஷமூலகமாக உண்டாம் பா4க3வதத்வமும், ஸ்வேதரவர்ணாஶ்ரமவிரோதி4யாய்க் கொண்டு ஸர்வவர்ணாஶ்ரமாதி3விலக்ஷணமாயிருக்கையாலே, பா4க3வதர்கள் ஸர்வவிலக்ஷணர் என்று பா4ரத்3வாஜஸ்ம்ருதியில் சொல்லிற்றிறே. ஆகையால், அவிலக்ஷணரை அபக்ருஷ்ட-ராகவும், விலக்ஷணரை உத்க்ருஷ்டராகவும் சொல்லுகை பா4க3வதாபசாரமாகாமையாலேயும், "யத்3யப்யத்ராபி4ஜாயந்தே யோகி3நஸ்ஸர்வயோநிஷு" என்கிறபடியே ஸர்வஜாதியிலும் அவதீர்ணராய், ஸர்வாத்மநா ப4க3வத்ப்ரபந்நராயிருக்கும் பா4க3வதர்களுக்குள்ளே சிலரை ஜந்மத்தாலே உத்க்ருஷ்டராகவும், சிலரை அபக்ருஷ்டராகவும் சொல்லுகையே அபசாரமாகை-யாலேயும், பா4க3வதனுக்கு தே3ஹோபாதி4காபகர்ஷமுண்டு என்று கொள்ளுகை ஜந்மநிருபண-மாகிற பா4க3வதாபசாரஹேதுவாகக்கடவதிறே. அப்படியே பா4க3வதனுக்கு தே3ஹோபாதி4கோத்-கர்ஷம் கொள்ளுகையும் ப4க3வத்3ப4க்தியானது ஸ்வாஶ்ரயத்துக்கு ஸர்வோத்கர்ஷாபாத3கம். ப4க3வத்3ப4க்தி ஸ்வாஶ்ரயத்துக்கு ஸர்வோத்கர்ஷாபாத3கமாகையாவது, ப4க3வத்3விஷயத்தில் உண்டான ப4க்தி, க்ரமேண ஸ்வாவஸ்தா2பே4த3த்தாலே ஸ்வாஶ்ரயத்துக்கு ஸர்வவிதோ4த்-கர்ஷத்துக்கும் ப்ரயோஜகமாகை.

ப4க3வத்3ப4க்திக்கு இரண்டு அவஸ்தை2யுண்டு. அதாவது, பூர்வாவஸ்தை2 என்றும்,

உத்தராவஸ்தை2 என்றும். பூர்வம் ஜ்ஞாநாவஸ்தை2, தது3த்தரம் ப்ரேமாவஸ்தை2. ப்ரேமாவஸ்த2ாபந்நமான ஜ்ஞாநத்தையிறே ப4க்தி என்கிறது. அந்த ஜ்ஞாநாவஸ்தை2யில் த3ஶவிதே4ாத்கர்ஷங்களை க்ரமேண உண்டாக்கும்; ப்ரேமாவஸ்தை2யில் த்3விவிதே4ாத்கர்ஷத்தை உண்டாக்கும். த3ஶவிதே4ாத்கர்ஷங்களாவன:- "அத்3வேஷஶ்சாநுகூல்யஞ்ச தி3வ்யநாமத4ரஸ்தத2ா। சக்ராங்கீ மந்த்ரபாட2 ச வைஷ்ணவஶ்ச தத:பரம் ॥ ஸ்ரீவைஷ்ணவ இதி க்2யாத: ப்ரபந்நஸ்-தத3நந்தரம் । ஏகாந்தீ பரமைகாந்தீ த3ஶைதே வைஷ்ணவாஸ்ம்ருதா:" என்கிற த3ஶவித4-வைஷ்ணவத்வங்கள். இவையெல்லாம் பூர்வபூர்வாபேக்ஷயா உத்தரோத்தரம் ஶ்ரேஷ்ட2ங்களா-யிருக்கும்.

இதில் அத்3வேஷத்வமாவது:- "ஹரிம் லோகநியந்தாரம் வைஷ்ணவாந் லோகபாவநாந் த்3ருஷ்ட்வா ந த்3வேஷ்டி யோ மர்த்யஸ்ஸோத்3வேஷ: பரிகீர்த்தித:" என்கிறபடியே, ப4க3வத்3ப4ாக3வதவிஷயங்களில் த்3வேஷமின்றிக்கேயிருக்கையாகிற ப4க3வத்க்ருபா2லீபூ4த-மான அத்3வேஷத்தையுடையனாயிருக்கை. முன்பு அநாதி3யாக ப4க3வத்3விஷயம் ப்ரதிகூலமாகத் தோன்றுகையாலே த்3வேஷத்வாவஸ்த2ாபந்நமாயிருந்துள்ள ப4க3வஜ்ஜ்ஞாநம், ஈஶ்வரக்ருபை-யாலே உபேக்ஷாத்வாவஸ்தை2யை ப4ஜித்து, அத்தாலே உண்டானதிறே இந்த அத்3வேஷத்வரூபமான உத்கர்ஷம். இதையுடையவன் இந்த அத்3வேஷத்வமில்லாதாரைப்பற்ற உத்க்ருஷ்டன்.

அநுகூலத்வமாவது:- "வாஸுதே3வோத்ஸவாம்ஶ்சைவ மஹாப4ாக3வதாநபி । அநுவர்த்தேத யோ நித்யம் (ஸோ) அநுகூல உதா3ஹ்ருத:" என்கிறபடியே, ப4க3வத்3ப4ாக3வதாநுவர்த்தநங்களுக்கு அநுகூலனாயிருக்கை. இது ப4க3வத்3ப4ாக3வதவிஷயங்கள் அநுகூலமாகவாதல், ப்ரதிகூலமாக-வாதல் தோன்றாமையாலே உபேக்ஷாத்மகமாயிருந்த ஜ்ஞாநம், ப4க3வத்க்ருபையாலே அந்த ப4க3வத்ப4ாக3வதவிஷயங்கள் அநுகூலமாகத் தோன்றி, அத்தாலே தத்3விஷயக-இச்ச2ாத்வா-வஸ்தை2யை ப4ஜித்து, அத்தால் உண்டானதாகையாலே, இதையுடையவன் கீழ்ச்சொன்னவனைப் பற்ற விஶிஷ்டன்.

தி3வ்யநாமத4ரத்வமாவது:- "ஸ்ம்ருத்யுச்சாரணமாத்ரேண ஸர்வபாபப்ரணாஶநம் । விஷ்ணுநாமத4ர: புண்யோ நாமத4ாரீ ஸ உச்யதே" என்கிறபடியே, ப4க3வந்நாமங்களைப் பேராக இட்டுக்கொண்டி-ருக்கை. இது ப்ரீதிரூபமான ப4க3வத்3ப4ாக3வதவிஷய-அநுகூலஜ்ஞாநம், அந்த ப4க3வத்க்ருபை-யாலே மஹநீயவிஷயகப்ரீதியாகிற ப4க்திரூபமாய், அத்தாலேயுண்டானதாகையாலே, இதையுடையவன் பூர்வாதி4காரியைக் காட்டில் விஶிஷ்டன். ப4க3வத்3விஷயத்தில் உண்டான மஹநீயவிஷயகப்ரீதியாகிற ப4க்தியாலே ப4க3வந்நாமத4ாரித்வமுண்டாம்படி எங்ஙனே என்னில்:- ப4க3வத்3விஷயத்தில் உண்டான ப்ரீதிரூபமான ஜ்ஞாநம், ப4க3வானுடைய மஹநீய-த்வத்தை விஷயீகரிக்கும்போது, அதுக்கு ப்ரதியோகி3தயா தன்னை நீசனாக விஷயீகரிக்க வேண்டுகையாலே, அந்த நைச்யம் தான் தா3ஸ்யரூபமாகையாலே அந்த மஹநீயவிஷயக-ப்ரீதிரூபமான ப4க3வத்3ப4க்தியானது, ஸ்வதா3ஸ்யஜ்ஞாநாத்மகமாய்விடுகையாலே அந்த ஜ்ஞாநம் அநுஷ்ட2ாநபர்யவஸாயியாம்போது, "பத்3யமங்கு3லிவிச்சே2த உரோவிந்யஸ்தமக்ஷரம்। தந்நாமத4ாரணம் சைவ தா3ஸ்யமேதச்சதுர்வித4ம்" என்கிறபடியே நாமத4ாரணபர்யந்தமாய் விடுகையாலே, "தி3வ்யநாமத4ரத்வம் ப4க3வத்3விஷயப4க்திகார்யம்" என்னக்குறையில்லையிறே.

சக்ராங்கித்வமாவது:- "ஶ்ருதிஸ்ம்ருதிபுராணேஷு விஹிதம் சக்ரத4ாரணம் । யோ பி3ப4ர்த்தி ஹரேஶ்சக்ரம் சக்ரத4ாரீ ஸ உச்யதே" என்கிறபடியே ஶங்க2சக்ரோர்த்4வபுண்ட்3ரபத்3மாக்ஷ-துளஸீமாலாதி3வைஷ்ணவரூபங்களை த4ரித்துக்கொண்டிருக்கை. இது, ப4க3வத்3விஷயத்தில் உண்டான மஹநீயவிஷயகப்ரீதிரூபமான ப4க்தி, தே3வதாந்தராந்வயத்தில் ஜுகு3ப்ஸாபர்யந்த-மாய், அத்தாலே உண்டானதாகையாலே, இதையுடையவன் பூர்வாதி4காரியைக்காட்டில் விஶிஷ்டன். தே3வதாந்தராந்வயமுடையாரில்காட்டில் வ்யாவ்ருத்தி தோற்றுகைக்காகவிறே சக்ராதி3த4ாரணம். "அமீ பரமஸம்ஸ்காரா: பாரமைகாந்த்யஹேதவ:" என்னக்கடவதிறே. "பாரமைகாந்த்யஹேதவ:" என்றது, பாரமைகாந்த்யாநுமாபகா: என்றபடி.

மந்த்ரபாடி2த்வமாவது:- "அஷ்டாக்ஷரஸ்ய மந்த்ரஸ்ய ஸ்மரணாந்முக்திதோ3 ஹரி: । இதி மத்வா ஸ்மரந்நித்யம் மந்த்ரபாட2 ஸ உச்யதே" என்கிறபடியே திருவஷ்டாக்ஷத்தை ஜபித்துக் கொண்டிருக்கை. இந்த ப4க3வஜ்ஜ்ஞாநம் அந்த ப4க3வத்3விஷயத்தைப்பெற்றல்லது த4ரிக்கவொண்ணாததபடியான காமாவஸ்தை2யையடைந்து அத்தாலே ஸாத4நாபேக்ஷை பிறந்து, தன்னுடைய ஶக்த்யநுகு3ணமாக ஸு"கரஸாத4நத்தில் இழிகையாலே வந்ததாகையாலே இதையுடையவன் பூர்வாதி4காரியிற்காட்டில் விஶிஷ்டன்.

வைஷ்ணவத்வமாவது:- "தே3வதாந்தரவந்நித்யம் ஶப்3தா3தீ3நபி குத்ஸயந் । விஷ்ணுப்ராப்தி-ப2லாகாங்க்ஷீ ப4க்த்யுபாயோ ஹி வைஷ்ணவ:" என்கிறபடியே புருஷார்த்தா2ந்தரவிரக்தனாய் ப4க3வத்ப்ராப்த்யர்த்த2மாக ஸாத4நப4க்திநிஷ்ட2னாயிருக்கை. இது அந்த காமரூபமான ப4க3வஜ்ஜ்ஞாநம், அத்யுத்கடாவஸ்தை2யை ப4ஜித்து, அத்தாலே ப்ரயோஜநாந்தரங்களில் அரதி-பூர்வகமாக உண்டான 'அதிது3ஷ்கரமான ஸாத4நத்தில் இழிந்தாகிலும் அவ்விஷயத்தைப் பெறுவேன்' என்கிற அபி4நிவேஶத்தால் வந்ததாகையாலே இதையுடையவன் பூர்வாதி4காரியிற்-காட்டில் விஶிஷ்டன்.

ஶ்ரீவைஷ்ணவத்வமாவது:- "பா3ஹ்யார்த்தா2நிரதாந் ஸர்வாந் ஸம்யக்த்யக்த்வா ஸதா3 ஶுசி: । ப4க்திமாந் புண்ட3ரீகாக்ஷே ஶ்ரீவைஷ்ணவ உதா3ஹ்ருத:" என்கிறபடியே, விஷயாந்தரபரரான தே3ஹபந்து4க்கள் எல்லாரையும் ஸவாஸநமாகவிட்டு ஸாத4நப4க்திநிஷ்ட2னாயிருக்கை. இது, அந்த ப4க3வஜ்ஜ்ஞாநம் தே3ஹபந்து4க்கள்விஷயத்திலும்கூட அரதிபர்யந்தமாய், அத்தாலே உண்டானதாகையாலே இதையுடையவன் பூர்வாதி4காரியிற்காட்டில் விஶிஷ்டன்.

ப்ரபந்நத்வமாவது :- "ஶப்3தா3தி3விஷயாம்ஶ்சைவ தே3ஹோபாதி4கஸம்ப4வாந் । த்யக்த்வா ஹரிம் ப4ஜேத்3யஸ்து ஸ ப்ரபந்ந உதா3ஹ்ருத:" என்கிறபடியே தே3ஹஸம்பந்தோ4பாதி4கங்க-ளாய், ப்ராமாதி3கங்களாய்வரும் விஷயாந்தரங்களையும் மறுவலிடாதபடி விட்டு ஸாத4நப4க்தி-நிஷ்ட2னாயிருக்கை. இது, அந்த ப4க3வத்3ஜ்ஞாநம் ஸ்வதே3ஹத்திலுங்கூட அரதிபர்யந்தமாய், அத்தாலே வந்ததாகையாலே, இதையுடையவன் பூர்வாதி4காரியிற்காட்டில் விஶிஷ்டன். அவனை ப்ரபந்நன் என்கிறது அங்க3ப்ரபத்திநிஷ்ட2னாயிருக்கையாலே. அங்க3ப்ரபத்திக்கு ஸர்வகாம-த3யாகு3ம் அங்க3மிறே.

ஏகாந்தித்வமாவது :- "ஏகாந்தீ து விநிஶ்சித்ய தே3வதாவிஷயாந்தரை: । ப4க்த்யுபாயம் ஸமம் க்ருஷ்ணப்ராப்தௌ க்ருஷ்ணைகஸாத4ந:" என்கிறபடியே ஸாத4நாந்தரங்களையும் ஸவாஸநமாக விட்டு, ப4க3வத்ப்ராப்திக்கு அவனையே உபாயமாகப்பற்றியிருக்கை. இது ப4க3வது3பேயத்வ-மாத்ரவிஷயகமாய், இந்த அந்த ப4க3வஜ்ஜ்ஞாநம் ப4க3வத்க்ருஷியாலே உபாயாந்தர-ஸம்ஸர்க்கா3ஸஹஸ்வரூபாநுரூபப4க3வது3பாயத்வத்தையும் விஷயீகரித்து, அத்தாலே வந்த-தாகையாலே, இதையுடையவன் பூர்வாதி4காரியிற்காட்டில் விஶிஷ்டன்.

பரமைகாந்தித்வமாவது :- "தே3வதாந்தரஶப்3தா3தி3ப4க்திக்ருஷ்ணைக்3யஹேதுஷு" । ஸாம்ய-க்ருத்பரமைகாந்தீ ஹரௌ ஸ்வாமீ இதி பு3த்3தி4மாந்" என்கிறபடியே, உபாயாந்தரங்களோடே தான் பண்ணும் ஸித்3தோ4பாயவரணத்தையும் விட்டு, தன்னோடு ஈஶ்வரனுக்குண்டான ப்ராப்தியை அநுஸந்தி4த்து அவன்பண்ணும் ஸ்வீகாரத்தையே பார்த்திருக்கை. இது அந்த ப4க3வஜ்ஜ்ஞாநம் தன்னோடு எம்பெருமானுக்குண்டான ப்ராப்தியையும் அவன் பண்ணும் க்ருஷியாலே விஷயீகரிந்து, அத்தாலே உண்டானதாகையாலே, இதையுடையவன் பூர்வாதி4கா-ரியிற்காட்டில் விஶிஷ்டன். இந்த அதி4காரியினுடைய ஸம்ப3ந்த4ஜ்ஞாநத்தைத் தோழியாகவும், உபாயாத்4யவஸாயத்தைத் தாயாகவும் அருளிச்செய்வர்கள். ஆக இந்த த3ஶவிதோ4த்கர்ஷங்களும் த3ஶவித4ஜ்ஞாநாவஸ்தா2காரியங்கள்.

மேல் ப்ரேமாவஸ்தா2காரியங்களான உத்கர்ஷங்கள் 'ப4க்தத்வம்' என்றும், 'பா4க3வதத்வம்' என்றும் இரண்டுபடியாயிருக்கும்.

அதில் ப4க்தத்வமாவது :- "அநந்யதே3வதா ப4க்தா யே மத்3ப4க்தஜநப்ரியா: । மாமேவ ஶரணம் ப்ராப்தாஸ்தே மத்3ப4க்தா: ப்ரகீர்த்திதா:" என்று ஆஶ்வமேதி4கத்தில் சொல்லுகிறபடியே, பாரமை-காந்த்யப்ரயோஜகமாகச்சொன்ன ப4க3வத்3விஷயஜ்ஞாநம் ப4க3வத்க்ருபையாலே ஸ்நேஹரூப-மாய் , அதுதானும் பா4க3வதபர்யந்தமாகப் பெற்றிருக்கை. இதுவுடையார் பரமைகாந்திகளைக் காட்டில் அதிகர். பரமைகாந்திகளுடைய ஜ்ஞாநம்தான் பா4க3வதபர்யந்தமாகச் செல்லுமது-தன்றிறே. ஒருவன்பக்கல் ப்ரேமம் உண்டானாலாய்த்து அவனுடைய ஸம்ப3ந்தி4களும் இனியராவது.

பா4க3வதத்வமாவது :- "அர்த்த2பஞ்சகதத்வஜ்ஞா: பஞ்சஸம்ஸ்காரஸம்ஸ்க்ருதா: । ஆகாரத்ரய-ஸம்பந்நா மஹாபா4க3வதாஸ்ஸ்ம்ருதா:" என்று பராஶரஸ்ம்ருதியில் சொல்லுகிறபடியே, அந்த ப4க3வத்3விஷயகஜ்ஞாநம் காஷ்டா2பர்யந்தஜ்ஞாதவ்யஸகலார்த்த2விஷயகமாய், அத்தாலே பரக3தஸ்வீகாரரூப-ஆசார்யாங்கீ3காரவிஷயீக்ருதராய், காஷ்டா2பந்நவ்ருத்திபர்யந்தமாக ஆகார-த்ரயஸம்பந்நராயிருக்கை. இது உடையார் பூர்வாதி4காரியிற்காட்டில் விஶிஷ்டர். பூர்வாதி4காரிகள் ஈஶ்வரபரதந்த்ரர்கள்; இவர்கள் ஆசார்யபரதந்த்ரர்கள்.

ஆக, கீழ்ச்சொன்ன பன்னிரண்டு அதி4காரிகளில் முதல் ஒன்பது அதி4காரிகளுக்கு ஸர்வாத்மநா ப4க3வத்ப்ரபத்தியில்லாமையாலே, அவர்களுடைய கார்யங்களையெல்லாம் எம்பெருமான் தன்தலையில் ஏறிட்டுக்கொள்ளாமையாலே, அவர்களுக்கு யாவச்ச2ரீரபாதம் ஜாதி போகமாட்டாது. பத்தாம் அதி4காரி, ஸர்வாத்மநா ப4க3வத்ப்ரபந்நனாகையாலே "நத்3யாஸ் தஸ்யைவ நாமாநி ப்ரவிஷ்டாயா யதா2ர்ணவம் । ஸர்வாத்மநா ப்ரபந்நஸ்ய விஷ்ணு-மேகாந்திநஸ்ததா2 " என்றும், "ஏகாந்தீ வ்யபதே3ஷ்டவ்யோ நைவ க்3ராமகுலாதி3பி4: । விஷ்ணுநா வ்யபதே3ஷ்டவ்யஸ்தஸ்ய ஸர்வம் ஸ ஏவ ஹி" என்றும் சொல்லுகிறபடியே, க்3ராம-குலாதி3வ்யபதே3ஶங்களெல்லாம் நிவ்ருத்தங்களாய்விட்டதேயாகிலும் அவனுடைய ஜ்ஞாநம் ப்ரேமரூபமல்லாமையாலே, "யஸ்யாயம் நிரதிஶயப்ரிய: ஸ ஏவ அஸ்ய ப்ரியதமோ ப4வதி" என்கிறபடியே, ப4க3வத்ப்ரீதிவிஷயீக்ருதனல்லாமையாலே, ஆத்மஸத்தை உண்டாகப் பெற்றிலன். பதினோராம் அதி4காரி, ப4க3வத்3விஷயத்தில் ப்ரேமவானாகையாலேயும் பா4க3வதவிஷயத்தில் ப்ரீதியுடையவனாகையாலேயும், ப4க3வத்ப்ரீதிவிஷயீக்ருதனாயிருந்தானே-யாகிலும், பா4க3வதவிஷயத்தில் அவனுக்கு மஹநீயவிஷயகப்ரீதியாகிற ப4க்தியின்றிக்கே ப்ரீதிமாத்ரமுள்ளதாகையாலே, அவனுக்கு பா4க3வதவிஷயத்தில் ஸ்வஸாம்யப்ரதீதியாகிற அவமானம் நடக்கையாலே, "மம மத்3ப4க்தப4க்தேஷு ப்ரீதிரப்யதி4கா ப4வேத்" என்று சொல்லப்பட்ட ப4க3வதா3த்யந்தாபி4மதிவிஶேஷவிஷயத்வரூப-ஆத்மஸத்தாவிஶேஷம் உண்டாகப்பெற்றிலன்.

பன்னிரண்டாம் அதி4காரி "யஸ்ய தே3வே பரா ப4க்தி: யதா2 தே3வே ததா2 கு3ரௌ" என்று சொல்லுகிற ததீ3யப4க்தியையுடையவனாகையாலே ப4க3வதா3த்யந்தாபி4மதிவிஶேஷவிஷயீக்ருத-னாய், அத்தாலே ஆத்மாத்மீயங்களெல்லாம் அந்த அபி4மதிவிஶேஷவிஷயத்வமாகிற ஸத்தையைப் பெற்று, அத்தாலே பா4க3வதத்வமாகிற ஜாதி உண்டாகப்பெற்றவனாகையாலே அவனே ஸர்வோத்க்ருஷ்டன். ஆழ்வார்களும் ஆசார்யர்களும்

எம்பார் ஜீயர் திருவடிகளே சரணம்.

இயாநேவ க்3ரந்தோ2 த்3ருஶ்யதே

(இவ்வளவே இந்நூல் கிடைக்கப்பெறுகிறது)

**218. நிக்ருஷ்டஜந்மத்தால் வந்த தோ3ஷம் ஶமிப்பது விலக்ஷணஸம்ப3ந்த4த்தாலே.**
இப்படி அஹங்காரக3ர்ப்ப4மாய்க்கொண்டு நிக்ருஷ்டமான து3ஷ்டஜந்மத்தால் வந்த அஹங்காரரூப-து3ஷ்ப்ரதிக்ரியாதோ3ஷம் மேலிடாமல் ஶமிப்பது, "குலங்களாய ஈரிரண்டிலொன்றிலும் பிறந்திலேன்" என்று ஸதோ3ஷஜந்மஸம்ப3ந்த4மற்று, ஸ்வரூபாநுரூபஜந்மவ்ருத்தராய், ஹீநஸ்பர்ஶக3ந்த4ம்பொறாத விலக்ஷண-மான சரமதஶீ4யருடைய த3ர்ஶநஸ்பர்ஶநாதி3ஸம்ப3ந்த4த்தாலே என்கிறார். (218)

**219. ஸம்ப3ந்த4த்துக்கு யோக்3யதையுண்டாம்போது ஜந்மக்கொத்தை போக வேணும்.**
தத்ஸம்ப3ந்த4த்துக்கநுகு3ணமான யோக்3யதை பா4க்3யவஶாத் உண்டாம்போது, அந்த விலக்ஷணஸம்ப3ந்த4-தூ3ஷகமான து3ரபி4மாநதூ3ஷிதநிக்ருஷ்டஜந்மக்கொத்தை ஸவாஸநமாக ஸத்ஸேவாபரிசயத்தாலே போக வேணுமென்கிறார். (219)

---

218. ஆக, நிக்ருஷ்டோத்க்ருஷ்டஜந்மங்கள் இன்னதென்று நிஶ்சயிக்கப்பட்டது கீழ்; அதில் நிக்ருஷ்டஜந்மத்தால் வந்த தோ3ஷம் ஶமிப்பதெத்தாலே என்ன அருளிச்செய்கிறார் மேல், [நிக்ருஷ்ட] இத்யாதி3யாலே. அதாவது – அஹங்காரஹேதுதயா நிக்ருஷ்டமான ஜந்மமடியாக வந்த நைச்யம் பா4விக்கவேண்டுகை முதலான தோ3ஷம் மறுவலிடாதபடி மாறுவது, ஜந்மஸித்3த4மான நைச்யத்தையுடையராய், உபாயாந்தராந்வயயோக்3யதாக3ந்த4ரஹிதராயிருக்கும் விலக்ஷணாதி4காரிகளோடுண்டான ஶேஷத்வரூபஸம்ப3ந்த4த்தாலே என்கை. (218)

219. தத்ஸம்ப3ந்த4யோக்3யதை ஸம்ப4விக்கும்படி என்னென்ன அருளிச்செய்கிறார் [ஸம்ப3ந்த4த்துக்கு] என்று துடங்கி. அதாவது – அந்த விலக்ஷணரோடே ஸம்ப3ந்த4த்துக்கு அர்ஹதை இவனுக்கு உண்டாம்போது, தன்னுடைய ஜந்மக3தமான கொத்தை கழியவேணு-மென்றபடி. (219)

---

218. ப்4ரமாநுவாதே3ந வாஸ்தவநிக்ருஷ்டோத்க்ருஷ்டஜந்மநிர்ணயப்ரயோஜநம், தாத்3ருஶநிர்தேஶ-பூர்வகம் தத்3தோ3ஷஶமநோபாயாபி4தா4நம் என்னுமபி4ப்ராயத்தாலே அருளிச்செய்கிறார் (ஆக நிக்ருஷ்ட) இத்யாதி3. பூர்வத்ர தோ3ஷத்3வயம் உக்தமாகையாலே, [தோ3ஷம்] என்கிற ஏகவசநம் ஸமஷ்ட்யபி4ப்ராயம் என்னுமபி4ப்ராயத்தாலே அருளிச்செய்கிறார் (நைச்யம் பா4விக்க வேண்டுகை முதலான) என்று. (முதலான) என்கிறவித்தால் ப4யஜநகத்வம் விவக்ஷிதம். பு3த்3தி4ஸ்த2த்வாத் அந்யத்துக்கு ப்ரத2மோக்தி. யத்3வா, தோ3ஷாந்தரம் (முதலான) என்கிறவித்தால் ஸங்க்3ராஹ்யம் என்னுமாம். வைலக்ஷண்யம் பூர்வோக்ததோ3ஷத்3வயஸம்ப3ந்த-அநர்ஹத்வரூபம் என்னுமபி4ப்ராயத்-தாலே அருளிச்செய்கிறார் (ஜந்மஸித்3த4) இத்யாதி3. (ஜந்மஸித்3த4)த்வம் = பா4வநா-நிரபேக்ஷஸத்தாகத்வம். (218)

219. [யோக்3யதா]ஶப்3தா3ர்த்த2ம் (அர்ஹதை) என்று. அதாவது அத்யந்தாஸம்ப3ந்த4வ்யவச்சே2த3ம். ஜந்மஸம்ப3ந்தி4யான கொத்தை என்று விவக்ஷித்து அர்த்த2ம் (ஜந்மக3தமான) இத்யாதி3. (கொத்தை) = தோ3ஷம். நநு, நைச்யம் பா4விக்க வேண்டுகையாவது, நைச்யபா4வநாஸாபேக்ஷத்வம்: அதாவது, ஸ்வரஸஸாஹிநைச்யப்ரதிஸம்ப3ந்தி4த4ர்மமாய், அபி4ஜநாத்3யபி4மாநரூபமாகிறது; ஏதச்ச2மநம் விலக்ஷணஸம்ப3ந்த4ஹேதுகம் என்றும், விலக்ஷணஸம்ப3ந்த4ம் ஏதந்நிவ்ருத்திஹேதுகம்

அக்கொத்தையேது? தத்பரிஹாரமேது? என்ன, அவையிரண்டும் "பழுதிலாவொழுகல்" என்கிறபாட்டிலே ஸூக்ஷ்மத3ர்ஶிகளான ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார் ஸுவ்யக்தமாக அருளிச்செய்தாரென்கிறார் ["பழுதிலா"] இத்யாதி3யால்.

220. ஜந்மத்துக்குக்கொத்தையும் அதுக்கு பரிஹாரமும் "பழுதிலாவொழுகல்" என்கிற பாட்டிலே அருளிச்செய்தார்.

ப்3ரஹ்மாதுடங்கி தங்களளவும் வர நெடுகப்போருகிற வம்ஶப்ரவாஹத்தில் ஒரு தோ3ஷமின்றிக்கே பித்ரு-பிதாமஹாதி3முகே2ந பலரான சதுர்வேதி3களே, இதில் கீழ்ப்பட்டதில்லை என்னும்படி ஹீநகுலத்திலே பிறந்தார்களேயாகிலும், என்னோடுண்டான அஸாத4ாரணஸம்ப3ந்த4த்தை அறிந்து தத3நுரூபமான ஸதா3சாரத்தை உடையராகில், அவர்களை நீங்கள் ப்ரணாமாதி3கள் பண்ணி அநுவர்த்தியுங்கோள்; அவர்கள்

---

220. ஜந்மத்துக்குக்கொத்தையேது? தத்பரிஹாரமேது? என்னுமாகாங்க்ஷையிலே அருளிச்செய்கிறார் [ஜந்மத்துக்குக்கொத்தையும்] என்று துடங்கி. அதாவது மயர்வறமதிநலமருளப்பெற்று தத்த்வவித3க்3ரேஸரராய், ததீ3யஶேஷத்வஸீமாபூ4மியான ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார் "பழுதிலா ஒழுகல்" இத்யாதி3யாலே 'ப்3ரஹ்மாதுடங்கி தங்களளவும்வர நெடுகப்போருகிற

---

என்றும் [நிக்ருஷ்டஜந்மத்தால்] (வா.218) இத்யாதி3மூலத்திலே சொல்லுகையாலே, அந்யோந்யாஶ்ரயணம் ப்ரஸங்கி3க்கும் என்னில்; ப்ரஸங்கி3யாது, அபுநரங்குராபி4ஜநாபி4மாந-நிவ்ருத்திக்கு விலக்ஷணஸம்ப3ந்த4ம் ஹேதுவாகையாலும், விலக்ஷணஸம்ப3ந்த4த்துக்கு அபி4ஜநாத்3யபி4மாநநிவ்ருத்திமாத்ரம் ஹேதுவாகையாலும், முக2பே4த3த்தாலே அந்யோந்யாஶ்ரயணத்துக்கு அவகாஶமில்லை என்னுமபி4ப்ராயத்தாலே [ஶமிப்பது],[போகவேணும்] என்று நிர்தே3ஶபே4த3ம் என்று திருவுள்ளம்பற்றி (மறுவலிடாதபடி மாறுவது) என்றும், (கழியவேணும்) என்றும் விருப-நிர்தே3ஶம் பண்ணியருளிற்று என்று கண்டுகொள்வது. (219)

220. உபாத்தப்ரமாணவஶத்தாலே வக்த்ருவிஶேஷம் அர்த்த2ஸித்3த4ம் என்னுமபி4ப்ராயத்தாலே வக்தாவினுடைய பரமாப்திியை அருளிச்செய்கிறார் (மயர்வற) இத்யாதி3. (தத்வம்) ஸ்வஸ்வரூப-பரஸ்வரூபாதி3கள். (தத்த்வவித3க்3ரேஸர)த்வப2லிதம் (ததீ3ய) இத்யாதி3. இவ்வர்த்த2த்தில் ஸமாக்2யையே ப்ரமாணம் என்னுமபி4ப்ராயத்தாலே (தொண்டரடிப்பொடியாழ்வார்) என்றது. (இத்யாதி3யாலே) என்றது, இத்யாதி3வசநவ்யக்தியாலே என்றபடி. இதுக்கு (இப்பாட்டிலே அருளிச்-செய்தார்) என்கிறவித்தோடே அந்வயம். பாட்டுக்கர்த்த2ம் (ப்3ரஹ்மா துடங்கி) இத்யாதி3. (ஒழுகல்) = ஒழுகுகிற, (ஆறு) = வம்ஶப்ரவாஹத்திலே, (பழுதிலா) = நிர்தோ3ஷராய், (பல) = ப3ஹுவித4ரான, (சதுப்பேதிமார்கள்) = சதுர்வேதி3கள், (இழி) = நிக்ருஷ்டமான. (குலத்தவர்களேலும்) = குலத்தில் பிறந்தார்களேயாகிலும், (எம்மடியார்களாகில்) = என் அடியாராகில், (நீர்) = நீங்கள். (தொழுமின்) = அவர்களை நமஸ்கரியுங்கோள், (கொடுமின்) = அவர்களுக்கு ஜ்ஞாநதா3நம் பண்ணுங்கோள், (கொள்மின்) = அவர்கள்பக்கல் ஜ்ஞாநபரிக்3ரஹம் பண்ணுங்கோள், (என்று நின்னோடுமொக்க) = தேவரீரோடு துல்யமாக, (வழிபட) = ஆராதி4த்து நல்வழிபோம்படியாக. (அருளினும்போல்) = அவர்களுக்கு இந்த பரமரஹஸ்யத்தை அருளிச்செய்தீர், (மதிள்) = மதிளை உடைத்தான, (திருவரங்கத்தானே) = கோவிலுக்கு நிர்வாஹகரே என்றபடி. போல் - வார்த்தைப்பாடு. இத்தையுட்கொண்டு அருளிச்செய்கிறார் (ப்3ரஹ்மா) இத்யாதி3. ப்ரவாஹத்துக்கு ஆத்3யந்தாபேக்ஷாயாம் சதுர்வேதி3த்வஸாமர்த்2யஸித்3த4ார்த்த2ம் (ப்3ரஹ்மா துடங்கித்தங்களளவும்) இத்யாதி3. "இழி

